உ

தமிழ்த்தாய் வாழ்க

# நாரணன் விளையாட்டு

## (கம்பன் கவியுள்ளம்)



"மாசி"

தமிழ் நாடு வெளியீடு

தபால் பெட்டி 49

மதுரை

# உள்ளுறை

## முதல் பாகம்


| | | பக்கம் |
|---|---|---|
| | "என் அன்னைக்கு" | VII |
| | நூன்முகம் | IX |
| 1. | முன்னுரை ... | 1 |
| 2. | கோசல நாட்டு அரசு நலம் ... | 8 |
| 3. | மகப் பேற்றுக் கவலை ... | 12 |
| 4. | கை வண்ணமும் கால் வண்ணமும் ... | 15 |
| 5. | வில்லிறுத்த வீரம் ... | 22 |
| 6. | காதல் விளையாட்டு ... | 30 |
| 7. | அரச ராமனும் பரசுராமனும் ... | 39 |
| 8. | மர்மம் என்ன? ... | 45 |
| 9. | நல்ல நாள் ... | 50 |
| 10. | திரிந்தது சிந்தை ... | 55 |
| 11. | பிடிவாதம் ... | 61 |
| 12. | தாயும் சேயும் ... | 65 |
| 13. | கன்யா சுல்கம் ... | 70 |
| 14. | வேடன் செய்த விருந்து ... | 75 |
| 15. | ஐயமும் தெளிவும் ... | 84 |
| 16. | சித்திர கூடம் ... | 93 |
| 17. | முடிப்புரை ... | 103 |


## இரண்டாம் பாகம்


| | | |
|---|---|---|
| 18. | ஒரு கண்ணோட்டம் ... | 113 |
| 19. | முனிவரர் சூழல் ... | 118 |
| 20. | காமவல்லி ... | 124 |
| 21. | தங்கையும் தமையனும் ... | 130 |
| 22. | மாய மான் ... | 134 |

பக்கம்


| | | | |
|---|---|---|---|
| 23. | வஞ்சத்துறவி | ... | 144 |
| 24. | துன்பமாலே | ... | 148 |
| 25. | உண்மை விளக்கம் | ... | 152 |
| 26. | இருளில் ஓர் ஒளி | ... | 158 |
| 27. | " திகைத்தனை செய்கை " | ... | 165 |
| 28. | தேடப் பணித்த திறம் | ... | 172 |
| 29. | சம்பாதி | ... | 181 |
| 30. | சுந்தரம் | ... | 185 |
| 31. | இலங்கைக் காட்சி | ... | 191 |
| 32. | இராமதூதன் | ... | 195 |
| 33. | சோகச்சோலேயிற் சொல்லாடல் | ... | 198 |
| 34. | கலங்கிய காட்சி | ... | 202 |
| 35. | பேரடையாளம் | ... | 205 |
| 36. | அசோகம் விளேத்த சோகம் | ... | 209 |
| 37. | பெண்மையைக் கண்ட ஆண்மை | ... | 216 |

மூன்றும் பாகம்

| | | | |
|---|---|---|---|
| 38. | யுத்த காண்டத்தின் தோற்றுவாய் | ... | 225 |
| 39. | வீடணன் வரவு. | ... | 230 |
| 40. | கடல் அணே | ... | 236 |
| 41. | போர்ப் பாதை. | ... | 243 |
| 42. | அங்கதன் ஆண்மை | ... | 248 |
| 43. | இராம ராவணப் போர் நலம் | ... | 251 |
| 44. | எண்ணத்தில் மண் வீழ்ந்தது | ... | 255 |
| 45. | மறத்துக்கும் அன்பே துணே | ... | 259 |
| 46. | பண்பட்ட உள்ளம் புண்பட்டது | ... | 264 |
| 47. | உறங்கும் தம்பி | ... | 269 |
| 48. | நஞ்சுதோய் அமுதம் | ... | 281 |
| 49. | மாயா சனகன் | ... | 287 |
| 50. | திருந்தாவுள்ளம் திருந்தும் திறம் | ... | 294 |

பக்கம்


| | | | |
|---|---|---|---|
| 51. | அதிகாயன் | ... | 299 |
| 52. | குரல் கொடுத்த குரிசில் | ... | 305 |
| 53. | நாகபாசம் | ... | 311 |
| 54. | மகரக் கண்ணன் | ... | 319 |
| 55. | மறக்களத்தில் மதலை | ... | 324 |
| 56. | நிகும்பலை நிகழ்ச்சி | ... | 332 |
| 57. | இராவணன் யார் ? | ... | 345 |
| 58. | வேலேற்ற வீரன் | ... | 354 |
| 59. | முறை துறந்தான் முடிவு | ... | 356 |
| 60. | சொல்லிரும்பு வாங்கிய காந்தம் | ... | 370 |
| 61. | சாப்பாட்டு இராமன் | ... | 376 |
| 62. | இராம ராஜ்யம் | ... | 382 |
| 63. | நாரணன் விளையாட்டு | ... | 387 |
| 64. | முடிப்புரை | ... | 392 |

# நூன்முகம்

தமிழ் மொழி மிகவும் தொன்மையான மொழி என்பதை யாரும் மறுக்க முடியாது. அது தேனினும் இனிய மொழி என்பதையும் நான் சிறு வயதில் அறிந்தேனுயினும் சூழ்நிலை காரணமாக நம் தாய் மொழியின் சிறப்பை நான் அப்போது நன்கு அறிய இயலவில்லை. ஒரு நாள் என் தமிழாசிரியர் ஒரு செய்யுளுக்கு உரை கூறி வரும்போது யான் ''பண்டித மணியவர்கள் இச் செய்யுளுக்கு இவ்வாறு பொருள் கொண்டார்'' என்று சொன்னேன். அன்று முதல் அவ்வாசிரியர் மிகவும் அன்பாகவும், பரிவுடனும் என்னிடம் பழகுவதைக் கண்டேன். பண்டிதமணியுடன் நெருங்கிப் பழகிய காரணத்தால் பூவுடன் சேர்ந்த நாரும் மணம் பெறுவது போல, யானும் சிறப்புப் பெற்றதைக் கண்டேன். அன்று முதல் தமிழ் இலக்கியங்களை நன்கு கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஒரு பேரவா எனக்கு உண்டாயிற்று.

நான் கல்லூரிப் படிப்பை முடித்தபின் தமிழ்ப் பெரும் இலக்கியங்களைப் படிக்க ஆசைகொண்டேன். அப்பொழுது புலவரேறு திரு. அ. வரதநஞ்சைய பிள்ளையவர்களிடம் முறையாகத் திருக்குறளையும், கம்பராமாயணத்தையும் படிக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. பல வகையிலும் சிறப்புப் பெற்ற அவ்வாசிரியரது தொடர்பிஞல் கம்பராமாயணத்தில் பல உண்மைகளை அறியும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது.

நான் என் தமிழாசிரிய நண்பர்களிடம் கம்பராமாயணத்திற் கண்ட உண்மைகளைக் கூறுவதுண்டு. அவர்களிற் பலர் நான் கண்ட உண்மைகளைத் தொகுத்துத் "தமிழ் நாடு" மூலம் தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். அவர்களுடைய விருப்பத்திற்கு இணங்க, ''நாரணன் விளையாட்டு'' என்ற தலைப்பிலே சில கட்டுரைகள் எழுதலானேன்.

இளமைப் பருவம் தொட்டுத் தமிழ்ப்புலவர் பெருமக்களுள் பலரைக் கண்டு பயிலும் சிறப்பு எங்கள் குடும்பத்

துக்கு உண்டு. இவர்களில் இருவர் மிகவும் முக்கியமான வர்கள். அவர்கள் டாக்டர் சோமசுந்தர பாரதியாரும், மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தலைமையாசிரியராகப் பணியாற்றிய திரு. திருநாராயண அய்யங்காருமாவார்கள். அவர்களுடைய நூல்களையும் கட்டுரைகளையும் படிக்கும் பேறும் எனக்குக் கிட்டியதால் துணிந்து எண்ணவும், எண்ணியதை வெளியிடவும் என்னால் முடிந்தது.

இராமாயணம் பாரத நாட்டு மக்களின் உள்ளத்தைக் கவர்ந்த இதிகாசம். இக்கதையைத் தமிழகத்து நாட்டிலும் நகரத்திலும் வழங்கச் செய்த பெருமை கம்பரையே சாரும். பக்தியுடன் பாடுவதற்கு ஏற்ற நூல் என்ற கருத்துடனே பலர் இதனைப் பாராயணம் செய்தனர். காலம் மாறியது. கருத்துக்களும் மாறத்தொடங்கின. நாம் வாழும் இந்தக் காலம் பகுத்தறிவு வளர்ந்துள்ள காலம். இருபதாம் நூற்றாண்டில் வாழும் மக்களுக்கு இராவணன் மிகவும் நல்லவனாகவும், தமிழ்ப்பெருங்குடி மகனாகவும், இராமன் ஆரியர் தலைவனாகவும், இரக்கமற்றவனாகவும் காட்டப்பட்டனர். இந்தச் சூழ்நிலையிருந்த காலத்தில்தான் "நாரணன் விளையாட்டு" என்ற தலைப்பிலே என் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவரத் தொடங்கின.

வடமொழியில் வான்மீகியும், தமிழில் கம்பரும் அமைத்த கலைக்கோயில் இராமாயணம். அதன் திறனையும் வகையில் தோன்றியது இந்த "நாரணன் விளையாட்டு". இராமனை உயிர்நிலைத் தலைவனாக வைத்து, அவனோடு சரிநிகராக நின்று காட்சிதரும் இராவணனை ஒரு கீழ்மகனாகக் கொண்டால், அஃது இராமனது பெருமைக்குப் பெரியதோர் இழுக்கினைத் தருவதாகும். இராவணனும் ஓர் உயர்குணத் தோன்றல் என்பது யாவரும் ஒப்புக்கொள்ளத்தக்கது.

தமிழ்க்குடித் தனித்தோன்றலாகிய இராமனுடைய நிறைகுண மாண்பும், ஏனை அரக்கரின் இனச்சிறப்பும், ஆடவர் மகளிர் என்ற இருபாலார் பண்பும், பாடறிந்தொழுகும் பரிசும் இந்நூலின்கண் நன்கு ஆராயப்பட்டுள்ளன. இத்துறையில் வான்மீகியும் கம்பரும் ஒன்றியும் வேறுபட்டும் உரைக்கும் திறங்கள் ஆங்காங்கே காட்டப்படுகின்றன.

திருமாலுக்கு "நாரணன்" என்ற பெயரைப்போல் வேறு எந்தப் பெயரும் நன்கு பொருந்துவதில்லை. "பிறப் பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்றாலும், செய்தொழில் வேற்றுமையே சிறப்புக்குக் காரணமாகிறது. செய்தொழி லால் சிறந்தவர்களை நாம் கடவுளின் அவதாரம் என்று கருதுகிறோம்; ஆண்டவனே நம்மைக் காக்க வந்துவிட்டார் என்றும் கருதுகிறோம். அதுபோலவே பாலைவனமான பலவிடங்களைச் சோலைவனமாக்கிப் பாலாறும் தேனாறும் ஓடும்படி செய்த இராமனைத் திருமாலின் கூறு என்றே கருதி னர். தமிழ் நாட்டில் பிறந்து வட நாட்டிற்குச் சென்று ஆண்ட மனுக்குலத்திலே தோன்றிய இராமனும் தெய்வ மாகவே மதிக்கப்பட்டான்.

வீரவணக்கத்திற்கு உரியனான இராமன், இன்று தெய்வ மாகவே காட்சி தருகிறான். திருமாலின் கூறாகக் கருதப்படும் அவனுடைய குணநலங்களை விருப்பு வெறுப்பற்ற முறை யிலே ஆராயப்புகுந்ததன் பயனாக முகிழ்த்தது "நாரணன் விளையாட்டு" என்றும் கூறவேண்டும்.

இந்நூலின்கண் நிகழும் ஆராய்ச்சிக் குறிப்புக்களில் சிலருக்குக் கருத்து வேற்றுமை இருக்கலாம். சிந்தனையுரிமை யும் கருத்து வேற்றுமையும் சிறப்புடைய மக்கட்கு இயல்பாக அமைந்தவை. சிந்தனையை ஒடுக்கி, அறிவுக்கு வேலை நல்கா மல் கண்மூடிச் செல்லும் செம்மறியாட்டுப் போக்கு நாளும் வளர்ந்துவரும் சமுதாயத்துக்குக் கேடு விளைவிக்கும். இதனை மனத்திற்கொண்டு நல்லதன் நன்மை கண்டு இன்புறும் இன் றைய அறிஞர் உலகம் எனது இச் சிறு பணியை வரவேற்கும் என்னும் துணிபுடையேன்.

இந்தக் கட்டுரைகளை எழுதும்போது ஏறத்தாழ ஒன்றரை ஆண்டுகள் என்னுடன் ஒத்திருந்து வான்மீகத்தி லுள்ள நுண்கருத்துக்களை எனக்கு உரைத்துதவிய, மதுரைத் தியாகராசர் கல்லூரி வடமொழிப் பேராசிரியர் இராமச்சந்திர ராவ் அவர்கள் இந்நூல் இரண்டு மூன்று பதிப்புக்களும் வெளி வரும் இந்நாளில் உடனிருந்து கண்டு மகிழ்தற்கின்றி வானுலகு சென்றதும், கம்பராமாயணக் கருத்துக்களை நான் அறியும் நெறியில் எனக்கு ஆசிரியராகப் பலகாலம் இருந்து

தமிழறிவு நல்கிய ஆசிரியர் புலவர் திரு. அ. வரதநஞ்சையனார் அவர்கள் தமது முதிர்ந்த வயதில் இறைவன் திருவடி அடைந்ததும் எனக்கு வருத்தத்தைத் தருகின்றன. அவர்களுடைய அன்பையும் அறிவுதவியையும் என் உள்ளம் என்றும் மறவாது.

கம்பராமாயணத்தை நடுவு நிலைமையிலிருந்து ஆராய்வதற்கு உதவிபுரிந்து, தமிழ்மரபுக்கு வழு ஏற்படாவண்ணம் இக்கட்டுரைகளை யான் எழுதவும் இவை அச்சேறும்போது அச்சுப்படிகளைப் பார்த்துத் திருத்தவும் உதவிய என் நண்பர் திரு. ஔவை துரைசாமிப் பிள்ளையவர்கட்கும் என் நன்றி உரித்தாகும்.

இந்நூல் தனித்தனி பாகங்களாக ஏற்கனவே இரண்டு பதிப்புக்கள் வெளிவந்தன. அவற்றிற்குத் தமிழகம் தந்த வரவேற்பைக் கண்டு மூன்று பாகங்களும் சேர்ந்த முழு நூலாக இப்போது இது வெளியிடப்பெறுகிறது. தமிழ்ப் பணி ஆர்வத்தில் வெளியிடப்பெறும் எனது கருத்துக்களைக் "காய்தல் உவத்தல் அகற்றி ஒரு பொருட்கண் ஆய்தல் அறிவுடையார் கண்ணதே" என்ற பொய்யா மொழிக் கேற்ப தமிழுலகம் ஆய்ந்தேற்குமென நம்புகிறேன்.

என்னுடைய எல்லாச் செயல்களிலும் சிந்தனையிலும் தோன்றாத் துணையாய் நின்று அருள் புரிந்துவரும் அங்கயற் கண்ணியோடு அமர்ந்த ஆலவாய் அண்ணல் திருவடிகளைப் பணிந்து இந்நூலினை அறிஞர்கள் முன் வைக்கின்றேன்.

மதுரை
12—4—59

**கருமுத்து. தி. மாணிக்கவாசகம்**

உ
தமிழ்த் தாய் வாழ்க

# நாரணன் விளையாட்டு

(கம்பன் கவியுள்ளம்)

## 1. முன்னுரை

கல்வி சிறந்த தமிழ் நாடு—உயர்
கம்பன் பிறந்த தமிழ் நாடு
பல்வித மாயின சாத்திரத்தின் மணம்
பாரெங்கும் வீசும் தமிழ் நாடு

—பாரதியார்.

தமிழ் மக்களுக்கு வாய்த்துள்ள நலங்களுள் அவர்கள் பேசும் மொழியான தமிழ் ஒரு சிறந்த நலம். அது வரலாற்றுக் காலத்துக்கு முன்பிருந்தே நிலவிவரும் தொன்மையும், மிகப் பழமை வாய்ந்த இலக்கியங்களும் உடையது— நிலவுலகில் மக்களிடையே நல்ல நாகரிகம் தோன்றிச் சிறப்பதற்கு முன்னரே மிகச் சிறந்த நாகரிகம் பெற்றுக் கல்வியும் பலவேறு கலைத்துறைகளும் கொண்டு விளங்கியது நமது தமிழ்நாடு. இது வரலாறு கண்ட உண்மை. இந்த உண்மையைக் கருத்திற்கொண்டே நமது சுப்பிரமணிய பாரதியார், "கல்வி சிறந்த தமிழ் நாடு', என்று எடுத்துரைக்கின்ருர்.

தமிழ் நாடு கல்வி சிறந்ததாயின், அதன் சிறப்புக்குச் சான்ருக விளங்குபவர் தமிழ்ப் புலமை மிக்க சான்ரேர். அச்சான்ரேருள் கல்வியால் பெருமை பெற்றவர் பலர் நெடுங்காலமாக வழிவழியாக இருந்துள்ளனர். தொல்காப் பியர், திருவள்ளுவர், சங்கச் சான்ரேர், இளங்கோவடிகள், திருத்தக்க தேவர் எனப் பலர் முன்னணியில் நிற்கின்றனர். அவர்கட்குப்பின் கல்வியால் பெருமை பெற்றவர் கம்பர். “கல்வியிற் பெரியார் கம்பர்” என்பது நாட்டில் வழங்கும் பழமொழி. இதுபற்றியே பாரதியார், கல்விச் சிறப்புக் கூறியதும் உடனடியாகக் “கம்பன் பிறந்த தமிழ் நாடு” என்று பாராட்டிப் பாடுகின்ருர். கம்பன் பிறந்து கல்வி சிறந்து, “கல்வியிற் பெரியவர் கம்பர்” என்ற புகழ் பெறு தற்கு இடமாகிய தமிழ் நாடு, கம்பன் செய்த இராமாயணம் என்ற காப்பியத்தைப் பெறுதற்கரிய பெருஞ் செல்வமாகப் பெற்றுப் பிறங்குகின்றது.

இராமாயணம் என்பது இராமனுடைய வரலாறு. இராமன் திருமாலின் கூறு. அவனுடைய குண நலங்களை ஆதியில் நாரத முனிவன் வான்மீகி முனிவனுக்குக் கூற, அதனைக் கேட்டுணர்ந்த வான்மீகி நான்மறைகளுக்கு ஈடாக, வட மொழியில் சுலோக வகையில் இராமாயணத்தைச் செய் தான்; சிறப்புப்பெற்ற சோழ நாட்டில் திருவழுந்தூரில் வாழ் பவனும், அறிவுக் கொடை வள்ளலுமான கம்பன் தமிழிலே இக்கதையைக் கவியாகச் செய்தான் என்று ஒரு பெரியார் உரைக்கின்ருர். இதனை,

**நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன் கூற**
**ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகி என்பான்**
**சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூருள் வாழ்வோன்**
**காரணக் கொடையான் கம்பன் தமிழினல் கவிசெய் தானே**

என வரும் பழம் பாட்டுத் தெரிவிக்கிறது.

கம்பன் இராமாயணத்தைத் தொடங்குமுன் நல்ல சிந்தனையில் ஆழ்ந்தான். வருங்காலத்து மக்கள் இராமா

யணத்தைத் தான் எழுதியதுபற்றித் தவருக எண்ணுவார் களோ என்ற எண்ணம் தோன்றியது. அவன் அவை யடக்கத்தில் இக்கருத்தைத் தெளிவாக,

"வையம் என்னை இகழவும் மாசு எனக்கு
எய்தவும் இது இயம்புவது யாதெனில்
பொய்யில் கேள்விப் புலமையிஞேர் புகழ்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே"

என்று கூறுகின்ருன்.

உலகம் என்னை இகழவும், என்பால் குற்றம் ஏற்படவும், இராமாயணக் கதையை யான் ஏன் கூறுகின்றேன் என்ருல், வான்மீகியின் இராமாயணத்தில் அவர் கூறிய இராமனுடைய குணப்பண்புகளைத் தமிழ் மக்களுக்குக் கூறும் பேரவாவினுல் தான் என்பது இதன் பொருள். என்ன முன்யோசனை! ஆரிய மன்னனது கதையைக் கம்பன் எழுதிவிட்டான் என்று மேடைகளிலும், ஏடுகளிலும் இன்று பலர் பேசக் கேட்கும் ஓசையை அவன் முன்னமேயே கேட்டுவிட்டான். நீங்கள் ஏசினுலும், பேசினுலும், "என்றுமுள தென் தமிழ்" போல என் கதை என்றும் இருக்கும் எனக்கூறி நம்மைப் பார்த்து நகைக்கிருன்.

அம்மம்ம! இந்தக் கம்பனது இராமாயணத்தைச் சொல்லுவதற்குத்தான் இத்தனை பீடிகையா என்று நீங்கள் என்னையும் ஏளனம் செய்யலாம். இதற்குத்தான இவ்வளவு முகவுரையும் முயற்சிகளும் என்று எண்ணலாம். ஆனுல், பாரதியினுடைய வாக்கு என்னவோ பொய்ப்பதில்லை, "கம்பனைப்போல் இப்பூமியினில் யாங்கணுமே பிறந்ததில்லை; இது உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை" என்று கூறுகிருர் பாரதி. அவருடைய பொருள் மொழியைத் தொடர்ந்து யார் என்னை ஏசினுலும், பேசினுலும் இராமாயணத்தைத் தொடர்ந்து கூறுவது என்று முடிவுசெய்து நான் கண்ட முடிவை உங்களுடன் பகிர்ந்து கொள்ளத் துணிந்துள் ளேன். நான் கண்டதே துணிந்த முடிவென்றுகொள்ளும் கருத்து எனக்கு இல்லை. நான் கண்ட முடிவுகள் தவறு

என்னில் திருத்திக்கொள்ளும் மனப்பாங்குடையவன் என்று பணிவுடன் கூறிக்கொண்டு கம்பராமாயணம் எழுந்த காலத்தையும் நோக்கத்தையும் பற்றிக் கூறுகின்றேன்.

ஒரு நாட்டில் போர் நிகழுமானல், அப்பொழுது பல உயிர்கள் அழிவதுடன் பல நல்ல பொருள்களும் அழிவெய்தும். அவற்றுள் முதலில் மாயும் பொருள் "உண்மை." நாத்திகத்திற்கும் ஆத்திகத்திற்கும் எழுந்த சண்டையில் "உண்மை" மறைந்துவிட்டது. உண்மை கசப்பாயிருந்த போதிலும், கட்டுக் கதையைக் காட்டிலும் காட்சிக்கு இனிமையாக இருப்பினும் அதை வெறுப்பு விருப்பின்றி ஏற்றுக்கொள்ளுவதுதான் தகுதியும் முறையுமாகும்.

இலக்கியத்தைப் பெரும்புலவர்கள் கற்று முதிர்ந்த பண்டிதர்களுக்காகக் கடுந் தமிழில் எழுதினுர்கள் என்றெரு தவருன கருத்து இன்றைய சில மக்களிடையே பரவி இருக்கிறது.

உலக மகா கவியென இன்றும் போற்றப்படும் செகப்பிரியர் (ஷேக்ஸ்பியர்) பண்டிதர்களுக்காக நாடகம் எழுதவில்லே. ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்களிலும் இப்போது வாழும் சில பாமர மக்களுக்கு அவருடைய நாடகங்கள் விளங்குவதில்லே. ஆங்கிலத்தில் தக்க புலமை பெற்றவர்களே அவருடைய கருத்தாழத்தைக் கண்டு சுவைக்கின்றனர். சாதாரண மக்களின் பொழுது போக்கிற்காகவும் கூத்து மேடையிலே நடிப்பதற்காகவும் எழுதிய நாடகங்கள்தான் அவை; பண்டிதர்களால் போற்றப்பட்டுப் பல்லாயிரமாண்டுகள் வாழவேண்டுமென்று திட்டம்போட்டுத் தீட்டியவை அல்ல. அதுபோலவே, கம்பராமாயணமும், மக்கள் எல்லோரும் இராமனுடைய குணநலன்களே அறியவேண்டுமென்று எழுதிய நூல்தான். ஆனல் இன்று பண்டிதர்களுக்கும் பயிலுவதற்குப் பக்கத்துணே வேண்டுமென்று கூறினல், அது நம் தமிழருடைய இழிந்த நிலேதான். அன்று அறிந்த தமிழை இப்பொழுது பண்டிதன் அறிய முடியவில்லே. இத்தீவினே நேரக்கூடாது

என்றுதான் தூய தமிழ்ச் சொற்களையே வழங்கவேண்டு மென்று அறிஞர்கள் அறிவுறுத்துகின்றார்கள்.

சங்கம் இருந்த தமிழ்நாட்டில் அவ்வக் காலங்களில் எழுந்த பல அரிய பெரிய நூல்களெல்லாம் கால வெள்ளத் தில் அழிந்து மறைந்து போயின. எஞ்சியவைகளையும், நெருப்பும் நீரும் உண்ண விட்டு விட்டார்கள் தமிழர்கள். அரசியல் நிலையும் மாறியது; சுடச் சுடரும் பொன்போல் அறிவொளி குன்றாமல் வாழ்ந்த தமிழினம், இச்சகம் பேசித் திரியும் இழிந்த வாழ்வுக்கு இரையாகியது. பிறர் அடிவருடப் புகுந்து தன்னுடைய தமிழை இகழ்ந்து புறக்கணித்து அவர் களுடைய மொழியின்பாலும், தீய பண்பின்பாலும் அன்பைச் செலுத்தத் தொடங்கி விட்டது.

இடைக்காலத்தே வான்மீகி முனிவன் எழுதிய இராமா யணம் முதல், காளிதாசன் எழுதிய சாகுந்தலம் வரை பல வடமொழி நூல்களைத் தமிழர்கள் கற்கத் தொடங்கினர். இந்த அருமையான நூல்கள் மக்கள் மனத்தைக் கவர்ந்தன. அவைகளிலுள்ள வருணனைகள், கட்டுக்கோப்பானகதைகள், உவமைகள் தமிழர்களின் கலை உணர்ச்சியைக் கவர்ந்தன. தமிழிலும் இத்தகைய நூல் வராதா என்று ஏங்கி நின்றனர் தமிழ் மக்கள். அவ்வயம், சயின சமயத்தினர் இந்த நல் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பல நூல்களை எழுதி வெளியிட்டனர். வடமொழிக் காவியங்களுக்கு இணையாகக் கருத்தைக் கவரும் வண்ணம் எழுத முடியுமென்று "சீவக சிந்தாமணி" என்ற நூலைத் திருத்தக்கதேவர் இயற்றினார். "சீவக சிந்தாமணி"யை ஏனைச் சமயத்தவர்களும் படித்து அதில் அறிவு மயங்கினர். சிறை சென்றாலும் இந்நூலைக் கற்பேன் என்ற அளவிற்கு இந்நூல் மக்கள் மனத்தில் இடம் பெற்றது. ஆத்திக மனப்பான்மையுடைய நன்மக்களுக்கு இது வருத்தத்தைத் தந்தது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் வாழ்ந்த கம்பன், வடமொழி நூல்களை நன்கு கற்றான். சீவக சிந்தாமணியின் இன்பச் சுவையையும் சிறக்க நுகர்ந்தான். சீவக சிந்தாமணியிலுள்ள பொருள் நயம், சொல் நயங்கள் அவன் மனத்தை ஈர்த்தன; என்றா

லும், அதில் சில இடங்களில், தமிழ் மக்கள் விழைந்த உயர்ந்த பண்பாடுகள் காணப்படவில்லை என்று கருதினன். அது போலவே, இராமாயணத்திலும் வான்மீகி சில பண்பாடுகளை உயர்த்துக் கூறவில்லை என்றும் கண்டான். ஆகையால் தமிழர் பண்பாட்டிற்கு ஏற்ப இராமனுடைய குணநலத்தைக் கூறவேண்டிய நிலை கம்பனுக்கு உண்டாயிற்று. இராமா யணத்தைத் தமிழ் மக்களுக்கென்று இயற்றினன்.

வடமொழியில் வான்மீகி எழுதிய இராமாயணம் " ஆதி காவியம் " எனப்படுகிறது. அந்த இராமாயணத்தை வான்மீகி சுலோக நடையில் எழுதியதற்கு ஒரு வரலாறு கூறுவதுண்டு. இராமனுடைய குணங்களை நாரதமுனிவன் கூறக்கேட்ட வான்மீகியார் அவைகளைச் சிந்திப்பதிலே ஆழ்ந்திருந்தார், அச்சமயம் இரண்டு கிரௌஞ்சப் பறவை கள் காமவயப்பட்டு இருந்ததை அவர் கண்கள் கண்டன. அதே சமயத்தில் அவைகளைப் பார்த்த வேடன் இரக்கமின்றி அவற்றில் ஒன்றைத் தன் அம்பினல் கொன்று பிரித்து விட்டான். அதைக் கண்டதும் அவருக்கு மிகுந்த சோக மேற்பட்டது. உடனே அவனை,

**" [1] மாநிஷாத பிரதிஷ்டாம்: த்வம் அகம: சாஷ்வதீ: ஸமா: யத் கிரௌஞ்ச மிதுனத் ஏகம் அவதீ: காமமோகிதம் "**

என்று சபித்தார்.

சிறிது நேரத்தில் அவர் சினம் தணிந்தது. அதனல் அவர் அவ்வேடன் பொருட்டுக் கழிவிரக்கம் கொண்டார். தாம் செய்தது தவறே என்று எண்ணி வருந்தினர். அப் போது பிரமதேவன், அவர் வருத்தம் தீரச் சோகத்தினல் எழுந்த சுலோக நடையில் இராம காவியத்தைச் செய்யுமாறு பணித்தான். சோக சிந்தையிலே சோக நடையிலே, எழுந் தது இராமாயணம். இன்றும் அச்சோகம் தீரவில்லை. கம்பனையும் அச்சோகம் பின்பற்றி வருகிறதென்றல் அச் சோகத்தின் பெருமைதான் என்னே ! அச்சோகம் மறைந்து அசோகமாக மாறும் நாளும் வருமோ !

---

1 வேடனே நீ கிரௌஞ்சப் பறவைகள் இரண்டு காம விருப்பத்துடன் இருந்த போது ஒன்றைக் கொன்றதனல் வெகு காலம் வாழாதொழிக.

இது நிற்க, பெருங்காவியங்களை இயற்றுமளவிற்கு வட மொழி அன்றும் வளம் பெற்றிருக்கவில்லை. நால்வகை வேதங்களை மட்டுமே கொண்டிருந்த வடமொழிக்கு ஓர் அணிகலனாக வான்மீகியின் சுலோகங்கள் அமைந்தன.

வான்மீகி முனிவர் காலத்திலேயே தமிழகம் சீரும் சிறப்பும் பெற்றிருந்தமையையும், "என்று முள தென் தமிழைப்" பல பெருமக்கள் சங்கம் வைத்து வளர்த்த பெருமையையும், வான்மீகி தமது காவியத்தில் கூறுகிறார். தம் நாட்டிலே வடமொழிக்குத் தக்க ஆதரவு தந்து பல கூட்டங்களை நடத்தி அந்த மொழியின் வளத்தைப் பெருக்க வல்ல பெருமக்கள் இல்லையே என்றுகூட அவர் குறிப்பாகக் கூறுகின்றார். இதனை நாம் நன்கு உணர வேண்டும்.

## 2. கோசல நாட்டு அரசு நலம்

கோசல நாட்டில் அதன் அரசியல் தலைநகரான அயோத்தியில், இரகுகுலத் தோன்றலாகத் தசரதன் தோன்றினன். அவன் பிறந்த போது ஒரு பேரரசனாகவோ, பரந்த நிலப்பரப்புடையவனாகவோ இல்லை. ஆகையால் அவன், அக் கோசல நாட்டுச் சிற்றரசன் ஒருவன் மகளான கோசலையை மணம் புரிந்து கொண்டு அரசைச் செவ்வனே நடாத்தி வந்தான். அவன் எட்டுத் திசைகளையும் வென்று, மேலுலகு கீழுலகங்கட்கும் தேர் செலுத்திச் சென்று எல்லா நாட்டையும் வென்றமையால் தசரதன் (பத்துத் தேர்களையுடையவன்) என்ற சிறப்புப் பெயர் பெற்றான். நெடு நாள் வரை மகப்பேறு இல்லாமையாலும், கேகய நாட்டு அரசனுடைய உறவு தேவையாயிருந்ததாலும், கேகய நாட்டுச் செல்வக் குமரியான கைகேயியைச் சில நிபந்தனைகளுடன் மணந்தான். இந்நிபந்தனை என்ன என்பதைப் பின்பு ஆராய்வோம். அவளுக்குப் பின்னர் சுமத்திரை என்பவளையும் மணந்து பலகாலம் நாட்டைப் பண்புறப் பாதுகாத்து வந்தான்.

தசரதன் ஆட்சி தொடங்கியபோது, நாட்டில் பிணியும், பகையும், வறுமையும் மல்கியிருந்தன. ஆயினும் அவன் தன் கொடையாலும், வன்மையாலும், உழைப்பாலும், படை வலியாலும் அக்குறைகளைப் போக்கித் தன் நாட்டைச் செல்வத் திருநாடாக்கினன். இதனைக் கம்பன் தன் புலமைக் கண்ணாற் கண்டு,

"ஈந்தே கடந்தான் இரப்போர் கடலை எண்ணின் நுண்ணூல்
ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் திருவின் தொடர்போக பௌவம்"[2]

என்று அழகாகக் கூறுகின்றான்.

"தாயொக்கும் அன்பை" அயோத்தி மக்கள் தசரதனிடமிருந்து பெற்றனர். கோசல நாட்டில் நீர் வளமும், நில வளமும் நிறைந்துள்ளன. சரயுநதி சோழ நாட்டுக் காவிரியைப் போல மக்களுக்குப் பயன் தந்து வந்தது. அந்த நதியை நோக்கினான் கம்பன். அதே நிலையில் பல சமயங்களையும் நோக்கினான். அவற்றிடையே ஓர் ஒற்றுமை கண்டான். அதனை,

கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையில் மறைகளாலும்
இயம்பரும் பொருள் ஈது என்னத்
தொல்லையில் ஒன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெரும் சமயம் சொல்லும்
பொருளும் போல் பரந்த தன்றே[3]

என்று வாயாரப் புகழ்கின்றான்.

---

2 இதன் பொருள்: தசரதன் யாசகர்களாகிய சமுத்திரத்தைத் தானம் செய்தலாகிய புணையைக் கொண்டு தாண்டினான். அறிவு நூல்களாகிய கடலை ஆராய்ச்சிப் புணையைக் கொண்டே கடந்தான். பகைவராகிய சமுத்திரத்தைப் படைவலியாகிய புணையைக் கொண்டு நீந்தினான். செல்வத்தினோடு தொடர்ந்துள்ள இவ்வுலக இன்பமாகிய சமுத்திரத்தை மனம் திருப்தியடையும்படி அனுபவித்தலாகிய புணையைக்கொண்டு கடந்தான் என்பது.

3 மலைகளிலே பிறந்து சமுத்திரத்தைச் சேரும் தண்ணீர் நான் மறைகளாலும் சொல்லுதற்குமுடியாத அருமையான பரம்பொருள் போல் ஆதி காலத்தில் ஒன்றாகவேயிருந்து, பல இடங்களில் பாய்ந்து ஏரி, குளம், கடல் என்ற பெயர் பெறுகிறது. பல சமயங்கள் கூறும் அறிவுரைகளும், ஆதியில் ஒன்றாகவேயிருந்து, பல சமய ஆராய்ச்சியாளர்கள் கூறும் சமயங்களாகப் பரந்து கிடக்கின்றன.

தசரதனது நல்லாட்சியினுல் நாட்டில் பல வகையாக வேண்டப்படும் எல்லா வளங்களும் மல்கின. ஆண்களோடு பெண்களும் ஏற்றத்தாழ்வு, குறைவு நிறைவு இன்றி அறிவு, நினைவு, செயல்களில் ஒத்து விளங்கினர்; அதனுல் கோசல நாட்டு ஆடவரும், பெண்டிரும் தம்மில் சரிநிகர் சமானமாக வாழ்ந்தனரென்று கம்பன் கூறுகின்றுன்.

" பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்
விருந்து மன்றி விளைவன யாவையே " 4

" வண்மையில்லை ஓர் வறுமை யின்மையால்
திண்மையில்லை நேர் செறுநர் இன்மையால்
உண்மையில்லை பொய்யுரை இலாமையால்
ஒண்மையில்லை பல் கேள்வி ஓங்கலால் " 5

" கல்லாது நிற்பார் பிறர் இன்மையால் கல்வி முற்ற
வல்லாருமில்லை அவை வல்ல ரல்லாருமில்லை
எல்லோரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரு மில்லை உடையார்களும் இல்லை மாதோ "

படித்தற்கு உரிய நூல்களைப் படிக்காமல் வீணுகப் பொழுது போக்கிக்கொண்டிருக்கும் மக்கள் இல்லாமையினுல், இந்தக் கோசல நாட்டில் படிப்பில் முழுதும் வல்லவர்களு மில்லை; படிப்பு இல்லாதவரும் இல்லை. எல்லோரும் எல்லாச் செல்வமும் இனிது பெற்று இருந்ததனுல் உடையவர்களுமில்லை; இல்லாதவரும் இல்லை என்ற நிலை உண்டாகிவிட்டது. பொதுவுடைமைக் கொள்கையின்

4 பிறைச் சந்திரன் போன்ற நெற்றியைக் கொண்ட மகளிர்க்கெல்லாம் நிலைபெற்ற செல்வமும் கல்வியறிவும் பொருந்தி யிருத்தலால், வருத்தமடைந்து வந்தவர்கட்கு வேண்டுவன கொடுத்து உதவுதலும், விருந்தினரை உபசரித்தலுமே அவர்கள்பால் தினந்தோறும் நடக்கும் நித்திய கடமைகளாயிருந்தன.

5 இந்நாட்டில் சிறிது தரித்திரமுமில்லாமையால் கொடைச் சிறப்புத் தெரிவதில்லை. எதிர்த்துப் போர் செய்பவர்கள் இல்லாமையால் வீரம் தெரியவில்லை. பொய் பேசுபவர்களில்லாமையால் உண்மை தெரியவில்லை. கலைகள் மல்கியதால் அறிவுடைமை சிறந்து தோன்றவில்லை.

எல்லாக்கூறுகளும் மன்னராட்சியில் மலிந்து கிடந்தது வியப்பினும் வியப்பே !

எல்லாச் செல்வங்களையும் பெற்ற திருநாட்டில் அரசனுக்கு வேலையில்லாது போயிற்று. "நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே ; மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" என்னும் பழமொழி மாறி, உ ய ர் ந் த ஆபரணங்களைப் பூண்டிருக்கிற மன்னன், வாழக்கூடிய உயிர்வகையுள் ஊர்வன, நடப்பன, இடம்விட்டு இடம் பெயரக்கூடியனவாகிய உயிர்களும், செடிகொடி மரம் முதலான தாவர உயிர்களும் ஆக உலகிலுள்ள எல்லா உயிர்களும் பாதுகாப்பிற்காகத் தங்கியிருக்கும் தகைமையுடைய ஓரே உடலாகஇருந்து விளங்கினன் தசரதன். இதனை

" வயிரவான் பூணணி மடங்கல் மொய்ம்பினன்
உயிரெலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்
செயிரிலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிரெலாம் உறைவதோர் உடலும் ஆயினன் "

என்று கம்பன் கூறுகின்றான்.

# 3. மகப்பேற்றுக் கவலை

அயோத்தி நாட்டவர் எல்லா வளங்களும் பெற்று இனிது வாழ்ந்திருந்தனர் என்றாலும், அவர்கள் விதியின் பிடியினின்றும் விடுபட்டவர்களல்லர் என்பதைக் கம்பன் கண்டான். அந்நாட்டிலே மக்கள் தங்களையும் அறியாமல் மனிதப் பண்பாட்டை இழந்து வந்தனர். 'விதிக்கு விதியாகும் எம் விற்செயல் காண்டி' என்று கூறிய மக்கள் 'வெஞ்சின விதியை வெல்ல வல்லமோ' என்று கூறும் நிலையை எய்தினர்; இதனையும் கம்பன் நன்கு கண்டான். இதைப் பிறிதோர் இடத்தில் அவன் விளக்குவதைக் காணலாம்.

தசரதன் மக்களினத்தவனாதலால் அவன் இவ்விதிக்குப் புறம்பானனில்லை. அவனுக்கும் விதி காரணமாக ஒரு விவரிக்க முடியாத துன்பம் தோன்றி மனதைக் கலக்கிக் கொண்டிருந்தது. "அறுபதினாயிரம் ஆண்டுகள் பகைவர்களை யெல்லாம் அடக்கி இந்த நாட்டைக் காத்து வந்திருக்கிறேன்; எனக்குப்பின் காப்பாரில்லாமையால் இவ்வுலகம் கெட்டு விடுமே என்ற மனக் கலக்கம் மாத்திரம் எனக்கு உள்ளது; வேறு குறை ஒன்றுமில்லை" என்ற கருத்துப்பட

> " அறுபதி னாயிர மாண்டு மாண்டுற
> உறுபகை யொடுக்கி இவ்வுலகை ஓம்பினேன்
> பிறிதொரு குறையிலை என்பின் வையகம்
> மறுகுறும் என்பதோர் மறுக்கம் உண்டரோ "

என்று அவன் கூறினான்.

மகப்பேறு இல்லையே என்று வருந்திய தசரதன் அது பற்றிச் செய்யக் கடவது யாது என்று வசிட்டர் முதலிய சான்றோர்களைக் கேட்டான். பின்னர் வசிட்ட முனிவரின் ஆலோசனைப்படி, இருசியசிங்கரைக் கொண்டு புத்திரப் பேற்றுக்குரிய வேள்வி செய்து, முறையே, இராமன்,

பரதன், இலக்குமணன், சத்துருக்கனன் என்ற மக்களைப் பெற்றான்.

இராமனைப் போல் ஒரு மகனைப் பெறுவது மக்கட் பிறப்புக்கு அரிது. மனிதப் பிறப்புக்கு மாண்பு தரும் குணமெல்லாம் அவனிடம் குடிகொண்டிருந்தன. குண நலங்கட்கேற்ப அவன் உடலழகும், வன்மையும் பெற்று விளங்கினான். இராமனை மகனாகப் பெறுவதாயின் 'மனிதப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே' என்று கூறுவது இவ்விடத்துக்குப் பொருத்தமாகும். அவனை மயில் முறைக் குலத்திலே பிறந்த கைகேயிதான் எடுத்து வளர்த்து வந்தாள். "தாய் கையில் வளர்ந்திலன், வளர்ந்தது தவத்தால் கேகயன் மடந்தைபால்" என்று கம்பனும் சிறப்பித்துக் கூறுகின்றான். இராமன் தாய் என்று கூறுமிடத்திலெல்லாம் அச்சொல் கைகேயியைக் குறிக்குமேயன்றிக் கோசலையைக் குறிக்காமையும் இங்கே சிந்திக்கத் தக்கது.

நான்கு புதல்வர்களிலும், இராமனே மூத்தவனாயினும் அவனைப்போலவே ஒத்த மதிப்பும் தகுதியும் பெற்றவன் பரதன். சுமித்திரையின் இரு மக்களும் இராமனுக்குப் பணிவிடை செய்வது நியாயமாயினும், இலக்குமணன், இராமனுக்கும், சத்துருக்கனன், பரதனுக்கும் பணிபுரிந்தனர். தசரதன் மனைவியர் மூவரும் பெற்ற மக்கள் நால்வரில், சுமித்திரை பெற்ற புதல்வர் இருவரும் ஏனைக் கோசலையும் கைகேயியும் பெற்ற மக்களுக்கு முறையே அடிப்பணி புரியும் தம்பியராக இருந்தனரென்பது நாடறிந்த வரலாறு. இது இராமாயணம் படிப்பவர்கள் சிந்தனையைத் தூண்டியுள்ளது. கௌரவர்களுள் மூத்தவனான துரியோதனனுக்கே தொண்ணூற்றொன்பது பேரும் பணிவிடை செய்ததும், பாண்டவர்களுள் மூத்தோனான தருமனுக்கே, தம்பியர் நால்வரும் பணிபுரிந்ததும் இங்கு நினைவுகூரத்தக்கன. இஃது ஏன் என்பதைப் பின்னர்க் கூறுவாம்.

இராமனைக் கண்மணிபோல் காத்து வளர்ப்பதில் இன்பங்கொண்டான் தசரதன். இந்த இன்ப நாளிலேகூட அவன் மனதிலே சொல்ல முடியாத துன்பம் ஒன்று இருந்

தது. இளம் வயதிலே ஒரு முனிவருடைய மகனைத் தசரதன் தவருகக் கொன்றுவிட்டான். அதனுல் பொறுக்கமுடியாத துன்பமடைந்த அந்த முனிவர், "புத்திர சோகத்தினுல் நீ மடிவாயாக" என்று தசரதனுக்குச் சாபமிட்டார். அது அவனுடைய மார்பில், எறிவேல் பாய்ந்த புண்ணுக இருந்து துன்பத்தைத் தந்துகொண்டிருந்தது. கண்மணியான இராமன் பிரிந்தால், தானும் இறந்துவிட நேரும் என்ற அச்சம் அவன் மனத்தைவிட்டு அகலவில்லை. ஆகையால் அவன் சித்திரத்தில் வரையப்பட்ட நீலோற்பலம் போன்ற கண்ணும் ஒளி பொருந்திய தாமரை போன்ற முகமுமுள்ள வனுகிய இராமனைத் தவிர வேறே உடலோ உயிரோ இல்லாதவனுகி உறைந்தான்; ஆயினும் உலகத்தை ஆளுகின்ற அரசர்கள் எல்லோருக்கும் சிறந்துயர்ந்த அரசனுகத் தசரதன் விளங்கி மகிழ்ச்சியில் மூழ்கினுன். இதனைக் கூறலுற்ற கம்பன்,

"காவியும் ஒளிர்தரு கமலமும் எனவே
ஓவிய எழிலுடை ஒருவனை அலதோர்
ஆவியும் உடலமும் இலதென அருளின்
மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்"

என உரைக்கின்ருன்.

# 4. கைவண்ணமும் கால் வண்ணமும்

இராமன் கல்வி கேள்விகளில் சிறப்பு மிகுந்து "இவனைப் பெறுவதற்குத் தசரதன் என்ன தவம் செய்தானோ!" என்று உலகம் போற்றுமாறு விளங்கியிருந்தான். ஆண்டுகள் பல சென்றன. இராமன் பதினாறும் வயதை அடைந்தான்.

ஒருநாள் தசரதன் பெருமகிழ்ச்சியுடன் கொலுவீற்றிருந்த நிலையில் பிரமனைப்போன்ற தோற்றமுடைய விசுவாமித்திரர் அங்கே தோன்றினார். விசுவாமித்திர முனிவர், மிகவும் தவ வலிமையுடையவர். ஒரு காலத்தில் திரிசங்கு என்ற அரசனைத் தேவருலகிற்கு அனுப்பினார். ஆனால் அவனைத் தேவர்கள் அங்கே ஏற்றுக்கொள்ளவில்லை; அதனால் வெகுண்டு எழுந்தார் முனிவர். நான்முகனையும் தேவர்களையும் நானே படைக்கிறேன் என்று கூறித் திரிசங்குவிற்கு ஒரு தனிச்சுவர்க்கத்தை அமைத்தார். "மன்னுயிர் அடங்கலும் உலகும் வேறு அமைத்துத் தேவரோடு நான்முகனையும் இப்பொழுதே படைப்பன் எனத் தொடங்கிய துனியுறு முனிவன்" என்றும், "மண்படைத்த முனி" என்றும் கம்பன் குறித்துச் சிறப்பிக்கின்றான். இத்துணைச் சிறப்புப்பெற்ற விசுவாமித்திரர், தான்செய்யும் வேள்விக்குக் காவல் செய்வதற்காக, இராமனைத் தன்னிடம் தருக எனத் தசரதனைக் கேட்டார்.

செயற்கரிய தவத்தைச் செய்த விசுவாமித்திரர் கூறிய இச்சொற்கள் ஒருவன் மார்பின்கண் ஏற்பட்ட பெரும் புண்ணிலேயுள்ள துவாரத்தில் நெருப்புக்கனல் நுழைந்தது போலத் தசரதன் காதுகளிலே நுழைந்தன. உடனே அவனுடைய மனத்திலே, ஏற்கனவேயுள்ள துயரமானது பிடித்துத்தள்ள, அவனுடைய உயிரானது வெளியே போய் விடவும் இயலாமல், உள்ளே இருக்கவும் முடியாமல் உள்ளும் புறமுமாக ஊசலாடத் தொடங்கிற்று; கண்ணில்லாக் குருடன் ஒருவன் கண்ணைப் பெற்று, மறுபடியும்

அதை இழந்து விட்டால் அவன் மனத்துயரம் எப்படி யிருக்குமோ, அப்படிக் கடுமையான துயரத்தை அடைந் தான். இதனை;

" எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்
மருமத்தில் எறிவேல் பாய்ந்த
புண்ணில்ஆம் பெரும்புழையுள் கனல்நுழைந்தால்
எனச்செவியில் புகுத லோடும்
உள்நிலாவிய துயரம் பிடித்துந்த
ஆருயிர் நின்று ஊச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் என உழந்தான்
கடுந்துயரம் கால வேலான் "

என்று கம்பராமாயணம் கூறுகிறது.

இராமனை விசுவாமித்திரர்பின் அனுப்ப முதலில் தசரதன் தயங்கினன். என்றாலும், பின்னர் வசிட்டரின் கருத்திற்கு ஏற்ப உடன்பட்டான். தன் குல குருவின் சொல்லைத் தட்ட முடியாது இராம இலக்குமணர்களை விசுவாமித்திரருடன் அனுப்ப ஒப்புக்கொண்ட மன்னனுக்கு இராமன் செல்வது அவன் உயிரே போவதுபோல இருந்தது என்பானாய்,

" அன்ன தம்பியும் தானும் ஐயனும்
மன்னன் இன்னுயிர் வழிக்கொண் டால்எனச்
சொன்ன மாதவர்த் தொடர்ந்த சாயைபோல்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினன் "

என்று கம்பன் கட்டுரைக்கின்றான்.

விசுவாமித்திரர்பின் சென்ற இராம இலக்குமணர்கள் அங்கநாட்டை அடைந்தனர். சிவபெருமானுடைய கோபத் தினால் எரிக்கப்பட்ட மன்மதனுடைய அங்கம் நீராகி வீழ்ந்ததால் அதற்கு அங்கநாடு என்று பெயர் உண்டாயிற்று. அதன் அண்மையிலே ஒரு பாலைவனம் இருந்தது. அந்த இடம் ஏன் நீர் நலம் அற்றதாக இருக்கிற தென்பதை விசுவாமித்திரர் கூறுகிறார்.

சுகேது என்பவன் நீண்ட தவத்தின் பயனாக ஒரு பெண்ணைப் பெற்றான். தாடகை யென்று பெயரிடப்பட்ட

அவளைத் தக்க பருவத்தில் சுந்தன் என்பவனுக்கு மணம் புரிவித்தான் சுகேது. அவர்களிருவருக்கும் மாரிசன், சுவாகு என்று இரு மைந்தர்கள் பிறந்தனர். ஒரு சமயம், சுந்தன் அகத்தியரது பெருமையறியாது அவரிடம் தவருக நடந்து கொண்டதால் அவரால் கொல்லப்பட்டான். தாடகையும் அவளுடைய இரு மக்களும் தமிழ் முனிவரின் வலியை அறியாது அவரைக் கொல்லச் சதி செய்தனர். ஆனுல் அகத்தியர் அவர்களை அரக்கர்களாகும்படி சாபமிட்டார். இவ்வாறு அரக்கர்களான சுவாகு, மாரீசர்கள்தான் பின்னுல் இராவணனுல் மாமன்மார் என்று போற்றப்பட்டவர்கள்.

"கணவனைப் பிரிந்த தாடகையின் கடுஞ்சினத்தாலும், கடுந்துக்கத்தாலும் விளைந்த பயன்தான் இச்சோலைவனம் கெட்டுப் பாலைவனமாகியது" என்று விசுவாமித்திரர் இராமனுக்கு விளக்குகின்றுர்.

இங்கே இராமனது மனவுணர்வின் போக்கைக் கம்பன் வெளிப்படுத்துகின்றுன். அங்க நாடு பாலையானதற்கு விசுவாமித்திரன் கூறிய காரணம் இராமனுக்கு அமைதி தரவில்லை; அங்க நாடு தசரதன் ஆட்சிக்கு உட்பட்டதென அறிந்ததும் அவனது உள்ளம் அலையத்தொடங்கிற்று. தன் தந்தையின் அரசாட்சியில் குறையுண்டுபோலும், அதை முனிவன் மறைக்கின்றுன் போலும் என அவன் எண்ணினுன். அவன் முனிவனை நோக்கி,

> **"சுழிபடு கங்கையந் தொங்கல் மோலியான்**
> **விழிபட வெந்ததோ? வேறுதான் உண்டோ?**
> **பழிபடா மன்னவன் படைத்த நாட்டினூங்கு**
> **அழிவதென் காரணம்? அறிஞ கூறு"**

என்று கேட்டான். இது நிற்க.

அரக்கர்கள் என்ற சொல் இராமாயணத்தில் முதன் முறையாக இங்கேதான் வருகின்றது. வடமொழி மூதுரை ஒன்றில் கற்றவர்கள் விபரீதமாக நடந்துகொள்ளும் போது அரக்கர் நிலையை அடைகிருர்கள் என்ற கருத்துப்பட "சாக்ஷராக்ஷ விபரீதா; சேத் இராஷ்சசா யேவ கேவலம்"

என்று கூறப்படுகிறது. கற்றவர்களும் முறை திரும்பினுல் அரக்கராவர். இதுபோலவே மனிதர்கள் கல்வியறிவால், வையத்து வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை நலத்தால் உயர்ந் தவர்களானுல் தேவர்களாகின்றுர்கள். இதனைச் "சூளாமணி" ஆசிரியர், "விஞ்சையர் விச்சையாலே விழுமியர் என்ப தல்லால்...மனிதரே யாவரும் [1]" என்றும், "வையத்து வாழ் வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்" எனத் திருவள்ளுவரும் கூறியுள்ளனர்.

இன்று நாம் ஏடுகளிலும் மேடைகளிலும் அரக்கர்களும், அவர் தலைவனுன இராவணனும் தமிழர்களென்றும், அவர் களை ஆரிய மன்னனுன இராமன் அழித்தான் என்றும் சிலர் சொல்லக் கேட்கிறேம். அரக்கர்கள் தமிழர்களென்றுல், தமிழ்நாட்டு மகனுன அகத்தியனுல் அவர்கள் தமிழ் நாட்டிற் குள் புகாதபடி தடுக்கப்பட்டிருக்க முடியுமா? இராவணனே ஒரு காலத்தில் அகத்தியரிடம் தோற்றுத் தமிழ் நாட்டின் எல்லைக்குள் வருவதில்லை என்ற நிபந்தனையுடன் இலங்கை சென்றதாக வரலாறு அறிவிக்கிறது. அரக்கர்களின் தலைவனுன இராவணன் ஓர் அந்தணன் என்றும், அவன் பிரமனுக்கு மகன் வயிற்றுப் பேரன் என்றும் வான்மீகியும் கூறுகின்றுரேயன்றித் தமிழ் மகன் என்று எங்குமே யாருமே கூறவில்லை. அரக்கரைத் தென்னுட்டவர் எனக்கூறுவது வட நாடு, தென்னுடுகட்கு இடையே ஒற்றுமை நிலவாதபடி கெடுக்கும் தீயவர் கற்பித்துக் கூறும் பொய்க்கற்பனை. அரக் கர்களிடம் காணப்படும் குணம் செயல்வகைகளும், பெயர் வகைகளும் தென்னுட்டவரிடம் எக்காலத்தும் எவ்விடத்தும் காணப்பட்டதில்லை. இதனை நாம் சிந்தித்தல் வேண்டும்.

அங்கநாடு பற்றிய பேச்சு முடிந்ததும், இராமன் தன் தலையை அசைத்து, "அத்தாடகை எங்கே உறை கின்றுள்?" என்று கேட்டான். அவனுக்குத் தாடகையின் கொடுமையைப்பற்றி விசுவாமித்திரர் விரிவாகக் கூறினுர்; அங்ஙனம் கூறும்போதே வலிமைமிக்க விசுவாமித்திரனும்

---

1 தேவர்கள் தாம் கற்ற வித்தைகளாலே பெருமையடைந்திருக்கிறுர் களே யன்றி அவர்கள் வேறு யாருமல்லர்; அவர்களும் மனிதர்களே.

நெஞ்சுறுதியை இழந்தான். ஆனாலும், அவனால், இராம னுடைய அழகைமட்டும் மறக்கமுடியவில்லை. அவனுடைய அழகு, அவனுடைய பகைவர்களின் உள்ளத்தையும் ஈர்த்த தென்றால், விசுவாமித்திர முனிவர் மனம் குழைவதில் வியப்பு ஏது ?

"பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்" என்று இதனையே வான்மீகியும் கூறுகின்றார்.

**" சூடக வரவுறழ் சூலக் கையினள்**
**காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்**
**ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்**
**தாடகை என்பதச் சழக்கி நாமமே "** [1]

என்று மொழிகின்றார்.

அமைதியுடன் அதனைக்கேட்ட இராமன் பெண்ணென்ற கருத்தால் தாடகையைக் கொல்ல விருப்பப்படவில்லை. ஆயினும் விசுவாமித்திரரின் கட்டளைக் கிணங்க அவளைக் கொன்று யாகத்திற்குச் சென்றான்.

கண்ணினைக் காக்கின்ற இமையைப்போல ஆறு நாட் கள் இராம இலக்குமணர்கள் வேள்வியைப் பாதுகாத்து மாரீசன், சுவாகு முதலான அரக்கர்களை வென்று யாகத்தை இனிது முடித்துத் தந்தனர். பின்னர் விசுவாமித்திரர், சனக னுடைய வேள்வியையும் காணவேண்டுமென்று கூறி அவர் களை அங்கு அழைத்துச் சென்றார். மிதிலை செல்கின்ற வழி யில் இராமனுடைய காலடி ஒரு கல்லில்பட, அக்கல் ஒரு பெண்ணாக மாறியது. என் அன்னைபோல் தோன்றும் இவள் யார் என்று இராமன் வினவ, முனிவர், அப்பெண்ணின் பெயர் அகலிகை என்று அறிவித்து, அவளது வரலாற்றை யும் கூறத் தொடங்கினார்.

கௌதம முனிவர் அகலிகை என்ற அழகான பெண்ணை மணந்து இல்லறம் நடாத்தி வந்தார். ஒரு நாள் தேவர்

---

1 ஆண்களாகக்கூடப் பெண்ணாகப் பிறந்தோமில்லையே என்று வருந்தத் தக்க எழிலையுடைய இராமனே! காட்டிலே வாழ்கின்றவளும் சூலாயுதத்தை யுடையவளுமாகிய அவள்தான் அவ்வரக்கி; அவள் பெயர் தாடகை.

களுக்கு அரசனுன இந்திரன் அவள்பேரில் தீராத காம வேட்கைகொண்டு, முனிவரில்லாத சமயம் பார்த்து அவர் போல் மாறு வேடந்தாங்கி வந்தான். உண்மை அறியாமல் அகலிகை அவனுடன் கூடிக் காம இன்பத்தை அனுபவித் தாள். அவ்வின்பத்திடையே அவன் தன் கணவன் அல்ல னென்பதையும் அவள் உணராமலில்லே. ஆயினும் அவன் தந்த இன்பத்தை விலக்க முற்படாமல் அகலிகை அவனுடனே பின்னும் மனம் கலந்தேயிருந்தாள். இந்நிலேயில் முனிவன் அங்கு வந்து சேர்ந்தான். இதனைக் கம்பன்,

> " புக்கவளோடும் காமப் புதுமண மதுவின் தேறல்
> ஒக்கஉண்டிருந்த லோடும் உணர்ந்தனள் உணர்ந்தபின்னும்
> தக்கதன் றென்ன ஓராள் தாழ்ந்தனள் இருப்பத் தாழா
> முக்கணுன் அனைய ஆற்றல் முனிவனும் முடுகிவந்தான் "

என்று அழகாகக் கூறுகின்ருன்.

இந்த நிகழ்ச்சியையே வான்மீகி பகவானும்

> " முனிவேஷம் ஸஹஸ்ராக்ஷம் விஞ்ஞாய ரகுநந்தன
> மதிம் சகார துர்மேதா தேவராஜ குதூஹலாத்
> அதாப்ரவீத் சுரஸ்ரேஷ்டம் கிருதார்த்தேந அந்தராத்மனு
> கிருதார்த்தாஸ்மி சுரஸ்ரேஷ்ட கச்சசீக கிரமித: ப்ரபோ! [1]"

கம்பன் காலத்திற்கும் வால்மீகியின் காலத்திற்கும் பல வேற்றுமைகள் உண்டு. வடமொழியாளர்கள் அந்த நாளில் வாழ்ந்த பண்பாட்டிற்கு ஏற்ப வான்மீகி தம் காவியத்தைத் தொடங்கி எழுதினுர். ஆனுல் கம்பனே, பிறர் மனம் நினைந் தால் கூடக் கற்பின் மாட்சி குறைந்துவிடுமென நம்பிய தமிழர் மரபுக்கு ஏற்பக் கவிதை செய்யவேண்டிய நிலேயி லிருந்தான் ஆதலால், அகலிகை செய்த குற்றத்தை மறைத்துக் கூறுகிருன்.

---

1 முனிவேடம் பூண்டு வந்தவன் இந்திரன் என்று தெரிந்து கொண்டும், கெட்டபுத்தியுள்ள அகலிகை தேவேந்திரன் என்ற மகிழ்ச்சியினுல் அவனுடன் கலந்து இன்பம்பெற ஒப்புக்கொண்டாள். பின்னர் திருப்தியுள்ள உள்ளத் துடன் இந்திரனிடம்:- "பிரபுவே என்னுடைய எண்ணம் ஈடேறினவளாகின் றேன். ஆகையால் நீங்கள் இவ்விடம்விட்டு விரைவில் சென்றுவிடுங்கள்" என்று கூறினுள்.

பின்னர், விசுவாமித்திரர் இராம இலக்குமணர்கள் தொடர்ந்துவர அகலிகையைக் கொண்டுசென்று அவள் கணவனுன கௌதமரிடம் சேர்க்கின்றுர். இவ்வாறு அகலிகையை அவளுடைய கணவன்பால் சேர்த்துவிட்டு விசுவாமித்திரர் மிதிலைக்குப் புறப்படுகிருர். அப்போது அவர் இராமனுடைய திறனை வாயார வாழ்த்தி,

"இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம்
இனி இந்த உலகிற்கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்ருேர்
துயர்வண்ணம் உறுவ துண்டோ
மைவண்ணத்து அரக்கி போரில்
மழைவண்ணத்து அண்ணலே நின்
கைவண்ணம் அங்குக் கண்டேன்
கால்வண்ணம் இங்குக் கண்டேன்" [1]

என்று பாராட்டுகின்ருர்.

---

1 ஏ இராமனே, நான் கூறியதுதான் அகலிகையின் கதை. உன்னுடைய கைத்திறனை அன்று தாடகைப் போரிலே கண்டேன். இன்று உன் காலின் சிறப்பை அகலிகையை உயிர்ப்பித்ததன் மூலம் அறிந்துகொண்டேன். இனி எல்லா உயிரினங்களும் துன்பம் நீங்கி ஈடேறுவண்ணமல்லாமல் துயர் உறுவதற்கு இடம் இல்லையாம்.

# 5. வில்லிறுத்த வீரம்

இராமன் விசுவாமித்திரருடன் மிதிலைக்குச் செல்வானுயினன். மிதிலை நகரைப்பற்றியும், அதன் வளத்தைப்பற்றியும் கம்பன் பல நல்லுரைகளைக் கூறியபின் இராமனுடைய அழகை எவ்வாறு மக்கள் கண்டனர் என்பதைக் கூறுகின்ருன். எவ்வாறு இறைவனது முழுநலத்தையும் காணுது ஒருசில கூறுகளையே மக்கள் காணமுடிகிறதோ, அவ்வாறே இராமனது திருமேனியழகு முழுதும் காணமுடியாது மக்கள் மருண்டனர்.

"தோள்கண்டார் தோளே கண்டார்
தொடுகழற் கமல மன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்
தடக்கை கண்டாரும் அஃதே
வாள்கொண்ட கண்ணுர் யாரே
வடிவினை முடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்னுர்
உருவுகண் டாரை ஒத்தார் [1] "

என்று கம்பன் கூறுவதைக் காணலாம்.

விண்ணுட்டு மங்கையரும், விஞ்சையர் நாட்டு அரிவையருங்கூட இராமனுடைய மேனி நலத்தில் மதிமயக்கம் கொண்டார்களென்ருல், அவனுடைய அழகு எவ்வாறிருக்கும் என்பதை யாவர் கூறமுடியும்?

---

1 மிதிலை மக்களில் இராமனது தோளழகைக் கண்டவர்கள், அவ்வுறுப்பின் அழகில் மயங்கி வேறு ஒன்றையும் காணுதவர்களாகி விட்டார்கள். அவனுடைய பாதத்தைக் கண்டவர்களும் அவ்வாறே ஆயினர். ஒளிமிக்க கண்களையுடையவர்களும் இராமனுடைய முழுத்தோற்றத்தின் பொலிவைக்காண இயலாதவர்களாகி விட்டார்கள். சமயங்களின் நூல்களெல்லாம் பரம் பொருளை முழுமையும் காண முடியாததுபோல் இவனுடைய அழகு முழுமையும் மக்களால் காணமுடியாமல் இருந்தது.

இவ்வாறு அழகே வடிவான இராமனைச் சீதை கண்டாள் என்று கம்பன் கூறுகின்றான். இங்குக் கம்பனுக்கும் வான்மீகிக்கும் வேறுபாடுகள் உள்ளன. வான்மீகத்தில் சீதைக்கும் இராமனுக்கும் மணமாகும் முன்பே காதல் தோன்றியதாகக் கூறவில்லை. அவர் கூறும் காவியத்திற்கு இவர்களிருவரும் காதல் கொள்ளவேண்டிய நிலை ஏற்படவேயில்லை. எவன் சிவனுடைய வில்லை நாண் ஏற்றுகின்றானோ அவனுக்கே தன் மகளான சீதையைக் கொடுப்பேன் என்று சனகன் கூறிவிட்டான். ஆகையால் வில்லை வளைப்பதற்கு அழகன்தான் வரவேண்டுமென்பதில்லை. இதனைக் கம்பனும் கேலியாகக் கூறுவதைக் காணலாம். சனக மன்னன் இராமனை மருமகனாகப்பெற விரும்புவானேயானால் 'கொள்' என முன்வந்து கொடுப்பதைவிட்டுச் சிவனுடைய வில்லை எடுத்துப் பிள்ளைப் பருவத்தனாகிய இராமன் முன் வைத்தது பேதைமை என்று மக்கள் கூறுவதாகக் கம்பன்,

> **"வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்**
> **'கொள்' என முன்பு கொடுப்பதை யல்லால்**
> **வெள்ள மணைத்தவன் வில்லை எடுத்து இப்**
> **பிள்ளைமுன் வைத்தது பேதைமை என்பார்."**

எனக் கூறுகின்றான்.

இந்தப் பாட்டைப் பற்றிப் பல வாதங்கள் தமிழ் நாட்டில் எழுந்துள்ளன. இடைச்செருகல் என்று பல பாடல்களை ஒதுக்கிவிட்ட தமிழ்ப் பெரியார் ஒருவர், "வெள்ள மணைத்தவன்" என்ற பாடத்தை மாற்றி, "வெள்ளை மனத்தவன்" என்று எழுதியிருக்கிறார். வெள்ளை மனத்தவன் என்றால், சூது வாது தெரியாதவன் என்பது பொருள். ஆனால் சனகனோ திறம்பட நாட்டை ஆள்வதுடன், ஞானியாகவும் விளங்கினான். அத்தகையவனைச் சூதுவாது அறியாதவன் என்று கூறுவது பொருந்தாது. 'வெள்ளம் அணைத்தவன்' என்றால் கங்கையாகிய வெள்ளத்தைத் தடுத்தவன் என்று பொருள். மக்களெல்லாரும் அன்று இராமனை அவதார புருடனாகக் கருதவில்லை; சாதாரண மனிதனாகவே கருதி, அவனுடன் பழகி வந்தனர். அந்த நிலையிலுள்ள மக்கள்,

" சிவபெருமானுடைய பெருமை எங்கே? இச் சிறுவனது நிலைமை எங்கே? இவர்களிருவரையும் சரிசமமாக எண்ணிச் சனகன், 'வில்லை வளை' என்று கூறுகின்றானே, இது அறியாமை யன்றோ" என்றுதான் எண்ணினார்கள்.

கம்பன் தமிழர் பண்பாட்டிற்கு ஏற்பத் தன் நூலை எழுதியுள்ளான் என்பது யாவரும் அறிந்த செய்தி. களவொழுக்கத்திற்குப் பின் கடிமணம் புரிந்துகொள்ளும் கற்பு வாழ்வைத் தமிழகம் மேற்கொண்டிருந்ததைக் கண்டவன் கம்பன். அதனால், அவன் இராமனது காதல் வாழ்வைப்பற்றிக் கூற வேண்டி வந்தது. " நானும் நீயும் முன் பின் அறியாதவர்கள். என்னுடைய தாயும் தந்தையரும் உன்னுடைய தாய் தந்தையர்களை அறியாதவர்கள். செம்மண்ணிலே விழுந்த நீரைப்போல், நம் அன்புடை நெஞ்சம் தாமாகவே கலந்து விட்டன" என்று கூறும் களவொழுக்கத்தைக் கூறாது போனால் பெண்களை விலைப்பொருளோடு ஒப்பாகக் கருதும் கருத்து நாட்டில் ஏற்படும் என்று அஞ்சினான் கம்பன்.

அதனால், இராமனுக்கும் சீதைக்கும் கடிமணம் செய்யக் கருதும் கம்பன், காதல் நிகழ்ச்சியொன்றைத் தானே கற்பித்து இடையில் புகுத்துகின்றான். மிதிலையில் கன்னிமாட வீதியில் இராமன் விசுவாமித்திரன் பின்னே போய்க்கொண்டிருந்தான். அப்பொழுது நினைப்பதற்கும் அருமையான அழகைப்பெற்றுக் கன்னி மாடத்தின் உப்பரிகையில் நின்று சாளரத்தின் வழியாக வீதியைப் பார்த்துக்கொண்டிருந்த சீதையும், இராமனும் ஒருவரை யொருவர் கண்டனர். ஒருவர் கண்கள் மற்றவருடைய கண்களைக் கவ்வி ஒன்றை ஒன்று விழுங்குவது போல இருந்தன. இருவருக்கும் உணர்வு ஒன்றுபடவே இராமன் அவளைப்பார்த்தான்; அவளும் அவனைப் பார்த்தாள்; கண் பார்வையால் கட்டுண்டு இருவரும் ஒருவரை ஒருவர் ஈர்த்தலால், இருவருடைய இதயங்களும், ஒருவரிடமிருந்து மற்றொருவரிடம் சென்று சேர்ந்து விட்டன. இவ்வாறு சீதையும் இராமனும் ஒன்றாயினர் என்பதற்குக் கம்பன் ஒரு காரணம் கூறுகின்றான். முன்னால் திருமாலும் திருமகளுமாக இருந்த

இருவர்கள் இதுவரையும் பிரிந்திருந்தார்கள். இன்று அவர்கள் மீண்டும் சந்தித்தார்கள். ஆதலால், "பிரிந்தவர் கூடினுல் பேசவும் வேண்டுமோ?" என்று கருதுகிருன்.

இவ்வகையால் சீதைக்கு வேட்கை நோய் ஏற் பட்டுவிட்டது. "பெண்மைக்கு இயற்கையிலே உண்டான பண்பும், நாணமும் என்னிடம் இப்போது இல்லே. அவை களே யான் அறியாதவாறு, என் கண் வழியே நுழைந்து கவர்ந்து சென்றுவிட்டான் அக்கள்வன்" என்று கதறு கின்ருள். "கள்வன்கொல்? யான் அறியேன் கரியான் ஒரு காளே" என்பது அவளுடைய அரற்று. "இந்திர நீலத்தை ஒத்த கரிய அவனுடைய முடியும், பூரண நிலவையொத்த அவன் முகமும், நீண்டு பருத்த அவன் கைகளும் அழகிய அவனுடைய தோள்களும் என்னேக் கவரவில்லே. அவனுடைய புன்முறுவலே என் உள்ளத்தைக் கொள்ளே கொண்டது" என்பாளாய்,

> **"இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்**
> **சந்திர வதனமும் தாழ்ந்த கைகளும்**
> **சுந்தர மணிவரைத் தோளு மேயல**
> **முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே"**

என்று இசைக்கின்ருள்.

ஒருவரிடம் மட்டும் உண்டாகும் காதல் சிறப்படையாது; நன்மையும் விளேயாது. இருவர் மனமும் ஒன்றுபட்ட எழும் காதல்தான் மணத்திற்கு இசைந்தது. ஆகையால், சீதை, 'அவன் அழகன் என்பதற்காக நான் காதல் கொள்ளவில்லே. அவன் புன்முறுவலினுல், அவன் என்னே விரும்புகிரு னென்று அறிகிறேன். ஆகையால் காதல் கொண்டேன்' என்று கூறுகிருள்.

இராமனும் சிந்தனேயில் ஆழ்ந்தான். இதுவரையில் பெண்களேக் கண்டு கலக்கமுருத தன் மனம் இப்போது காதல் கொண்டு கலங்குவது அவனது ஆராய்ச்சிக்குப் பொருளாயிற்று. "என் மனம் ஏன் அவளே நாடியது? அவள் மணமான மங்கையாயின் நம்முடைய காதல் என்னும்?

அவளுக்கும் மாசு ஏற்படுமே" என எண்ணிச் சிறிது அஞ்சினுன். பிறர் மனம் புகுவதே கற்பிற்கு இழுக்கு என்பது தமிழ் மரபு. அதனை மேற்கொண்டு நிற்கும் கம்பன் இதற்கொரு மாற்றுக் காண்கின்றுன். "எப்போதும் நல்ல வழியிலே செல்லும் இயல்புடையது என் மனம். ஆதலால் என் மனத்தில் தீய நினைவுகள் தோன்ற இடமில்லை. இப்போது இந்தக் காதற் காம நினைவு தோன்றுகிறதென்றுல், காணப்பட்ட இவள் மணமாகாத ஒரு கன்னியேயாக வேண்டும்" என்று துணிகின்றுன். இதனைக் கம்பன்,

> " ஏகும் நல்வழி அல்வழி என்மனம்
> ஆகுமோ அதற் காகிய காரணம்
> பாகு போன்மொழிப் பைந்தொடிக் கன்னியே
> ஆகும் வேறிதற் கையுற வில்லையே "

என்று காட்டுகிறுன்.

இந்த ஆராய்ச்சி நமக்கு வியப்பாக இருக்கும். பழங்காலச் சான்றேர் இதனை உடன்பட்டிருக்கின்றனர். வடமொழிச் "சாகுந்தல" நாடகத்திலே, துசியந்தன் சகுந்தலையைப் பார்த்தபோது இதே கருத்தை,

> ஸதாம்ஹி ஸ்தேகப தேஷி வஸ்துஷு
> ப்ரமாணம் அந்த: கரண ப்ரவ்ருத்தய:[1]

வான்மீகி காலத்தே ஏற்படாத இக் கருத்து காளிதாசன் காலத்தில் ஏற்பட்டிருப்பது நோக்கத்தக்கது.

காம வேட்கை வயப்பட்ட இராமனைச் சனகனுடைய அரசவைக்கு விசுவாமித்திரர் கூட்டிக்கொண்டு போகிறுர். அங்கு இவர்களை யார் என்று சனகன் வினவ, முனிவர், அவர்களுடைய வரலாற்றைக் கூற முற்படுகிறுர். அப்போது அவர் நமக்குத் தெரிந்த கதையைத்தான் கூறுகிறுர்; என்றுலும் அதில் ஒரு நயத்தை நாம் காணலாம். இராமன் பிறந்ததைக் கூறும்போது, தீவினை செய்த தீவினையாலும், அறம் செய்த தவத்தாலும் அறிவதற்கு அருமையான, எல்லையில்லாத நான்மறைகளாகிய வேதங்களும் இன்றளவும்

---

1 நல்லோருக்கு ஐயமேற்படின் அவரது உள்ளமே வழிகாட்டியாக நிற்கும்.

அறிய முடியாத பெருமையையுடைய திருமாலைச் சித்திரத்தில் எழுதமுடியாத அழகுடைய இராமனைக் கோசலை பெற்றெடுத்தாள் என்பாராய்,

"விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறிந்த அறஞ்செய்த அறத்தாலும்
இருங்கடகக் கரதலத்தில் எழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென்பாள் பயந்தாள்"

என்று இசைக்கின்றார்.

அழகான திருமேனியையுடைய இராமன் என்று விசுவாமித்திரர் வாயிலாகக் கூறிய கம்பன், பரதன் பிறந்தான் என்பதை எவ்வாறு கூறுகிறான் என்று பாருங்கள்.

சான்றோர்களால் விலக்குவதற்கு முடியாத சிறந்த நீதியை உடையவனும், ஒப்பற்ற பல பண்பாடுகள் ஆறு போலத் தன்னகத்தே வந்து சேரக்கூடிய கடல் போலும் உள்ளப் பாங்குடையவனுமான பரதனென்னும் பெயருடையவனைக் கேகயர்கோன் மகள் பெற்றெடுத்தாள். அவன் குணப் பண்புகளாலும் அழகாலும் இருக்கின்ற இராமனை ஒத்தவன் என்று சிறப்பித்துக் கூறுகின்றான்.

"தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனும் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர்கோன் மகள் பயந்தாள்"

என்கிறான் கம்பன். மேலும் கம்பன் தன் இராமாயண முழுதும் பரதனுக்குத் தனிச் சிறப்புத் தந்து போவதை ஊன்றிக் கவனிக்கவேண்டும். கம்பன் மட்டுமின்றி இராமனும் எல்லாவிடங்களிலும் பரதனுக்குத் தனித்த ஒரு சிறப்புத் தருவதை எங்கும் காணலாம்.

இச் செய்திகளைக் கேட்ட சனகனுக்கு இராமனிடத்தில் பேரன்பு உண்டாயிற்று. தன் மகள் சீதையை இராமனுக்கே திருமணம் செய்து தர வேண்டுமென்ற பெருவிருப்பம் உண்டானபோதிலும் தன்பால் இருந்த சிவதனுவை வளைக்க வேண்டிய நிபந்தனை இருப்பதை எண்ணவும், சனகன்

மனம் தடுமாறலுற்றது. அக்குறிப்பை அறிந்த சதானந்தன் என்ற முனிவன் வில்லின் வரலாற்றையும் சீதையின் வரலாற்றையும் தெளிவாக எடுத்துரைத்தான்.

நிலத்தை உழுகின்றபோது சனகன் சீதையைக் கண்டெடுத்தான். சிவதனுவை நாண் ஏற்றுபவர்களுக்கே அவளை மணம் செய்து கொடுப்பேன் என்று சுயம்வரம் நடத்தினன். வில்லைக் கண்டு விதிர் விதிர்த்து ஓடியவர் பலர். இராமன் வில் வளைப்பதை அரசவையிலிருந்த பலரும் கண்ணிமை கொட்டாமற் பார்த்துக்கொண்டிருந்தனர். காண்பவர் கண்மூடித் திறக்குமுன், இராமன் வில்லை வளைத்தானதலால், ஒருவரும் அவன் வளைத்ததைக் காண முடியவில்லை. ஆயினும் இராமன் வில்லை எடுத்தது கண்டனர்; இற்றதைக் கேட்டார்கள். இதைக் கம்பன்,

> "தடுத்திமை யாம லிருந்தவர் தாளில்
> மடுத்ததும் நாண்நுதி வைத்ததும் நோக்கார்
> கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்
> எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்"

என்று கூறுகின்றான்.

சீதைக்குத் தக்க நாயகனைத் தந்த விசுவாமித்திரரை மிதிலை வேந்தனும் மக்களும் போற்றினார்கள். இராமனைப் பார்க்க வேண்டுமானால் சீதைக்கு ஆயிரம் கண்கள் வேண்டும் என்றனர் சிலர். சீதையைக் காண இராமனுக்கு ஆயிரம் கண்கள் வேண்டும் என்றனர் சிலர். தம்பியாகிய இலக்குவனைப் பார்க்க என்ன தவம் செய்தோமென்றனர் வேறு சிலர். இவர்கள் இருவரையும் தந்த விசுவாமித்திரரே பெரியவர் என்றனர் யாவரும்.

> "நம்பியைக் காண நங்கைக்கு
> ஆயிரம் நயனம் வேண்டும்
> கொம்பினைக் காணுந்தோறும்
> குரிசிற்கு மன்ன தேயால்

தம்பியைக் காண்மி னென்பார்
தவமுடைத் துலக மென்பார்
இம்பர்இந் நகரில் தந்த
முனிவனை இறைஞ்சும் என்பார் "

இவ்வாறு மக்கள் கூற்ருகக் கம்பன் கூறுகின்ருன்.

விசுவாமித்திரருடைய விருப்பத்திற் கிணங்கத் திருமணம் செய்ய வேண்டிய கடமைக்கு உள்ளானதால் விரைவினில் வாவென்று தசரதனுக்கு ஓலை அனுப்பினுன் சனகன்.

# 6. காதல் விளையாட்டு

சனகன் விடுத்த மணவோலை கண்டு மன்னனான தசரதன் உள்ளம் பெருமகிழ்வு கொண்டது. மண விழா விற்கு அவன் தன் வீரர்களுடனும், குடிமக்களிற் சிலருடனும் சென்றான். அவர்கள் அயோத்தியிலிருந்து மிதிலை போகும் வரையிலும் நடந்த வரலாற்றைக் கம்பன் மிக விரிவாகவும், நயமாகவும் கூறுகின்றான்.

கம்பன் இராமன் காலத்தவன் அல்லன். இராமாயணத் தில் அவன் காட்டும் இயற்கை நிகழ்ச்சிகள் பலவும் அவன் காலத்தில் அவன் கண்டவை. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் சோழ அரசு உச்ச நிலையை அடைந்திருந்தது. அன்று வில்களும் வேல்களும் வேலையில்லாது நெய்யுண்டு உறங்கின. செல்வம் மலிந்த காரணத்தால் பேருழைப்பின்றி யே ஊதியம் கிடைத்தது. அறிஞர்கள் பலர் அறிவை வளர்த்த தால் அறியாமை அகன்றது. செல்வ வளமும் கல்வியறிவும் சிறப்பாயிருந்தன. இதனை அளவற்ற சிறப்புடன் கம்பன் தன் பாடல்களில் கூறியிருப்பதை நாம் முன்பு கண்டோம்.

கம்பன் சிறிது சிந்தித்தான். எல்லா வளங்களும் உள்ள நாடு அமைதியான பண்பாட்டுடன் வாழ வேண்டு மென்பது அனைவரும் கண்ட உண்மை. ஆனால், அவன் கண்டதென்ன? தனது தமிழ் நாட்டில் மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர்ந்திருந்தது. ஆயினும் வாழ்க்கை முறை சிறிது சிறிதாகத் தாழ்ந்தே போய்க்கொண்டிருந்தது. உழைப்பால் உயர்வாக வாழ்ந்த மக்கள் சோம்பேறிகளாகி இழிந்த இன்பங்களைத் துய்ப்பதிலே தங்கள் வாழ்நாட்களை எல்லாம் கழித்து நின்றனர். நேர்மையான உலக வாழ்வே பேரின்ப வாழ்விற்கு வழி என்பதைக் கருதாமல் உலக இன்பக் கூறுகளில் ஒன்றான சிற்றின்ப வாழ்வையே சிறந்ததெனக் கருதினர். அதனால் மதுவிலும் மங்கையர் கூட்டத்திலும் மக்கள் மயக்கமும் ஈடுபாடும் கொண்டிருந்

தனர். செல்வ வளம் பொருந்திய நாட்டு மக்கள் பண்பாடு குன்றி இன்பத் துறையில் எளியராய் இருப்பதைக் கண்டு அவர்கள் விரும்பும் வண்ணம் இந்நிலைக்குரிய செய்யுட் களைக் கம்பன் எழுதலானான்.

ஓர் இலக்கியத்தைக் கற்கும்போது அதைச் செய்த புலவன் வாழ்ந்த காலம் எது என்பதைத் தெரிந்து கொண்டால்தான் அக்காலத்தைக் காட்டும் கண்ணாடியாக இலக்கியத்தைக் கொண்டு இயற்கைக் காட்சிகளைக் கண்டு இன்பம் நுகர முடியும். சங்க காலத்துப் பெண் மக்கள் பிறர் மனம் புகாத கற்பும், பெருமையும் உடையவரென்பதையும் ஆடவர்கள் வீர வாழ்வு உயைவர்கள் என்பதையும் நன்கு கண்டவன் கம்பன். அத்தகைய வாழ்க்கை என்றுமே இருக்க லாகாதா என எண்ணினான். பிறர் உள்ளத்தில் தூய நினைவும் நன்மதிப்பும் ஏற்படச் செய்து நன்னெறியில் நடந்துவந்த மங்கையர்கள் நாளடைவில் பிறர் மனம் கவரும் வண்ணம் தங்களை அழகு செய்து கொள்ளவேண்டு மென்ற நிலையில் மாறிவருவதையும் சிந்தித்தான். எழிலுடைய ஒரு பெண்ணின் அழகுக்கு ஆண் மகன் தன் கருத்தை இரையாக்கிக் காமக்கனலுள் மூழ்குவது இயற்கை என்ற கருத்து நாட்டவரிடையே நிலவுவதைக் கண்டு வருந்தினான். ஆதலால், இதனை மாற்றும் நோக்கத்திலே, "கம்பரசம்" என்று இன்று சிலர் சுட்டிக் காட்டும் பாக்களை எழுதினான். கம்பன் இராமாயணம் எழுதும் போது தமிழை யும் தமிழ் நாட்டையும் மறந்துவிடவில்லை என்றும், தமிழரின் வீழ்நிலையைக் காட்டி நம்மை அந்நிலையில் செல்லாதபடி எச்சரிக்கை செய்கிறான் என்றும் நாம் கருத்திற் கொள்ள வேண்டும்.

நாம் வாழும் இக்காலம் அரசியலில் அமைதியான காலம். மக்களுக்கு ஆடல் பாடல்களிலும், காதற் கதை களிலும் பேரார்வம் தோன்றியிருப்பதைத் திரைப்படக்காரர் கள் கண்டுகொண்டு, அவற்றைக் காட்டுவதில் ஊக்கம் மிகுந்துள்ளனர். சில நாட்களுக்கு முன் பாட்டுக்களுக்கு முழு இடம் தந்தும் காமக் கூத்திற்குச் சிறப்புத் தந்தும்

நிலவிய திரைப்படங்களை மக்கள் பெருந்திரளாகக் கண்டு களித்தனர். அவற்றைக் காணக்காண அவர்கள் உள்ளம் திருந்தியது. பாட்டைக் குறைத்து, ஆட்டத்தைச் சிறிது மிகுவித்து இனிய தூய மொழி நடையில் உணர்ச்சி மிக்க கருத்துக்களைக் கொடுத்த திரைப்படங்களைக் காண்பதில் கருத்துக் கொள்ளலாயினர். இப்போது இத்தகைய உயிரோவியங்களுக்கே செல்வாக்கு உள்ளது. இதே பணியைத்தான் இலக்கியமும் மக்களிடையே செய்ய வேண்டியிருக்கிறது.

ஒருநூலை எழுதும் ஆசிரியன் அதற்கு ஏதாவது ஒரு குறிக்கோள் உடையனாக வேண்டும். அந்தமில் இன்பத்து அரசாள் வேந்தனாக வாழ்ந்த இளங்கோவடிகள், மூன்று குறிக்கோளுடன் தனது இலக்கியத்தை இயற்றினார் என அறிகிறோம். அரசியலில் பிழை செய்தவர்களுக்குத் தருமமே எமனாகும் என்பதும், உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் அடி பணிவர் என்பதும், விதியின் வலிமை, வெல்லமுடியாத தொன்றாகும் என்பதுமே அவைகள். இவற்றையே தன்னுடைய இராமாயணத்திற்கும் குறிக்கோள்களாகக்கொண்டு கம்பன் தன் இலக்கியத்தை இயற்றினான். தசரதன் செய்த ஒரு பிழையால் அவன் உயிர் துறக்க நேர்ந்தது; சீதை கற்புக்கரசியானதால் உலகம் போற்றுகிறது. திருமாலின் கூறான இராமனும் விதியின் செயலைத் தப்பமுடியாது போனான். எல்லா நலங்களும் பெற்ற மக்களும் ஆண்டவன் படைப்பிலே முழுமையும் பெறமுடியாத நியதியால் விதியின் வலையில் சிக்குண்டு சின்னபின்னமாகி வருந்துவதைக் கம்பன் இராமாயணம் முழுவதிலும் பல அருமையான பாடல்களால் கூறிவருகிறான்.

காதலர்கள் கருத்து ஒருமித்து ஆதரவு பட்டதே இன்பம் என்று பண்டையோர் கண்டார்கள். அதற்கு எடுத்துக் காட்டாகச் சங்கச் சான்றோர் பாடிய ஒரு பாட்டைக் கூறலாம்.

ஓர் ஆடவன் வேறு சிந்தனையில் ஆழ்ந்திருக்கும்போது அங்குவந்த அவனுடைய மனைவி அவன் கண்களைப் பொத்தினாள். உடனே “மடந்தையே, நீயல்லது உளரோ என்

நெஞ்சு அமர்ந்தோரே" என்று அந்த ஆடவன் சொன்னான். தன் காலத்தில் வாழ்ந்த அத்தகைய ஆடவன் உள்ளம் எப்படியிருந்தது என்பதைக் கூறுகிறான் கம்பன். அது பின் வருமாறு:—

**"போரென்ன வீங்கும் பொருப்பன்ன**
**பொலங்கொள் திண்டோள்**
**மாரன் அனையான் மலர்கொய்**
**திருந்தானை வந்தோர்**
**காரன்ன கூந்தற் குயிலன்னவள்**
**கண்புதைப்ப**
**ஆர் என்னலோடும் அனல் என்ன**
**வெதும்புகின்றாள்"**

இப் பாட்டில் போர் என்று சொன்னவுடனேயே தோள் வீங்கக்கூடிய வீரமும், மன்மதனை ஒத்த அழகும் உடைய ஆடவன் ஒருவன் பூக்கொய்து கொண்டிருக்கின்றான். மேகங்களை ஒத்த கூந்தலையும் குயில் போன்ற மொழியையுமுடையவளான அவன் காதலி அவன் கண்களைப் பின்னால் வந்து பொத்துகின்றாள். உடனே அவன் "நீயார்?" என்று கேட்கின்றான். காதலி அதைக்கேட்டவுடனே தன் கணவன் வேறு பெண்களுடன் உறவு கொண்டிருக்கிறான் போலும் என ஐயுற்றுப் புலவிமிக்கு அனல் போலப் பெருமூச்சு விடுகின்றாள்.

இதுபோல, ஆடவரும் பெண்டிரும் ஒருவரினொருவர் மனம் நிறைவு பெறாமல், ஐயத்தினால் மனம் வெந்து போய்த் தங்களைத் திருத்திக்கொள்ளவும் அறியாது வாழ்ந்தனர். என்றாலும், அங்கும் இவ்வுலக இன்பம் பேரின்பத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு என்று கருதித் தூய வாழ்க்கையைப் பலர் நடத்தி வந்தனர் என்பதை மறுக்கமுடியாது.

ஒரு சில பெண்கள் தம்முடைய பண்பாட்டை மறந்தனர் என்றாலும், அவர்களிலும் சிலர் அறநெறியினின்று பிறழும் தம் கணவன்மார்களைக் காக்கும்பொருட்டுக் கள் உண்ணாமலும், பிற தீய வழக்கங்களை மேற்கொள்ளாமலும் கணவ

னுக்கு உறுதுணையாய் நின்று அயர்ச்சி ஏற்படும் போது ஊன்று கோலாயிருந்து அவர்கள் நெறிமுறைகளைக் காத் தார்கள். இதனையே கம்பரும்,

"புள்ளுறை கமல வாவிப்
பொருகயல் வெருவி யோட
வள்ளுறை கழித்தவாள்போல்
வசியுற வயங்கு கண்ணாள்
கள்ளுறை மலர்மென் கூந்தல்
களியிள மஞ்ஞை யன்னாள்
உள்ளுறை யன்பன் உண்ணான்
எனநறவு உண்ணல் எண்ணாள்"

என்பதனால் அறிவுடை மங்கையர்கள், கணவன் தீய வழியில் செல்லாதவாறு தாங்களே தமக்கு இன்பம் தருவனவற்றைத் துறந்து ஒழுகினர் என்று கூறுகின்றார்.

வறிஞன் ஓம்பும் ஓர் செய் என இனிது காக்கப்பட்டா லும் நாட்டில் செல்வமும் வளமும் மிகப் பெருகினாலும் பொரு ளின் அழிவுத் தன்மையை நீக்க முடியாது. அன்றியும் திட் டங்கள் பல தீட்டி நாட்டை நலம் பெறச் செய்த தசரதன் இராமராச்சியத்தைக் காணாது உயிர்விட நேர்ந்த சோகக் கதையைக் கூறுமுன் நாம் சிறிது நேரமாவது இன்பத்தை அனுபவிக்குமாறு கம்பன் பல சிருங்கார ரசமுள்ள கவிதை களைத் தந்துள்ளான்.

தசரதன் சேனைகள் புடைசூழ மிதிலை நகருக்கு வந்து சேர்ந்தான். இராமன் தன் தந்தையை எதிர்கொண்டு வர வேற்றான். தசரதன் அவனைப் பார்த்தபோது போன தனது உயிர் திரும்ப வருவது போன்ற உணர்ச்சியைப் பெற்றான். இராமன் விசுவாமித்திரருடன் சென்றபோது அவனுடைய உயிரே சென்றது போலக் கருதினான். ஆதலால், இங்கே போன உயிர் திரும்பிவந்து உடலைச் சார்ந்தது போலக் கருதுகின்றான். இதனைக் கம்பன்,

காவியங் குவளையும் கடிகொள் காயாவு மொத்து
ஓவியஞ் சவிகெடப் பொலிவதோர் உருவொடே

**தேவரும் தொழுகழல் சிறுவன்முன் பிரிவதோர்**
**ஆவிவந் தென்னவந் து அரசன் மாடு அணுகினுன்**

என்று கூறுகின்ருன்.

திருமணம் நடைபெறுமுன் தசரதனும் அவனுடைய மனைவியரும் பார்க்கச் சீதையை அழைத்து வருமாறு சனகனுக்கு வசிட்டன் உரைத்தான். தனக்கு நாயகனுக வரும் இராமனையும் அவன் சுற்றத்தாரையும் காணச் சீதை ஆடை அலங்காரத்துடன் வருகிருள். சீதையை அணி செய்யும் போது, தோழியரின் நிலையை மிகவும் அழகாக உரைக்கின்ருன் கம்பன். பலவகை அணிகள் பூண்டு நின்ற சீதையைக் கண்ட வண்ணமகளிர், அவள் அழகைக் கண்டு மனம் பேதுற்றனர். தாமரைப் பூவிலுள்ள தேனை உண்டுகளிக்கும் வண்டுகளைப் போல் அம்மங்கையர் சீதையின் அழகைப் பருகினர். அவர்களுடைய இயற்கையான பேச்சுக்கள் குழறின, தங்களுடைய உள்ள நிலை தடுமாறி நின்றனர், அவர்களுடைய நாணம், மடம் முதலிய பெண்மைக் குணங்கள் மாறுபட்டன. "மகளிர், வேறு மகளிரைக் கண்டு காமக் காதல் கொள்ளுவது உண்டோ?" என்ற ஓர் ஐயம் இங்கே தோன்றும். அதனை நீக்கும் பொருட்டு, ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் மனம் என்பது ஒன்றே என்று அறுதியிட்டு,

**கஞ்சத்துக் களிக்கும் இன் தேன்**
**கவர்ந்துண்ணும் வண்டேபோல**
**அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லாம்**
**அருளினுள் அழகை மாந்தித்**
**தஞ்சொற்கள் குழறித் தத்தம்**
**தகை தடுமாறி நின்ருர்**
**மஞ்சர்க்கும் மாதரார்க்கும்**
**மனம் என்பது ஒன்றே யன்ருே!**

என்று கம்பன் கூறுகின்ருன். கம்பனுக்கு முன்னேரான தமிழ்ப் புலவர் பலரும் இதனை நன்கு கண்டனர். 'அழகெலாம்' ஒருங்கே ஓரிடத்திலே கண்டால் யார்தான் அதனிடத்திலே காதல் கொள்ளாமல் அமைந்திருக்க வல்லார்?" என்று கூறுவர். "வடிவு நோக்கி, ஆண் விருப்

புற்று நின்றார் அவ்வளைத் தோளினாரே" என்று சிந்தாமணி ஆசிரியரும் பெண்கள் பேரழகு கண்டு பேதுறுவதைப் பேசி யிருக்கின்றார். ஆனால் இங்குக் கம்பன் கூறுவதில் ஒரு நயத் தைக் காணலாம்.

"ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்" என்று இராமனைப் புகழ்ந்து பாராட்டிய கம்பன் பெண்மைக்கு இழுக்கு வராவண்ணம், மைந்தர்க்கும் மடந்தைமார்க்கும் மனம் என்பது ஒன்றே என்பதை மட்டும் சுட்டிக் காட்டு கிறான். காதலித்தலும், காதலிக்கப்படுதலும் ஆகிய இருவகை நிலையில் காதலித்தல் ஆண்மகற்கும், காதலிக்கப்படுவதைப் பெண்மகட்கும் உரியதாகக் கூறுவது தமிழ்முறை. ஒரு சில இடங்களில் காதலித்தலைப் பெண்மகட்கும் காதலிக்கப் படுதலை ஆண் மகற்கும் கூறுவதுண்டு. அது சிறப்பில்லாத பெருந்திணை. இராமனுக்கு உண்டாகிய காதல் சிறப்புடைய அன்புநெறி. சீதைக்கு இராமன்பால் தோன்றிய காதல் சிறப்பில்லாத பெருந்திணை. இரண்டையும் ஒப்புக்காட்டும் உரிமை உள்ளம் உடையனாதலால், கம்பன் இக்காதல் நெறிக்கு ஓர் அமைதி காட்டவேண்டி, "மஞ்சர்க்கும் மாத ரார்க்கும் மனம் என்பது ஒன்றேயன்றோ" என்று கூறு கின்றான்.

சீதை வந்து தசரதன் தன் மனைவி மக்களுடன் இருந்த சூழலில் வீற்றிருக்கிறாள். வில்லை முறித்ததனால் பெறப்படும் இச்சீதை நம்மால் முன்னர்க் கன்னிமாடத்தில் காணப்பட்ட வளோ வேறு ஒருத்தியோ என்ற ஐயங்கொண்டிருந்த இராமனது உள்ளம் அழகே வடிவமான சீதையைக் கண்ட வுடன் தெளிவு பெறுகிறது.

சிலையை முறித்தான் என்று சிறப்பிக்கப்படும் திருவாளன் கன்னிமாடத்தில் தான் இருக்கும்போது தன்னை அறியாமலே தன் நெஞ்சம் புகுந்து கொண்ட காதலனோ வேறோ என எண்ணி, வேறாயின் உயிர் விடுவதே தக்கது எனத் துணிந்து வந்த சீதை தன் கைவளை திருத்துவாள் போலத் தன் கண்ணாற் கண்டு வேறாகாமை உணர்ந்தாள். உவகையால் உடல் பூரித்தாள் என்று கம்பன் கூறுகின்றான்.

இத்தகைய அழகே உருவான சீதையை மணக்க வேண்டுமானால் எங்கள் இராமன், "இச்சிலை கிடக்க, ஏழு மலைகளையும் வேண்டுமானாலும் வளைத்துவிட மாட்டானா?" என்று வசிட்டன் கூறினான். இதனால், சீதையின் பேரழகு அவள் காதலனது வாழ்க்கைக்குத் துணை வலியாய் வெற்றி மிகுவிக்கும் என்பது கம்பனது கருத்து.

விசுவாமித்திரரைப் பார்த்துத் தசரதன் எப்பொழுது திருமணத்தை வைத்துக் கொள்ளலாமெனக் கேட்கிறான். உடனே விசுவாமித்திரர் தங்கு தடை ஒரு சிறிதுமின்றித் "திருமணம் நாளைக்கு" என்று மறுமொழி வழங்குகின்றார்.

'நாளை' என்ற சொல் இராமகாதையில் சிறப்புடைய ஒரு சொல்லாகும் என்பதைக் குறிக்கொள்ள வேண்டும் விசுவாமித்திர முனிவர், "நாளை திருமணம் செய்யத் தக்க நாள்" என்று கூறித் திருமணத்தைச் சிறப்பாகச் செய்து தருகின்றார். ஆனால், வசிட்டரும் "நாளை முடிசூட்டுவதற்கு நன்னாள்" என்ற ஒரு சொல்லைச் சொல்லித் துன்ப நாடகத் திற்கு அடிப்படை கோலுவதை நாம் பின்னர்க் காணலாம். நெடிது வாழ்வதை வேண்டாது போரில் வீழ்வது வேண்டு வையாயின் "பொரற்கு நாளை வா" என இராமன் இராவண னுக்குக் கூறுவதையும் பின்னர்க் காணப்போகின்றோம். இப் பெருங் காவியத்தை படிப்போர் மனதில் "ஏன் இவ் வாறு அவசர புத்தியுடன் இராமன் காலத்து மக்கள் இருந் தனர்?" என்ற ஐயப்பாடு எழுவது இயல்பு. அரசியல் சூழ்ச்சிகள் மலிந்த அந்த நாளில் "சுபம் சீக்கிரம்" என்ற குறிக்கோளை யுடையவர்களாக இருந்தார்கள் என்பது தற்காலிக விடையாய்க் கூறலாம்.

பரதன் தேரோட்டவும் இலக்குமண சத்துருக்கனர் சாமரை வீசவும் இராமன் தேரில் ஏறிக்கொண்டு திருமண மண்டபத்திற்குச் சென்றான்.

சீதையும் இராமனும் மணத் தவிசில் இருந்ததைத் தராசில் இருந்தது போலக் குறித்து, ஒன்றிய போகமும் யோகமும் உடன் இருந்ததைப் போலிருந்தது என்று கம்பன் கூறுகின்றான்.

போகமும் யோகமும் ஒன்ருக இருக்கமுடியாது. யோகிகள் போகத்தைத் துறந்தவர்கள். போகத்தை விரும்பு பவர்கள் யோகிகளாக இருக்கமுடியாது. ஆனல் 'ஏன் கம்பன் போகத்தையும் யோகத்தையும் ஒன்றுபடக்கூறினன்" என்ற ஐயம் எழுவது இயற்கையே.

இளங்கோவடிகள் கண்ணகிக்கும் கோவலனுக்கும் நடந்த திருமணத்தைக் கூறும் போது 'மாநகர்க்கு ஈந்தார் மணம்' என்றும், காதலர்ப் பிரியாமல் கையணைப்பு நெகிழாமல் நீங்கள் வாள்வீர்களாக என்று வாழ்த்தினர்கள் என்றும் கூறுகின்ருர். ஆனல் இங்கு வாழ்த்துவதிலும் ஓர் அமங்கலச் சொல் விழுந்துவிட்டது. மாநில மக்களெல்லாம் இன்பம் பெற வேண்டுமென மணமக்களை வாழ்த்தினர்கள்; ஆனல் அவர்கள் இன்பத்தைக் கண்டார்களில்லை. நமக்கு இன்பம் தரச் "சிலப்பதிகாரம்" எழுந்தது. ஆனல் அவர் களின் நிலை என்னயிற்று? இருவரும் மணமான சில நாட் களில் பிரிந்தனர். "காதலர்ப் பிரியாமல் கவவுக்கை நெகிழாமல்" என்ற தொடர்களைப் பெய்ததினலே அவர்கள் பிரிவார்கள்; கையணைப்பு நெகிழ்ந்து போகுமென்பது குறிப்பாற் பெறப்படுவதை நாம் காணலாம். அது போலவே இங்கும் "தாழிரும் சடைகள் தாங்கித் தாங்கரும் தவம் மேற்கொண்டு வெங்கானம் செல்லுக" என்று ஓர் ஆணை பின்னே இராமனுக்கு வருவதை மனதிற்கொண்டு தான், போகமும் யோகமும் ஒன்றியிருந்தது போலும் எனக் கம்பன் நயம்படக் கூறுகின்ருன்.

திருமணம் முடிந்தபின், இராமன் பெரியோரை வணங்கிச் சீதையோடு தன் மாளிகை அடைந்து, தாய் என உள்ளன்போடு தான் பரிந்து போற்றிவந்த கைகேயியை வணங்கினன். அவன் தம்பிமார்கள் ஊர்மிளை முதலியவர் களை மணந்தார்கள். மிதிலையில் சின்னுள் தங்கிய பின்னர், இராமன் சனகனிடம் விடைபெற்றுச் சானகியோடு அயோத்தி சேர்ந்தான்.

# 7. அரசராமனும் பரசுராமனும்

மிதிலையில் திருமணம் முடித்துக்கொண்டு இராமன் தன் தந்தையுடன் அயோத்தி நோக்கிப் புறப்படலானான். விசுவாமித்திரர் தசரதன் பால் விடைபெற்றுச் சென்று விடுகின்றார். அவர் மிதிலைக்கு வருமுன் காட்டில் இராமனிடத்துக் கண்ட கைவண்ணமும் கால்வண்ணமும் எத்தகையவை என்பதை அயோத்தி அரச குடும்பத்தினர் அறியவில்லை. விசுவாமித்திரர் இராமனுடைய செயல் நலங்களைப் பாராட்டித் தன்னிடம் கூறியது கேட்டுத் தசரதன் பெருமகிழ்ச்சியில் மூழ்கினானேயன்றிப் பேரெழில் படைத்த அவனது வலிமையை நேரில் கண்டு களிப்படையும் வாய்ப்பு ஒன்றையும் பெறவில்லை. அவனுக்கு அந்தக் குறை தோன்றா வண்ணம் ஒரு சிறப்புடைய நிகழ்ச்சி நடைபெறுகிறது.

அயோத்தி மன்னனான தசரதனுக்கு அந்த நாளில் பகையரசர் ஒருவரும் இல்லை; வேந்தர் பலரும் அவனோடு நண்புடன் வாழ்ந்து வந்தனர். ஆயினும் அவனை வென்று அவ்வரசை அடைய வேண்டுமென்று பல காலமாக எண்ணி வந்தான் பரசுராமன் என்ற அந்தணன். இவன் வலிமையிலும், எண்ணியதை எண்ணியாங்குச் செய்வதிலும் வல்லவன். சமதக்கினியின் புதல்வன்; தன் தந்தையிடம் மிக்க அன்புடையவன். ஒரு நாள் இவனுடைய தாய் இரேணுகை, ஒரு தேவனுடைய நிழலைக்கண்டுசிறிது மன நிலை தவறினாள் என்ற குற்றத்திற்காக, அவளைக் கொன்றுவிடும்படி சமதக்கினி பரசுராமனுக்குக் கட்டளையிட்டான். வட நூன் முறைப்படி தாய் குற்றமற்றவள் என்று தெரிந்தும் தந்தையின் ஆணையை நிறைவேற்றி, பின் தந்தையின் தவவலியால் தன் தாயை உயிர்பெறச் செய்தவன் பரசுராமன். இவன் இருபத்தியேழு தலைமுறையாக மன்னர்களை வென்று அவ்வரசுகளை எல்லாம் காசிபமுனிவர் என்ற அந்தணருக்கு

அளித்து வந்தான். கொடிய சிந்தனையுடைவனும், அரசர் களுக்கெல்லாம் அச்சம் தந்தவனுமான இப்பரசுராமன் ஒன்றே ஒன்றிற்குக் கட்டுப்பட்டான். அதுதான், திருமண மான எவரையும் மணமான ஓர் ஆண்டிற்குள் போருக்கு அழைப்பதில்லை என்பது.

தசரதன் அவனுடைய இந்தக் கொள்கையை அறிந்தவ னுதலால் பரசுராமனது பிடியினின்று தப்ப ஆண்டுதோறும் திருமணம் செய்துகொண்டே வந்தான். ஆனுல் அந்த ஆண்டில் இராமனுடைய திருமணம் நிகழ்ந்த மகிழ்ச்சியில் தன் குலப்பகையான பரசுராமனை மறந்துவிட்டான். இந் நிலை எப்பொழுது ஏற்படுமென்றும், தான் தீட்டிய திட்டங் கள் எப்பொழுது செயற்படுமென்றும் எதிர்பார்த்திருந்த பரசுராமனுக்கு இது ஒரு நல்ல வாய்ப்பைத் தந்தது. பேர வாவினுல் உந்தப்பட்ட பரசுராமன் தசரதனிடம் வந்தான். தான் பல நாட்களாகக் கண்ட கனவுகள் நனவாகும் காலம் கிட்டியதென்று அவன் பூரிப்படைந்தான். தசரதன் அவனைக் கண்டவுடன் யாது செய்வது எனத் தெரியாது மெய்விதிர் விதிர்த்தான். அவன் கால்களில் விழுந்து அபயம் தருமாறு வேண்டிக்கொண்டான்.

பரசுராமன், தன்னெதிர்ப்பட்ட இராமனை நோக்கி "சிவபெருமானுடைய ஒடிந்த வில்லை வளைத்ததினுல் வெற்றி பெற்றுவிட்டோமென்று இறுமாந்து விடாதே; உன் தோள் வலியைக் காட்டவேண்டுமானுல் இவ்வில்லை வளை" என்று தன்னுடைய வில்லைக் கொடுத்தான். "தன் ஆயுதமும் தன் கைப்பொருளும் பிறன் கைக்குக் கொடுப்பது பேதமை; அத னுல் வெற்றி விளையாது" என்பதைப் பரசுராமனும் மறந் தான். கெடுமதி அவன் கண்ணை மறைத்தது. இது நிற்க.

சிவதனுசுவின் வரலாற்றை மிக அழகாகக் கம்பன் கூறு கின்ருன். சிவனும், திருமாலும் இரண்டு வில்லை வைத்துக் கொண்டு போர் புரியும்போது சிவனுடைய வலிமையைத் தாங்கமாட்டாது அவனுடைய வில் முறிந்துவிட்டது. சிவ பெருமான் இதற்குப்பின் "போர் வேண்டா" என்று கூறிப் போரினின்று விலகி அமைதியை விரும்பினுர். போரில்

வலிமைபெற்ற ஒருவர் விலகுவாராயின் அது பெருமைப் படத்தக்கதொன்றாகும்.

பரசுராமன் இராமனை நோக்கி, "நீ சிவதனுவை வளைத்தால் பெருமையில்லை. திருமாலாகிய என்வில்லை வளைத்தால் தான் பெருமை உண்டு" என்று சொல்லுகிறான்; அவன் இவ்வாறு சொல்லுவதில் ஒரு தத்துவம் அடங்கிக்கிடக்கிறது. சிவன் முழு முதற் கடவுள்; அழிக்கும் தன்மையுடையவன்; அழிப்பதே ஆக்குதற்கு முதற்படியாகும். உடலை அழித்து உயிரைப் பிறவிப் பெருங்கடலிலிருந்து விடுவிக்கும் தொழில் தான் அவனுடையது. திருமாலோவெனில் காக்கும் கடவுள்; மக்களை இன்ப துன்பங்களில் ஈடுபடச் செய்து அவற்றை அனுபவிக்கும் நிலையில் காத்துக் கடமையைச் சரியாக அவர்கள் செய்ய உறுதுணையாக நின்று உதவுபவன்.

சிவன் மூலப்பொருள். திருமால் அப்பொருளின் கண் நிலவும் சக்தியின் ஒரு கூறு. சிவபரம்பொருள் அசையும் தன்மையற்றது. சக்திப்பொருள் இயங்கும் சக்தியுடையது. ஆகையால்தான் சிவனை அசைவில் பொருளென்றும் திருமாலை இயக்கும் சக்தி என்றும் கூறுவர். சக்திப் பொருளாகிய திருமாலின் கூறான இராமன் அரசுரிமை பெற்றும் வாழ்கின்ற உயிரெல்லாம் உறையும் உடலாக மாறுமலும், இன்ப நுகர்ச்சியில் தன் கடமையை மறக்காமலும் இருக்க வேண்டுமென்பதைக் குறிப்பாகக் கூறுவதாகக்கொள்ளலாம். இக் கருத்துக்குச் "சக்தியிருந்தால் செய், இல்லையானால் சிவனே என்று இரு" என்ற ஆன்றோர் வாக்குச் சான்றாதல் காணலாம். "வானின்றிழிந்து வரம்பு இகந்த மாபூதத்தின் வைப்பெங்கும் ஊனும் உயிரும் உணர்வும் போல் உள்ளும் புறத்தும் உளன் என்ப" என்று கம்பன் கூறுவதும் இக் கருத்துப்பற்றியதாகும். எல்லாப் பொருட்கும் உள்ளும் புறமுமாகிய இரண்டும் சக்திமயம்.

அடுத்து வரும் அயோத்தியா காண்டத்தில் இராமன் முடி சூடாது காட்டிற்குப் போவதையும் அரக்கர்கள் பின் அழிவதையும் பரசுராமப் படலம் குறிப்பாகக் கூறுகிறது. இனிக் கதையைத் தொடர்வோம்.

வான்மீகியாரும் இதனையே கூறுகின்றார். பரசுராமன் தசரதனைக்கூடத் தன் விரோதி என்று நினைக்கவில்லை. ஆகையால் இராமனையே நோக்கி, தன்னிடமிருந்த வில்லை வளைத்து நாணேற்றுமாறு கேட்கிறான். இதைக் கேட்டுத் தசரதன் அஞ்சிப் பரசுராமனைக் கண்டு,

> " க்ஷத்ர ரோஷாத் ப்ரஸாந்தஸ் த்வம்
> பிராம்மணஸ் சம ஹாயசா :
> பாலானாம் மமபுத்ராணாம்
> அபயம் தாது மர்ஹஸி "[1]

என்று சொல்லுகிறான். தசரதன் வேண்டுகோளை மதிக்காமல், இராமனைப் பார்த்துப் பரசுராமன் மறுபடியும் நாணேற்றுமாறு சொல்லுகிறான். கம்பரும் அதனை

> " மூவெழு முறைமை பாரின்
> முடியுடை வேந்தை யெல்லாம்
> மேவெழு மழுவின் வாயால்
> வேரறக் களை கட் டன்னார்
> தூவெழு குருதி வெள்ளத்
> துறையிடை முறையின் எந்தைக்கு
> ஆவன கடன்கள் நேர்ந்தேன்
> அருஞ்சினம் அடக்கிப் போந்தேன் "

என்று கூறுகின்றார்.

" இருபத்தொரு தலைமுறையாக மன்னர்களை யெல்லாம் என் மழு ஆயுதத்தால் கொன்று என்னுடைய தந்தையின் ஈமக்கடன்களை முடித்தேன் ; அதன்பின் என் சினம் அடங்கி விட்டது " என்றான். மேலும், " யான் வென்ற நாட்டை யெல்லாம் காசிப முனிவருக்குத் தந்தேன். பெரிய தவங்களைச் செய்தேன். அமைதியுடனிருந்தபோது இராமனாகிய நீ சிலையை வளைத்துவிட்டாய் என்ற சொல் கேட்டு இங்கு ஓடோடியும் வந்தேன் " என்று சொல்லுவானாய்,

---

1 சத்திரியர்களைக் கொன்றுவிட வேண்டுமென்ற கோபம் தணிந்தவராயிருக்கிறீர்; சாந்தமுடையவராயும் இருக்கிறீர் ; என்னுடைய சிறு பிள்ளைகளுக்கு அபயம் அருள்வீராக.

**" உலகெலா முனிவற் கீந்தேன்**
**உறுபகை யொடுக்கிப் போந்தேன்**
**அலகில் மாதவங்கள் செய்தோர்**
**அருவரை யிருந்தேன் ஆண்டைச்**
**சிலையை நீ யிறுத்த வோசை**
**செவியுறச் சீறி வந்தேன்**
**மலைகுவென் வல்லையாயின்**
**வாங்குதி தனுவை "**

எனக் கூறினன். சிலையிறுத்த ஓசை தான் செய்த தவத்தின் ஊடு கேட்டபோதே தனக்கு வீழ்ச்சிக் காலம் வந்துவிட்டது என்பதைப் பரசுராமன் உணரவில்லை; இங்கே அதனைக் கூசாமல் வாயால் கூறுகின்றான். இரகுகுல திலகனான இராமன் அவ்வில்லை வாங்கி நாண் ஏற்றி,

**பிராம்மணோ சீதி பூஜ்யோமே**
**விஸ்வாமித்திர கிருதேன ச**
**தஸ்மாத்ஸக தோ நதேராம**
**மோக்தும் பிராஹ்மண ஹரம் சரம்**[1]

எனக் கூறினன்; இக்கருத்தையே,

**பூதலத் தரசை யெல்லாம்**
**பொன்று வித்தனை யென்றாலும்**
**வேத வித்தாய மேலோன்**
**மைந்தன் நீ விரதம் பூண்டாய்**
**ஆதலிற் கொல்ல லாகாது,**
**அம்பிது பிழைப்ப தன்றால்**
**யாது இதற் கிலக்கமாவது**
**இயம்புதி விரைவில் என்றான்**[2]

என்று கம்பன் மொழிகின்றான்.

---

1 பிராமணனாய் இருப்பதால் நீ பூஜிக்கப்படத்தக்கவன். அல்லாமலும் நீர் விசுவாமித்திரருடைய தங்கையின் பேரன். ஆகையால் உயிரை வாங்கும் இந்த அம்பை உன்மேல் எய்யப் போவதில்லை.

2 பூமியிலுள்ள அரசர்களையெல்லாம் நீ கொன்றுவிட்ட போதிலும் நீ வேதியனின் மகனாதலால் உன்னைக் கொல்லாது விடுகிறேன். இந்த அம்பிற்கு இலக்கு யாது சீக்கிரம் சொல் என்று கேட்கிறான்.

பரசுராமன் எதிர்பார்த்ததற்கு மாருகத் தசரதராமன் வில்லை வளைத்து அம்பு தொடுத்து அவனது தவத்தையும் அது காரணமாகப் பெற்றிருந்த அவன் செருக்கையும் அழித்தான்.

பரசுராமன் தான் செய்த தவத்தை இலக்காகப் பெற்றுத் தன்னுயிரை இலக்காகக் கொள்ளாமைக்கு இராமனை வாயாரப் புகழ்ந்து விடை பெற்றுக்கொண்டு மேலைக் கடற்கரைக்குச் சென்ருன்.

யாவரும் அயோத்தி அடைந்து இன்பமாக இருக்கின்றனர். அந்நாளில் தசரதன் பரதனை அழைத்து, அவன் மாமன் விரும்பியதாகவும், உடனே கேகய நாட்டிற்குப் போகுமாறும் கூறினன். இங்ஙனம் தசரதன் சொல்லியது கம்பனது சிந்தனையைத் தூண்டியிருக்கிறது. சிந்தனையின் முடிவாகத் தசரதன் கருத்து இத்தகையது என்பதை அறிஞர் ஆராய்ந்து எண்ணிக் கொள்ளுமாறு, "எண்ணருந்தகையதோர் பொருள் இயம்பினன்" எனக் கம்பன் கூறிமுடிக்கின்ருன்.

# 8. மர்மம் என்ன ?

திருமணம் முடிந்த பின்பு தந்தையிடமும், தமையனிடமும் விடைபெற்றுச் சென்ற பரதன், இராமன் காட்டிற்குச் சென்ற பின்னரே அயோத்திக்குத் திரும்பினான்; அவன் இடையில் வந்துபோனான் என்பதற்கு ஒரு சான்றும் கிடைக்கவில்லை. ஆனால் அவன் அயோத்திக்கு மீளத் திரும்பும் வரை காலம் நில்லாமையால் பன்னிரண்டு ஆண்டுகள் கழிந்து போயின. இத்துணைக்காலம் அவன் ஏன் வேற்று நாட்டிலிருக்க வேண்டுமென்பதும், இதுநாள் வரையிலும் அவன் அங்கே என்ன செய்துகொண்டு இருந்தான் என்பதும் தெரியவில்லை. அங்கு அவன் பல அரிய செயல்களைச் செய்திருக்க வேண்டுமென்றும், அவன் புகழ் பாரதநாடு முழுவதும் பரந்திருக்க வேண்டுமென்றும் கம்பன் கருதுகிறான். அதே சமயத்தில் அயோத்தியிலிருந்து வந்த இராமனும் தன் மரபுக்குரிய செயல் முறைகளில் ஈடுபட்டு மக்களுக்கு வேண்டும் நற்பணிகளைப் புரிந்து அந்த நாட்டு மக்களின் அன்பைப் பெற்றுவந்தான். மன்னனான தசரதனும் அவன் குணம், செயல்களைக் கண்டு மகிழ்ந்து வந்தான்.

இனி இராமனைப்பற்றிக் கூறுமிடத்து, “தாய் கையில் வளர்ந்திலன், வளர்ந்தது தவத்தால் கேகயன் மடந்தையிடம்” என்று அவன் கைகேயியால் வளர்க்கப்பட்டதைக் கூறுகிறான் கம்பன். ஆனால், இதற்கு இடையில் தன் வயிற்றில் சுமந்து பெற்ற மகனான பரதனைக் கைகேயி எண்ணியதாகவே தெரியவில்லை. இதற்குக் காரணம் என்ன என்று கம்பன் சிந்திக்கின்றான்.

கைகேயியின் உள்ளம் அன்புருவாகக் காணப்படுகிறது. ஆகையால் மன்னர் மரபிலே பிறந்து மன்னனையே மணந்து பேரரசியான அவள் உள்ளத்தில் இராமனையும், பரதனையும் ஒன்றாகவே பார்க்கும் மனப்பான்மை இயற்கையாகவே

அமைந்துவிட்டது. ஆனால் கோசலையது உள்ளம் அறிவு நெறிப்பட்டது. இதனைக் கம்பன்

"மாற்றமது உரைசெய மங்கை உள்ளமும்
ஆற்றல்சால் கோசலை அறிவும் ஒத்தலால்"

என்று குறிப்பதனால் அறியலாம்.

அதனால் அவள் இராமன்பால் தன் மகன் என்ற இயற்கைத் தாயன்பு கொண்டிருந்தாள். ஆயினும், பிறர் இதைக் குறுகிய நோக்கென்று கொள்ளாதவாறு பரதன்பாலும் தன் அன்பைச் செலுத்தினாள். மேலும் தன் மக்களிடத்து யாவர் அன்பு செய்தாலும், அவர்களிடத்தும் அவர்களுடைய மனைவி மக்களிடத்தும் அன்பு காட்டுவது மக்களுக்கு இயல்பு. அம்முறையில் கோசலையின் அன்பு பரதன்பாலும் அவன் தாய் கைகேயியின்பாலும் பரந்து சிறந்து நின்றது.

இதன்கண் கைகேயியின் அன்புள்ளமும், கோசலையின் அறிவாற்றலும் ஒப்ப நிற்பதால், அவர்களிருவரின் மனப் பாங்கையும் அறிகின்றோம். தசரதன் இராமனைக் கண்ணின் மணிபோல் கருதியிருந்ததைக் கண்ட கைகேயி, தன் காதற் கணவனை தசரதனிடம் ஒன்றிய உள்ளம் உடையவளாதலால், அவனையே தன் காதல் மகனாகக் கொண்டொழுகினாள். மயில்முறைக் குலத்தில்[1] பிறந்தவளாதலாலும், அக்குலத்தில் மூத்தவனே அரசாள வேண்டுமென்ற நியதியிருப்பதாலும், கைகேயி இராமனுக்கே முடி சூட்டுவதில் கருத்தொற்றுமை கொண்டாள்.

"பங்கமில்குணத்துப் பரதனும், இராமனே துங்கமாமுடி சூடவேண்டு" மென்ற கருத்துடையவனாயிருந்தான். அரசியலறிஞரும் அமைச்சரும் யாவரும் முறையாக இராமனுக்கே முடி சூட்டப்பட வேண்டுமென்றார்கள். அயோத்தி மக்களும் இராமன் மேனியழகிலும், குண நலங்களிலும் ஈடுபட்டவர்களாய், அவனே முடி சூடவேண்டுமென்ற கருத்துடையவர்களாயிருந்தார்கள்.

---

1 கேகயம்-மயில் ; கேகயநாடு - மயில்முறை நிலவிய நாடு.

இம்முடிசூட்டு விழா நடக்கக் கூடாதென எண்ணியவள் மந்தரை என்ற ஏவல்மகள் ஒருத்தியே என்றும், அவள் தன் தலைவியாகிய கைகேயியின் உள்ளத்தைக் கெடுத்து இராமனைக் காட்டிற்கு அனுப்பவும், பரதனைப் பட்டத்திற்குரியவனாக்கவும் செய்தாளென்றும் நாம் பின்னர்க் காண்கின்றோம்.

கைகேயியின் அன்புள்ளத்தின் சிறப்பு அவள் தூங்கும் போது முகத்தின்கண் விளங்கிக் கொண்டிருந்ததென்று கம்பன் கூறுகின்றான். உறங்கும்போது தான் ஒருவருடைய குண நலங்களைத் தெரிந்துகொள்ள முடியுமென்று மனநூல் அறிஞர் கூறுவர். ஏனெனில் விழிப்புற்றிருக்கும் போது எழுகின்ற தீய எண்ணங்களை அறிவு அடக்கிவிடும். தூங்கியவுடன் உள்ளுணர்வு மேலோங்கி எண்ண அலைகளை வெளிப்படுத்தும். அத் தீய எண்ணங்களோ, மனக் கவலையோ சிறிதுமில்லாதவர்கள்தான் அமைதியாகத் துயில முடியுமென்பது மனநூல் கூறும் கருத்து, அந்நெறிக்கிலக்காக அமைதியாய்த் துயின்றாள் கைகேயி.

கூனியின் கெடுமதியால்தான் கைகேயி சிந்தை மாறினாள் என்பதைக் கம்பன் ஒப்புக்கொள்ளவில்லை. "தூய சிந்தையும் மாறினாள் தூமடமான்" என்று அவனே கைகேயி மனம் மாறியதைச் சிறப்பித்துக் கூறுகின்றான். தசரதனும் கைகேயியை "யாராவது உன்னுடைய தூய சிந்தையைச் சிதைத்துவிட்டார்களா?" என்று கேட்கிறான். அக்கேள்வியாலும் கைகேயியினது சிந்தையின் தெளிவு தசரதனுக்கும் நன்றாகத் தெரிந்திருந்தது என்று அறியலாம்.

தான் காட்டிற்குப் போவதற்குக் கைகேயியோ தசரதனோ காரணம் அல்லவென்றும் இது விதியின் பிழை என்றும் இராமனே பின்பு கூறுகின்றான். இதனாலும் கைகேயியினுடைய மனத்தூய்மையில் இராமனுக்கு ஐயமில்லை என்பது நன்கு விளங்குகிறது. கம்பஇராமாயணத்தை ஊன்றிப் படிப்போருக்குக் கூனியின் சூழ்ச்சியால்தான் இராமன் காட்டிற்குச் சென்றான் என்பதைக் கம்பன் ஒத்துக்கொள்ளவில்லையென்பது எப்படியும் விளங்காமற் போகாது.

இராமன் காட்டிற்குச் செல்லும்போது ஏறத்தாழ அவனுக்கு வயது முப்பது இருக்கும். அவனைப் பிறந்தது முதல் முப்பதாண்டுகளாக வளர்த்த கைகேயி, கூனியது சிறிது நேரத்துச் சொல்லால் அவனைக் காட்டிற்கு ஓட்டிவிட இசைந்தாள் என்று கூறுவதை எங்ஙனம் நம்புவது? வேற்றுமையே பாராட்டாது தூய உள்ளத்துடனிருந்த தெய்வக் கற்பினளான கைகேயி, பல ஆண்டுகளாக மூத்த மகனை இராமனுக்குப் பட்டம் கட்டிப் பார்க்க வேண்டுமென்று கனவு கண்டுகொண்டு இருந்தவள் தன் கனவு செயலாகும் போது, கூனியின் சூழ்ச்சியால் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டாள் என்ற சொல் அறிஞர்கள் ஏற்றுக்கொள்ள முடியாததாகும். இதன் மர்மந்தான் யாது?

பரதன் வரக்கண்டதும் குகன் முதலில் தவருகக் கருதினன். பின்னர், தான் அவ்வாறு கருதியது பொருந்தாது என்று கண்டு, "எம்பெருமான் பின் பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு" என்று தெளிந்தான். இராமனுடைய தம்பியர் பிழை செய்வார்கள் என்று கருதுவதே தவறுடையதாயின் அவர்களைப் பெற்று வளர்த்த கைகேயி தவறுடையவள் என்று கூறுதல் எங்ஙனம் பொருந்தும்?

"புண்ணியம் எனும் நின்னுயிர்" என்று கோசலையாலும், "ஆயிரம் இராமர் நின் கீழ் ஆவரோ தெரியின்" என்று குகனுலும், "சேணுயர் தருமத்தின் தேவு" என்று பிறவகையாலும் பாராட்டப்படும் பரதனைப் பெற்ற கைகேயி, எவ்வாறு அறத்தை மறந்தவளாக இருக்கமுடியும் என்பதும் சிந்திக்கத்தக்கது. அதருமத்தின் வயிற்றில் தருமம் பிறக்குமா? அது சத்காரியவாதியாகிய கம்பனுக்கு உடன்பாடன்று. இராமன் முடி சூடுவதற்குத் தடையாக வேறு ஏதோ ஒரு காரணம் இருந்திருக்க வேண்டும். பெரியவர்களை வாயாரப் புகழ்வதும், சிறியவர்களை இகழ்வதும் முறையன்று. அவரவர் விதியின் பயனை மக்கள் அனுபவிக்கின்றனர். ஆகையால் இராமன் காடு சென்ற மர்மத்தை விருப்பு வெறுப்பின்றி ஆராயவேண்டும். இராமாயணத்தின் பயன்

இராவணன் முதலான அரக்கர்களின் அழிவுதான். குணக் குன்றுகிய பரதனைப் பெற்றவளும், தசரதனை வாய்மையும் மரபும் காக்கும் தூயவளுகச் செய்பவளும் ஆகிய கைகேயி நெஞ்சில் உரமின்றிக் கூனியின் கைப்பாவையாளுள் என நினைப்பது தவறு. அயோத்தியாகாண்டம் படிக்குமுன் இவற்றை மனதிற் கொண்டாலன்றிப் பல பாட்ல்களின் பொருள் விளங்காது. மேலும் ஒரு தமிழ்ப் பெரியார் கூறி யது போல அவற்றையெல்லாம் இடைச்செருகல் என்றுதான் நாமும் தள்ளவேண்டி வரும்.

# 9. நல்ல நாள்

இராமகாவியத்தில் அயோத்தியா காண்டம் என்ற பகுதிதான் உயிர்நாடி என்ருல் அது மிகையாகாது. ஏனெனில் இராம காதையின் நிகழ்ச்சிகள் பலவற்றிற்கும் வேண்டிய விதைகள் இதிலே விதைக்கப்படுகின்றன. இராமன் காடு சென்று அங்கே பல ஆண்டுகள் வாழ்ந்து அரக்கர் இனமே இல்லையென்று கூறுமாறு அதனை வேரற அழிப்பதற்கே பிறந்தவன். இந்த ஒரு குறிக்கோளுக்காகவே திருமால், அதருமம் பெருகும்போது தன்னைத்தானே படைத்துக்கொள்கிருன். இக்கருத்தையே ;

யதா யதாஹி தர்மஸ்ய
க்ளானி: பவதி பாரத !
அப்யுதானம் அதர்மஸ்ய
ததாத்மானம் ஸருஜாம்யஹம் !! [1]

எனக் கீதையும் இயம்புகிறது ; இதை யறிந்தே கம்பன்,

அரக்கர் பாவமும் அல்லவர்
இயற்றிய அறமும்
துறக்க நல்லருள் துறந்தனள்
தூமொழி மடமான்,
இரக்கமின்மையன்ருே இன்று
இவ்வுலகங்கள் இராமன்
பரக்கும் தொல்புகழ் அமுதினைப்
பருகுகின்றதுவே [2]

என்று கூறுகின்ருன்.

---

1 எங்கெங்கு தர்மம் குறைந்து அதர்மம் மிகுந்திருக்கிறதோ அங்கெல்லாம் நான் தோன்றுகின்றேன்.

2 அரக்கர் செய்த பாபமும், அல்லவர்களான தேவர்கள் செய்த புண்ணியமும் வந்து முந்த, அன்பே உருவானவளும், மென்மையான தூய மொழியைப் பேசும் மான் போன்றவளுமான கைகேயி, இரக்கத்தை விட்டு விட்டாள் ; இவள் இவ்வாறு இரக்கமற்ற தன்மையினுல் நடந்து கொண்டதனுலன்ருே, இவ்வுலகத்திலே இராமன் புகழாகிய அமிர்தம் நமக்குக் கிடைத்திருக்கிறது.

இரக்கமின்மையும் நன்மையைப் பயந்து, தீவினையின் பாற்படாதிருந்தால் ஏற்றுக்கொள்ளுவதுதானே அறிஞர் கடமை; ஆகையால் கைகேயி என்ன கருத்துடன் இராமனைக் காட்டிற்குப் போகச் சொன்னாள் என்று ஆராயாமல் அவளைத் தூற்றுதல் சரியன்று.

கம்பராமாயணத்தை நன்கு படித்தவர்கள் கம்பனுடைய கவியுள்ளத்தைக் காணலாம். தன்னுடைய ஒப்புயர்வற்ற காவிய உலகில் அப்பழுக்கற்ற ஒருவர் இருக்கமுடியுமென்றோ முற்றிலும் வெறுக்கத்தக்க தீயோர்கள் இருக்கமுடியுமென்றோ அவன் நினைக்கவில்லை. "குணம் நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்" என்றும், "அரி யகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால் இன்மை அரிதே வெளிறு" என்றும் வரும் திருவள்ளுவர் அருளிய அறிவுரை கம்பன் நன்கறிந்தவையாகும். விதியின் வழியிலே செல்லு கின்ற மக்களினம் எவ்வாறு இன்ப துன்பங்களை அனுபவிக் கிறது? எந்த வகையில் விதிக்கும் விதி செய்யமுடியும்? என்பதை அறிவுறுத்துவதே அறிஞர்களின் அறச்செயல்; புலமையுமாகும். அதனை ஆராயும் பொருட்டே கம்பன் இப்பெருங்காப்பியத்தை எழுதி முடித்தான். இதனை அறியாது அவன் சிலரைத் தாழ்த்தியும் வேறு சிலரை உயர்த்தியும் கூறினான் என்று கருதுவோமானால் அது தவறா கும். மேலும் இஃது ஒரு சிறந்த காவிய தரும நூல் என்று கருதாமல், இராமாயணம் வட ஆரியருக்கும் தென் திராவிடருக்கும் நடந்த சண்டையைக் கூறும் வரலாற்று நிகழ்ச்சி யென்பது பொருந்தாது என்று பன்முறையும் கூறி வருகின்றோம்.

அயோத்தி அரசு நல்லரசு என்பதை முன்பே கண்டோம். அவ்வரசில் நல்லதொரு அமைச்சரவை அமைந் திருந்தது. பல்குழுவும், பாழ்செய்யும் உட்பகையும் அங்கு இல்லை. அமைச்சர் தங்களுடைய நலத்தைப் பொருளாகக் கொள்ளாமல் அரசன் சினம் கொண்ட போதும், அவனது வெம்மையைத் தாங்கி நீதியை விடாது எடுத்துக் கூறும் வீறு பெற்றவர்; தங்கள் நுண்ணறிவினாலும், உள்ளத்தில்

பொய்யாது ஒழுகும் உயர்ந்த ஒழுக்கத்தாலும் மூன்று காலங்களையும் அறிந்து சொல்லும் ஆற்றல் பெற்றிருந்தனர். அவர்களைக் கம்பன்,

> "தம்முயிர்க்கு உறுதி எண்ணார்
> தலைமகன் வெகுண்டபோதும்
> வெம்மையைத் தாங்கிநீதி
> விடாது நின்று உரைக்கும் வீரர்
> செம்மையில் திறம்பல் செல்லாத்
> தேற்றத்தார் தெரியுங்காலை
> மும்மையும் உணரவல்லார்
> ஒருமையே மொழியும் நீரார்"

என்று சிறப்பிக்கின்றார்.

பிரமவிருடியான வசிட்டரே அவனுக்கு அரசியல் சுற்றமாய் விளங்கினார். ஆயினும் தசரதனுடைய குணஞ் செயல்களைக் கண்ட அமைச்சர்களுக்கு உள்ளத்தில் அரசனுக்குத் தீது வருமோ என்ற ஓர் ஐயம் எங்ஙனமோ தோன்றியது. தம்மை அறியாமலே ஒருவகை அன்பும் பரதன்பால் தோன்றியது. இராமன் எழிலும், பரதன் குணநலமும் மாறி மாறி அவர்களுக்குக் காட்சி தந்தன; அவர்களுடைய நிலை இரண்டு கன்றுகளுக்கு இரங்கும் ஒரு பசுவின் நிலையை ஒத்திருந்தது என மிக அழகாகக் கூறுகின்றான் கம்பன். ஆனால், விதியின் வலியால், இதை வலியுறுத்த மறந்துவிட்டனர் அமைச்சர்கள். இந்த உண்மைகளை மனதிலிருத்திக்கொண்டு தசரதன் இராமனுக்கு முடிசூட்ட முடிவு செய்யும் நிகழ்ச்சியைக் கண்டால் கவியுள்ளம் விளங்கும்.

இராமனுக்குத் திருமணமாகிப் பன்னிரண்டு ஆண்டுகள் சென்றுவிட்டன. அப்பொழுது ஒரு நாள் தசரதன் தன் திருவுருவத்தைக் கண்ணாடியில் கண்டான். "இராமனுக்குத் திருமுடி சூட்டிவிட்டுப் 'பிறவிக் கடலை நீந்துவதற்கு வழி வகுத்துக் கொள்' என்று கூறுவது போல ஒரு நரைமயிர் தோன்றியது. உடனே அமைச்சரவையைக் கூட்டுவித்து மூத்த மகனை இராமனுக்குப் பட்டம் கட்டிவிட்டுத் தான் தவம் செய்ய எண்ணுவதாகக் கூறினான்.

அமைச்சர்கள், இராமனுக்குப் பட்டம் கட்டுவதில் தங்களுக்கு மகிழ்ச்சி யென்றாலும், உடனே அரசன் தவம் மேற்கொள்ளுவது துயரத்தைத் தருகிறது என்று கூறினர். அதனால் அவர்கள் இரண்டு கன்றுகளுக்கு இரக்கம் கொள்ளும் பசுவின் நிலையிலிருந்தார்கள். இருந்தபோதி லும் தசரதனது நன்மை ஒன்றையே நோக்கும் கருத்தொரு மையாலும், இராமன் அவனுக்கு உயிர் என்ற கருத்தாலும் அரசனுடைய வேண்டுகோளுக்கு இணங்கினர். இது விதி யின் வலிமையால் ஏற்பட்டதென்று கூறி, மூன்று காலத்தை யும் அறியும் ஆற்றலுடைய அமைச்சரவையினர் தவறுடைய ஒரு செய்கையைச் செய்துவிட்டார்கள் என்று கம்பன் கூறு கின்றான்.

இதனைப் பின் வருமாறு நயம்படப் பாடுகிறான்:—

**திரண்ட தோளினன் இப்படிச் செப்பலும் சிந்தை**
**புரண்டு மீதிடப் பொங்கிய உவகையர் ஆங்கே**
**வெருண்டு மன்னவன் பிரிவெனும் விம்முறு நிலையால்**
**இரண்டு கன்றினுக்கு இரங்கும் ஓர் ஆ என இருந்தார்**

**அன்னராயினும் அரசனும் அது அலது உறுதி**
**பின்னர் இல்லெனக் கருதியும் பெருநில வரைப்பில்**
**மன்னர் மன்னுயிர்க்கு இராமனிற் சிறந்தவரில்லை**
**என்ன உன்னியும் விதியது வலியுற இசைந்தார்**

இங்கே இரண்டு கன்றுகள் என்றது தசரதனும் இராமனும் ஆகிய இருவரையும் குறிக்கும் என்று கூறுவர். ஆனால் பின்னால் வலியிழந்தமையால் தசரதன் கூறியதற்கு இசைந்தார் என்று கூறப்படுவதால் அமைச்சர் வருங்காலத் தில் பரதன் ஆட்சி புரிவானென்பதை உணர்ந்திருந்தன ரென்றும், விதிவலியால் அதனைத் தீர்க்கமாகக் கூறமுடியாது போயினர் என்றும் சொல்லுவது நேரான பொருளாகும் என்பது என் கருத்து. மேலும் அமைச்சர்கள் தங்கள் மன் னனைக் கன்று என்று கொள்வது பொருந்தாததொன்றாகும்.

அமைச்சர்கள் ஒத்துக்கொண்ட பின் பல சிற்றரசர்களுக் கும், மன்னர்களுக்கும் திருமுகம் அனுப்பப்பட்டது. ஆனால்

சனகனுக்கோ, கேகயனுக்கோ இவ்வோலைகள் அனுப்பப் படவில்லை. ஆகையால் அவர்கள் வரவில்லை. மற்ற மன்னர் களும் சிற்றரசர்களும் ஒன்றுகூடி இராமனுக்கு முடிசூட்டு வதே சாலச் சிறந்த தொன்ருகும் என்று முடிவு கூறினர்.

தசரதன் தன் அமைச்சரவையின் உடன்பாடு பெற்ற வுடன் இராமனைக் கண்டு தன் விருப்பத்தைத் தெரிவித்தான். அதனைக் கேட்ட இராமனது உள்ளத்தில் உவகையோ, வெறுப்போ ஒன்றும் தோன்றவில்லை.

**தாதை அப் பரிசு உரை செய்யத் தாமரைக் கண்ணன்**
**காதலுற்றிலன் இகழ்ந்திலன் கடன் இதென்றுணர்ந்தும்**
**யாது கொற்றவன் ஏவியது அது செயலன்ருே**
**நீதி எற்கு என நினைந்து தன் பணிதலை நின்ருன்**

எனக் கம்பன் கூறுவதால் இது விளங்குகிறது. இராமன் குறிப்பைக் கண்ட தசரதன் " நான் வேண்டும் இவ்வரத் தைத் தரவேண்டும் " என்று மீண்டும் வற்புறுத்திக் கேட்டு அவனது இசைவு பெற்று மாளிகை அடைந்தான். ஆனல் இராமனே முடிசூட்டிக்கொள்வதில் விருப்பம் கொள்ள வில்லை. அதில் பற்றற்று நின்றது அவனது மனம்.

தசரதன் வசிட்ட முனிவனைக் கலந்து முடிசூட்டுதற்குத் தக்க நாள் யாது என்று கேட்டான். வசிட்டன், " நீ விரை விலே இராமனுக்கு மணிமகுடம் சூட்டிப்பார்க்க விரும்புவ தால் நாளையே நல்ல நாள் " என்ருன். பின்பு வசிட்டன் இராமனை அழைத்துத் தனக்குரிய முறைப்படி அவனுக்குப் பல அறவுரைகளைக் கூறுகிருன். அவற்றுள், யாருடனும் பகை கொள்வதில்லை என்ற கொள்கையை ஒருவன் மேற் கொண்டால் போர் ஒடுங்கும், அதனல் புகழ் எங்கும் பரவும் என்பது சிறந்த ஒன்று. இதனைக் கம்பன்,

**" யாரொடும் பகை கொள்கிலன் என்ற பின்**
**போரொடுங்கும் புகழ் ஒடுங்காது "**

என்று உரைக்கின்ருன். சீவகசிந்தாமணியாசிரியரும் "பஞ்சி யின் மெல்லிதேயாயினும் பகை சிறிது என்று எண்ண வேண்டா, அதற்கு அஞ்சித் தற்காக்க வேண்டும் " என்று கூறுவர்.

## 10. திரிந்தது சிந்தை

நாளை இராமனுக்கு முடிசூட்டு விழா என்று வசிட்டன் கூறியபின், முடிசூட்டுவிழாவை முன்னிட்டு அயோத்தி நக ரெங்கும் அலங்கரிக்கப்பட்டது. அரச வீதியும், அந்தணர் மறுகும், எங்கும் பூப்பாலிகையும், பூரணகும்பமும் பொலிந்து விளங்கின. ஆடவரனைவரும் தத்தமக்கு முடிசூட்டுவிழா நடப்பது போலும் மகிழ்ச்சியும், கிளர்ச்சியும் மலிந்து தோன்றினர். ஏனைய மக்கள் ஆடலிலும், பாடலிலும் அக மகிழ்ந்திருந்தனர். கோசலை பெருமகிழ்வுகொண்டு தான தருமங்களைச் செய்துகொண்டிருந்தாள். இவ்வாருக, எல் லோரும் உற்சாகத்துடனிருக்க, பெற்றதாயினும் பெரும் பரி வுற்ற கைகேயி, இராமனுடைய முடிசூட்டுவிழாவைப்பற்றி யாதொன்றுமே அறியாதவளாய்த் துயிலலுற்ருள். கைகேயி யின் ஏவல் மகளான கூனி, இராமனுக்கு நாளை முடிசூட்டப் போகிருர்கள் என்பதைக் கேள்விப்பட்டாள். அவள் பரதனே பட்டத்திற்கு ஏற்றவன் என்ற கருத்துடையவள். தன் னுடைய தலைவி பெரும் பதவியில் இருக்க வேண்டுமென்ற ஓரே பிடிவாதத்தால் இராமன் முடிசூட்டிக் கொள்வதைத் தடைசெய்ய முடிவு செய்தாள்.

நன்ருகத் துயிலலுற்ற கைகேயியை எழுப்பி, 'பேரிடர் வரவும் அதை அறியாது துயில் கொள்ளலாமோ?" என்று கூறினுள். "இராமனைப் புதல்வனுகப் பெற்ற எனக்கு எந்த இடரும் வாராது" என்று கைகேயி மறுமொழி அளித்தாள். இதைக் கேட்ட மந்தரை, கோசலை பெருவாழ்வு வாழ்கின்ருள் என்றும், இன்னும் பெருவாழ்வு வாழவேண்டிச் சூழ்ச்சி செய்து இராமனுக்கு இளவரசுப் பட்டம் கட்ட முடிவு செய்து விட்டாளென்றும், அது மறுநாள் நடைபெறுமென்றும் கூறினுள். அவளது அன்புள்ளமும், கோசலையின் அறிவாற்ற லும் ஒன்றுபட்டிருந்ததால், கூனியின் இந்தச் சொற்களைக் கேட்டதும் கைகேயியின் மனத்தில் வேற்றுமை ஏற்பட

வில்லை. இராமனுடைய தந்தையாகிய தசரதன் கைகேயியின் உயிர் ஒன்றிய கேள்வன். அவள் இதயக்கோயிலில் எழுந் தருளிய தெய்வம் அவனே. அதனால் கைகேயி தனக்கென ஓர் இதயம் இருப்பதையும் மறந்தாள். ஆகையால் தசரதன் என்ன நினைத்தானோ அதனையே அவளும் நினைத்தாள். இதனைக் கம்பன்,

> **" மாற்ற மஃது உரைசெய மங்கை உள்ளமும்**
> **ஆற்றல் சால் கோசன் அறிவும் ஒத்தலால்**
> **வேற்றுமை உற்றிலள் வீரன் தாதை புக்கு**
> **ஏற்றவள் இதயத் திருக்கவே கொலாம் "**

என்று இசைக்கின்றான்.

வேறுபாடுஏதும் எண்ணாத கைகேயி பெருமகிழ்வெய்தி மந்தரைக்கு ஒரு முத்துமாலையைப் பரிசாகக் கொடுத்தாள்.

மந்தரை, கோசலையும் இராமனும் பெறப்போகும் பெருமையை எடுத்து விளக்கிக் காட்டி "தசரதன் சூழ்ச்சி செய்து பரதனைத் தன் மாமன் வீடு போகும்படி செய்து விட்டான்; இராமனுக்குப் பட்டம் கட்ட இப்போது ஏற்பாடு செய்வது, பரதன் ஒருகால் தடையாயிருப்பானோ என அஞ் சியே யாகும்; பரதனைத் தன் மாமன் நாட்டிற்கு அனுப்பிய வேந்தன் இப்போது அவனை ஏன் வரவழைக்கவில்லை? இதற்குரிய காரணங்களை நீ நினைக்கவில்லையே" என்று கூறுகிறாள்.

மந்தரை, கைகேயியின் வீழ்நிலையைப் பற்றியும், இராமன் முடிசூட்டிக்கொண்டால் ஒருகால் சனகன் இராம னுடைய உதவியால் அவளுடைய தந்தையின் நாட்டைக் கவரக்கூடுமென்றும் கூறினாள். ஆனால் கைகேயி ஒன்றுக்கும் செவி சாய்க்கவில்லை. மந்தரையோ கடைசியில் சில உண்மை களைக் கூறினாள். உடனே கைகேயியின் தூய சிந்தை திரிந் தது. அவள் கடைசியில் கூறியது இதுதான்;

"கெடுத் தொழிந்தனை உனக்கு
அரும்புதல்வனைக் கிளர்நீர்
உடுத்த பாரக முடையவன்
ஒரு மகற் கெனவே
கொடுத்த பேரரசு அவன்
குலேக்கோமைந்தர் தமக்கும்
அடுத்த தம்பிக்கும் ஆம் பிறர்க்கு
ஆகுமோ என்ருள்"

இந்தச் செய்யுளுக்குப் பலர் பலவாறு பொருள் கூறு கின்றனர். "இந்தக் கஷ்டங்கள் எல்லாம் வேண்டாம், இது கம்பன் எழுதாத பாடல்களில் ஒன்று" என்று ஒரு தமிழ்ப் பெரியார் இதனைக் கம்பராமாயணத்திலிருந்து நீக்கியே விட்டார்.

இதன் பொருள்: நீ பெறுதற்கரிய புத்திரனை இராமனைக் கெடுத்துவிட்டாய். இந்த உலகம் முழுதும் முன்னமேயே ஒரு மகனுக்குப் பேரரசாகக் கொடுக்கப்பட்டு விட்டது. அவனுக்கும் அவன் மக்களுக்குமே அது உரித்தாகும். இல்லையேல் உன்னை அடுத்த உன் தம்பிக்கு உரிமையாகிவிடும் என்பது.

வேறு பொருள் கூறுவோர், "பரதனைக் கெடுத்துவிட்டா" யென்றும், "இராமனுடைய மக்களுக்கும், அவனுடனே யிருந்து வாழ்கின்ற இலக்குமணனுக்குமே அரசுரிமை சாரும்" என்றும் கூறுவர். இதற்குச் சான்ருக:

பரதாயச பிரமாஸ்யத்ருவம்
வர்ஷய தாத்பரம் பித்ரு பைதாமஹம்
ராஜ்யம் அவாப்தா புருஷர்ஷப[1]

என்று சொன்ன கைகேயிக்கு,

---

1 இராமன் நூறு வருடம் ஆண்டபின் புருஷ சிரேஷ்டனை பரதனும் குலமுறையாக வந்த இராச்சியத்தையடையப் போகிருன்,

பவிதா ராகவோராஜா ராகவாத்தத்ஸூத:
ராஜவம்ஸாத்து கைகேயி பரத:
பரிஹாஸ்யதே நஹிராஜஞஸ்ஸூ
தாஸர்வே ராஜ்யேதிஷ்டந்திபாமினி [1]

என்பதைக் கூறுவர். ஆனால் இப்பொருள் கம்பன் கருத்திற்குப் பொருந்தாத தொன்றும். "கொடுத்த பேரரசு" என்றதால், இந்நிகழ்ச்சி முன்பே நடந்துவிட்ட தென்றும், கொடுத்தது இளவரசு முடி அல்லவென்பதும், பேரரசே என்பதும் தெளிவாகிறது. இதற்கு ஆதாரமாக வால்மீகத்தில் 107-ஆம் சருக்கத்தில் கூறியிருப்பதைநோக்க வேண்டும்; அது,

"இராஜ்யம் கைகேயியினுடையதே; தசரதன் அதற்கு உரியவனல்லன்; பெண் அரசு புரிதற்குப் பதில் இத் தசரதனே அரசு புரிந்தான்; ஆகையால் கைகேயியின் புத்திர னுக்காகவே கொடுக்கப்பட்டது இப்பேரரசு" என்பது.

தெளிவாகக் கூறத் தொடங்கினால். "தனக்கு இல்லாத ஓர் அரசைத் தசரதன் இராமனுக்குத் தந்துவிட இசைந் துள்ளான். இது நாளை வெளியிடப்படுமானால் வாய்மையும், மரபும் துறந்த மன்னர் வரிசையிலே தசரதன் வைக்கப்படு வான். இதனை நீ விரும்புகின்றாயா?" என்று மந்தரை கை கேயியைப் பார்த்துக் கேட்கிறாள். உடனே, தன் கணவ னுக்குப் பழிவருமென அஞ்சித் தெய்வக் கற்பினளான கைகேயி இராமனுடைய முடிசூட்டு விழாவைத் தடைசெய்ய ஒத்துக்கொண்டாள்.

கைகேயிக்கு இரண்டு வரங்களைத் தருவதாகத் தசரதன் கூறியிருக்கிறான். அதனையே காரணமாகக் கொண்டு, ஒரு வரத்தினால் இராமனைக் காட்டிற்குப் போகச் சொல்லவும், பிறிதொரு வரத்தால் பரதனை மணிமகுடம் புனையச் செய்ய வும் முடிவு செய்தாள். பால்போல் தெளிந்த அவள் மனம் உவகை வெள்ளத்தில் திளைத்தது; ஆயினும், விளையாட

1 இராமன் அரசனாகப் போகின்றான். அவன் பின் அவன் மகன். ஆகையால் அரசன்மாலையிலிருந்து பரதன் நீக்கப்படுவான். அரசரின் எல்லாப் புதல்வரும் அரசாள்வர்.

வேண்டியநேரத்தில் அது துக்கத்தின் எல்லையைத்தொட்டுக் கொண்டிருந்தது. மலர்மெத்தையிலே மன நிம்மதியுடன் இருக்கவேண்டியவள், மண்ணிலே அலங்கோலமாகப் படுத் திருந்தாள். முழுமதி போல் பொலிவு மிகுந்த முகம் திலகம் இழந்து நின்றது. மந்தரை செய்த போதனையிலே, மனதைச் செலுத்தி, எண்ணாத எண்ணங்களெல்லாம் எண்ணி அருள் நிலை குறையுமளவிற்குப் பசையற்றுப் போய்விட்டது அவள் மனம். காதலர்கள் இதயத்திலே என்றும் காதல் மணம் கமழ வேண்டும்; அச்சூழலில் அன்புடைய உள்ளம் களிநடம்புரிய வேண்டுமென்றும் கூறுவர். ஆனால் இக்களிநடம் முற்றுப் பெற்றுவிட்டால் வாழ்க்கையில் அமைதி எங்கே?

கைகேயியின் இதயத்திலே எழுந்த எண்ண அலைகள் என்னவாயிருக்கக்கூடும்? கட்டிய கணவனைக் கைவிடவும், காதல் திருமகனைத் காட்டிற்கு அனுப்பவும் எப்படித்தான் துணிந்தது அவள் மனம்?

அப்பொழுது கைகேயியைப் பார்ப்பவர்களுக்குத் தெய் வக்கற்பினளான கைகேயியோ இவ்வாறு மாறிவிட்டாள் என்ற எண்ணம்தான் உண்டாகும். அவளிடமே கேட்டுப் பார்த்து விடலாமா என்ற ஓர் ஆசை எழும். அவள் நிலை யில் நின்று பேசும் கம்பனை இப்பொழுது கேட்டுத் தெரிந்து கொள்ளலாம். அவன் கூறும் விளக்கத்தை ஆராயுமுன், அவன் அவள் நிலையை எவ்வாறு காட்டுகிறான் என்பதைக் காண்டல் வேண்டும்.

> **"விளையுந் தன்புகழ் வல்லியை வேரறுத் தென்னக்**
> **கிளைகொள் மேகலை சிந்தினன் கிண்கிணியோடும்**
> **வளை துறந்தனள் மதியினின் மறுத்துடைப்பாள் போல்**
> **அளக வாணுதல் அரும்பெரும் திலகமும் அழித்தாள்"** [1]

என்கின்றான் கம்பன்.

---

1 வளர்கின்ற தனது கீர்த்தியை வேரோடு அறுத்தாற்போல் முத்து மாலைகளை அறுத்து எறிந்துவிட்டு, மற்ற ஆபரணங்களையும் கழற்றி எறிந்தாள்; பூரண சந்திரனிலிருக்கிற களங்கத்தை நீக்குவது போலத் தன் திலகத்தை அழித்துவிட்டாள்.

களங்கமில்லாத சந்திரனை, தெவிட்டாத தேனை, மருளாத மானை நாம் கண்டதில்லை; காணவும் முடியாது. களங்கம் சந்திரனிடமிருந்து நீங்கிவிட்டால், சிறந்து விளங்கு மல்லவா என்று நாம் நினைக்கலாம். இச் சிந்தனையும் கம்ப னுக்கு ஏற்பட்டது. அவன் தன் முடிவைக் கூறுவானாய், "கைகேயி தன் மதிமுகத்திலுள்ள திலகத்தை எடுத்து விட்டாள்; அதனால் இலக்குமி அந்நாட்டிலிருந்து மறைந் தாள்" என்று கூறுகின்றான். இயற்கையோடு ஒன்றிய வாழ்வு தான் நலம்பெறும்; அதற்கு மாறான வாழ்க்கை துன் பத்தையே தரும். குற்றமற்ற ஒரு சமுதாயத்தைப் படைக்க வேண்டுமென்று பலகாலமாகப் பாடுபடும் பெரியோர்கள் இன்றளவும் தோல்வியே கண்டு வருகின்றனர். அத்துறை யில் பொருள் கூடின் அருள் அறம் மங்கியும், அறிவு கூடின் அறம் குறைந்தும் வருவதைக்கண்ட நம் பெரியோர்கள் இவ்விரண்டையும் ஒற்றுமைப்படுத்திக் காண்பது முடியாத ஒன்று என முடிவு செய்தார்கள்.

# 11. பிடிவாதம்

இராம இராச்சியத்தைக் காணவேண்டுமென்று மன்னர் மன்னனை தசரதன் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை யெல்லாம் செய்தபின் தன் உயிரனைய கைகேயியின் உவகை பொங்கும் ஒளிநகை காண உவந்து வருகின்றான். மனிதன் எண்ணுவதெல்லாம் எண்ணியபடி நடப்பதுண்டோ? நடப்பதில்லையல்லவா? அதற்கு மாறாக, நினைத்தது முடிந்தது என மனப்பால் குடித்துவரும் தசரதன், அவலித்த தோற்றமும், அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகக் கிடக்கும் அவள் நிலையைக் கண்டால் அவன் மனம் என்ன பாடுபடும்? இதுகாறும் சீதேவி போல இருந்த கைகேயி மூதேவியாகி விட்டாள் என்றுதானே நினைக்கத்தோன்றும். இராம இராச்சியத்தைக் காண முயல்பவர்களுக்கு இதுதான் முடிவு போலும்! அதைக் காண முயன்ற காந்தியடிகள் என்ன ஆனார்? தசரதன் கொல்லாமல் கொல்லப்பட்டான்; காந்தியடிகள் கைத்துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்பட்டார். இது நிற்க,

கைகேயியின் மாளிகைக்குத் தசரதன் வரும்போது, இரவு நடுநிசியைக் கடந்து விட்டது.

> **"நாழிகை கங்குலின் எல்லை அடைந்த பின்றை**
> **யாழிசை அஞ்சிய அஞ்சொல் ஏழை கோயில்**
> **வாழிய என்று அயில் மன்னவர் துன்ன வந்தான்**
> **ஆழி நெடுங்கை மடங்கல் ஆளி யன்னான்"**

என்று கம்பன் அவன் வருகையை அறிவிக்கின்றான்.

தன்பால் மாறாத அன்புடைய கைகேயி, தன்னை எதிர் கொள்ளாமலும், துயிலாமலும் துன்பமே வடிவாகித் தரையில் கிடப்பதைக் கண்டான் தசரதன். நிகழ்ந்தது தெரியாமை யால் அவன் நெஞ்சு துடித்தது. உடல் வியர்த்தது. இடியேறுண்ட நாகம் போல இடர்க் கடலில் தலைகீழாய் வீழ்ந்தான். ஒருவாறு தேறி, இளைய ஒரு பெண்மானை எடுக்கும் களிற்று யானையைப்போல அவளைத் தழுவி எடுத்தான். தழுவிய அந்த நீண்ட கைகளை உதறித் தள்ளிவிட்டுத் திரும்

பவும் அவள் தரையில் விழுந்தாள். அது கண்ட மன்னன் "என்ன நிகழ்ந்தது? இந்த ஏழு உலகங்களிலும் யாராவது உனக்குத் துன்பம் தர எண்ணுவார்களானால், அவர்களைக் குலத்தோடும் தொலைத்துவிட என்னால் முடியும். பின்னர் என் வீரத்தைக் காண்" என்று கர்ச்சித்தான். அதே நிலையில் கைகேயி தசரதனைப் பார்த்து, முன்பு தனக்குத் தருவதாக வாக்களித்திருந்த இரு வரங்களையும் தருமாறு கூறினாள். "வரங்களைப் பெறுவதற்கு இத்துணை வம்புகள் ஏன்? இதோ நீ கேட்கின்ற வரங்கள். அவைகள் என்ன என்று கூறு உன்னுடைய மகன் இராமன்மேல் ஆணை" என்று தசரதன் கூறினான்.

இராமனிடத்தில் எஞ்சாத அன்பு பூண்டவள் கைகேயி; ஆதலால் இராமனுக்கு முடிசூடும் விழாவிற்கு அவளிடமிருந்து எதிர்ப்பு வருமென்று தசரதன் கனவிலும் நினைக்கவில்லை. ஆனால் வெந்த ஒரு புண்ணில் இரண்டு கூர்மையான வேல்களை எறிந்தால் அப்புண்ணையுடையவனுக்கு எத்தகைய துன்பம் வருமோ, அத்தகைய துன்பத்தைத் தரும் இரண்டு வரங்களைக் கைகேயி கேட்டாள். வரம் இரண்டனுள் ஒன்று இராமன் பதினான்கு ஆண்டு வனத்தில் வாழ வேண்டுமென்பது; மற்றது பரதன் அரசுரிமை பெறவேண்டுமென்பது. பரதனுக்குத்தான் அரசு என்று கைகேயி கேட்டிருந்தால்கூட மன்னன் வருந்தியிருக்க மாட்டான். இராமனைப் பிரிய வேண்டுமென்ற கவலையும், அப்பிரிவால் புத்திரப் பிரிவு ஏற்பட்டால், முனிவன் சாபப்படி தான் உயிர் விட நேரும் என்பதும் நினைத்து அரசன் துயர்க் கடலிலே ஆழ்ந்தான். அப்பொழுது எழுந்த சினத்தில் பெண் குலத்தையே அழித்துவிடலாமோ என்றுகூட நினைத்தான். பலவாறு துயரப்பட்ட மன்னன் கைகேயியை நோக்கி, "நீ மனம் மாறுபடக் காரணம் என்ன?" என்று வினவினான்.

"மன்னவனே, என்னுடைய எண்ணத்தைத் தீயவர்கள் வந்து மாற்றவில்லை. வாக்களித்த இரண்டு வரங்களையும் தந்தால் நான் பெற்றுக்கொள்கிறேன், அன்றேல் உங்கள் பால் வசைச்சொல் வந்து சேரும். அவ்வசைச்சொல் வருமுன்னே நான் இறந்துவிடுவேன்" என்று கைகேயி

கூறினள். இதைக் கேட்டதும் தசரதன் கைகேயியின் கால்களில்விழுந்து இறைஞ்சிப் பலவாறு கூறத்தொடங்கினன். "இராமனுக்கு நாடாள்வதில் விருப்பமில்லை; நான் பல முறை சொல்லிய பின் தான் அவன் இசைந்தான்; மேலும், இதைக் கேள்; பரதனாகிய உன்மகன் இந்நாட்டைக் கொள்ள இசையான்; அவன் ஒரு கால் இசைந்தாலும் உலகம் உடன்படாது; இங்கு இருக்கும் எல்லோரும் இராமனுக்கே முடி சூட விரும்புவதால், நீயும் உடன்பட்டு, பழியை ஏற்றுக் கொள்ளாது புகழை ஏற்றுக்கொள்; உனக்கு அரசு வேண்டுமெனினும், இராமனே உன் மகன் பரதனுக்கு அரசை முறையாகக் கொடுத்து விடுவான்" என்று நயமான முறையில் கூறினன். கைகேயியின் மனம் சிறிதும் மாறவில்லை. தான் கேட்ட வரத்தைத் தரவேண்டுமென்று அவள் பிடிவாதத்துடனிருந்தாள். இராமனைப் பிரிந்தால் அரசன் உயிர் விடுவான் என்று உணர்ந்தும், அவள் தன் பிடிவாதத்தை விடவில்லை. ஆனல், தசரதன் திரும்பவும் அவளை இரந்து, "நாடு என் மகன் இராமனுக்கு வேண்டா; ஆனல் அவனை நாடு கடத்தி விடாதே; உன்னுடைய மகன் பரதனே ஆளட்டும்; உலகமெல்லாம் உன்னிடத்திலே இருக்கட்டும்; இராமனைப் பிரிந்தால் நான் இறந்து விடுவேன்; ஆதலால் அவனை மட்டும் போகச் சொல்லாதே" என்பானய்,

> **நின்மகன் ஆள்வான் நீ இனிது ஆள்வாய் நிலமெல்லாம்**
> **உன்வயமாமே ஆளுதி தந்தேன் உரைக்கின்றேன்**
> **என்மகன் என்கண் என்உயிர் எல்லா உயிர்கட்கும்**
> **நன்மகன் இந்த நாடு இறவாமை நய**

என்று இயம்பினன்.

கைகேயியின் நெஞ்சுறுதி மாறவில்லை. தந்த வரத்தைக் கொடுக்காமல் மீண்டும் மீண்டும் பேசுதல் அறத்தின் பாற்படாது என்று அவள் கூறினள். இக்கொடுஞ் சொற்களைக் கேட்ட தசரதன் பெரிதும் புலம்பி மூர்ச்சையடைந்தான். "மதியாலும், பலத்தாலும் மேலாக வைத்து எண்ணப்படுகின்ற மன்னர்களையும், தேவர்களையும் வென்ற தசரதன் தன் மனைவியினல் உயிர்விடும் நிலை வந்ததே! அந்தோ! என்ன கொடுமை!" என்று உயிர்களெல்லாம் இரங்கின. இந்த நிலை

யில் இராப் பொழுது கழிந்தது; விடியல் வந்தது; வாழ்விலே ஒன்றுபட்ட நாளிலிருந்து இரண்டறக் கலந்து ஓரே உயிராயிருந்த கைகேயி தசரதனுக்கு மிக்க துன்பம் வந்த நாளில் இரக்கம் காட்டாது நின்றதைக் கண்ட இராக் காலம் என்ற நங்கை மக்களுக்கு முன் நிற்பதற்கு வெட்கி ஓடிவிட்டாள் என்ற கருத்துப் பட,

**சேணுலாவிய நாளெலாம்**
**உயிர் ஒன்று போல்வன செய்துபின்**
**ஏணுலாவிய தோளினான் இடர்**
**எய்த ஒன்றும் இரங்கிலா**
**வாணிலா நகை மாதராள் செயல்**
**கண்டு மைந்தர் முன் நிற்கவும்**
**நாணினாள் என ஏகினாள் நளிர்**
**கங்குல் ஆகிய நங்கையே**

என்று கம்பன் கற்பனை செய்து பாடுகின்றான். சூரியன் உதயமாயினன். அயோத்தி மக்கள் மிக்க ஆரவாரத்துடன் இராமனது முடிசூட்டு விழாவிற்காக வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தனர். அரண்மனையில் எல்லா ஏற்பாடுகளும் செய்து முடித்த பின், வசிட்டன் ஏவலின்படி சுமந்திரன் தசரதனைக் காண அவன் மாளிகை சென்றான். அங்கே தசரதனைக் காணாது கைகேயியின் மாளிகையில் அவன் இருப்பதை அறிந்து அவ்விடம் சென்றான். வந்த அமைச்சர் தலைவனை நோக்கிக் கைகேயி இராமனைக் கூட்டி வரும்படி ஆணையிட்டாள். இதனை,

**விண்டோட நிவந்த கோயில்**
**வேந்தர்தம் வேந்தன் தன்னைக்**
**கண்டிலன் வினவக் கேட்டான்**
**கைகேயி கோயில் நண்ணித்**
**தொண்டைவாய் மடந்தை மாதர்**
**சொல்ல மற்றவருஞ் சொல்லப்**
**பெண்டிரிற் கூற்ற மன்னாள்**
**பிள்ளையைக் கொணர்க என்றாள்.**

என்று கம்பன் உரைக்கின்றான்.

## 12. தாயும் சேயும்

கைகேயி எதற்காக இராமனை அழைத்துவரச் சொல்லு கிருள் என்பது சுமந்திரனுக்குத் தெரியாது. அவன் இராம னிடம் சென்று சிற்றன்னையின் விருப்பத்தைத் தெரிவிக்கவும்; இராமன் தேரேறிக் கைகேயியின் அரண்மனைக்குச் சென் ருன். தெருக்களில் அவனைக் கண்ட நகர மாந்தர் அனை வரும் அவன் முடி சூடிக் கொள்ளுவதால் உலகமே ஒரு குடைக்கீழ் வந்தடையும் என்றும், மன்னனுக்கு மட்டுமன்றி மக்களுக்கும், பொதுவாக உலக முழுதுக்கும் நலமே அமையு மென்றும் கூறினர். தான் சிறிய தாயாரேயாயினும் கைகேயி இராமனிடத்தில் பேரன்பு வைத்திருந்ததனலன்ரு அவனும் அவள் மடியிலே கிடந்து வளர்ந்தான்; அவன் பெற்ற பெரும் பாக்கியமன்ரு அது என்று மக்கள் பாராட்டினர். முடிசூட்டு விழாவிற்காக அலங்கரிக்கப்பட்ட தெருக்களின் வழியாக எல்லோரும் ஆரவாரம் செய்ய இராமன் சென்று கைகேயி மாளிகைக்குள் புகுந்தான்.

வந்த மைந்தனைப் பார்த்துக் கைகேயி, மன்னன் அவ னுக்குச் சில செய்திகளைச் சொல்லியதாகத் தெரிவித்தாள். "தந்தையும் தாயுமாக நீங்களே இருக்கும்போது அதை மறுப்பேனு? கூறுங்கள்" என்று நோக்கினுன் இராமன்.

"இந்தப் பூவுலக மெல்லாம் பரதனுக்கே கொடுத்து விடுவதாக மன்னன் முடிவு செய்து விட்டான்; நீ வனத் திற்குச் சென்று அங்குப் பதினுன்கு ஆண்டு இருந்துவிட்டு மீண்டும் இங்கு வரவேண்டும். இதுதான் சக்கரவர்த்தியின் கட்டளை" என்ருள். இதனைக் கம்பன்,

> ஆழிசூழ் உலக மெல்லாம்
> பரதனே யாள நீபோய்த்
> தாழிருஞ் சடைகள் தாங்கித்
> தாங்கரும் தவமேற் கொண்டு

**பூழிவெங் கானம் நண்ணிப்**
**புண்ணியத் துறைக ளாடி**
**ஏழிரண்டு ஆண்டில் வாவென்று**
**இயம்பினன் அரசன் என்ருள்**

என்று அழகுறக் கூறியுள்ளான்.

இக்கட்டளையைக் கேட்டவுடன் இராமனுடைய முகம் அப்போது மலர்ந்த செந்தாமரையைப் போலிருந்தது, ஏனென்ருல் மன்னன் கட்டளையை மறுப்பதற்கு அஞ்சியே இராமன் அரசுரிமை ஏற்க இசைந்தான். கைகேயி, பரதனுக்குத்தான் நாடு என்றவுடன் தனக்கு விருப்பமில்லாத அரசுரிமை விலகியது என்று மகிழ்ந்தான். வண்டியிலே பூட்டப்பட்ட காளையை அருளுடைய ஒருவன் அவிழ்த்து விட்டால் அது எவ்வளவு மகிழ்ச்சி கொள்ளுமோ அவ்வளவு மகிழ்ச்சியில் அவனுள்ளம் மூழ்கியிருந்தது. இதனைக் கம்பன்,

**தெருளுடை மனத்து மன்னன்**
**ஏவலில் திறம்பல் அஞ்சி**
**இருளுடை உலகம் தாங்கும்**
**இன்னலுக்கு இசைந்து நின்ருன்**
**உருளுடைச் சகடம் பூண்ட**
**உடையவன் உய்த்த காரேறு**
**அருளுடை ஒருவன் நீக்க**
**அப்பிணி அவிழ்ந்தது ஒத்தான்.**

என்று இசைக்கின்ருன்.

இந்த உரையைக் கைகேயி சொல்லக் கேட்டதும் "அரசனே எனக்குக் கட்டளையிட வேண்டுமென்பதில்லை; தாங்களே உவந்து கட்டளையிட்ட போதிலும் அதனை யான் மறுப்பேனு? என் பின்னவனுகிய பரதன் பெற்ற இந்த அரசியற் செல்வம் யான் பெற்றது போலத்தானே? நீங்களே எனக்குத் தந்தையும் தாயும் என்ற கருத்தினுல் உங்களுடைய கட்டளையைத் தலைமேல் கொண்டு இன்றே காட்டிற்குச் செல்லுகிறேன்; விடையையும் பெற்றுக் கொள்ளுகிறேன்" என்று இராமன் கூறினன். இதனை,

முன்னவன் பணியன் ருகில்
நும்பணி மறுப்பனோ யான்
பின்னவன் பெற்ற செல்வம்
அடியனேன் பெற்ற தன்றோ
என்னினி உறுதி அப்பால்
இப்பணி தலைமேற் கொண்டேன்
மின்னொளிர் கானம் இன்றே
செல்கின்றேன் விடையுங் கொண்டேன்

என்று கம்பன் கூறுகின்றான்.

இராமன் இதன் பின்பு கோசலையைக் காணச் செல்லு கின்றான். தன்மகன் அரச விருதுடன் வருவான் என்று வழி மேல் விழிவைத்துக் கொண்டிருந்த கோசலை இரு புறமும் சாமரையும் வெண்கொற்றக் குடையுமின்றி, இராமன் தனி யாக வருவதைக் கண்டாள். இதனை மனக் கண்ணில் காணும் கம்பன்,

குழைக்கின்ற கவரி யின்றிக்
கொற்றவெண் குடையுமின்றி
இழைக்கின்ற விதிமுன் செல்லத்
தருமம் பின் இரங்கி ஏங்க
மழைக்குன்றம் அனையான் மோலி
கவித்தனன் வரும் என்று என்று
தழைக்கின்ற உள்ளத் தன்னாள்
முன்னொரு தமியன் சென்றான்

என்று கூறுகின்றான்.

கண்டமாத்திரத்திலேயே கோசலையின் உள்ளத்தில் கவலை சூழ்ந்தது. மணிமகுடம் சூடாமல் வந்ததனால் ஏதோ இடர் வந்திருக்கவேண்டுமென்று கருதி, "மகனே! உனக்கு முடி சூடுவதற்கு ஏதாவது இடையூறு ஏற்பட்டு விட்டதா?" என்று கேட்டாள், அதற்கு விடையாக, 'உன்னுடைய மகன் பரதனே முடிசூட்டிக் கொள்ளப் போகிறான்' என்று இராமன் கூறினான். இதனைக் கேட்டவுடன் கோசலை 'இது முறைக்கு

மாருக இருப்பினும், பரதன் மிக நல்லவனுதலால் அவன் அரசனுவதில் எனக்கு மகிழ்ச்சியே. ஆதலால் இந்தப்பூமியை அவனுக்குக் கொடுத்துவிட்டு அவனுடன்கூடி நீ இன்பமாகப் பலகாலம் வாழ்வாயாக' என்ருள். அரசு பரதனுக்கு அமைவதை யாருமே தடை சொல்லவில்லை. கோசலையும் அது சரியெனவே கொள்கிருள். இதனைக் கம்பன் இரு பாடல்களால் மிகவும் அழகாகக் கூறுகின்ருன். அவை;

மங்கை அம்மொழி கூறலும் மானவன்
செங்கை கூப்பி நின்காதல் திருமகன்
பங்கமில் குணத்து எம்பி பரதனே
துங்க மாமுடி சூடுகின்ருன் என்ருன்

முறைமை என்பது ஒன்று உண்டு அது அல்லது
நிறை குணத்தவன் நின்னினும் நல்லனுல்
குறைவில் அன்பினன் எனக்கூறி நால்வர்க்கும்
மறுவில் அன்பினள் வேற்றுமை மாற்றினுள்

என வருகின்றன.

இங்கே ஒரு குறிப்பு. இராமனுக்கு முடிசூடப்படும் என்று கூனி கைகேயியிடம் கூறியவுடன் அவள் 'வேற்றுமையுற்றிலள்' என்று கூறிய கம்பன் கோசலை 'வேற்றுமை மாற்றினுள்' என்று கூறுகின்ருன். இதனுல் அறிவின்பாற்பட்ட கோசலையின் மனம் வேற்றுமைப்பட்டதென்றும், பின்னர் அதனை அவள் மாற்றிக்கொண்டாளென்றும் காணலாம். பின்னும் கோசலை, 'உன்னுடைய தம்பிக்கே அரசுரிமையைக் கொடுத்துவிட்டு அவனுடன் ஒன்றிப் பல்லூழிகாலம் வாழ்வாயாக' என்று சொல்லுகிருள். கவலையுற்றுத் தெளிந்து வரும் அவள் உள்ளம் திடுக்கிடுமாறு மேலும் ஒரு செய்தியை இராமன் அவளுக்குச் சொன்னுன். அந்தச் செய்திதான் அவன் காட்டிற்குப் போய்ப் பதினுன்கு ஆண்டுகள் இருக்க வேண்டுமென்ற கட்டளை, அரசுரிமை அவனுக்கில்லை என்பதைப்பற்றி ஒரு கவலையும் கொள்ளாத கோசலை, இராமன் காடு நோக்கிச் செல்லுவதால் உண்டாகும் பிரிவுத் துன்பத்தை ஆற்ருதவளாய் மிகவும் அழுது புலம்பினுள். 'ஒருகால் தன் மைந்தனைக் காட்டிற்கு அனுப்பவேண்டு

மென்று ஒரு திட்டமிட்டுக்கொண்டு, மணிமுடி தாங்குமாறு மன்னவன் முன்னே வஞ்சனையாகக் கூறினனோ' எனவும் ஐயுறலானாள். இதனைக் கம்பன்,

> **வஞ்சமோ மகனே உனை மாநிலம்**
> **தஞ்சமாக நீ தாங் கென்ற வாசகம்**
> **நஞ்சமோ இனி நான் உயிர் வாழ்வனோ**
> **அஞ்சும் அஞ்சும் என் ஆருயிர் அஞ்சுமல்**

என்று சொல்லிப் புலம்புகிறாள். கோசலையை இராமன் மெல்லத் தேற்றித் தெளிவித்தான். தான் காடு செல்லாவிட்டால் அரசன் பொய்யனாவான்; ஆதலால் தன்னைத் தடுக்கக் கூடாது என்று அவளைச் சமாதானப்படுத்தினான். அவனுடன் தானும் வந்து விடுவதாக அவள் கூறினாள். கோசலை நாட்டிலிருப்பதும், தான் காடு செல்லுவதும்தான் அறத்தின் பாற்படுமென்று கூறி, இராமன் விடைபெற்றுச் சென்றுவிடுகிறான். எப்படியும் இராமன் காடு செல்வான் என்று அறிந்த கோசலை அரசனிடம் மன்றாடி, இராமனை நாடு கடத்தாதவாறு கேட்பது கருதித் தசரதன் இருக்குமிடம் செல்கிறாள். அங்கே அரசன் தன் நினைவின்றிக் கிடப்பதை அவள் கண்டாள். மன்னவன் அவளிடம் கைகேயியின் கொடுமைகளைக் கூறியபின், விதிவசத்தால் தான் உயிர்விடப் போவதையும் கூறினான். அப்பொழுது இராமன் நீங்கின் தன்னுயிரும் உடம்பினின்று நீங்கும் என்பதற்கு முன்னமே உண்டாகி இருந்த சாபத்தையும் எடுத்துரைத்துக் கோசலையின் மனம் தெளியச் செய்தான் தசரதன்.

# 13. கன்யா சுல்கம்

இவ்வண்ணம் கோசலையின் பெருமனையில் நிகழ்ந்தபின் இராமன் சுமித்திரையின் மாளிகைக்குப் போனான். இதற்கிடையே இச்செய்தி இலக்குவனுக்கு எட்டவும் கைகேயி தன் சூழ்ச்சியால் அரசுரிமையைப் பரதனுக்கு மாற்றி விட்டாள் என்று இலக்குவன் நினைக்கலானான். அவன் மனதில் எழுந்த சினத்துக்கு அளவில்லை. தானே இராமனுக்கு முடி சூட்டப் போவதாகச் சொல்லித் தடுப்பவர்களைப் போருக்கு அழைக்கும் நோக்கத்துடன் அவன் சாலைகளில் திரிந்து வந்தான். இலக்குவன் சினம்கொண்டதை இராமன் அறிந்து, அவனிடம் வந்து அவன் மனம் வெகுளியால் வெந்து புழுங்குவது கண்டான். "அரசுரிமை தருகிறேன் என்று கூறிய தசரதன் அதனை உனக்குத் தந்தபின், பகைவர்களுடைய சூழ்ச்சியால் அதை மறுப்பதோடன்றி, உன்னைக் காட்டிற்கும் போகும்படி கட்டளையிடுவது கண்டும் நான் சினம் கொள்ளாது இருக்க முடியுமா" என்று இலக்குவன் கூறினான். அது கேட்டதும் இராமன் இலக்குவனைப் பார்த்து, தான் அரசுரிமை பெற்றது குற்றம் என்றும், சிக்கல் நேரும் என்று உள்ளுணர்வால் உணர்ந்தும் தான் அதனை ஏற்க இசைந்திருத்தல் கூடாது என்றும் உரைத்தான். இதனை,

> "பின் குற்றமன்னும் பயக்கும்
> அரசென்றல் பேணேன்
> முன் கொற்ற மன்னன்
> முடிகொள்கெனக் கொள்ள மூண்டது
> என் குற்றமன்றோ இகல் மன்ன
> வன் குற்றம் யாதோ
> மின்குற் றொளிரும் வெயில்தீக்
> கொண்டமைந்த வேலோய்"

என்று கம்பன் கூறுகின்றான்.

தான் காடு செல்வதற்கு விதிதான் காரணமேயன்றி வேறுயாரும் காரணமில்லையென்று நன்ருக வற்புறுத்தத் தொடங்கி "ஆற்றில் தண்ணீர் ஓடாவிட்டால் அது ஆற்றினுடைய பிழையாகுமா? ஆகாதன்ருே? அது போலவே நான் செல்வதற்குத் தசரதனே கைகேயியோ பரதனே காரணம் அல்ல; ஆகவே அதுபற்றி நீ சினந்துகொள்வது தெளிவுடைய செயல் ஆகாது" என்று கூறுவாளுய்,

> **"நதியின் பிழையன்று நறும்புன லின்மை அற்றே**
> **பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தாள்**
> **மதியின் பிழையன்று மகன் பிழை யன்று மைந்த**
> **விதியின் பிழை நீ இதற்கு என்னை வெகுண்டது"**

என இராமன் இசைத்தான்,

இலக்குவனுக்கு விதியிலே நம்பிக்கை இல்லை. வீணர்களின் வாதத்தில் தான் விதி என்னும் சொல் இருக்கும்; விதிக்கும் ஒரு விதி காண்பது தான் வீரம் என்பது அவன் கொள்கை. அதனுல் அவன் இராமனைப் பார்த்து, நீ கூறுகின்ற விதிக்கும் நான் ஒரு விதி செய்கிறேன் பார்" என்று கொதித்து எழுந்தான். தாய் தந்தையர்களிடத்தில் சினம் கொள்வது தகாது என்று கூறிய இராமனைத் தடுத்து 'நீ தான் எனக்குத் தாயும் தந்தையும்' என்ருன் இலக்குவன்.

இராமன் இலக்குவனைச் சாந்தமாக இருக்கும்படி கூறிவிட்டு இரண்டு வரங்களைக் கைகேயி பெற்றிருப்பினும், உண்மையிலே கைகேயியினுடையதே அரசு என்றும், தந்தையாகிய தசரதன் கூற அவள் அதனைப் பரதனுக்குக் கொடுத்தாளென்றும், தான் கொள்ளத் தக்க செல்வம் விரதம் தவிர வேறு ஒன்றும் இல்லை என்றும் நன்கு விளம்புவானுய்,

"வரதன் பகர்வான் வரம்பெற்ற வள்தான் இவ்வையம்
சுரதம் உடையாள் அவள்என் தனித் தாதை செப்பப்
பரதன் பெறுவான் இனியான் படைக்கின்ற செல்வம்
இரதம் இதினல்லது வேறு இனி யாவது"

என்று கூறுகின்றான்.

தசரதனிடத்தில் வரம்பெறக் கைகேயி மிக்க உரிமையுடையவள் என்பது வரலாற்றுண்மை. ஆனால் அந்த உரிமை சரியன்று என்று கருதுபவன் இலக்குவன். மேலும் கைகேயி வரத்தினால் தனக்கு அரசுவேண்டும் என்று கேட்டாளில்லை; கேட்பதற்கும் இடமில்லை. பரதன் தனக்கு உரிய அரசை ஆளவேண்டுமென்பதே அவ்வரம். அப்படியிருக்க இங்கே கம்பன், கைகேயிக்கு அரசுரிமை உண்மையாக அமைந்து விட்டது என்றும், தசரதன் தற்போது ஆளும் அரசனாதலால் அவன் தானே பரதன்பால் அரசை வைத்து நீ இதனை இனி ஆள்வாயாக என்று சொல்ல அம்முறையில் பரதன் அரசைப் பெறுவான் என்றும் கூறுகின்றான். வான்மீகத்தில் கைகேயிக்கே அரசு உரியது என்பதைக்கொண்டே இச் செய்யுள் எழுதப்பட்டுள்ளது என்பது இதனால் புலனாகிறது.

இனி இராமன் அரசுரிமை பெற வேண்டுமானால் நற் செயல்களுக்கே உறைவிடமான தசரதன் முடிவு வரையில் காத்திருக்க வேண்டும்; அன்றியும் தசரதனுக்குப் பின் அரசுரிமை கைகேயியை அடைவதால் அவளோடு போர் செய்து வென்று கொள்ளல் வேண்டும்; இது தவிர வேறு வழியில்லை. இதனை இராமன் விரும்பவில்லை. இலக்கு வனுக்கு இராமனுடைய இச்செய்கை பிடிக்கவில்லை. இராம னிடம் ஏழு உலகங்களையும் வெல்லும் வலிமையும், ஆற்றலும் இருக்கும்போது வீணாக வில்லையும், அம்பையும் சுமந்து கொண்டு இருக்கும்படியான நிலை அவனுக்கு ஏற்பட்டு விட்டதே என்று வருந்துகிறான்.

இராமன் தன் முடிவை மிகவும் அழுத்தமாகக் கூறிவிடு கிறான். இனிய மொழிகளாலே இளம்பிராயம் முதல் தன்னை அன்புடன் வளர்த்த தந்தையின் சொல்லை மீறி அரசாள்வது

தனக்குத் தக்கது அன்று என்று முடிவு செய்துவிட்டானுகை யால் தன் தம்பியிடம் தான் தந்தை சொல்லே மீற முடியாத வனுயிருப்பதாகவும், ஆனுல் இலக்குவன் அவன் சொல்லே மீறுவானுனுல் யாதும் அவனுக்குக் குற்றம் வராது என்றும் சொல்கிருன். இதனே,

> "நன்சொற் கடந்தெனே
> நாளும் வளர்த்த தாதை
> தன்சொற் கடந்து எற்
> கரசாள்வது தக்க தன்ருல்
> என்சொற் கடந்தால் உனக்கு
> யாதுளது ஈனம் என்ருன்
> தென்சொற் கடந்தான் வடசொற்
> கலேக்கு எல்லே தேர்ந்தான்"

எனக் கம்பன் கூறுகின்ருன். இங்கு இராமனேச் சிறப்பித்துக் கூறும்போது அவன் முதலில் கற்றுத்தேர்ந்த மொழி தமிழ் என்றும், பின்னர் வடமொழியையும் படித்து அதற்கு ஓர் எல்லே கண்டான் என்றும் கம்பன் கூறுவது காண்க.

இந்தக் கொடுமையான வார்த்தைகளேக் கேட்டபின் இலக்குவன் கோபம் அடங்கி இராமனுடன் சுமித்திரை மாளிகைக்குச் செல்கிருன்.

தன் மகனுன இலக்குவனும், இராமனும் தண்டகாரணி யத்திற்குப் போகப் புறப்பட்டிருப்பதைக் கண்ட சுமித்திரை துக்கமிகுதியால் தரையில் விழுந்து அழுது புரளுகிருள். துயரத்தால் முகம்வாடி நின்ற சுமித்திரையை இராமன் அடி பணிந்து அரசனுடைய வாய்மையையும் மரபையும் காப்பதற் காகத் தான் காட்டிற்குப் போவதுதான் அறம் என்று கூறு கிருன். கைகேயியின் தோழியர் கொண்டுவந்த மரவுரியை இராம இலக்குவர்கள் பெற்றுக்கொண்டு, சுமித்திரை யிடம் காட்டிற்குப் போக விடை கேட்கிருர்கள்.

இலக்குவனுக்குச் சில நல்லுரைகளேக் கூறுகிருள் சுமித் திரை. இராமன் போகின்ற காடே தன் மகனுக்கு அயோத்தி யாக வேண்டுமென்றும், சீதையே அவனுக்குத் தாய் ஆவாள் என்றும், இராமன் பின்னேயே அவன் செல்லவேண்டு

மென்றும் கூறுகிருள். பின்புஇலக்குவனை நோக்கி "இராமன் அண்ணனே யாயினும், அவ்வுறவைக் கொண்டாடாமல் அவனுக்கு அடிமையாக இருந்து ஊழியம் செய்து இராமனைப் பாதுகாக்க வேண்டுமென்றும், எப்பொழுதாவது இராமன் உயிருக்குத் தீமை நேரின், இலக்குவன் தன்னுயிரைக் கொடுத்து அவனுயிரைப் பாதுகாக்க வேண்டுமென்றும்" கூறுகிருள். இந்த நல்லுரைகளைக் கேட்டபின் சுமித்திரையிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு இராம இலக்குமணர்கள் சீதையைக் காணச் செல்கின்றனர். அங்ஙனம் செல்லும்போது இராமன் இலக்குவனைத் தன்னுடன் காட்டிற்கு வருவது சரியல்ல என்று கூறுகிருன். ஆனல் இலக்குவன் அவன்பால் மன்ருடித் தானும் காட்டிற்கு உடன் வர இராமனுடைய உடன்பாட்டைப் பெறுகிருன்.

இங்கே நாம் சிறிது சிந்தித்தல் வேண்டும். பரதனும் இலக்குவனும் இராமனுடைய இரு தம்பியராவர். பரதன் பாராளவும், இலக்குவன் இராமனுக்கு அடிமைப் பணிபுரியவும், கைகேயியும் சுமித்திரையும் நினைக்கின்ற நிலையை எண்ணும் போது அது நமக்கே வியப்பாய் இருக்கிறது. காரணம் என்ன? அரசுரிமை இயல்பாகவே அமைந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டாலன்றி இதற்கு விடை காணுவது அரிது.

வான்மீகி கூறிய "கன்யா சுல்கத்தைக்" கம்பன் மறைமுகமாக ஒத்துக்கொண்டிருப்பதை நாம் இதுகாறும் கண்டோம். "கன்யா சுல்கம்" என்பது திருமணம் செய்யும் போது கணவன் மனைவிக்குக் கொடுக்கும் பொருள். இது பெண்ணுக்குச் சொந்தமாகி அவள் மகளுக்கே பின் உரிமையாகிவிடும். மக்கள் பிறக்கவில்லையானல் அது பெண்ணின் தந்தைக்கோ சகோதரர்களுக்கோ போய்ச் சேர்ந்துவிடும். இந்தச் சொத்துக்கு அவள் கணவனே அவனுடைய வேறு பிள்ளைகளோ எந்த உரிமையும் கொள்ள முடியாது. திருமணக் காலத்திலே, தசரதன் அயோத்தி அரசையே கைகேயிக்குக் "கன்யா சுல்க" மாகக் கொடுத்துவிட்டான் என்று முதல் நூலான வான்மீகம் கூறுகிறது. பல பாடல்களில் இக்கருத்தைக் கம்பனும் கூறுவதைக் காணலாம்.

# 14. வேடன் செய்த விருந்து

அரசுரிமையைப் பெற்றுக்கொண்டு வருவான் தன் கணவன் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருக்கும் சீதை, மரவுரி தரித்த இராமஇலக்குவர்களைக் கண்டவுடன் துணுக் குறுகிருள். பின்னர், இராமன் காட்டிற்குச் சென்று வரு கிறேன் என்று கூறியவுடன் தானும் அவனுடன் வருவதாகக் கூறுகிருள். பண்டை நாளைய கற்புடைப் பெண்டிர் கூறியது போலத் தன்னைப் பிரிந்து இராமன் கானகம் போவானுனல், திரும்பி வரும்போது அவன் தன் உயிரற்ற உடலைத்தான் காணலாம் என்று எடுத்துரைக்கின்ருள்.

இராமன், பின் வரும் சோக நிகழ்ச்சிகளை உணர்ந்து கூறுவான்போல், 'சீதையே! காட்டிற்கு என்னுடன் வருவ தால் விளையக்கூடிய பல துன்பமான நிகழ்ச்சிகளை நீ சிந்தித் துப் பார்க்கின்ருயில்லை; உடன் வரத்துணிவதால் எனக்கு எல்லையில்லாத இடர்தரப் போகின்ருய்" என்று கூறுகிருன். இதனைக் கம்பன்,

> "முல்லை யுங்கடல் முத்தும் எதிர்ப்பினும்
> வெல்லும் வெண்நகையாய் விளைவு உள்ளுவா
> யல்லைபோத அமைந்தனை ஆதலின்
> எல்லை யற்ற இடர்தரு வாய் என்ருன்"

என்று பாடுகின்ருன்.

பதின்மூன்று ஆண்டுகளுக்குப்பின் இராமன் தன்னை இழந்துவிடுவான் என்ற எண்ணம் சிறிதும் இல்லாதவளா யிருந்தாலும், சீதையின் வாயிலிருந்து ஒரு சொல் பிறந்து விடுகிறது. இராமனை நோக்கி, "நாதா! நான் உங்களுடன் இருப்பது உங்களுக்குப் பிடிக்கவில்லையா? என்னைத் துறந்த பின்தான் உங்களுக்கு இன்பம் வரும்போலும்" என்று அவள் கூறினள். இதனைக் கம்பன் மிக அழகாக முன்னறிவிப்பாக நமக்குக் கூறுவானுய்,

**கொற்றவன் அது கூறலும் கோகிலம்**
**செற்ற தன்ன குதலேயள் கூறுவாள்**
**உற்று நின்ற துயரமி தொன்றுமே**
**எற்று றந்தபின் இன்பங்கொ லாம்என்ருள்**

என்று கூறுகிருன்.

இவ்வாறு பல வாக்குவாதங்களெல்லாம் நிகழ்ந்து முடிந்தபின், சீதை மரவுரி தரித்துக்கொண்டு புறப்படத் தயாராளுள். மூவரும் எல்லோரையும் வணங்கிவிட்டுத் தேர் மீது ஏறிக்கொண்டு காட்டிற்குப் புறப்பட்டார்கள்.

வான்மீகி இராமாயணத்தில் இராமனுடன் தான் வர வேண்டுமென்பதை வற்புறுத்தும் போது அவனைப் பார்த்துச் சீதை கூறுவதாக,

"இராமனே, நீ என்னைத் தனியே விட்டுவிட்டுக் காட்டிற்குச் சென்றுவிட்டால் என் தந்தையாகிய சனகன் என்ன நினைப்பார்? நீ அழகிலே சிறந்த ஆடவரும் கண்டு அதிசயிக்கும் அழகைப் பெற்றிருந்த போதிலும், ஆண்மை அற்றவன் என்றே உன்னைக் கருதுவார். உன்னுடைய பௌருஷத்தைக் கண்டு அதை நம்பியல்லவோ என்னை உனக்குத் தந்தார்" என்று வான்மீகி உரைக்கின்ருர்.

பதினுன்கு ஆண்டுகள் சீதை காட்டிலே வாழவேண்டு மென்று துணிவு கொண்டு இராமனிடம் அதைத் தெரிவித்து விட்டாள். இதன்கண் இன்னும் ஓர் உண்மையையும் அவள் குறிப்பாக உணர்த்துகிருள். மூத்த மகனுக்கே இயற்கையாக அரசு அமைந்துவிடுவது முறை. அப்படியிருக்க கைகேயி "காட்டிற்குப் போ" என்று கூறியவுடன், தன்னுடைய உரிமையை நிலைநாட்ட ஏதும் செய்யாது இராமன் கோழை போல் நடந்துவிட்டானே என்று ஐயப்பட்டாள் சீதை என்றும் வான்மீகி குறிக்கின்ருர். நிற்க,

இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூன்றுபேர்களையும் தொடர்ந்து அமைச்சர்களும், பிறரும் காடுவரை சென்ருர்கள். இரவு வந்தவுடன் இராமன், அயோத்தி மக்கள் தன்னைப் பின்தொடர்ந்து வருவது கண்டு அவர்கள் தொடர்ந்து

மேலும் வருவார்கள் என்று கருதிச் சுமந்திரனிடத்தில் தேரை மட்டும் திருப்பி ஓட்டிச் செல்லுமாறு கூறினுன். தான் திரும்பி வந்தால் தனக்கும் அரசனுக்கும் மிகுந்த பழிச்சொல் வருமெனக்கூறி அமைச்சனைச் சாந்தப்படுத்தினுன் இராமன். அமைச்சர் தலைவனும் சீதை கூறியவற்றைக் கேட்டுக்கொண்டு இலக்குவனிடம் வந்து, 'ஏதாவது செய்தி உளதா ?' என்று கேட்கிருன். இலக்குவனுக்கோ எல்லோர்பேரிலும் ஆத்திரம். அண்ணன் தனது உரிமையை நிலைநாட்டச் சிறிதும் முயற்சி செய்யாமல் காட்டிற்கு வந்தது அவனுக்குப் பிடிக்கவில்லை. தான் இவ்வாறு வீரனுகவும் தன் அண்ணனிடம் மிகுந்தபக்தியுடையவனுகவுமிருக்க, இராமன் வீரமற்றவனுகவும், பரதன் சூழ்ச்சி மிக்கவனுகவும் இருப்பதாக அவன் எண்ணினுன். இத்த எண்ணம் மேலிடவே தான் அவர்கள் இருவருக்கும் பின் பிறந்தவனுக இருக்கவே முடியாது என்று இலக்குவன் கருதினுன். சுமந்திரனைப் பார்த்து, "வாளாயுதத்துடனே பிறந்த பரத மன்னனுக்கு நான் கூறியதைத் தெரிவியுங்கள் ; தன் உரிமையை நிலை நாட்டும் நோக்கமில்லாத இராமனேடு நான் பிறந்தவனல்லன். சூழ்ச்சியால் அரசைப் பெற்று ஆளுகின்ற பரதனுடனும் பிறந்தவனல்லன். என் தம்பியாகிய சத்துருக்கனனுக்கு மூத்தவனுமல்லன். என்னுடனே பிறந்த நான், அவர்களைப்போல் கோழையல்ல ; மிகுந்த வலிமையுடையவன்" என்ருன். இதனை,

> மின்னுடன் பிறங்குவாட்
> பிறந்த வேந்தர்க்குள்
> மன்னுடன் பிறந்திலன்
> மண்கொண்டு ஆள்கின்ற
> தன்னுடன் பிறந்திலன்
> என்தம்பி முன்னல்லன்
> என்னுடன் பிறந்தயான்
> வலியன் என்றியால்

என்று கம்பன் எடுத்துக் காட்டுகிருன்.

இவ்வார்த்தைகளைக் கூறுவதால் இலக்குவன் தவறு செய்கிருன் என இராமன் கருதி அவனை அடக்கிவிட்டுக்

சுமந்திரனுக்கு விடைதருகிறான். பின்னர் இராமன் அவ்விரவே காட்டிற்குச் சென்று விடுகிறான்.

சுமந்திரன் வந்தபின் இராமன் காடு சென்று விட்டானென்றும், இனித் திரும்பி வரமாட்டான் என்றும் அறிந்து முனிவருடைய சாபத்தின் பயனாக அமரருடைய உலகத்தை அடைந்துவிடுகிறான் தசரதன்.

அரசன் இறந்தான் என்ற செய்திகேட்டுக் கோசலை, சுமித்திரை முதலான அவன் மனைவியரும், அமைச்சர்களும், மக்களும் ஒருங்கே வருந்தினர். அவர்கள் அடைந்த துயர் சொற்களுக் கடங்காது. வசிட்ட முனிவன் பரதனுக்கு ஆள் அனுப்பிவிட்டுத் தசரதனுடைய உடல் கெட்டுப் போகா திருக்கத் தைலத்தில் இட்டுவைக்கக் கட்டளையிடுகிறான்.

கைகேயி தன் மகன் பரதனுக்கு அரசுரிமை எய்தும் பொருட்டும் பல அரிய முயற்சிகள் செய்து முடிவில் அதனையும் பெற்றாள். ஆனால், இராமன் காடு சென்ற உடனே பரதனை நாட்டிற்கு அழைத்துவர ஏற்பாடு ஒன்றும் செய்யவில்லை. தசரதன் தன் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கும் போதுகூட, அவள் பரதனைப்பற்றி யாதொரு சிந்தனையும் செய்யாதிருந்தது படிப்பவர் யாவருக்கும் வியப்பை அளிக்கிறது. இராமன், பரதனை உடனே கூட்டிக்கொண்டு வந்து முடிசூட்டிவிடுமாறு கூறுகிறான். ஆனால் தசரதன் இறந்த ஏழு நாட்களுக்குப் பின், வசிட்ட முனிவர் பரதனுக்கு ஆள் அனுப்ப வேண்டுமென்று கூறி ஒரு தூதுவனையும் அனுப்பி வைக்கிறார்.

கூனி இராமனுக்கு அரசுரிமை கிடைக்கப் போகிறது என்று கூறியவுடன் கைகேயி, "மூத்த மகனே இளவரச முடிக்கு உரியவன்" என்று கூறினாள். ஆனால் கூனி இந்த வாதத்தை ஒப்புக்கொள்ளவில்லை. அவள் மூத்த மகனே இளவரசு முடிதரிக்க வேண்டுமென்பதில்லை என்றதாகவும் பின்னர்த் தெரிய வருகிறது. இராமன் பதினான்கு ஆண்டுகள் காட்டில் இருந்துவிட்டு வந்தபின் மணிமகுடம் புனைந்து கொள்ளுகிறான். யார் இளவரச முடி சூட்டிக்

கொள்ள வேண்டுமென்ற கேள்வி எழுந்தபோது, இலக்கு வனே அது தரிப்பதென்று முடிவாகிறது. இலக்குவன் பரதனுக்குத் தம்பி என்ருலும் அவனே முடிதரிப்பது சரியென முடிவு செய்யப்பட்டதால், மூத்தவனே இளவரச முடி தரிக்க வேண்டுமென்ற நியதி இருந்தாகத் தெரிய வில்லை. இவைகளெல்லாம் இராமாயணம் படிப்பவர்களின் மனதில் எழும் சிந்தனைகள். இவற்றைப் பின்னர் ஆராய் வோம். இது நிற்க,

இராமன் சுமந்திரன் போனபின், கங்கையாற்றங் கரை யிலுள்ள தவசிகளின் ஆசிரமத்தில் விருந்தினஞக இருந் தான். கங்கையிலே அவர்கள் எல்லோரும் நீராடி மகிழ்ந் திருந்தனர். அவர்களுடன் இருக்கையில் அந்தக் கங்கைக்கு இருகரையையும் தனது ஆதிக்கத்தில் கொண்டுள்ள குகன் இராமனைக் காண வந்தான். இராமனிடத்தில் பேரன்பு பூண்ட குகன் தேனையும், மீனையும் காணிக்கைப் பொருளாகக் கொண்டுவந்திருந்தான். இந்தப் பொருளைக் கண்டு இராமன் புன்முறுவல் கொண்டான். தவ வேடம் பூண்டு தான் உறையுமிடத்திற்குத் தகாத பொருளையும் அன்பின் மேலீட்டால் குகன் கொண்டுவந்து விட்டான் என்ற எண்ணத்தால் அவன் சிரித்தான்.

இந்தக் காணிக்கைப் பொருள்கள் அன்பின் மிகுதியால் கொண்டு வரப்பட்டவை. ஆகையால் ஏற்றுக் கொள்ளபடத் தக்கவைகளே; ஆகவேஇப்பொருள்களை ஏற்றுக்கொண்டு 'இதுவே உண்டது போலாகும்' என்று கூறினன். அப்பொருள்களைக் குகனிடம் திரும்பத் தந்துவிட்டுக் குதிரைகளுக்குப் புல் முதலானவைகளைக் கொண்டுவருமாறு கேட்டுக் கொண்டான்.

"அரியதா முவப்ப உள்ளத்
தன்பிஞ லமைந்த காதல்
எரிதரக் கொணர்ந்த என்ருல்
அமிழ்தினும் சீர்த்த வன்றே

பரிவினில் தழீஇய எண்ணிற்
பவித்திரம் எம்ம ேனார்க்கும்
உரியன இனிதின் நாமும்
உண்டன வன்றே ?''

என்றான், என்று இசைக்கிறான் கம்பன்.

கண்ணப்பன் என்ற வேடன் காளத்தீயீசனுக்குத் தன் அன்பின் மிகுதியால் ஊனைச் சமைத்து நன்றாக இருக்கிறதா என்று பார்ப்பதற்காக எச்சில் படுத்திக் கொடுத்தான். அவைகளைச் சிவன் அன்புடன் ஏற்றுக்கொண்டான். அது போலவே இராமனும் குகனது உள்ளத்தின் தூய்மையை நன்கு அறிந்தவனாதலால் அவனுடைய பொருளையும் ஏற்றுக் கொண்டான்.

விடிந்தவுடன் கங்கையைக் கடக்கும் நோக்கத்துடன் இராமன் மறுநாள் படகுகளுடன் வரும்படி குகனுக்குக் கட்டளையிட்டான். இராமனிடம் அன்பு பூண்டவனாதலால் குகன் அவர்களுடனேயே அன்று இரவு தங்கினான். இலக்கு வனும் குகனும் காவல் புரிய, இராமனும் சீதையும் துயின்றனர்.

காலையில் சூரியன் உதயமானான். சாதாரணமாக நிகழ்கின்ற இந்நிகழ்ச்சி கம்பன் கவிதா சக்தியால் ஒரு தத்துவத்தையே கூறுகிறது. இறப்பவர்கள் பிறப்பதும், பிறப்பவர்கள் இறப்பதும் உலகில் நடக்கின்ற நிகழ்ச்சிகள் என்று இந்நாட்டுச் சமயங்களெல்லாம் விளங்க எடுத்துக் கூறும். இறப்பேயில்லாத சூரியன் இரவு வந்தவுடன் இறப்பது போல மறைந்து, பகல் வந்தவுடன் பிறப்பது போல உதித்தான்; இது உலகத்தினருக்கு மக்கள் இப்படித் தான் பிறந்து பிறந்து இறக்கின்றனர் என்ற தத்துவத்தைக் கூறுவது போல உள்ளது. இதனை,

'' துறக்கமே முதல வாய
தூயன யாவையேனும்
மறக்கலா நினைய லம்மா
வரம்பில தோற்றம் மாக்கள்

இறக்குமாறு இதுவென்பான போல்
முன்னைநாள் இறந்தான் பின்னுள்
பிறக்குமாறுஇது என்பான் போற்
பிறந்தனன் பிறவா வெய்யோன் ''

என்று கம்பன் பாடுகின்றான்.

பல வகையான செல்வங்கள் நிறைந்துள்ள தன் நாட்டிலே தங்கிவிடுமாறு குகன் இராமனை வேண்டுகிறான். அவன் கூறும் சில உணவுகளைக் கேட்கும் போது நாம் இராமன் உண்ணும் உணவு இதுவல்லவேயென நினைக்கலாம். ஆனால் அவனுடைய அன்பின் பெருக்கை நாம் எவ்வாறு அறிய முடியும்? "தேனும் தினைமாவும் தேவர்களும் விரும்பி உண்ணும் மிக்க சுவையுள்ள மாமிசமும் எம்பால் உள்ளன; உனக்கு அடிமையாயிருக்கக் குகனாகிய யான் சித்தமாக இருக்கும்போது ஏன் கங்கையைக் கடந்து போகவேண்டும்" என்று அவன் வேண்டுகிறான். அதனைக் கம்பன்,

"தேனுள தினையுண்டால்
தேவரும் நுகர்தற்காம்
ஊனுள துணை நாயேம்
உயிருள விளையாடக்
கானுள புனலாடக்
கங்கையும் உளதன்றோ
நானுள தனையும்நீ இனிது
இரு, நட, எம்பால்''

என்று அழகுற இசைக்கின்றான்.

குகனைப் பாராட்டி "உனது அன்பின் ஆழமும், ஆதரத்தின் அளவும் எல்லைகாண முடியாதவை," என இராமன் கூறுகிறான். துன்பப்பட்டவர்களே இன்ப நலன்களை மிக ஆழமாகக் காண முடியுமென்றும், பிரிவு ஏற்படாவிட்டால் அன்பின் சீரிய நலன்களைக் காணமுடியாது என்றும் கூறி அவனிடமிருந்து விடை பெறுகிறான். குகனுடைய அன்பு இராமனுக்கு வியப்பைத் தந்ததால் அவனைத் தன் சகோ

தரனுக்கிக் கொண்டு இதுவரை நான்கு சகோதரர்களாக இருந்த நாம் இன்று ஐவர்களானோம் என இராமன் மகிழ்ந்து கூறுகின்றான். இதனைக் கம்பன்,

> " துன்புள தெனினன்றே
> சுகமுளது அதுவன்றிப்
> பின்புள திடைமன்னும்
> பிரிவுள தென உன்னேல்
> முன்புளம் ஒரு நால்வேம்
> முடிவுள தெனவுன்னேல்
> அன்புள வினி நாம்ஓர்
> ஐவர்கள் உளரானோம் "

என்று எடுத்துக் கூறுகிறான்.

கங்கையைக் கடந்து சென்ற இராமன் வனத்தின் இயற்கை வனப்பைச் சீதையோடு உடனிருந்து கண்டு சிந்தை மகிழ்கின்றான். அங்கே பரத்துவாச முனிவன் இராமனை எதிர்கொண்டு விருந்திட்டு உபசரிக்கிறான். அவனுடைய அன்பு மிகுதியாயிருப்பினும் அங்கே தங்குவது தகாது எனக் கருதி முனிவனிடம் விடைபெற்று இராமன் சித்ரகூடத்தில் தங்கியிருக்கப் புறப்படுகிறான். யமுனை நதியைக் கடந்த பின் அவர்கள் சித்திரகூடத்தை அடைந்தனர்.

சித்திரகூடத்தில் இலக்குவன் ஓர் அழகான பன்ன சாலையை அமைத்து அங்கு வந்திருக்குமாறு சீதையையும் இராமனையும் அழைக்கின்றான். அவர்களும் அங்குச் சென்று அக்குடிசையில் தங்குகின்றனர். இராமனிடமிருந்து மிகுந்த பாராட்டுதலை எதிர்பார்த்திருந்த இலக்குவனுக்குப் பாராட்டுரைகள் கிடைக்கவில்லை. அரசகுமரன் இலக்குவன் இவ்வழகான சாலையை அமைத்ததற்கு இராமன் கொடுத்த பாராட்டுரை " ஏதும் இல்லாதவன் எதையும் செய்யும் சக்தி வாய்ந்தவனாகி விடுகிறான் " என்பதுதான். இலக்குவன் அமைத்ததும் சீதை வனத்திலே கால்கடுக்க நடந்ததும் இராமனுக்கு ஒன்றாகவே பட்டன, இதனைக் கம்பன்,

**மேவு கானம் மிதிலையர் கோன் மகள்**
**பூவின் மெல்லிய பாதமும் போந்தன**
**தாவில் எம்பிகை சாலை சமைத்தன**
**யாவை யாதுமிலார்க்கு இயையாததே**

எனக் கூறுகின்றான்.

இலக்குவன் இராமனே அரசாள வேண்டுமென்ற கருத்துடையவன். ஆனால் இராமனோ காட்டிற்கு வந்து விட்டான் அதனால் இலக்குவனுக்கு வருத்தம் மிகுந்தது. இதனை உணர்ந்த இராமன் இலக்குவனைத் தேற்றுகின்றான். உலக இன்பங்கள் நிலையற்றவை என்றும், அந்தமில்லாத பேரின்பத்தை அடைவதே சாலச் சிறந்தது என்றும் கூறுகிறான்; இவ்வாறு, இராமனும், இலக்குவனும் சீதையும் காட்டிலே இருந்தபோது அயோத்தியில் மன்னன் இறந்தது அவர்கட்குத் தெரியாமலிருந்தது. நிகழ்ந்தது தெரியாமலேயே பரதனும் தன் தாய்மாமன் வீட்டிலிருந்து அயோத்திக்கு வந்து சேருகிறான்.

# 15. ஐயமும் தெளிவும்

பரதன் நாட்டிற்குள் நுழையும்போது நாடு பொலி வற்று இருப்பதைக் கண்டான். இதனைத் தன் தம்பியிடம் கூறினுன். அரண்மனை அடைந்தவன் தசரதன் மாளிகைக் குச் சென்றுன். அங்கே தன் தந்தையைக் காணுது ஐயுறும் போது தன்னைக் கைகேயி அழைப்பதாக ஒரு தோழியின் மூலம் அறிந்தான். அவள் தன் தாய் வீட்டாரைப் பற்றி விசாரித்த பின், அரசன் இறந்த காரணத்தை வளைத்துக் கூருமல், நேரிதாக மிக அழுத்தமாகக் கூறி விடுகிருள். " நான் இரண்டு வரங்களைப் பெற்றிருந்தேன்; ஒன்றினுல் இராமனைக் காட்டிற்கு அனுப்பினேன்; பிறிதொன்றினுல் உன்னை அரசனுக்கினேன்; இராமன் பிரிவைத் தாங்க மாட் டாமல் தசரதன் இறந்து விட்டான்; நீ வருந்தாது அரசாள் வாயாக " என்ற கருத்துப்பட,

> **"வாக்கினுல் வரந்தரக் கொண்டு மைந்தனைப்**
> **போக்கினேன், வனத்திடைப் போக்கிப் பாருனக்கு**
> **ஆக்கினேன், அவன் அது பொறுக்க லாமையால்**
> **நீக்கினுன் தன்உயிர் நேமிவேந் தென்றுள்."**

தன் தாய் செய்தது பெருந்தவறு எனக் கருதிப் பரதன் வெகுண்டான்; கைகேயியைக் கொல்லவும் அவன் நினைத் தான். ஆனுல் இராமனை அன்புடன் பேணிய அவளைக் கொன்றுல், அவன் தன்னை வெறுப்பானேயென அஞ்சி அச் செய்கையை மேற்கொள்ளாது கைவிட்டான்.

இராமன் காட்டிற்குப் போகும்போது தசரதன் அவன் பிரிவைத் தாங்க மாட்டாது இறந்து விடுவானென்று யாரும் எண்ணியிருக்க முடியாது. தன்னுடைய தூண்டுதலால் தான் கைகேயி அரசுரிமையைப் பெற்றுள் என நினைந்தே இராமன் உடனே காட்டிற்குச் சென்றிருக்க வேண்டுமென்று பரதன் நினைத்தான். இந்தத் தவருன கருத்து இராமன் உள்ளத்தில் உண்டாகாதபடி நீக்க வேண்டுமென்ற எண்

ணத்தால், காட்டிற்குச் சென்று, அவனைத் திரும்பவும் கூட்டி வந்து முடி சூட்டித் தனக்கும் தன் தாய்க்கும் வந்த பழியை மாற்ற வேண்டுமென்று துணிந்தான். இக் கருத்தை யாவருக்கும் தெரிவித்துத் தந்தைக்கு ஈமக்கடன் செய்ய முன் வந்தான். ஆனால் வசிட்டன் அவனுடைய தந்தையின் கட்டளையைத் தெரிவித்து அவனைத் தடுத்து விடுகிறான். பின்னர்ச் சத்துருக்கனன் ஈமக் கடனைச் செய்து முடிக்கிறான்.

முதல் நூலாகிய வான்மீகத்தில் பரதன் கேகய நாட்டிலிருந்து வந்தவுடனே "இராமன் முடி சூட்டிக் கொள்ளுவதைக் காணவன்றோ நான் இங்கு வந்தேன். ஆனால் இங்கே ஏன் இந்த விபரீதங்கள் நிகழ்ந்தன. நான் வெளி நாடு சென்று திரும்புங்கால், இராமன் இந்த நாட்டுக்கு அரசனாக முடி சூட்டிக்கொண்டு விளங்குவான் என்று நினைத்துக் கொண்டு அன்றோ நான் அன்று கேகய நாட்டிற்குச் சென்றேன். நீ திரும்பி வரும்போது இராமன் முடி சூட்டிக் கொண்டிருப்பான் என்று நீங்களும் கூறினீர்களே! அவ்வாறு கூறிய நீங்கள் ஏன் அவனைக் காட்டிற்கு அனுப்பி விட்டீர்கள்?" என்று கேட்கிறான். இதனை வான்மீகி,

> **அபிஷேகஸ்யதி ராம்னுராஜா யஞ்நு யக்ஷ்யதே,**
> **இத்யஹம் க்ருத ஸங்கல்ப:**
> **ஹ்ருஷ்டோ, யாத்ராமயாசிஷம்** [1]

*(72-ஆம் சுருக்கம் சுலோகம் 27)*

என்று கூறுவதால் அறியலாம்.

இதைப் படித்தவுடன் நமக்கு ஏன் கைகேயி பரதனை மாமன் வீட்டிற்கு அனுப்பி வைத்தாள் என்ற எண்ணம் தோன்றுகிறது. பரதன் செல்லும்போதே இராமனுக்கு இளவரசு மூடி சூட்டுவதற்குக் கைகேயி முடிவு செய்து விட்டாள் என்பது நாம் காணும் உண்மை. அப்படியிருக்க அவள்

---

1 கைகேயியிடம் பரதன் பின் வருமாறு கூறுகிறான்: நான், இராமன் மணி மகுடம் சூடிக் கொள்ளப் போகிறான் என்ற நம்பிக்கையாலன்றோ தேச யாத்திரை சென்றேன்; தசரதன் இராமனை அரசனாக்குவான் என்றன்றோ நம்பினேன்.

ஏன் தன் முடிவை மாற்றிக் கொண்டாள்? இஃது ஒரு விளங் காத புதிர். இதனையும் பின்னர் ஆராய்வோம். இது நிற்க.

அமைச்சர்களும் படைகளும் புடைசூழப் பரதன் காட்டிற் குச் செல்கிருன். இவர்கள் யாவரும் கங்கைக் கரையை அடையும்போது, குகன் இவர்களைப் பார்க்கிருன், அப் போது சுமந்திரன், குகனைப் பற்றிக் கூறி, அவன் இராமனி டத்தில் பேரன்பு கொண்டவன் என்றும் இராமனுல் உடன் பிறந்தவனுகத் தழுவிக் கொள்ளப் பட்டவன் என்றும் பரதனுக்குத் தெரிவிக்கின்ருன்.

குகன் பரதனுடைய படைகளைக் கண்டு அவன்மேல் ஐயம் கொள்ளுகிருன். இராமனைக் கொல்லவே அவன் வந்திருக்கிருன் என்ற கருத்தினுல், தன் படைகளைப் போருக்கு ஆயத்தமாயிருக்கும்படி பணித்து விட்டுக் குகன் கங்கையின் வட கரைக்குச் சென்ருன்.

இராமாயணத்தில் குகப் படலம் ஒன்றில் தான், பரதன் குண நலங்கள் யாவற்றையும் வடித்துக் கம்பன் கூறுவதைக் காணலாம். பரதனைப் பற்றிய பல புகழுரைகளை நாம் பலரி டமிருந்து கேட்டிருக்கிருேம். ஆனுல் குகப் படலத்தில் பர தனுடைய குண நலங்கள் குகன் என்ற உரை கல்லில் உரைக் கப் படுவதால் ஒரு மாற்றுக்கூடக் குறையவில்லை என்று மக்கள் அறிந்து மகிழுமாறு அமைந்திருக்கின்றன.

பரதன் அரசாள வேண்டிய காலத்தில் அதனை விடுத் துக் காட்டுக்கு வந்து உணர்ச்சியற்ற மரம் போலக் கங்கைக் கரையில் நின்ருன். அந்தக் கங்கை நதி காவிரி நதியைப் போலச் செல்வத்திலும் பொலிவிலும் சிறந்து நின்றது,

> பூவிரி பொலன்கழல் பொருவில் தானையான்
> காவிரி நாடன்ன கழனி நாடொரீஇத்
> தாவர சங்கம மென்னும் தன்மைய
> யாவையும் இரங்கிடக் கங்கை எய்தினுன்

என்று கம்பன் கனிந்து கூறுகின்ருன்.

படைகளைக் கண்டதும் குகன் ஆத்திரப்பட்டான். "எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும் என்ற திருக்குறளின் படி இப்படைகளெல்லாம் எலிக்குச் சமானம் என்றும், தான் பாம்பு என்றும் கூறினான். சிறந்தவனான இராமன் ஆளாமல் பரதன் ஆள்கிறானே என அவன் மனம் விம்மியது. பரதன் வஞ்சனையால் அரசு பெற்றுவிட்டானென்றே எண்ணுகிறான். "என்னுடைய அம்புகள் தீயைக் கக்கிக் கொண்டிருக்கின்றன. இவற்றைச் செலுத்தினால் பரதன் படைக்குள் இவை செல்லாவோ? இவர்கள் ஆற்றைக் கடந்து போவார்களேயானால் நாய்க் குகன் என்று என்னை ஏசாரோ? இவர்கள் இராமனோடு போர் செய்யவே செல்லவேண்டும். எம்முடைய படைக்குப் பரதன் சேனை போதிய இரையாகாது. நீ என் தோழன் என்று அவர் கூறியதை நான் மறக்க முடியுமா? தோழமை என்று அவர் சொல்லிய சொல் ஒரு சொல் அன்றோ? இதை அசட்டை செய்தால் ஏழைமை வேடன் இறந்திலன் என்று என்னைக் காண்பவர் ஏசமாட்டார்களா?" என்றெல்லாம் குகன் வெகுண்டு கூறுகின்றான்.

பரதன் வருவதைக் கண்டதும் குகன் அவன்பேரில் மிகவும் ஐயங்கொண்டான். ஒருவரிடத்தில் மிகுந்த அன்பு ஏற்படும் பொழுது அவருக்கு வேறான பிறரை ஐயுற்று நோக்குவது மக்கள் இயல்பு. இராமனிடத்தில் மிகவும் அன்பு பூண்டுள்ள குகன் பரதனது தூய்மையான உள்ளத்தை அறிந்துகொள்ள முடியவில்லை, அவனை எதிரியாக நினைந்து அவனைப் போரில் முறியடிக்க ஆயத்தமான குகன் பரதனை நேரே கண்குளிரக் கண்டான்; திடுக்கிட்டான். ஐயத்தால் அலைந்த அவன் உள்ளம் அன்பாய் மாறியது.

தான் தவறாக எண்ணியதற்கு மாறாகப் பரதன் அன்புருவாய் இருப்பதைக் குகன் கண்டான். மரவுரியுடனும், தூசி படிந்த உடலுடனும் முகத்திலே கவலை நிறைந்து துயரமே மிகுந்து நிற்கின்ற பரதனைக் கண்டதும் அவனுடைய வில் கையினின்று நழுவி விழும்படி அறிவு கலங்கிச் செயலற்று நின்றான். "பரதனைப் பார்த்தாலோ அவன் இராமனைப் போலிருக்கின்றான்; அவனுடைய தம்பியோ, இலக்குவனைப்

போலிருக்கின்ருன், இருவரும் துன்பத்தில் ஆழ்ந்து பிரா ணுகிய இராமன் சென்ற திசையை நோக்கித் தொழுத வண்ணம் இருக்கின்றனர். ஆகையால் என் மதியீனம் என்னே! இராமனுக்குத் தம்பியாகப் பிறந்தவர்கள் தவறு களைச் செய்வார்கள் என்று எண்ணினேனே, அது ஒரு பெரும் பிழையன்ருே" என வருந்துகின்ருன். இதனைக் கம்பன் இரு பாடல்களில்,

வற்கலையி னுடை யானை மாசடைந்த மெய்யானை
நற்கலையில் மதியென்ன நகையிழந்த முகத்தானைக்
கற்கனியக் களிக்கின்ற துயரானைக் கண்ணுற்ருன்
வில்கை யினின்று இடைவீழ விம்முற்று நின்ருெழிந்தான்.

நம்பியும் என்நாயகனை ஒக்கின்ருன் அயல்நின்ருன்
தம்பியையும் ஒக்கின்ருன் தவவேடம் தலைநின்ருன்
துன்பம் ஒருமுடிவில்லை திசைநோக்கித் தொழுகின்ருன்
எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு என்ருன்"

என்று அழகுற இயம்புகின்ருன்.

இவ்வகையான எண்ணங்கள் மேலிடப் பரதனைக் காணக் குகன் தனியாக ஓர் ஓடத்திலே சென்று மறுகரையை அடைகிருன். பரதனும் குகனது இராம பக்தியை அறிந்து அவனைக் காண முற்பட்டு எழுந்தான். குகனும் தன் படகைச் செலுத்திக்கொண்டு பரதன் நின்ற துறைக்கு நேராக வந்தான். வந்தவன் எதிரே கைகூப்பி வணங்கிய பரதனை வணங்கினுன். குகனை இராமன் தன் தம்பியாகக் கொண்டதனுல் அவனைத் தனக்கு முன் பிறந்த அண்ணன் என்று நினைத்துக் குகனுடைய கால்களிலே பரதன் வீழ்ந் தான். குகன் பரதனை அன்புடன் தழுவிக்கொண்டான். பின்னர், குகன் பரதனை நோக்கி "நீ ஏன் காட்டிற்கு வந் தாய்?" என்று கேட்டான். இதற்குப் பதிலாகப் பரதன் "என் தந்தை முந்தையோர் முறையினின்றும் வழுவிவிட் டான். மூத்தவனே பட்டத்திற்கு உரியவன் என்பதே அரச நீதி. ஆனுல் அதை மறந்து பெரும் பழியை என் தலைமீது

சுமத்திவிட்டான். இதனை மாற்ற இராமனை அயோத்திக்குக் கொண்டுபோக வேண்டுமென்ற அவாவினுல்தான் இங்கு வந்தேன்" என்று கூறினுன்.

பரதனுடைய உள்ளத்தின் உயர்வைக் கண்ட குகன் பரதன் திருவடியில் வீழ்ந்து அவன் பெருமையை எண்ணி எண்ணிப் பெருமகிழ்வு எய்தினுன். தாய்சொல் கொண்டு தந்தை கொடுத்த அரசைத் தீயவை என எண்ணி வெறுத்து ஒதுக்கிவிட்டுக் கவலையுடன் வந்திருக்கும் பரதனைப் பார்த்த பின், இராமனைக் காட்டிலும் ஆயிரமடங்கு மேலானவன் பரதன் என எண்ணினுன். சூரிய குலத்திலே புகழ்பெற்ற மன்னர்கள் பலர் வாழ்ந்திருக்கின்றனர். சிபியைப் போன்ற பல அரிய பெரிய மன்னர்கள் அரசாண்டிருக்கின்றனர். ஆனுல், பரதனது இச்செய்கையைக் கண்டபின் அவர் களுடைய புகழெல்லாம் வெயிலில் ஏற்றிய விளக்குப்போல மறைந்துவிட்டன என்று குகன் எண்ணி வியந்தான்.

இராமனுடைய தம்பியர் நால்வருள் குகனும் பரதனும் தான் மிகச் சிறந்தவர்கள். குகனை இராமன் தன் தம்பியாக ஏற்றுக்கொண்டான். பரதன் இராமனுக்கு ஒன்றுவிட்ட தம்பி; இவ்விருவரும் சந்தித்தபொழுது ஒருவரை ஒருவர் அறியாத நிலையில் குகன் பரதனை ஐயப்பட்டான். ஆனுல் அவனை நேருக்குநேர் சந்தித்த பின் பரதனுடைய குண நலங்களை நன்கு அறியும் வாய்ப்புக் குகனுக்குக் கிடைத்தது. தாய் கொடுத்த அரசு என்று எண்ணியபோதே அவனுக்குப் பரதனிடத்தில் இவ்வளவு பேரன்பு ஏற்பட்டுள்ளது. ஆனுல் பரதனுக்கே அரசுரிமை இயற்கையாகவே அமைந்துவிட்ட தென்பதைப் பின்னர் இராமன் மூலம் அறியும்போது பரதனைப்பற்றிக் குகனது அன்புப் பெருக்கு எப்படியிருக்கும் என்பதை எண்ணுவோமானுல் பரதன் இராமாயணத்திலே ஒரு சிறந்த கதாபாத்திரம் என்பதை அறியலாம். இக் கருத்தைக் கம்பன் மிகவும் அழகாகவும் தெளிவாகவும் கூறிவிடுகிருன்.

குகன் செலுத்திய படகில், பரதனும் அவன் தாய்மார் களும் ஆற்றைக் கடக்கின்றனர். வழியில் கோசலை பரதனை

நோக்கி, "இவன் யார்?" எனக் கேட்கிறாள். அதற்கு விடையாக "இவன் இராமனுக்குத் தம்பி; இலக்குவனுக்கும் எனக்கும் மூத்தவன்; குகனென்பது இவன் பெயர்" எனப் பரதன் பகர்ந்தான். அது கேட்டதும் குகன் கோசலையை வணங்கித் தொழுது "இவள் யார்" எனக் கேட்டான்.

உலகில் யார் பெரியவர் என்ற கேள்வியைப் பலகாலும் நாம் கேட்டிருக்கிறோம். இதற்கு விடையாகப் பலர் பல விதமாகக் கூறலாம். ஆனால் கம்பன் என்ன கூறுகின்றான் என்பதைப் பாருங்கள். "பெற்ற செல்வத்தைத் துறக்கின்றவர்களே பெரியவர்கள்" என்று கூறுகின்றான். எடுத்துக் காட்டாக ஒன்று கூறலாம். பட்டினத்தடிகள் செல்வராக வாழ்ந்தவர். அவர் ஒரு நாள் செல்வத்தை எல்லாம் விட்டு விட்டுக் காட்டிற்குத் தவம் செய்யச் சென்று விட்டார். இதனை அறிந்த வேந்தன், அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையுடன் அங்கு சென்றான். அடிகள் நிட்டையிலிருந்தார். சிறிது நேரம் சென்ற பின் அவர் கண்விழித்து அரசனை நோக்கி "எங்கு வந்தீர்?" எனக் கேட்டார்.

"அரசர்க்கு ஒப்பான செல்வத்திலே திகழ்ந்திருக்க வேண்டிய நீங்கள் ஏன் துறவு மேற்கொண்டீர்கள்? இதனால் நீங்கள் கண்டதென்ன?" என்று மன்னன் கேட்க, "நீர் நிற்கவும், நான் இருக்கவும் கண்டேன்" எனக் கூறினார். அப்போதுதான், அரசனுக்குத் துறவின் பெருமை தெரிந்தது. "யாம் யார்க்கும் குடி அல்லோம்" என்று இறுமாந்து கூறும் குரலை அங்கேதான் வேந்தன் கேட்டான். பெறுவதற்கு அரிய செல்வத்தைப் பெற்றும், அதனைத் துறவர்களே பெரியவர்கள் என்பதை அவ்வரசன் உணர்ந்தான். இக்கருத்தையே கம்பனும் வலியுறுத்து கின்றான். கோசலை தசரதனுடைய முதல் மனைவி; அவள் மூன்று உலகங்களையும் படைத்த பிரமன் தந்தையாகிய திருமாலையே இராமனாகிய மகனைப் பெற்றாள். ஆனால் பரதன் பிறந்ததால் அரச போகங்களைத் துறக்கும்படி நேர்ந்தது. என்றாலும் கோசலை பெருமைக்குரிய நன்மை

யைப் பெற்று விட்டாள். இங்குக் கம்பன் மிக அழகாக ஓர் உண்மையைக் கூறிவிடுகிறான். இராமனைப் பெற்றதால் சுற்றத்தார் கோசலையைத் தொழுகின்றார்கள்; அந்த இராமன் திருமாலின் கூறு என்பது பற்றித் தேவர்களும் கோசலையைத் தொழுகின்றார்கள்; திருமால் மூன்றுலகும் ஈன்ற பிரமனைப் படைத்தவன். இத் திருமாலை இராமனாகப் பெற்றதால் கோசலை பெற்ற செல்வம் யாரும் பெறமுடியாத பெருஞ் செல்வம். அப்பெருஞ் செல்வம் இராமன் முடி சூடுவதால் விளக்கம் எய்துகிறது. பரதன் வரலாற்றால், இராமன் முடி துறக்கு முகத்தால் கோசலை அரச போகத்தில் துறவு பூண்டாள். அதனால் அவள் பெருமைக்கு உரிமை பெறுகின்றாள். இக்கருத்தை, "சுற்றத்தார் தேவரொடும் தொழநின்ற கோசலை" என்றும். "மூன்றுலகும் ஈன்றானை முன்னீன்றானைப் பெற்றதால் பெருஞ் செல்வம் துறந்த பெரியாள்" என்றும் கம்பன் இன்பம் கனிய எடுத்தோதுகின்றான்.

பின்னர் இராமன், பரதனே பிறப்புரிமையினால் அரசுரிமை பெற்றவன் என்று கூறுவதை அறியாத நிலையிலும், பரதன், "நான் பிறந்ததினாலேயே பெருஞ் செல்வத்தை இழந்து விட்டாள் கோசலை" எனக் கூறுகின்றான். பின்னர்ச் சுமித்திரையை இலக்குவன் தாய் என்று சுட்டிக் காட்டுகிறான்.

குகன் கைகேயியை யார் எனக் கேட்டான். இதற்குப் பதிலளிக்கும் போதுதான் கம்பன் தன் கவிதா சக்தியை எல்லாம் ஒருங்கே கூட்டி மிகவும் நயமாகப் பதிலளிக்கும் படி செய்கிறான். கைகேயி பரதனைப் பெற்ற தாய், இராமனைக் காட்டிற்கு அனுப்பியவள் என்று கூறவேண்டும். பரதனே இதைக் கூறும்போது அவன் தாயைப் பழிக்கும் நிலைக்கு வந்துவிடுகிறான். "துன்பங்களை எல்லாம் உண்டாக்கியவளும், நிந்தனைக்கு ஆளானவளும் இவள்தான். இவள் வயிற்றிலேதான் நான் பிறந்தேன். முகத்திலே ஒரு துன்பக் குறிகளுமில்லாதவளான இவளை நீ யார் என்று இன்னும் அறிந்து கொள்ளவில்லையா? இவள் தான் என் தாய்!" என்று பரதன் கூறினான்.

கம்பன் இங்கு ஓர் அழகான வார்த்தையைப் பெய்திருப்பதைக் காணலாம். “ இடர் இலா முகத்தாளைக் காண்கிலேயேல் இந் நின்றாள் என்னை ஈன்றாள் ” என்பது பரதன் கைகேயியைக் குறித்துக் கூறுவது. இக்கூற்றில் “ இடரிலா முகம் ” என்றால் ஒரு துன்பமுமே காணாத முகம் எனப் பொருள்படும். வள்ளுவப் பெருந்தகை ஒருவருடைய கடுமையைக் காணவேண்டுமானால் அவருடைய முகத்தைப் பார் எனக் கூறுகின்றார்.

> **“ அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
> **கடுத்தது காட்டும் முகம் ”.**

என்பது திருக்குறள்.

ஆனால் கைகேயி, தீயவை யாவினும் தீயவளானால் அவளுடைய முகம் கடுகடுத்தல்லவா இருந்திருக்க வேண்டும். நாகம் போலும் கொடியவரின் மனக் கொடுமையாகிய நஞ்சின் இருப்பு முகத்திலே காணப்படுமே ! கைகேயி அத்தகையவளாயின், அவளுடைய கொடுமை அவள் முகத்திலே விளங்கவேண்டுமே ? அனால் அவள் முகத்தில் கொடுமைக் குறிப்புச் சிறிதும் தோன்றவேயில்லை. பயனில் பற்றின்றிச் செய்த ஒரு காரியவாதியாகையால் அவளுடைய முகத்திலே தீய எண்ணத்தின் வாடை வீசவில்லை. என் ஆருயிர்க் கணவனாகிய தசரதனை “வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர் துறந்த வள்ளலாகச் செய்து விட்டேன்” என்ற கடமை உணர்ச்சியின் வெற்றியிலே இருந்தாள்; ஆதலால் அவள் துக்கப்படவில்லை. உலக இன்பங்களிலே பற்றில்லாத மன நிலையையுடைய ஒரு பெண்ணைத் தான் கம்பன் கைகேயியின் மூலமாகக் காட்டுகின்றான்.

கைகேயியைப் போலப் பழியை ஏற்றுக்கொண்டு பிறரை வாழ வைக்கும் பெரியோர் பலர் வாழ்ந்ததால் தான் இவ்வுலகம் வாழ்கின்றதென்றால் அது மிகையாகாது. தனக்கென வாழாது பிறருக்கென வாழும் இத்தகையவளை இராமன் “ தாய் ” என அன்புடன் போற்றியதில் வியப்புண்டோ ?

# 16. சித்திர கூடம்

பரதன் முதலியோர் கங்கையைக் கடந்து பரத்துவாசர் இருந்த தவச்சாலையை அடைந்தனர். முனிவரும் அவர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்றார். முடிசூடி அரசுபுரிய வேண்டிய பரதன் மரவுரி தரித்து வந்ததைக் கண்ட அம்முனிவர் திடுக்கிட்டு அதன் காரணத்தை அறிய விரும்பினார். பரதனும் தன் மனக் கருத்தை உறுதியாகக் கூறியவுடன் அவரும் மற்ற முனிவர்களும் பேருவகை எய்தினர். இராமனுக்கு முடிசூட்டுவதற்கே பரதன் வனம் வந்திருக்கின்றானென்று அறிந்ததும் அம் முனிவரின் உடலம் உள்ளும் புறமும் குளிர்ந்தது.

பரத்துவாச முனிவர் தம் தவவலிமையினால் பலவகை உபசாரங்களுடன் தேவலோகத்திலும் கிடைக்காத அரிய விருந்தைப் பரதனுக்குச் செய்தார், ஆயினும் அவன் காய் கிழங்குகளையே உண்டு தரையிலே துயின்றான். அவனுடைய படைவீரர்களும், பிறரும், அவ்விருந்தினைச் சுவைத்து உண்டு மங்கையர் அடிவருட மனமகிழ்ந்து தூங்கினர் எனக் கம்பன் கூறுகின்றான்.

அம்முனிவர் செய்த விருந்தைப் படித்துப் பார்ப்பவர் இன்று அமெரிக்க நாட்டிலும் இத்தகைய விருந்து கிடைக்குமாவென ஐயுறுவர். கவியின் குறிக்கோள் அந் நாட்டின் அந்நாளைய நிலைமையை நன்கு சித்திரிக்க வேண்டு மென்பதுதான். அந்நாளில் தவசிகளின் பெருமை மிகவும் உயர்ந்து இருந்தது. இன்று எவ்வாறு எண்ணியதை எண்ணியாங்கு விஞ்ஞானத்தின் மூலம் நாம் செய்து கொள்ள முடிகிறதோ அதுபோலவே அக்காலத்தில் தம் தவவன்மையால் பல அரிய செயல்களைச் செய்ய முடிந்தது. விசுவாமித்திரர் வேந்தராயிருந்தபோது, ஒருகால் வசிட்டரின் ஆசிரமத்திற்குச் சென்றார். அவருக்கு ஒரு பெரிய விருந்து நடந்தது. அவ்விருந்தின் பெருமையை வியந்த

அவர் அதற்குரிய காரணத்தை அறிய மிகவும் ஆவல் கொண்டார். காமதேனுதான் இதற்குக் காரணம் என்று கண்டவுடன், அதனைப்பெற அவர் முனைந்தார். ஆனால் வசிட்டரது தவவலிமையின் முன் விசுவாமித்திரர் படை வலிமை நிற்க முடியவில்லை. தவத்தின் பெருமையை அறிந்த அவர் அரச வாழ்வை விடுத்துத் தவசியானார். முனிவர்கள் தமது தவவலிமையால் வசதியில்லாத பெருங்காட்டிலும், மன்னவர்களாலும் முடியாத விருந்தைச் செய்ய முடியும் என்பதை நாம் தெளியவே பரத்துவாசரின் விருந்தைக் கம்பன் மிகவும் விரிவாகக் கூறுகிறான். இராமன் காலத்தில் நாட்டிலும் காட்டிலும் செல்வவளம் மிகுந்திருந்தது என்பதைக் கூறுவது கம்பன் நோக்கமேயன்றிப் பிறிதில்லை.

பரத்துவாசரின் விருந்திற்குப் பின் பரதன் முதலியோர் பாலைவனங்களைக் கடந்து சித்திரகூட மலையை அடைகின்றனர். இலக்குவன் பரதனுடைய சேனையின் வருகையைக் காண்கிறான். கைகேயி நம்மை நாட்டை விட்டு ஓட்டினளாக, காட்டினின்றும் நம்மை ஓட்டப் பரதன் வந்து விட்டான்போலும் என்ற ஐயம் அவனுக்கு எழுகிறது. மலையுச்சியிலே யிருந்து இலக்குவன் பார்த்தானுகையால், அவனுக்குச் சேனைகளின் கூட்டமும், அவைகள் எழுப்பிய தூசியும்தான் முதலில் தெரிந்தன. பரதனைப் போரிலே வெல்லவேண்டுமென்று நினைத்து இராமனை அடைந்தான்: மனத்தில் மிகுந்து எழுந்த கோபத்தால், வீரமொழிகளைப் பேசிய இலக்குவனை இராமன் சமாதானப்படுத்தி "இலக்குவனே, பதினான்கு உலகங்களையும் விற்படையேந்திப் போர்செய்து வெல்ல நீ முடிவு செய்துவிட்டால், அதனைத் தடுத்து நிறுத்துவார் இங்கு யாருமில்லை. ஆனால் நான் கூறுவதைச் சிறிது கேட்பாயாக" என்ற கருத்துத் தோன்ற,

> "இலக்குவ உலகமோ ரேழு மேழு நீ
> கலக்குவை யென்பது கருதி னலது
> விலக்குவ தரிதுஅது விளம்பல் வேண்டுமோ
> புலக்குரித் தொரு பொருள் புகலக் கேட்டியால்"

என்றான்.

"சூரிய குலத்திலே பிறந்தவர்கள் யாரும் தருமத்திற்கு மாறான செய்கைகளைச் செய்யமாட்டார்கள்; அன்பின் பெருக்கால்தான் பரதன் என்னைக் காணக் காட்டிற்கு வந்துள்ளான். அவன் மிகச் சிறந்ததான தருமத்திற்கு உரிய தெய்வத்தின் வடிவம்; நன்மைக் குணமாகிய தேருக்கு அவன் அதனைத் தாங்கும் அச்சாணி போன்றவன் என்று இராமன் இலக்குவனை அழைத்துப் பின்னர் நடப்பதைக் காண்பாயாக" எனக் கூறுகின்றான்.
இதனைக் கம்பன்,

**சேணுயர் தருமத்தின் தேவைச் செம்மையின்**
**ஆணியை அன்னது நினைக்க லாகுமே**
**பூணியல் மொய்ம்பினாய் போந்தது ஈண்டு எனைக்**
**காணிய நீ யிது பின்னும் காண்டியால்**

எனக் கூறுகின்றான்.

இராமனும் பரதனும் நேருக்கு நேர் சந்திக்கின்றனர். இராமனை நோக்கித் தொழுத கையும், துவண்ட மேனியும் அழுத கண்ணும் கொண்டு, துன்பமே வடிவாய் வந்த பரதனைக் கண்டவர்கள் யார்தான் வியக்க மாட்டார்கள்? அப்படிப்பட்டவனை இராமன் முழுதும் நோக்கினான். இலக்குவனை நோக்கி, "பரதனது போர்க்கோலத்தைப் பார்" எனக் கூறினான். இலக்குவன் தான் தவறாக நினைத்ததை எண்ணி வருந்திக் கண்ணீர் விட்டுக் கலங்கி நின்றான்.

இராமன் தன் தந்தையான தசரதனது நலம் கேட்கவே பரதன் அவன் இறந்துவிட்டான் என்று கூறுகிறான். அதனைக் கேட்டவுடன் இராமன் வேரற்ற மரம்போல் பாருற்று வீழ்ந்து பரிபுலம்பினான். சீதையும், இலக்குவனும் மிகவும் துக்கத்தில் ஆழ்ந்தனர். பின்னர் வசிட்டன் இவர்களை எல்லாம் தேற்றினான், அப்போது பரத்துவாச முனிவரும் அங்கு வந்து சேர்ந்தார். வசிட்டன் தேற்றிய பின் இராமன் தந்தைக்கு நீர்க்கடன்களைச் செய்தான். தசரதனுடைய மூன்று மனைவியரும், கங்கையில் மூழ்கிக் கடனாற்றினர். இவர்களைக் கண்டவுடன் இராமன் கண்ணீர்

சிந்தினன். இவ்வண்ணம் எல்லோரும் துக்கத்தில் ஆழ்ந் திருக்கச் சூரியன் மறைந்தான்.

மறுநாள் பரதனை நோக்கிப் "பரதனே! அரசனே இறந்து விட்டான்; இப்பூமண்டலமோ அவனது ஆணை யால் உனக்குச் சொந்தமாகிவிட்டது; உண்மையாகவே உனக்கு உரிமையான அரசை நீ தாங்காமல் தவவேடத்தை விரும்பிப் பூண்டது என்ன காரணம்?" என்றான். இக் கேள்வி பரதனை ஓர் உலுக்கு உலுக்கி விட்டது. தன் னுடைய சகோதர வாஞ்சையிலே ஐயங்கொண்டுதான் இராமன் இவ்வாறு வினவுகின்றானே எனப் பரதன் நினைந்து வருந்தினன். சூழ்நிலையை எண்ணி ஒருவாறு தேறினன். இராமனும் சீதையும் கண்மூடி இனிது துயிலவும், இலக்கு வன் இரவின் எல்லையாகிய விடியற்காலை வரையிலும் இமை கொட்டாமல் அவர்கட்குக் காவல் புரிந்து வந்தான் என் பதைக் குகன் வாயிலாக அறிந்தவனாதலால் அவனோடு தன்னை வைத்து ஒப்பிட்டுப் பார்க்கின்றான். தான் மிகவும் சிறியவனே என்ற எண்ணம் பரதன் மனதில் பிறக்கிறது. கங்குல் எல்லை காண்பளவும் கண் இமைக்காமல் தன் அண்ணனைப் பாதுகாத்த இலக்குவன் எங்கே? அன்னை யின் மூலமாக அரச பதவியைப் பெற்ற தான் எங்கே? என்று நினைந்து நினைந்து பரதன் வருந்துகிறான். இவ் வண்ணம் சிந்தனைக் கடலில் திசை அறியாது திகைத்து வருந்திய பரதன், இராமனை நோக்கி, "தரும நெறியில் நிற்பார்கள் நீ யல்லாது பிறரில்லை. தன்னுடைய தாய் மன்னனிடம் வரம் பெற்று அவனைக் கொன்றுவிட்டாள், அவள் மகனான நான் தவவேடம் பூண்டது தவறு எனக் கருதி விட்டாயா? என் அன்னை என் பேரில் சுமத்திய பழி யினின்று நான் எவ்வாறு மீழ்வேன்? இறக்கவும் துணிவு வரவில்லையே? கற்பிலிருந்து விலகிய மகளிரும், பொறுமை யினின்று விலகிய தவ வொழுக்கினரும், கருணையின் வழி யிலிருந்து விலகிய தருமவான்களும் சிறந்தவராகமாட்டார். அது போலவே முறைமையினின்று விலகிய அரசும் சிறக் காது. ஆகையால் எனக்காகத் தந்த அரச செல்வத்தால் நீ

பிரியவும் அது தாங்காது அரசன் மாளவும் பழி என்னைச் சாரவும் இவ்வரசை ஆள நான் ஒருகாலும் சம்மதியேன்" என்று கூறினான். பரதன் இராமாயண மக்களுள்ளே ஒரு சிறந்த குணக்குன்று. புகழுக்காக உயிரைக் கொடுக்கவும், பழி எனின் உலகமே வரினும் அதை மறுக்கவும் துணிந்த தமிழ்நெஞ்ச முடையவன். அஞ்சுவதை அஞ்சுகின்ற அறிஞனாதலால், அரசை ஏற்க மறுத்துவிடுகிறான். தனக்கு அரசுரிமையைக் கொடுப்பதற்காகப் பரதன் வருகிறானென் பதை உய்த்துணர்ந்தே இலக்குவனிடத்தில் முன்பே இராமன் கூறியிருப்பதை நாம் அறிவோம். இலக்குவனுக்கு அரசுரிமை வேண்டுமென்றாலும் பரதன் கொடுத்துவிடுவான் என்பதையும் இராமன் நன்கறிந்தவன்; எனினும் பரதனே இவ்வார்த்தைகளைக் கூறியது, அவன், தான் அரசுரிமை பெற்றது அறத்திற்கு மாறானதென்ற உறுதியான எண்ணம் கொண்டுள்ளான் என்பதைத் தெள்ளத் தெளியக் காட்டு கிறது. பரதன் கொண்ட முடிவு தவறு என இராமன் கருதினான். திருமால், காக்கும் தொழிலைச் செய்பவன்; அந்தக் காவற்றொழிலை முன் நின்று இப் பூமியிலே நடத்து பவர்கள் அரசர்கள். ஆகையால்தான் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்" என்று பண்டையோர் கூறினர். உலகங்களை முறை செய்து காப்பாற்றுவதனாலே இறையெனப் பெயர் பெற்ற அரசன் ஏவலில்தான் உலகிலே மக்கள் வாழ்வாங்கு வாழ்கின்றனர் என்று கருதினர் முன்னோர். இது போலவே அன்னையும் தந்தையும் கண்கண்ட தெய்வங்கள். தசரதனோ மன்னன் மட்டுமல்லாமல் இராமன் முதலியவர்கட்குத் தந்தையு மாவான். தந்தை ஏவல் வழி நிற்பதே தருமம் என்ற கருத் திலே இராமன் வனம் புகுந்தான். ஆனால், பரதனோ அவர் கள் சொல்லை மீறி இராமனை நாட்டிற்குத் திரும்பி வருமாறு அழைக்கிறான். இராமன் நாடு சென்றால் மன்னனுடைய ஏவலையும் தந்தையின் கட்டளையையும் மீறியவனாவான். ஆகையால் இராமன் தன் கருத்தைத் தெளிவாகக் கூறத் தொடங்கி, "தாய் தந்தையர்களுக்கு நல்ல புகழைத் தேடித் தருவது தான் மக்களுடைய கடமை. அவர்களுக்குப் பழி

ஏற்படாவண்ணம் பாதுகாக்க வேண்டும். தாய்தந்தையர் களின் கட்டளையை மறுத்து, நீ அரசை வேண்டாமென்பது பெருங்குற்றமாகும். என் தாய் தந்தையர்களை இவ்வுலகத்திலே பொய்யர்களாக்கிச் செல்வம் பெருகியுள்ள அயோத்தி நாட்டை நான் அரசு புரிந்தால் என்னைப் பிறர் எள்ளி நகையார்களோ? அது தருமமாகுமா? சிறிது சிந்தனைசெய்,'' என்று கூறினன். பரதனுக்கு இராமன் கூறியது தெளிவு தரவில்லை. இராமன் இதனை விளக்கமாகக்கூறத் தொடங்கித், "தசரத ராசகுமாரனே, நீ உன் தாயைத் தீயவளென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்; அது தவறு. அவளுக்கே உரியதான அரசைப்பெற நான் நினைத்தது என் குற்றம். இவ்வரசு எப்படி அவளுக்கு உரிமையாகிவிட்டது என்பதைக் கூறுகிறேன்; சிறிது அமைதியாகக் கேள்'' என்றான்.

இராமனுக்கு முறையாக வந்த அரசுரிமை தனக்கு எவ்வாறு உரிமையாகுமென்று வியப்புற்று, மெய்ம்மறந்து நிற்கும் பரதனை நோக்கி, "உடன் பிறந்தவனே! நம் தந்தை புத்திரப்பேறு இல்லாது பலகாலம் வருந்தினர்; கல்லாக, மரமாக, விலங்கினங்களாக அலைந்து திரியும் உயிரினங்கள் பெறுவதற்கு அரிய மக்கட் பிறவியைப் பெறத் துடித்துக் கொண்டிருக்கின்றனவே; அவைகளை மக்கள் ஆக்கத் தொழில் புரியும் நல்லரசு தன்னால் இயலாமல் போய் விடுமோ? சுயநல வாழ்வின்றிப் பிறருக்காக வாழும் பெரு வாழ்விற்கு அடிப்படையான மக்கட்பேறு இல்லாது போகுமோ? என அவர் வருந்தினர். அப்பொழுது உன் தாய், அழகிலும், குணத்திலும் சிறந்தவள் என்பதைக் கேள்வியுற்று அவளை மணக்க விரும்பினர். ஆனல் கேகயன், தன்மகள் வயிற்றிற் பிறக்கும் மகனுக்கு அரசுரிமை அமைந்தாலன்றி உடன்படேன் என மறுத்து விட்டான். வேறு பிள்ளைகள் இல்லாத அவன், அந்நிலையில் அவள் மூலமாகவாவது ஒரு மகனைப் பெறமாட்டோமா என்ற எண்ணத்தினல் கேகயன் விருப்பத்திற்கு இணங்கி, அயோத்தி அரசைக் "கன்யா சுல்கமாகக்'' கைகேயிக்கே வழங்கி விட்டான். அன்றுமுதல் அயோத்தி அரசு கைகேயியினுடைய

சொத்தாகி விட்டது. நீ பிறந்தது முதல் அது உனக்கே உரியதாகிவிட்டது. ஆகையால் அரசுரிமை உனதுதான். உன்னுடைய அரசை நான் இன்று ஏற்பேனுயின் என்னுடைய தாய் தந்தையர்கள் பொய்யர்களாகி நரகத்தில் வருந்துவர்" என்று கூறினுன்.

கம்பன்து இராமாயணம் இவ்வுண்மையை வெளிப் படக் கூறவில்லையாயினும் மறைமுகமாக நம்மைத் தெரிந்து கொள்ளும்படி செய்து விடுகிறது. குறிப்பாகக் கூறப்படும் இவ்வுண்மையை வான்மீகத்தை அறியாதவர்கள் தெரிந்து கொள்ளமுடியாது. குறிப்பால் அக்கவிகள்,

**இம்மை பொய்யுரைத் திவறி யெந்தையார்**
**அம்மை வெம்மைசேர் நரக மாளயான்**
**கொம்மை நன்னிதிக் குவையின் வைகிவாழ்**
**செம்மை சேர்நிலத் தரசு செய்வதோ**

**வரனி னுந்தைசொன் மரபி னுலுடைத்**
**தரணி நின்ன தென்று இயைந்த தன்மையால்**
**உரனின் நீபிறந் துரிமை யாதலால்**
**அரசு நின்னதே ஆள்க என்னவே**

என வருவது காணலாம்.

வான்மீகத்தில் கூறப்படும் இவ்வுண்மையைப் பாசகவி என்பார் தமது பிரதிமா நாடகத்திலே மிகவும் அழகாகக் கூறுகின்ருர். இராமன் தனக்கு அரசுரிமை இல்லை என்பதைக் கூறிப் பின்னர்க் கைகேயியை அரசு கவர்ந்தவள் என்று கூறுபவர்களைப் பார்த்துக் "கைகேயிக்கே உரிமை யான அரசை அவள் கேட்டுப் பெற்ருள் என்ருல் குற்ற மாகுமா? ஆனுல் நமக்கு இல்லாத அரசுரிமையைப் பெற வேண்டுமென்று நினைக்கின்ற நாமே குற்றமுடையவரா வோம்" என்று கூறுகின்ருன்.

வான்மீகத்திலும், பாசகவி எழுதிய நாடகத்திலும், பிற வடமொழி நூல்களிலும் கூறப்பட்ட இவ்வுண்மையைக் கம்பன் மறைத்து விட்டான். அதனுல் தமிழகத்தில் இராமனது பெருமை உயர்ந்துவிட்ட போதிலும் நாட்டில் பல சிக்கல்கள் எழுந்துள்ளன. இச்சிக்கல்கள் என்ன என்பதைப் பின்னர்க் கூறுவோம்.

பரதன் தனக்கே அரசுரிமை ஏற்பட்டு விட்டது என்பதை அறிந்த பின்னும் தன்னுடைய முடிவை மாற்றிக் கொள்ள மறுத்து விடுகிறான். இராமனை அரசனாக்குவது என்று அவன் நினைத்து விட்டானாகையால் எவ்வாறாயினும் அதைச் செய்தே தீருவது என்று உறுதிகொண்டான். யாருக்கும் தம்முடைய பொருளைப் பிறருக்குக் கொடுக்க உரிமை உண்டு. பரதன் இராமனை நோக்கி "உனக்கு ஒப்பான ஒருவனை மூன்று உலகங்களிலும் யாரும் காண முடியாது. அப்படிப்பட்ட நீ பிறந்த நாடு உன்னதாகக் கொள்ளலாமல் எனதாக்கி விட்டாய். ஆனாலும் நான் உனக்குத் தருகிறேன். அயோத்தி வந்து மகுடம் புனைந்து கொள்" என்று கூறினான். இதனைக் கம்பன்,

> **முன்னர் வந்து உதித்து உலக மூன்றினும்**
> **நின்னை ஒப்பில்லா நீ பிறந்த பார்**
> **என்ன தாகில் யான் இன்று தந்தனன்**
> **மன்ன போந்து மகுடம் சூடு**

எனக் கூறுகின்றான்.

இராமன் தன் தந்தையின் வாக்கைக் காப்பாற்றக் கடமைப்பட்டவன். அதனால் அவன் அரசுரிமையைப் பெற்றுக்கொள்ள இசைந்தான் எனினும் காட்டிலிருந்துவர முடியாதவாறு தந்தையின் ஆணை அவனைக் கட்டுப் படுத்தியது; தந்தையோ உயிருடனில்லை. மற்று, கைகேயியினிடத்தில் விடைபெற்று வரும்போது அவன் "என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ" என்று கூறியது உண்மையாக நடந்து விட்டது. ஆகவே, தந்தையின் ஆணையைத் தடுக்க முடியாமல் அவன் அரசை ஏற்றுக் கொண்டு பதினான்கு ஆண்டுகள் தனக்காகப் பரதனையே ஆளுமாறு ஆணையிட்டான். இதனைக் கம்பன்,

> **எந்தை யேவவாண் டேழொ டேழனு**
> **வந்த காலம்நான் வனத்துள் வைக நீ**
> **தந்த பாரகம் தன்னை மெய்ம்மையால்**
> **அந்த நாளெலாம் ஆள் என் ஆணையால்**

என்று கூறினான்.

இராமன்பாலுள்ள ஆராத காதலால் பரதன் அவன் ஆணையின் வண்ணம் அரசை ஆளுவதற்குக்கூடத் தயங்கினான். அப்பொழுது சாபாலி என்னும் முனிவன் உலகாயத மதத்தை மேற்கொண்டு, தாய் தந்தையர்கள் இடையில்வந்த பந்தமென்றும், அவர்களைப்பற்றி இராமன் கவலைப்படுவது சரியல்ல என்றும் கூறி, "அரசைக் காப்பாற்றுக" எனக் கூறினான். இந்த வாதத்தை இராமன் ஏற்றுக்கொள்ளவில்லை. நாத்திகம் பேசி நாத்தழும்பேறிய மக்கள் இதைக் கூறலாம். ஆனால் முனிவன் இதனைக் கூறலாமோ எனச் சினந்தான். பின்னர் வசிட்ட முனிவரிடத்திலே தான் நாடு செல்வது தகாது எனவும், தாய் தந்தையர்களுக்கு வாக்குக் கொடுத்து விட்டதால் குருவின் வார்த்தையைக் கேட்க முடியாத நெருக்கடியான நிலையில் தான் இருப்பதாகவும் கூறி வசிட்டனது உரையை வலியிழக்கச் செய்தான். இராமனுடைய இவ்வார்த்தைக்கு எதிராக ஒன்றும் கூற முடியாது வசிட்டன் நிற்க, விண்ணிலே தேவர்கள் ஒன்று கூடி ஆலோசித்துப் பரதன் நாடாளாவிட்டால் நாடு கெட்டு விடும்; இராமன் அயோத்தி திரும்பினால் அரக்கர்கள் இனம் அழிவுபடாது என்ற கருத்தினால் "இராமனே நீ பதினான்கு ஆண்டு காட்டிலே வாழ்வாயாக; பரதனே நாடாளட்டும்" என்று கூறினர். இராமனும் தேவ வாக்கியம் தவறக்கூடாது என்று கூறி அரசை மேற்கொள்ளெனப் பரதனை வேண்டினான். "இராமன் என் மீது அருள்புரியும் வரையில் உண்ணாவிரதம் இருப்பேன்" எனப் பரதன் கூற, இராமன் பல புத்திமதிகளைக் கூறி அவனை அரசாளுமாறு பணிக்கின்றான். பின்னர்ப் பல சித்தர்களும் தவசிகளும், பரதனை நோக்கி, "இராமன் மொழிந்தபடியே தந்தையை வாய்மையும் மரபும் காத்தவனுக்குக" எனக் கேட்டுக் கொண்டனர். பரதன் இராமன் திருவடிகளைத் தருமாறு கேட்டதுடன் தான் நந்திக்கிராமத்திலே அத்திருவடிகளுக்கு முடிசூட்டிப் பதினான்கு ஆண்டுகள் அரசு புரிவதாகவும் அக்கால எல்லை முடிந்தபின் இராமன் வராவிட்டால் தீக்குளிப்பதாகவும் கூறினான். இராமனும் அதற்கு உடன்பட்டான்.

பின்னர்ப் பரதன் கண்களில் நீர்மல்க மெய்விதிர் விதிர்க்கப் பாதுகைகளைச் சிரமேற்கொண்டு நந்திக்கிராமம் நோக்கிச் சென்றான். இராமன், சீதையும் இலக்குவனும் உடன் வரத் தென்திசை நோக்கிச் செல்வானாயினன்.

பரதன் திருவடிகளைப் பெற்றானா? திருவடி நின்ற தலத்திலே உள்ள மண்ணைக் கொண்டானா? எனப் பலர் ஐயுறுகின்றனர். பரதனுக்கு வேண்டியது இராமனுடைய ஆணைக்கு ஒரு சான்று. முன்னரே மண் கொண்டு ஆளுகின்ற பரதன் என்று இலக்குவன் கூறியதனால் மண் என்பதே அரசு என்று பொருளாகி விடுகிறது. ஆகவே "செம்மையின் திருவடித் தலம் தந்தீகென" என்றது இருவினைப் பயனையும் தீர்க்கவல்ல அவன் பாதத்திலுள்ள மண் என்று கொண்டு அதனைத் தந்தனன் என்று கூறு வாரும் உண்டு. ஆனால் நந்திக் கிராமத்திலே பாதுகைக்கு முடிசூட்டுவிழா நடத்தி இராமனுடைய பிரதிநிதியாகப் பரதன் நாடு காவல் செய்து வந்தான் என்பது வரலாறு.

பரதன் இராமாயண கதாபாத்திரங்களிலேயே சிறந்தவன் என்று முன்பே கூறியிருக்கிறோம். இனிப் பரதனைப் பற்றிக் குறிப்பாக இராமன் பலவிடங்களில் கூறினும், இராமன் காட்டினின்று திரும்பிவரும் வரையில அவனைக் காணப் போவதில்லை. ஷேக்ஸ்பியர் எழுதிய சிறந்த நாடகமான "மன்னன் லியர்" (King Lear) என்ற நாடகத்திலே வரும் கதாபாத்திரமாகிய கார்டிலியாவைப் போலப் பரதனும் இராமாயணத்திலே ஒரு சில கட்டங் களிலே வந்து மிகச் சிலவே பேசுகின்றான். ஆயினும் அஃது அவனுடைய குணநலங்களை எல்லாம் வடித்துச் சுருக்கிக் காட்டும் முறையில் அவன் நடந்து கொண்டுவிட்டான் என நாம் நினைக்குமாறு அமைந்து விடுகிறது. இராமன் பதினான்கு ஆண்டுகளுக்குப் பின் வராவிட்டால் 'புண்ணியம் என்னும் அவனுடைய உயிர்' போய்விடு மெண்பதில் ஐயமில்லை என்ற உணர்வுடன் நாம் இங்கே அவனைவிட்டு இப்பொழுது பிரிகின்றோம்.

# 17. முடிப்புரை

பரதன் திருவடி சூட்டுப் படலத்துடன் அயோத்தியா காண்டம் முடிவடைகிறது. தசரதன் இறந்து விட்டான். இராமன் காடு சென்று விட்டான். பரதனோ நந்திக் கிராமத்தில் துயரமே உருவாக அண்ணனுடைய வரவை எதிர் நோக்கி இருக்கிறான். இராமனுக்கும் சீதைக்கும் பல இன்னல்கள் வர இருக்கின்றன. இவ்வாறு சோக நாடகம் தொடக்கமாகி அயோத்தி நாட்டிலே பல சிக்கல்களை உண்டு பண்ணி மேலும் தொடர இருக்கிறது. இதற்கு யார் காரணம்?

கைகேயிதான் இதற்குக் காரணம் என்று நம் நாட்டில் மக்கள் நம்பியிருக்கின்றனர், கைகேயி நிறையுடையவள்; தசரதனுக்கு இராமன்பால் உண்டான பெருங்காதலினால், அவன், தான் தந்த வாக்கை மறந்து இராமனுக்கு முடி சூட்ட நினைத்தான்; அதனையே கைகேயி தடுத்தாள்; ஆகையால் தசரதன் குறையுடையவன் என்று அறிஞர்கள் கூறுகின்றனர். கதைக்குள் நோக்கினால், தானே குற்றமுடையவன் என்றும், தான் குற்றஞ் செய்ததற்கு விதிதான் காரணம் என்றும் இராமன் கூறுகிறான்.

இராமன் ஏன் இவ்வாறு கூறுகின்றான் என ஆராய்வோம். தசரதன் குற்றமுடையவனா? குற்றம் அற்றவனா? என்பதை நோக்குமுன், அவனுடைய குண நலங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். பெரிய மன்னர் பரம்பரையில் வந்தவனெனினும், அவன் அரசுக் கட்டிலில் ஏறும்போது அவன் நாடு ஒரு நல்ல நாடாகி விட்டது. தன் புத்தி கூர்மையாலும், புய வலியாலும், பல நாடுகளை வென்று "தசரதன்" என்ற சிறப்புப் பெயரை அவன் பெறுகின்றான். பிள்ளை இல்லாத அவன் கைகேயியை மணந்து, அவள் மூலம் மக்கட் பேற்றை அடைய நினைத்தான் என்பது நாம் அறிவது. ஆனால், தசரதன், கேகய நாட்டின் மன்னனான அசுவபதியின்

பலத்தை அறிந்தவனாதலால் அவனுடன் போர் செய்ய நேர்ந் தால் ஒருகால் தான் தோல்வியுற நேருமோவென அஞ்சியே, அவனுடன் நட்புக்கொள்ள நினைத்தான். முன்னைக் காலங் களில் நட்பிற்கு அடிப்படையாக மணவினையே முதலிடம் பெற்றது. உதயணன் கதையிலும் பதுமாவதியை அவன் மணம் புரிவது அரசியல் நட்புக் கொள்வதற்கே என்பதை நாம் அறிகிறோம். அந்நாளிலே மன்னர்கள் பலரும் இம் முறையிலே நட்புரிமை பெற்றார்களாதலால் தசரதன், கைகே யியை மணந்து கேகயனது நட்புரிமையைப் பெற்றது வியப் பன்று. தசரதனிடத்தில் ஒரு பெரிய குற்றம் இருந்தது. அது தான், எதையும் ஆராயாமல் நினைத்தவுடனேயே காரி யத்தைச் செய்கின்ற பதற்ற குணம். இதனால் அவனுக்குப் பல இன்னல்கள் வந்து எய்தின. யானை என்று நினைந்து வேதியர் மகனை அவன் கொன்றதும் இப்பதற்றத்தினால் தான். அது போலவே யார் வந்துகேட்டாலும், கேட்கப் படும் பொருள் இன்னதென்று அறிய முயலாமலே அவை களைத் தருவதாக வாக்களித்து விட்டுப் பின்னர் வருந்துவது அவன் இயல்பாகி விட்டது. இக்குணத்தின் காரணமாகக் கேகயன் அயோத்தி அரசைக் 'கன்யா சுல்கமாக' க்கேட்பான் என்பதை அறியாது, எது கேட்பினும் தந்து கைகேயியை மணம் புரிவேன் என்று கூறிவிட்டான். பின்னர் வாய்மையும் மரபும் காக்கின்ற குலத்திலே சிபிச்சக்கிரவர்த்தியின் வழியின னாக உதித்தவனாதலால் தன்னுடைய வாக்கைக் காப்பாற்றும் பொருட்டுக் கைகேயிக்குத் தன் அரசை நல்கினான். இவற்றை நினையாமல் வாக்குகளைப் பின்னும் இருமுறை தந்து விடு வதை நாம் காண்கிறோம். விசுவாமித்திரன் இராமனைக் கேட்கும் முன்னும், கைகேயி வரம் கேட்கும் போதும் யாது கேட்கப் போகிறார்கள் என்பதை அறியாமலே அவன் வாக் குக் கொடுத்து விட்டுத் திணறுவதை நாம் காண்கிறோம். ஆகையால் கைகேயியின் அழகிலே மயங்கி இராமனைக் காட் டிற்கு அனுப்பிவிட்டான் என்று கூறும் வாதம் சரியாகாது.

கைகேயியின் மணவினை அரசியல் சம்பந்தப்பட்டது என்பதற்கும், கேகயன் மிகவும் வலிமையுடையவன் என்பதற் கும் கம்பனது இராமாயணத்திலே பல சான்றுகள் உள்ளன.

தசரதன் இராமனுக்குப் பட்டம் கட்டுவதென்று முடிவு செய்ததில் குறை ஏற்பட்டதாகவும் தெரியவில்லை. கைகேயிக்கு அரசு கிடைத்துவிட்ட போதிலும், அவள் தனக்காகவோ தன் மகனுக்காகவோ அதன் உரிமையைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பவில்லை. மூத்த மகனே அரசுரிமையைப் பெறத் தகுதியுடையவன் என்று அவளது தூய மனம் கருதியதால், இராமன் பிறந்தவுடனேயே அவனைத் தன் மகனாக்கிக் கொண்டு அவனுக்கே அரசுரிமையைக் கொடுக்கவும் முடிவு செய்து விட்டாள். தனக்கு உரிமையான சொத்தை யாருக்கும் கொடுக்க ஒருவருக்கு உரிமை இருப்பினும், "கன்யா சுல்க"ப்படி பரதனுக்கு நாடு வராவிட்டால் கேகயனுக்கே சென்று விடும்படி அக்கால அரசியல் முறை அமைந்திருந்தது. கைகேயி உடன்பட்டிருந்த போதிலும், கேகய மன்னனது உடன்பாடு ஏறத்தாழப் பன்னிரண்டு ஆண்டுகள் வரை தசரதனுக்குக் கிடைக்கவில்லை. தன் உயிருக்கு உயிரான இராமனுக்கு அரசுரிமை கிடைக்காது போகுமோ என்ற அச்சம் தசரதனுக்கு உண்டாகத் தலைப்பட்டது. அவனுடைய உள்ளத்திலே கள்ளம் புகுந்து விட்டது. கேகயனிடமிருந்து எதிர்ப்பு வருமென அஞ்சி, உடனடியாக இராமனுக்கு முடி சூட்ட அவன் ஏற்பாடு செய்து விட்டான். எந்தச் சிக்கலைத் தீர்க்க அவன் எண்ணினனோ அந்தச் சிக்கல் வேறு ஓர் எதிர் பாராத இடத்திலிருந்து வந்தது. இராமனுடைய முடி சூட்டு விழாவிற்கு அமைச்சர்களிடமிருந்தோ வசிட்டனிடம் இருந்தோ எதிர்ப்பு வருமென்று தசரதன் நினைத்திருக்கலாம். அவர்கள் "கன்யா சுல்கத்தின்" உண்மையை அறிந்திருந்ததினல் அவர்கள் எதிர்ப்புக் கூறியிருக்கலாம். இவ்வுண்மையை அறிந்திருந்த இராமனும், கைகேயியும் எதிர்ப்புக் கூற முன் வரவில்லை. ஆனல் கூனி, முடி சூட்டு விழாவிற்கு எதிர்ப்புக் கூறி, அவளுடைய வாதத்தைக் கைகேயி ஏற்றுக் கொள்ளுமாறு செய்து விட்டாள்.

தசரதனை நோக்கக் கைகேயி மிக்க நிறையுடையவள் என்பதாயின் கூனியின் கைப்பாவையாக மாறித் தசரதன் உயிர் மாயும்படி செய்திருக்க மாட்டாள்; அவள் செய்தது

எவ்வாறு சரியாகும்? என்ற கேள்வி எழலாம். இதற்கு விடை கூறுவது மிகவும் எளிது.

கைகேயி பரதனைக் காட்டிலும் இராமன்பால் பேரன்பு கொண்டிருந்தாள் என்பது உண்மையே. மூத்த மகனே முடி சூட வேண்டுமென்று இராமன் பிறந்த நாள் முதல் எண்ணியிருந்தாள். மிதிலையில் திருமணமான பின்பு பரதன் நாட்டிலிருந்தால் இராமனது புகழ் அயோத்தியிலே பரவுவதற்கு ஓர் இடையூறுருகுமோ என அஞ்சி அவனைத் தன் தாய் வீட்டிற்கு அனுப்பி வைத்தாள்.

தசரதன் பதற்றமுற்றுக் கைகேயியைக் கலந்து ஆலோசிக்காமலே ஒரு முடிவிற்கு வந்து விட்டான். அந்த நாளிலே பதினன்கு ஆண்டுகள் என்பது ஓர் எல்லைக் கோடாக அமைந்துள்ளதோ என நாம் ஐயுறுமாறு இருக்கிறது. இராமன் முடி சூடுவதற்குப் பரதன் வராமலிருப்பதையும், பரதன் பாராள வேண்டுமென்று முடிவு செய்தவுடன் இராமன் பதினன்கு ஆண்டுகள் காடு செல்ல வேண்டுமென்பதையும் நாம் கருதும்போது, பதினன்கு ஆண்டு எல்லையில் ஏதோ ஒரு நிகழ்ச்சியோ சூழ்ச்சியோ கலந்திருப்பது போலத் தெரிகிறது. ஒருகால் பன்னிரண்டு ஆண்டுகள் பொறுத்திருந்த தசரதன் இன்னும் இரண்டு ஆண்டுகள் பொறுத்திருப்பானுல், கைகேயி கேகயனுடைய அனுமதி பெற்று இராமனை ஒரு சிக்கலுக்கும் உள்ளாக்காமல் மணி மகுடம் புனையச் செய்திருப்பாள். ஆனுல் அவ்வாய்ப்பு அவளுக்குக் கிட்டாதபடி விதி சதி செய்து விட்டது போலும்!

அந்நாளிலே எவரும் தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற வேண்டுமென்ற நியதி இருந்தது; அரிச்சந்திரனும் சிபியும் பிறரும் தாம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவதற்காகப் பல இன்னல்களை அடைந்த செய்திகளை வரலாறுகளால் அறிகிருேம். அது போலவே கைகேயியின் வயிற்றுப் பிள்ளைக்கு அரசுரிமை தருகிறேன் என்று வாக்குக் கொடுத்துவிட்டு, பின்பு அதை நிறைவேற்றத் தவறினுல் தசரதன் பொய்யனுகி விடுவான். இந்த உண்மையைக் கைகேயியோ தசரதனே நினைத்துப் பார்க்கவில்லை. தனக்குள்ள உரிமையை

இராமனுக்குத் தருவதில் தடை ஏதும் இருக்க முடியாது என்று கைகேயி கருதினுள். தசரதன் தன் கண்மணி போன்ற இராமனுக்கே அரசுரிமை அமைய வேண்டுமென்று எண்ணியதில் தவறில்லை எனக் கைகேயியும் ஒத்துக் கொண்டதால், அவனும் இராமன்பாலுள்ள அன்பினுல் மற்ற வற்றை மறந்தான்.

கைகேயி, தான் பெற்று வளர்த்த மகன்பாலுள்ள அன்பினுல் அரசுரிமை பெற விருப்புற்றிருந்தாள் என நாம் எண்ணுவோமாணுல், அவள் பரதனைத் தாய் மாமன் வீட்டிற்கு அனுப்ப உடன்பட்டிராள். பன்னிரண்டு ஆண்டுகள் தன் மகனை நினையாத அவள் கூனி கூறிய பின் அவனை அரசனுக்க முடிவு செய்தாள் என்பது பொருந்தாத ஒன்ருகும்.

"கன்யா சுல்கத்"தின்படி பரதன் அரசுரிமை ஏற்க முற்படா விட்டால், அது கேகய நாட்டிற்குச் சென்று விடும்; பரதனே முன் வந்து இராமனுக்குக் கொடுக்கா விட்டால் நாட்டைக் கேகயன் பெறக் கருதக்கூடும். அதைத் தடுக்க முடியாத நிலையில் அக்கால அரசியற் சட்டம் அமைந்திருந் தது. கூனியோ, இராமன் அரசு ஏற்ருல் நாட்டில் சிக்கல் வரும் என்பதைக் குறிப்பாக உணர்த்தி விட்டாள். கைகேயி இராமன் முடி சூட்டு விழாவைத் தடை செய்யாதிருந்தால், கூனி தானே நேரிலோ பிறர் மூலமாகவோ இராமனுடைய முடி சூட்டு விழாவிலே அரசுரிமை யாருக்கு உரியது என்ற கேள்வியை எழுப்பி, அது தீரும் வரையில் அவ்விழாவை நிறுத்தி வைக்கும்படி செய்திருப்பாள். இராமனுக்கு அரசுரிமை இல்லை என்று கூறியபோது இலக்குவன் எவ்வாறு கொதித்து எழுந்தானே, அவ்வாறே பரதன்மேற் பற்றுடையவர்கள் அவனுக்காகப் பரிந்து பேசவும் முற்படுவார்களாணுல், நாடு உட்பகை மலிந்து சிக்குண்டு சின்னபின்னமாக நேரிடும். தசரதனும் வாய்மையையும் மரபையும் காக்கத் தவறிய மன்னன் என்று வையத்திலே எழும் வசைச் சொல்லிற்கு ஆளாகி விடுவான். இதைத் தடுக்கவே, கைகேயி கணவன் உயிர் போகும் என்று தெரிந்த பின்னும் பிறந்த வீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் பெருமை தர வசை என்னும் நஞ்சைத் தான் உண்டு அமைதி என்னும் அமிழ்தத்தை அயோத்தி

நாட்டிற்கு வழங்கினுள். புகழ் என்ருல் உயிரைக் கொடுத்தாவது பெற வேண்டுமென்றும், பழி எனில் உலகங்கள் எல்லாம் பெறினும், அதனைக் கொள்ளக் கூடாது என்றும் நம்முடைய பண்டையோர் கண்டிருந்தனர். அது போலவே கைகேயி பெண்ணேயாயினும், அரசியலிலும், அன்பிலும் ஓர் ஆண்மகனைப் போன்று தக்க சமயத்தில் நாட்டைக் காத்துக் கணவனுக்கு வந்த பெரும் பழியையும் தானே ஏற்றுக் கொண்டு விட்டாள்.

இடரிலா முகத்தாளாகிய கைகேயி போன்ற உத்தமர்களைக் கொண்டு தான் உலகை மதிப்பிட வேண்டும் என்ற கொள்கையினுல்தான் புலவர்களும், "உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே" எனக் கூறினுர்கள். கைகேயி நிறையுடையவள் என்பதில் ஐயமேயில்லை. தசரதன் தன் பதற்ற குணத்தினுல் ஆராயாமல் செய்த ஒரு செய்கை, அவனுடைய உயிரையே குடித்து விட்டது. இராமனே தந்தையை நோக்கி "நன்றே செய்வாய், பிழை செய்வாய், நானே இதற்கு நாயகமே" என்று கூறித் தாய்தந்தையரின் ஏவலின் பேரிலே நின்ருன். ஆகையால் அவன் பேரில் குற்றம் கூறுவதும் பொருந்தாது.

தசரதன் இராமனுக்கு முடி சூட்டுவதே தக்கது என நினைத்தான், கைகேயி அதனை ஒப்புக்கொண்டாள். பரதனும் அதுவே சரியென நினைத்து நாட்டை விட்டு விட்டுச் சென்று விட்டான். வசிட்டரும் அமைச்சரும் உடன்பட்டு விட்டனர். கேகயன், உடன்பாடு தெரிவிக்கா விட்டாலும் எதிர்ப்புக் கூறவில்லை. ஆகையால் இராமனே முடி சூட்டிக் கொள்ளுவதில் யாருக்கும் தடையில்லை; ஆனுல் விதி குறுக்கிட்டு விட்டது. கூனியின் வாயிலாக இதை நன்கு உணர்ந்துதான் இராமன் "யாருடைய பிழையுமில்லை; இது விதியின் பிழை" என்று கூறினுன்.

இராமனுடைய மனம் எப்பொழுதுமே நல்வழியில்தான் செல்லும். அவனுடைய மனம் சிக்கல் வரும் என்று கூறிய போதிலும் தந்தையின் கட்டளையை மீற அஞ்சி உடன்பட்டானுதலால் "என் பிழை" என்று கூறினுன். ஆகையால்

இராமன், தான் காடுசெல்லுவதற்குத் தானே காரணமென்று கூறுகின்றான்.

ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்று நாம் எண்ணி ஆசைகளை அறவே விட்டு விட்டு வாழ வேண்டும் என்பது திருமூலர் கருத்து. ஆசை ஆபத்தில் முடியும் என்பதைக் கூறும் வகையில் அவர், ஈசனோடாயினும் மிகுந்த ஆசையை வைத்துவிட்டால் உலகியலிலே மனிதன் வாழ முடியாது போகலாமென அஞ்சி "ஈசனோடாயினும் ஆசை அறு மின்கள்" என்று அறிவுறுத்தினார். வையத்திலே வாழ் வாங்கு வாழ வேண்டுமானால் அதற்கும் ஓர் எல்லை வேண்டும். இல்லையேல் அரிச்சந்திரனைப் போலவும், மாவலியைப் போலவும் இன்னலுற நேரிடும். பாரியும் கன்னனும்கூட இவ்விதிக்கு விலக்கானவர்கள் அல்லர். இவர்கள் எல்லோரும் புகழுக்காக வாழ்ந்தவர்கள் என்பது உண்மைதான். அவர்களுடைய வள்ளன்மையினால் உயிர் விட்டார்கள் என்பதனால், எல்லையற்ற நல்ல குணமும் ஒரு வகையில் சிறந்தது அன்று எனக் கருதப்படுகிறது. இந்த உண்மையைக் கண்ட வள்ளுவப் பெருந்தகை ஒருவன் ஒரு செல்வனிடத்தில் ஒன்றை இரக்கும் செய்கையில் இரக்கும் அவனுக்கேயன்றி இரக்கப்படும் செல்வனுக்கும் தீங்குஉண்டாதற்கு இடமுண்டு; ஏனெனில் யாசிப்போர் மனம் குளிரும் மட்டும் கொடுப்பது என்பது இயலாத ஒன்று என்ற கருத்துப்படி,

> "இன்னாது இரக்கப் படுதல் இரப்பவர்
> இன்முகம் காணும் அளவு"

என்று கூறுகின்றார்.

கேட்டவர்களுக்கெல்லாம் கொடுக்க வேண்டுமென்ற நல்ல குணம் இருந்தும், கேட்கப்பட்ட பொருளின் மேல் பேரவா வைத்திருந்ததால், தசரதன் இறந்துபட்டான். இங்கே புலவர்கள் ஒரு பெரிய தத்துவத்தை விளக்குகின்றார்கள். ஆசையால் மனிதன் அழிகின்றான் என்பதுதான் அந்தச் சிறந்த தத்துவம். தசரதன் தன் மகன் இராமனையே உயிரெனக் கருதினான். அவன்பால் கொண்ட அன்பினால்

மற்றவர்களிடத்தில் தன் அன்பைச் செலுத்த முடியாத அளவு குறுகிய மனப்பான்மையுடையவனானான். "நான், எனது" என்ற மலங்கள் அவனிடம் குடிகொண்டன. சுய நலம் குறுக்கிட அவனிடம் குடிகொண்டிருந்த மற்ற எல்லாப் பண்புகளும் மழுங்கின. மாட்சியுடன் விளங்க வேண்டிய தசரதன் ஆசையினால் அடியுண்டு வீழ்ச்சியடைந்தான்.

உலகத்திலுள்ள உயிரெல்லாம் குடிகொள்ளத் தக்க உடம்பான அரசன் தன் சுயநலத்தினால் அவ்வுடம்பிலே எப்பொழுது இராமன் என்ற உயிர் மட்டும்தான் வாழலாம் என்று நினைத்தானோ, அப்பொழுதே அவன் வீழ்ந்தான். இப்படி ஏன் வீழ்ந்தான் என்பதற்குப் புலவர் "விதியின் செயல்" என்று கூறுகின்றார்.

இவ்வுலகிலே ஓர் உண்மையைக் காண்கிறோம். நல்லவர்கள் அனைவரும் துன்பப்படுவதும் தீயவர்களில் பெரும்பான்மேயோர் இன்பம் அடைவதும் நாம் நாளும் காண்பது. இது ஏன் என்பதைக் கேட்கும்போதுதான் "விதி" "கடவுள்" என்ற பெயர்கள் தோன்றி ஆறுதல் அளிக்கின்றன. எவ்வாறு வங்கியிலே பெரும் பொருள் இருந்தால், அவை இருக்கும் அளவும் நாம் செலவு செய்ய முடியுமோ, அது போலவே நம் புண்ணியங்கள் இப்பிறவியிலே நமக்குப் பயன் தருகின்றன. முற்பிறவியிலே தேடி வைத்திரா விட்டால் யாரும் நமக்கு நற்பயனைச் செய்ய முடியாது என்ற தத்துவத்தைத் தான் "விதி" நமக்கு எடுத்துக்காட்டுகிறது. எல்லோரும் இராமன் அரசு கட்டில் ஏறவேண்டுமென்று தான் எண்ணினார்கள். ஆனால் அவனால் அக்காரியத்தைச் செய்ய முடியவில்லை. அப்பொழுதுதான் நமக்கும் அப்பாற்பட்ட ஒன்று இருக்கிறதென்ற நினைவு வருகின்றது; அதை "இயற்கை" என்கின்றனர் பகுத்தறிவாளர்கள். "வெளி" யென்கின்றனர் (Ether) விஞ்ஞானிகள். "ஆண்டவன்" என்கின்றனர் சமய வாதிகள். எதுவாயினும் மக்களுக்கு அப்பாற்பட்டதொன்று உள்ளது என்ற உண்மையைத் தான் நாம் அறிகிறோம்.

மக்கள் தங்களுக்குப் பிடித்தமான சிலரிடத்திலே மட்டும் தங்கள் அன்பைச் செலுத்துவார்களே யானால் துன்பமே

வரும். ஆசையை விட்டுவிடுங்கள் என்று கூறுவது கீழ் நாட்டுத் தத்துவமாத்திரமன்று, மேல்நாட்டுத் தத்துவமும் கூட, தாமஸ் உல்சிலி என்பான் தன் அரசனான எட்டாம் ஹென்றியிடத்தில் மிகவும் அன்பு கொண்டிருந்தான். ஆனால் சில அரசியல் சிக்கலினால், அரசன் அவனைத் தண்டித்து மனம் உடைந்து சாகுமாறு செய்துவிட்டான். அப்பொழுது அவன் “ஆண்டவனது ஆராதனைப்பணிக்கே உரியவனான நான் நிலையில்லாச் செல்வத்தை வேண்டி அரசன்மாட்டுக் கொண்ட கழிபேரன்பினால் மனம் உடைந்து சாகிறேன். இந்த ஆசையை நான் ஆண்டவன்பாற் செலுத்தி இருப்பேனானால், இவ்வாறு உயிர்விட நேருமோ?” என வருந்தினான். ஆசாபாசங்களில் மனம் உலவாமல், உலகியல்களில் நம் கைகளையும், மனத்தையும், இறைபணியில் வைத்துப் பற்றின்றிக் கடமைகளைச் செய்பவன்தான் வாழ்வாங்கு வாழும் நெறியுடையவனாவான்; ஆனால் தசரதன் இத்தத்துவத்தை அறியாமல், தான் இராமன்பால் கொண்ட பேரன்பினால், கொடுத்த வாக்கை மறந்து, அதனை எடுத்துக் காட்டிய கைகேயியின் பேரில் வசைமாரி பொழிந்து இறந்தான் இவ்வகையில் அவல நாடகத்தின் தலைவனாக இருக்க எல்லா வகையிலும் தசரதன் உரியவனாகின்றான்.

மிகச் சிறந்தவர்களும் ஒரு சிறு குற்றம் காரணமாக இழிந்த நிலையை அடைவதைக் கண்டு மனம் வெம்பி அவர்கள்பால் நம் முன்னோர் கழிவிரக்கம் கொண்டனர். காலமும் சூழ்நிலையும் சதி செய்யும்போது நல்லவராகவோ, கெட்டவராகவோ ஒவ்வொருவரும் மாறி விடுகின்றனர். எவ்வாறு ஓடம் தண்ணீர் ஓடும் திக்கை நோக்கிச் செல்லுகின்றதோ அவ்வாறே மனிதப் பிறவிகளும் விதியின் வழியே செல்லுகின்றன. ஆகையால் பெரியவர்களாகக் காட்சி தருபவர்களை மிகப் புகழ்தலோ சிறியவர்களை இகழ்தலோ தகாது என்கின்றனர் தமிழ்ச் சான்றோர். அது போலவே விதியின் வழியிலே தசரதன், கைகேயி, இராமன் மூவரும் சென்றனர். ஆகையால் அவர்கள்பால் நாம் இரக்கம் கொள்வதுதான் முறையே அன்றிப் பழித்தல் நன்றன்று! வாழ்க விதி; வீழ்க அவன் சதி.

# நாரணன் விளையாட்டு

## (இரண்டாம் பாகம்)

## 18. ஒரு கண்ணோட்டம்

அயோத்தியா காண்ட முடிவில் இராமன் நாடிழந்து காடு சென்றதைக் கண்டோம். இராமனை அவதார புருடனாகக் கருதிய கம்பர் அரக்கரினத்தை அழிப்பதற்கே இராமன் காடு சென்றான் என்று கூறுகின்றார். இக்கருத்தையே அடிப்படையாகக் கொண்டு ஆரணிய காண்டத்தின் தொடக்கத்திலே, இராமன் பரம்பொருளின் ஒரு கூறு என்றும், மக்கள் அறிவிற்கும் அவர்களுட் சிறந்த மாமுனிவர் கண்ட வேத முடிவிற்கும் அகப்படாது அப்பாற்பட்டவனென்றும் கூறுகின்றார். ஆனால், வான்மீகியோ இராமனைச் சிறந்த ஒரு மனிதனாகவே கருதுகின்றார். உள்ளத்திலே பொய்யாது ஒழுகி, வாழ்வாங்கு வாழ்கின்ற மனிதர்கள் தெய்வமாவார்கள் என்பது பெரியோர்கள் கருத்து. இதனை வள்ளுவப் பெருந்தகை,

> **"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்**
> **தெய்வத்துள் வைக்கப் படும்"**

என்று மிகவும் அழகாகக் கூறுகின்றார்.

இராமன் மனிதருள் உயர்ந்தவன் என்ற கருத்தே சரியானதெனக் கொள்ளவேண்டுமென்று காலஞ்சென்ற கனம். வி. சு. சீனிவாச சாஸ்திரியவர்களும் கருதியுள்ளனர். தொடக்கத்திலே, எல்லாக் குணங்களும் அழகும் படைத்த ஒருவரை உலகில் காணமுடியாது என்று நாரதர் கூறுகின்றார் ; அதனால் இராமனை மனிதனாகவே கருத வேண்டும். ஆகவே கனம். சாஸ்திரி அவர்கள் கொண்ட கருத்தின்படி இராமாயாணத்தைப் படிப்போமானால் பல சிக்கல்கள் விடுபட்டொழியும்,

செயற்கரிய செய்கைகளைச் செய்து மக்களின் உள்ளத்திலே நீங்காத இடத்தைப் பெற்ற இராமனை அவன் காலத்திலே சிலர் அவதாரமோ என மயங்கியுள்ளனர். இக் கருத்துத் தவறென்றும், தான் மனிதனே யென்றும் இராமனே கூறியிருக்கிறான். ஆகையால் ஆரணிய காண்டத்தில் இராமன் குணநலங்களை நாம் காணும்போது அவனை மனிதனாகக் கருதினால்தான், நாமும் அவனைப் போல உயரமுடியும் என்ற எண்ணம் நம்மிடையே பிறக்கும்.

ஆரணிய காண்டம், இராமனுடைய வாழ்க்கையில் ஒரு பதின்மூன்று ஆண்டுகளில் நடந்த நிமழ்ச்சிகளைக் கூறுகிறது. பதின்மூன்றும் ஆண்டின் முடிவிலே, அவன் தன் மனைவி சீதையை இழக்கும்படி நேரிடுகிறது. தன்னுடைய முப்பதாவது ஆண்டிலே நாட்டைத் துறந்த இராமன் நாற்பத்து மூன்றாவது ஆண்டிலே மனைவியையும் இழக்கின்றான்.

காட்டிற்கு வந்தபின் பதினான்கு ஆண்டுகள் அமைதியாக வாழ்ந்துவிட்டு அயோத்திக்கு மீண்டு செல்ல வேண்டுமென்று சீதை எண்ணினாள். ஆனால் இராமனோ அரக்கர் குலமே அழியவேண்டுமென்று திட்டமிட்டு அதை நிறைவேற்ற முற்பட்டான்; சீதைக்கு அது பிடிக்கவில்லை. "தாங்கரும் தவத்தை மேற்கொண்டு வனத்திலே வாழ்ந்து திரும்ப வேண்டுமென்பதுதான் அரச கட்டளை; அப்படியிருக்க இராமன் அரக்கர்களை அழிக்க முற்பட்டுவிட்டான்; இஃது எந்த இடுக்கணில் முடியுமோ" எனச் சீதை ஐயுற்றாள். சீதை கொண்ட ஐயம் சரியான தென்பதைப் பின்பு நாம் காணலாம்.

ஆரணிய காண்டத்தில் நாம் ஒரு தெளிவான உண்மையைக் காண்கிறோம். இராமனும் சீதையும் இலக்குவனும் பல வகையில் சிறந்தவர்களேனும், உலகமயக்குக்கு அப்பாற்பட்டவர்களல்லர் என்பது தெளிவாகத் தெரிகிறது, சிறந்த பண்புடையவர்களாயினும், விதியின் கைப்பாவையாகி அவர்கள் எய்தும் அல்லல்களை நினைக்கும்போது, வெவ்விய விதியை வெல்வது அரிது என்பதும், பிறவிப்

பெருங்கடலை நீந்தினலன்றி உய்யும் வகையில்லை என்பதும் நன்கு விளங்குகின்றன.

இராமன் அவதார புருடன் எனக் கருதினல், தெய்வத் திற்கு விதி உண்டா? என்ற கேள்வி எழும். ஆகையால், பல அறிஞர்கள், கருதுவதுபோல இராமனைச் சாதாரண மனிதனுகவே கருதினல், இராமாயணத்தைப் படித்து நன்கு அறிவின்பம் நுகர முடியும். "விஷ்ணு" என்ற வடமொழிப் பதத்திற்கு எங்கும் நிறைந்தவன் என்று பொருள். எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள், உள்ளத்திலே பொய்யாது வாழ்கின்றவர்பால், தன்னுடைய மெய்மையின் திறத்தைக் காட்டுவான் என்பதுதான் நம் முன்னேர் கண்ட முடிபு. இதனல்தான் சுந்தரர் முதலிய சமய குரவர்கள், அடியார்களை வணங்குதல் வேண்டும் என்று கூறி, 'அப்பாலும் அடிச் சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று கூறினர்கள். உள்ளத்தால் பொய்யாது ஒழுகிய காந்தியடிகளும், யேசுவும், புத்தரும், மகமது நபியும், மகாவீரரும் இன்று உலகிலுள்ள எல்லோருடைய உள்ளத்திலும் நிற்கின்ற திறத்தை நாம் பார்க்கின்றேம். மேகங்களும் கடலும் எவ்வாறு உலகிலே எங்கும் பரந்திருக்கின்றனவோ, அவ்வாறே பரம்பொருளின் சக்தியும் உலகெங்கும் பரந்து நிற்கின்றது. இராமனைப் போல, எண்ணியதை எண்ணியாங்குச் செய்யும் திறனு டைய பரம புருடர்கள்தாம் இறைவன் திருவுளக் குறிப்பை அறிந்திருந்தார்கள்.

இழுக்கும் காந்த சக்தியைப் பெறுவதற்கு இரும்பு ஏற்றது. ஆனல் எல்லா இரும்பும் அந்தச் சக்தியைப் பெறுவதில்லை, காந்த சக்தியைப் பெற்ற இரும்பு எவ்வாறு மற்ற இரும்புகளை இழுக்கும் சக்தியைப் பெறுகின்றதோ, அவ்வாறு உள்ளத்திலே பொய்யாமல் வாழ்ந்து வரும் மனிதர்கள்தாம் பிறர் உள்ளத்தை ஈர்க்கும் வன்மையுடைய வர்களாகிருர்கள். இவ்வகையான காந்த சக்தியைப் பெற்ற வர்களை ஒரு சமயம் கடவுள் என்றே மக்கள் கருதி விடுகின்றனர். அந்த நாளில், மன்னர்கள் தமக்கென வாழாது, மக்களுக்கென வாழ்ந்து செயற்கரிய செயல்களைச்

செய்து, அவர்களது நல்வாழ்விற்குத் தங்களுடைய உடல் பொருள் ஆவி அனைத்தையும் தந்தனர். இதனைக் கண்ட மக்கள், தாங்கள் அவ்வாறு உயராத நிலையை எண்ணி, அவர்களையும் தெய்வங்களே என எண்ணினர்; அரசனைக் கண்டாலும் தெய்வத்தைக் கண்டதாகவே கருதினார்கள். அதனால்தான் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே" எனக் கூறினர்.

இதே கருத்தை இராமன்பாலும் பலர் கொண்டனர். மாமுனிவர்களும் மண்டோதரியும் இராவணனும் இராமன் பரம்பொருளோ என ஐயம் கொண்டனர். ஆனால் இராமனே தான் பரம்பொருள் அல்ல என்றும், மனிதனே என்றும் வற்புறுத்திக் கூறினான்.

"அகந்து மானுஷம் மன்னே" (நான் மனிதன் தான்) என்று வான்மீகி கூறுவது காண்க.

இயற்கையமைப்பில் ஒரு குற்றமுமில்லாத உயிர்ப் பொருளைக் காண்பது முடியாது என்று பலமுறை நாம் கூறியிருக்கிறோம். களங்கமில்லாத சந்திரனை — தெவிட்டாத தேனை — மருளாத மானை — நாம் காணமுடியுமானால், குற்றமே யில்லாத மனிதனைக் காணமுடியும். ஆகையால் தான் சிறந்தவன் என்று கருதப்படும் இராமனிடத்திலும் ஒரு சில குறைபாடுகளைக் காண்கிறோம். திருவள்ளுவனாரும்,

> "அரியகற்று ஆசற்றார் கண்ணும் தெரியுங்கால்
> இன்மை அரிதே வெளிறு"

என்று கூறுகின்றார். இது பற்றியே பிறிதோரிடத்தும், ஒருவனுடைய குணத்தையும் குற்றத்தையும் ஆராய்ந்து, அவற்றில் எது மிகுதியாக இருக்கிறதோ அதைக்கொண்டு தான் ஒருவனைக் கொள்ளவோ தள்ளவோ வேண்டுமென்று கூறுகின்றார்.

இராமன் ஒரு சிறந்த மனிதன் என்று கொண்டாலும், அவதார புருடன் என்று கொண்டாலும் ஒன்றை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்: "அவதாரம்" என்ற வடமொழிப் பதத்திற்கு "இறங்கி வருதல்" என்பது

பொருள். பரம்பொருள் தன்னிலையிலேயேயிருந்து மனித நிலைக்கு இறங்கிவரும்போது மனிதனாகவே நடந்துகொள்ள வேண்டிய நியதி அப்பொருட்கு ஏற்பட்டு விடுகிறது. அந்நிலையில், குற்றமே யில்லாதவனாக ஒரு மனிதனும் இருக்க முடியா தாகையால், இறங்கி வந்த நிலையில் அவனிடத்தில் குற்றங்களையும் நாம் காண்கிறோம். ஆகவே அவன் அவதார புருடனானாலும், மனித இனத்தில் மேம் பட்ட மனிதனானாலும், அவன் எவ்வாறு வாழ்ந்து உயர்ந் தான் என்பதே அறிவுடையோர் கண்டு உணரத்தக்க தாகும். இனி வான்மீகியும் கம்பரும் எவ்வாறு கூறு கிறார்கள் என்பதைப் பார்ப்போம்

# 19. முனிவரர் சூழல்.

பரதனுக்கு விடையளித்து அனுப்பியபின் இராமன் தண்டகாரணியத்திற்குள் நுழைந்தான். அக்கு முனிவர்கள் பலர்தந்த விருந்தை உண்டு மகிழ்ந்தான். அந்தக் காட்டில் பலவிடங்களையும் சென்று பார்க்கவேண்டும் என்ற அவாக்கொண்டு அம் முனிவர்களிடத்தில் விடைபெறலாஞன். அத்திரி முனிவன் மனைவி அனுசூயை சீதையை மிகவும் பாராட்டி, அவளுக்குப் பல பரிசுகளைத் தந்தாள். அவைகளைப் பெற்றுக்கொண்டு சீதை இராமனுடன் வனத்திடையே நெடுந்தூரம் சென்ருள். அப்பொழுது விராதன் என்ற அரக்கன் சீதையைத் தூக்கிக் கொண்டு ஓடிஞன். இராமனும் இலக்குவனும் தொடர்ந்து சென்று அவனைக் கொன்று வீழ்த்திச் சீதையை மீட்டனர்.

விராதன் வீழுங்கால் தான் ஒரு தேவன் என்றும் தன்னைக் குபேரன் சபித்ததினல் அரக்கனுனேன் என்றும் கூறிஞன். பின்னர் அவன் தன் இயற்கையுருவைப் பெற்றுத் தேவலோகத்திற்குச் செல்லும்போது, இராமனைச் சரபங்க முனிவனைக் கண்டு போகுமாறு கூறிஞன். சரபங்க முனிவன் ஆசிரமத்தில் இந்திரன் வந்திருந்தான். ஆனல் அவன் யாது காரணத்தாலோ இராமனைப் பார்க்க விரும்பவில்லை. இராமன் சரபங்கர் ஆசிரமத்திற்கு வருவதன் முன் இந்திரன் விடை பெற்றுச் சென்றுவிட்டான். சரபங்க முனிவர் அரக்கர் இனத்தை அழித்து, முனிவர்களையும் தேவர்களையும் காப்பாற்றுமபடி இராமனைக் கேட்டுக் கொண்டார். அவர் கருத்துப்படியே செய்வதாக இராமனும் ஒப்புக்கொண்டான். இதையே யுத்த காண்டத்தில் வீடணனுக்குப் புகல்தர வேண்டும் என்பதை வற்புறுத்துமிடத்தில், இராமன், "வேதியர் அபயம் என்ருர்க்கு அன்று நான் விரித்திச் சொன்ன காதையைக் குறித்து நின்ற அவ்வுரை கடக்கலாமோ" என்று எடுத்துரைக்கின்ருன். சுக்கிரீவன்

இராமனுக்கு உரைக்கும் போதும் இக்கருத்தையே நினைவு கூர்விப்பானய் "அரக்கரை ஆசறக் கொன்று நல்லறம், புரக்க வந்தனம் எனும் பெருமை பூண்ட நாம்" என்று கூறுவது இதற்குப் போதிய சான்ருகும்.

சரபங்க முனிவரிடம் விடைபெற்று நீங்கின பின், இராமன் பல முனிவர்களின் வேண்டுகோளின்படி அவர்கள் அளித்த விருந்தையுண்டான். பின்பு அவன் அகத்திய முனிவரைப் பார்க்கவேண்டுமென்று எண்ணினன். அந்த எண்ணம் இராமனுக்கு ஏன் உண்டாயிற்று என்பதைத் தீர ஆராய்தல் வேண்டும்.

அகத்தியனைப்பற்றிக் கம்பர் சிலவற்றைக் கூறுகின்ருர். ஒரு காலத்தில், வட திசை தாழ்ந்தும் தென் திசை உயர்ந்தும் இருந்ததைக் கண்ட சிவபெருமான் அவை களைச் சமப்படுத்தவேண்டி அகத்தியனை உயர்ந்து தோன்றிய தென்திசைக்கு அனுப்பினுகை, அவனுல் வடக்கும் தெற்கும் சரிசமமாயின என்பது வரலாறு. இதைப் படிப்பவர்களுடைய அறிவு, எல்வகையில் வடநாடு தாழ்ந்திருந்தது தென்னுடு உயர்ந்திருந்தது என்ற கேள்வியை எழுப்புகிறது. இதற்குக் கூறப்படும் காரணம் பின் வருமாறு:—

பார்வதியின் திருமணக் காலத்திலே, தேவர் யாவரும் கூடி, "யாம் சேர இருத்தலால், வடதிசை தாழ்ந்து தென் திசை உயர்ந்தது. ஆகையாலே தெற்கே அகத்தியனை அனுப்பவேண்டும் என்று இறைவனை வேண்டினர். அவர் ஆணையின்படி இருதிசையும் ஒப்பச் சமநிலை பெற்று நடுவு நிலைமை அடையும்படி பொதிகையின் கண் அகத்தியன் இருந்தருளினன்" என்பதாம். இங்கு ஓர் ஐயம் எழுகின்றது. திருமணக்காலத்திலே, தேவர்களின் பாரம் தாங்காது வடதிசை தாழ்ந்திருந்ததென்ருல், தெற்கே அகத்தியன் ஒருவனே எவ்வாறு சம நிலைமை அடையச் செய்யமுடியும்? இஃது உண்மையறிவிற்குப் பொருந்தாத ஒன்ருகும்; உண்மை வேறு விதமாக உள்ளது. என்றுமுள தென்தமிழை வடவர் மறக்கத் தலைப்பட்டனர். அதனுல்

அங்கே தமிழும் வட மொழிகளும் கலந்த மணிப்பிரவாள நடை தோன்றியதால் தமிழ்க் கல்வியில் வடக்குத் தாழ்ந்தும், தெற்கு உயர்ந்தும் இருந்ததைக் கண்டனர். இதனைச் சிவபெருமான் நேரே நன்கு கண்டு தென்னாட்டில் தமிழ் கற்று வடவருக்குத் தூய தமிழைக் கற்றுக் கொடுக்கவேண்டு மென்ற பேரவாவினால் அகத்தியனைத் தமிழ் இலக்கியங் களின் சுவையை நன்றாக அனுபவிக்கும்படி அவனுக்கு அம் மொழியைக் கற்றுக் கொடுத்துத் தென்தமிழ் நாட்டிற்கு அனுப்பினார். இதுதான் உண்மை.

இதனையே கம்பனும் "தழற்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் தந்தான்" என்று அகத்தியனைக் குறிக்கின்றான். அகத்தியன் தமிழை நன்கு கற்றுக் கொண்டானேயன்றி அவன் தமிழைச் செய்தவன் அல்லன். அவன் வருமுன்பே தமிழ் மிகவும் உன்னத நிலையில் இருந்தது என்பதைத் திருவிளை யாடற் புராணப் பாடலிலிருந்து அறிகிறோம்.

> 'விடைகொடு போவான் ஒன்றை
> வேண்டினான் ஏகும் தேயம்
> தொடைபெறு தமிழ் நாடு என்று
> சொல்லுப; அந்த நாட்டின்
> இடைபயில் மனிதரெல்லாம்
> இன்தமிழ் ஆய்ந்து கேள்வி
> உடையவ ரென்ப; கேட்டார்க்கு
> உத்தரம் உரைத்தல் வேண்டும்'

என்பது பரஞ்சோதி திருவிளையாடல்.

வடநாட்டிலும் தென்னாட்டிலும் தமிழ்மொழி அந்நாளில் பரவியிருந்தாலும், இராமன் தமிழ் மொழியைக் கற்றுத் தேர்ந்தவனாதலால், பொதிய மலையில் வாழும் அகத்தியனைக் காணவேண்டுமென்று மிகவும் விரும்பினான். இங்கே அகத்தியன் "என்றுமுள தென் தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்று கூறப்படுகிறான். என்றும் உள்ள மொழி தமிழென்று ஏன் கூறப்படுகிறது என்றால் தமிழ் மொழி, ஆன்மாவையும் சிவனையும் போல, என்று பிறந்தது

என்று யாருக்கும் தெரியாது. அம்மொழி பிறந்தறியாத் தன்மையினாலும் மற்ற மொழிகளெல்லாம் பிறந்திறக்கும் தன்மையினாலும், கம்பர் தமிழை "என்றும் உள தென்தமிழ்" என்று கூறினர். தமிழ் என்றும் உள்ளது மட்டுமல்ல, விரிந்து நீண்டது என்று காட்டவேண்டி அவர் அகத்தியன் "நீண்ட தமிழால்" இராமனை அளந்தான் என்று கூறுகின்றார்.

இராமன் அரக்கர் இனத்தை அழிக்க முடிவு செய்து விட்டான் என்பதை அகத்தியன் உணர்ந்திருந்தான். "சிற்சில சமயங்களில் இங்கு அரக்கர்கள் வருகிறார்கள்; அவர்களை நீ வெல்ல முடியுமாகையால், நீ இங்கேயே இருக்கவேண்டுகிறேன்; சக்கரவர்த்தித் திருமகனே, நீ இங்கேயே இருப்பாயானால், அரக்கர்கள் அழிவார்கள்; தேவர்கள் உய்வார்கள்; நானும் வேறு இடையூறு இன்றித் தவம் செய்யமுடியும்" என்று அம்முனிவன் கூறினன்.

வான்மீகி இராமாயணத்தில், இராமன், இலக்குவனுக்குத் தமிழ் நாட்டை அரக்கர்களின் கொடுமையினின்று காத்தவன் அகத்தியன் என்று கூறுகின்றான்; தமிழ் நாட்டில் அரக்கர்கள் வரவொட்டாது அகத்தியன் காவல் செய்து கொண்டிருக்கும்போது தன்னுடைய ஆற்றலை அரக்கர் கூட்டம் பெருகிய இடத்திலே காட்டவேண்டும் என்று நினைத்தான். ஆகையால், அகத்தியன் விருப்பப்படி, அரக்கர் பெருகியிருந்த கோதாவிரிக்கரையிலே, பஞ்சவடியிலே இருப்பதாக வாக்களித்துவிட்டு இராமன் சென்றான்.

மதுரைக் காஞ்சியிலே, அகத்தியன் இராவணனை வென்ற கதை கூறப்படுகிறது. இராவணன் தன்னுடைய பலத்தை எங்கும் காட்டி வரும் நாளிலே, அகத்தியனை அவன் போருக்கு அழைத்தான். இராவணன் அவனுடன் இசைப்போருக்கு வருவதாக ஒப்புக்கொண்டு, அதில் தான் தோற்றால், தானும் தன் இனத்தாரும் தமிழ் நாட்டிற்குள் கால் எடுத்து வைப்பதில்லை என்று சூள்செய்து தந்தான். அதன்படியே இனிய இசைப்போர் நடந்தது. அகத்தியர் பாடியவுடன் அருகிலிருந்த கல் உருகி

ஓடியது. இராவணனது யாழ் அக்கல்லின் மேலிருந்ததால் அஃது அந்தக் கற்குழம்பில் மூழ்கியது. அகத்தியர் பாடலை முடித்தவுடன் கற்குழம்பு திரும்பவும் கல்லாகியது. அப்போது இராவணனுடைய யாழ் அதிலே சிக்கிவிட்டது. இதனைக் கண்டு இராவணன், தன் தோல்வியை ஏற்றுக் கொண்டு இலங்கைக்குச் சென்றுவிட்டான். அது முதல் இராவணனோ அரக்கர்களோ அகத்தியனுக்கு அஞ்சித் தமிழ் நாட்டிற்குள் வரவில்லை; இதைத்தான் இராமனும் சொல்லிப் புகழ்கின்றான்.

அகத்தியனை இராமன் காண்பதிலும் வேறு ஒரு குறிப்பு இருக்கிறது. இராவணன் அகத்தியனிடத்திலே தோற்றவன். இராவணன் இனத்தை வேரறுக்க வந்த இராமன் அதற்கு ஏற்ப அகத்தியனைக் காண்பது முறையேயாகும். இதனால் இராமனிடம் இராவணன் தோல்வி அடைவான் என்பது முன்னோட்டமாகத் தெரிகிறதன்றோ?

தமிழர் இனமும், அகத்தியரும், அரக்கர்களுக்கு விரோதிகள் என்பதும், அரக்கர் இனம் பூண்டோடு ஒழியவேண்டுமென்ற எண்ணத்துடன் வேதியர்களுக்கு அபயம் தந்த இராமன், அகத்தியரிடத்தில் சென்று அவரது அருள் பெற்றான் என்பதும் இதனால் அறியப்படுகின்றன. அரக்கர் இனம் தமிழரினத்திற்குப் பெரிதும் மாறுபட்ட பண்பாடுடையது என்பதும், அவர்களை வென்று தமிழ் நாட்டிற்குள் வரவொட்டாது செய்த பெருமை தமிழர்களுக்கே உண்டு என்பதும்தான் நாம் இங்கே அறிகின்றோம்.

அகத்தியரிடத்தினின்று விடை பெற்றுக் கொண்டு, இராமன் இலக்குவன் சீதை ஆகிய மூவரும் பஞ்சவடியே தாம் உறைவதற்கு ஏற்ற இடமென்று நினைத்து அங்குச் செல்லுகின்றனர். வழியிலே தசரதனுக்கு மிகவும் நெருங்கிய நண்பனை சடாயுவைக் காண்கின்றார்கள். இவனைக் கழுகு அரசு என்று கூறுவார்கள். முதலில் இராம இலக்குவர்கள் சடாயுவை அறிந்துகொள்ளவில்லை. வான்மீகத்தில் இராம இலக்குவர்கள் அந்தப் பறவையைப் பார்த்து "நீ யார்?" என்று வினவ, அந்தக் கழுகு, 'உன் தந்தையான தசரத மன்னனுக்கு

நண்பன் என்று என்னைத் தெரிந்துகொள்' என்று மறு மொழி தந்தது என்று கூறப்படுகிறது. இதன் உண்மை யாது? சடாயுவைப் பஞ்சவடிப் பகுதியில் வாழ்ந்திருந்த மலைவாணர் தலைவன் என்றும், அவர்கள் கழுகு முத்திரை யுடையவர் என்றும், அதனால் அவர்கள் தலைவன் வடமொழி யில் சடாயு எனப்பட்டான் என்றும் கொள்ளல் வேண்டும்.

சடாயு, இராம இலக்குவர்களைக்கண்டு அவர்களின் மேனி அழகை வியந்தான். பின்னர், அவர்களை நோக்கி "நீங்கள் யார்" என்று கேட்க, இராம இலக்குவர்கள் தங்களுடைய வரலாற்றைக் கூறினர். தசரதன் இறந்துவிட்டான் என்று கேட்டவுடன் சடாயு மிகவும் வருந்தி மூர்ச்சையடைந்தான். பின்னர் இராம இலக்குவர்கள் தேற்றவே அவன் தன் னுடைய கதையைக் கூறினான். அரம்பை என்னும் தெய்வப் பெண்தான் சடாயுவுக்குத் தாய்; அருணன் அவனுக்குத் தந்தை; தசரதனுக்கு இன்துணைவன் அவன். இராமஇலக்கு வர்களிடத்தில் அவன் தசரதன்பால்கொண்ட அன்பபைக் கூறி அவர்களைக் காப்பதாக வாக்களித்தான். அது முதல் கண்களை இமைகள் காப்பதுபோலச் சடாயு இராம இலக்கு மணர்களைக் காத்து வந்தான்.

# 20. காமவல்லி

இராம இலக்குவர் சீதையுடன் கோதாவிரி நதிக்கரைக்கு வந்தார்கள். அந்த நதி நிலவுலகுக்கே ஓர் அணியாய்ச் சிறந்த பொருள்களைக் கொடுக்கவல்லதாயும் வெப்பத்தைத் தணிக்கும் குளிர்ச்சிமிக்கதாயுமிருந்தது. இனிய நல்லொழுக்கத்தைப் பெருக்கும் தன்மையுடைய சான்ருேர்கள் செய்த செய்யுளைப் போல இக்கோதாவிரி நதி இருப்பதாகக் கம்பர் கருதுகிருர் அதனைப்,

> புவியினுக் கணியாய் ஆன்ற
> பொருள் தந்து புலத்திற்ருகி
> அவியகத் துறைகள் தாங்கி
> ஐந்திணை நெறியளாவிச்
> சலியுறத் தெளிந்து தண்ணென்று
> ஒழுக்கமும் தழுவிச் சான்ருேர்
> கவியெனக் கிடந்த கோதா
> விரியினை வீரர் கண்டார்

என்று கூறுவது காண்க.

இராமனும் சீதையும் அந்த நதியின் கரையிலே மிக்க மகிழ்வுடன் உலாவி வரும்போது, அங்கு அன்னப்பறவை ஒன்று, தன் இயல்பின்படியே, மக்களைக் கண்டவுடன் ஒதுங்கி நடந்து சென்றது. இயற்கையாக அமைந்த அதன் நடை இராமனுக்குச் சீதையின் நடையை நினைவுபடுத்தியது. அன்னங்கள் சீதையின் நடையைக் கண்டு தம்முள் நாணி ஒதுங்கிவிட்டன என அவன் நினைத்துச் சிரித்தான். அங்ஙனமே சீதையும், அங்கு நீர் பருக வந்த யானையின் நடையழகைக் கண்டு இராமனை நினைத்துப் புன் முறுவல் பூத்தாள்.

இதனைக் கம்ப ராமாயணம்,

"ஓதிமம் ஒதுங்கக் கண்ட
உத்தமன் உழையளாகும்
சீதையின் நடையை நோக்கிச்
சிறியதோர் முறுவல் செய்தான் :
மாது அவள் தானும் ஆண்டு
வந்து நீர் உண்டு மீளும்
போதகம் நடப்ப நோக்கிப்
புதியதோர் முறுவல் பூத்தாள்"

எனக் கூறுகின்றது.

இவ்வாறு இயற்கையின் எழிலைச் சீதையும் இராமனும் நுகர்ந்து கொண்டிருக்கும்போது இலக்குவன் அவர்கள் இனிது தங்குவதற்கு உரிய நல்ல சாலையை அமைத்து விட்டான். வான்மீகியில் இது மிகவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது; பன்னசாலையைக் கண்டவுடன், இராமன் மிகவும் மகிழ்ச்சியடைந்து "தம்பி, இந்தச் சாலை மிகவும் அழகாகவும், காண்போர் வியக்கும் வகையிலும் கட்டப்பட்டுள்ளது. இச்செயற்கு யான் உனக்கு என்ன கைம்மாறு செய்யக்கூடும்? சகலத்தையும் விட்டுவிட்டு என் நன்மை ஒன்றையே கருதி என்னுடன் வந்து எனக்காக எல்லா இன்னல்களையும் அடைந்துள்ளாய். நான் என் தந்தைக்கு ஒப்பாகவே உன்னைக் கருதுகிறேன். என் தந்தை இறந்த போதிலும், உன்னைப் பெற்றதால், நான் என் தந்தையைப் பெற்றவன் ஆனேன்; அவர் உன் மூலமாக என் சகல மனோரதங்களையும் நிறைவு செய்துகொண்டிருக்கிறார்" என்றான். ஆனால், கம்பனோ இலக்குவனைப் பாராட்டி இராமன் ஒரு வார்த்தையேனும் கூறியதாக உரைக்கவில்லை என்பது இங்கே குறிக்கத்தக்கது.

இலக்குவனும் சீதையும் தனக்குப் பணிசெய்துவர இராமன் தேவலோகத்து இந்திரன்போல் நெடுங்காலம் இனிது வாழ்ந்து வந்தான். காடுறையும் காலவெல்லையும் பெரிதுங் கழிவதாயிற்று. பின்பு சமநிலத்து நீரோட்டம்

போல் ஓடிய இராமனது வாழ்வில் கரடுமுரடுகள் தோன்றத் தலைப்பட்டன. தென்றல் உலவிய பன்னசாலையில் வாடை யின் வருத்தம் மெல்ல வருவதாயிற்று. பஞ்சவடிப்பகுதியில் அரக்கர் என்ற ஒருவகை இனத்தவர் வாழ்ந்தன ரெனவும் அவர்கள் தமிழரினத்தையோ இதர திராவிட இனத்தையோ சேர்ந்தவரல்லர் எனவும் முன்பே கூறியுள்ளோம். அவ்வரக் கர் இனத்துத் தலைவர் குடும்பத்தில் சூர்ப்பணகை என்ற ஒருத்தி சிறந்து விளங்கினாள். அவள் இராவணனுடைய தங்கை. திருமாலை வஞ்சித்து, அவனிடமிருந்த அமிழ் தத்தைப் பெற்று உண்டு மகிழக் கருதிய இராகுபோல், சூர்ப்பணகை இராமனை வஞ்சித்துச் சீதையைக் கொண்டு போய் இராவணனிடம் சேர்த்து அவனை மகிழ்விக்கும் கருத்தை உடையவளானாள்,

சூர்ப்பணகை இராமனுடைய மேனியழகில் மயங்கி, அவன்பால் தீராக் காமக்காதல் கொண்டாள். யாவரையும் மயக்கும் வண்ணம் தன்னை அழகு செய்துகொண்டு இராம னிடம் சென்றாள். "மானின் விழிபெற்று மயில் வந்ததென வந்த" சூர்ப்பணகையின் அழகை இராமன் தன் இரு கண் களாலும் கண்டான்; "இந்த நேரிழையார் யாவர்?" என்ற ஓர் எண்ணம் அவன் நெஞ்சில் எழுந்தது. அவளும் அவ னைக் கைதொழுது, கண்களில் காதல் ஒளி வீச, வாயில் புன்னகை தவழ, நாணிக் கோணி நின்றாள்.

இராமன்: திருவே, நின் வரவு நல்வரவாகுக. நீ இங்கே வந்தது எமது நல்வினை. உன் பெயரென்ன? ஊர் யாது? உன்னுடைய உறவினர் யார்?

சூர்ப்ப: ஐய, பிரமன் மகனை புலத்தியன் மகள் யான், குபேரனுக்குத் தங்கை. இராவணனுக்குப் பின் பிறந்தவள். என் பெயர் காமவல்லி.

இராமன்: இராவணன் அரக்கனாயிற்றே. அவன் பின் பிறந்த உனக்கு எப்படி இந்த வாழ்வு அமைந்தது.

சூர்ப்ப: அரக்கர் வாழ்வு எனக்குப் பிடிக்கவில்லை; அத னால் முனிவர் வாழும் இடங்களிலே வாழ்கின்றேன்.

இராமன் : அப்படியா? நல்லது. இங்கே என்னிடம் வந்த காரணம் யாது?

சூர்ப்ப: காரணம் இருப்பதால்தான் வந்தேன். காரணத்தைச் சொல் என்கிறீர்கள். எப்படிச் சொல்வேன்? குலப் பெண்களுக்குத் தங்கள் காமக் காதலைத் தாங்களே வாய்விட்டுச் சொல்வது என்பது அரிதல்லவா?

சூர்ப்பணகை இவ்வாறு கூறவும், இராமன் "இவள், நாணமில்லாத கீழ்மகள்" என்று கருதினான். ஆனால் அவள் இராமனை நோக்கி, "சித்திரத்திலும் எழுதமுடியாத எழிலுடைய இராகவனே, நீ இங்கு இருப்பது தெரியாது. இதுகாறும் நான் முனிவர்களுக்குப் பணிவிடை செய்து என் இளமையை வீணாகக் கழித்தொழித்தேன். முன்னமே தெரிந்திருந்தால், என் வாழ்க்கையை நன்கு பயன்படச் செய்திருப்பேன்" என்றாள்.

அவளுடைய கருத்தின் தீமையை இராமன் மனதிலே நினைத்தான்; ஆயினும் அதனை வெளியே காட்டாது, "எழிலுடைய மங்கையே நீ கூறுவது சாதி மரபிற்கு ஒத்த தல்லவே? நீயோ ஒரு பிராமணப் பெண். நான் அரச மரபில் பிறந்தவன். எவ்வாறு உயர்குலப் பிராமணப் பெண்ணான உன்னை நான் மணக்க முடியும்?" என்று கூறினான். அது கேட்டதும் சூர்ப்பணகை மிகவும் தந்திரமாகப் பதில் கூறு வாளாய் " என்னுடைய தந்தை பிராமணன் என்பது உண்மையே. ஆனால் என் தாய் அரச பரம்பரையில் பிறந்தவள். ஆகையால் நீ என்னைத் திருமணம் புரிவதில் தவறில்லை" என்று கூறலும், "மனிதர்கள் அரக்கர்களை மணம் புரிவது சரியல்ல; நீ ஓர் அரக்கி" என்று இராமன் உரைத் தான். "இராவணனுடைய தங்கை என்பதால் என்னை அரக்கி என்று கொள்ள வேண்டாம். நான் ஒரு வித்தியா தரப் பெண்; ஆகையால் நீ என்னைக் கந்தருவ முறைப்படி மணந்துகொள்; அது வேதத்திலே விதிக்கப்பட்டிருக் கிறது" என்று வேண்டினாள். "இராவணன் தங்கையும் பல சிறப்புகள் பெற்றவளுமான உன்னை உரியவர் கொடாமல் மணந்து கொள்ளேன்" என்று கூறிவிட்டான் இராமன்.

ஆனால் அவள் பலவகை இனிய கருத்துக்களைச் சொல்லி முடிவாக, இராமன் தன்னை மணந்துகொண்டால், தேவர்களும் அவனுடைய காலடியில் பணிந்து நிற்பர் என்று இசைத்தாள்.

இராமன் சிறிது சிந்தித்தான். சூதாட்டம் தீங்குதரும் என்பதைத் தெரிந்திருந்தும், தருமனும் நளனும் அதை விரும்பி ஆடியது போலத் தானும் ஆடும் விளையாட்டு வினையாக முடியும் என்பதைத் தெரிந்திருந்தும், அவன் இன்னும் வேடிக்கையை விடாது அவளைப்பார்த்து "அரக்கர்களது அருளும் பெற்றேன்! உன்னை அடையப் போகிற இன்பத்தையும் பெறப் போகிறேன்! என்னுடைய முன்னைத் தவம் இப்பொழுது மிகுதியாகப் பலித்து விட்டது!!" என்று கூறிச் சிரித்தான். இதனைக் கம்பன்,

> **"நிருதர்தம் அருளும் பெற்றேன்**
> **நின்நலம் பெற்றேன் நின்னோடு**
> **ஒருவரும் செல்வத்து யாண்டும்**
> **உறையவும் பெற்றேன் ஒன்றோ**
> **திருநகர் தீர்ந்த பின்னர்ச்**
> **செய்தவம் பயந்த தென்று**
> **வரிசிலை வடித்த தோளான்**
> **வாளெயிறு இலங்க நக்கான்"**

என்று கூறுகிறான்.

இவ்வாறு சூர்ப்பணகையும் இராமனும் விளையாட்டில் ஈடுபட்டிருக்கும் வேளையில் சீதை அங்கு வந்து சேர்ந்தாள். சீதையின் அழகைக் கண்டு மயங்கி, இவள் இராமனுக்கு மனைவியாகமாட்டாள்; மனைவியாயின் இவளைக் கொடிய காட்டிற்குள் இவன் கூட்டிவரமாட்டான் என்று எண்ணினாள். மேலும் அவள், அழகுத் தெய்வத்தின் வடிவமோ சீதை என்றும் ஐயுற்றாள். சீதையை மேலும் கீழும் பார்த்த சூர்ப்பணகை தன்னை மறந்து "இவ்விருவரையும் பார்த்த பின் பிரமன் படைப்பிலே இவர்களைக் காட்டிலும் அழகானவர்களைக் காணமுடியாது" என்ற முடிவிற்கு

வந்துவிட்டாள். என்றும் "அழகிற்கு ஓர் எல்லை இல்லை; அழகிய பொருளை ஆக்கும் தொழிலையுடைய பிரமன் குற்றமே யன்றி அழகிற்கு ஏதும் குற்றமும் இல்லை. இந்தப் பெண்ணின் அழகைக் கண்டபின் பெண்ணாகிய எனக்கே வேறு பொருளின் மேல் நாட்டம் செல்லவில்லையே! பிற ஆடவர் மனம் என்ன பாடுபடும்!" என்று கூறுவாளாய்,

"பண்புற நெடிது நோக்கிப்
படைக்குநர் சிறுமை யல்லால்
எண்பிறங்கு அழகிற்கு எல்லை
யில்லையாம் என்று நின்றாள்
கண்பிற பொருளிற் செல்லா,
கருத்தெனின் அஃதே, கண்ட
பெண்பிறந் தேனுக் கென்றால்
என்படும் பிறருக்கு"

என்றாள். ஒரு பெண்ணை வேறு ஒரு பெண் வியப்ப தென்பது நடவாத காரியமாகும். ஆனால் இங்குச் சீதையைச் சூர்ப்பணகை என்ற பெண்ணே வியப்பதைக் காண்கிறோம், இந்த உண்மையை அறிந்த இளங்கோவடிகள் ஒரு பெண்ணை வேறொரு பெண் வியந்து கூறுவது அவள் பெருமையைச் சிறப்பிக்கும் என்ற எண்ணத்தினால் கண்ணகியைப் புகழவேண்டிய இடத்திலே மிகவும் சுருக்கமாக:

"அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றும்
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்
காதலாள் பெயர்மன்னும் கண்ணகியென்பாள் மன்னோ"

என்று குறிக்கின்றார்.

# 21. தங்கையும் தமையனும்

அந்தணர் குலத்திலே பிறந்து இரக்கமில்லாத அரக்கர் பண்பாட்டிலே சிறந்து அரியாசனத்தில் அரசு வீற்றிருந் தான் இராவணன். தன் தங்கை சூர்ப்பணகையின் அலங் கோலத்தைக் கண்டு மனம் திடுக்கிட்டு வியப்பும் வெகுளி யும் வெம்பிப் பொங்க, அவன், " உன்னை மூக்கறுத்துப் பங் கப்படுத்தியவர் யார்? " எனக் கோடையிடி போன்ற குமுறு குரலுடன் கேட்டான். அவனுக்கு அரச குலத்தவரான இராம இலக்குவரென்ற இருவர் காட்டிலே வசிக்கின்றனர் என்று தொடங்கி அவர்களேதான் தன்னைப்பங்கம் செய்தனர் என அவள் அமைதியான குரலில் கூறினாள். அவர்களுக்கு அவள் செய்த தீங்கு யாது என இராவணன் வினவினுகை, சூர்ப்பணகை, இராமனுடன் வந்திருக்கும் சீதையின் உரு நலத்தைப் புகழ்ந்து பேசி, " தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற திருமகளைக் காணுதவர்கள், நான் கண்ட ஒரு பெண்ணைப் பார்ப்பார்களானுல், அவளுடைய திருவுருவுக்கு ஒப்பாகத் தான் மகாலட்சுமியின் திருவுருவம் இருக்கும் என்று கூறு வார்கள்; பெண்கள் கண்டாலும் மனம் பேதுற்று வியக்கும் வண்ணம் அவள் எழில் பெற்று விளங்குகிருள்; அவளைக் கண்டதும், அவளை நீ பெற்று இன்புற வேண்டும் என்ற விருப்பம் எனக்கு உண்டாயிற்று; அதனுலே, நான் அவளை இங்கே தூக்கி வரத் துணிந்து முயன்றேன்; முயலுகையில் இக்கொடுமை செய்யப்பட்டேன் " என விடையிறுத்தாள்.

" கரன் முதலான பதினுயிரக்கணக்கான அரக்க வீரர் கள் அப்பொழுது என்ன செய்து கொண்டிருந்தனர்?" என இராவணன் கேட்க, " ஐயோ, அவர்களும் எனக்குத் துணை செய்ய வந்து மாண்டு மடிந்தனரே " என்று நிகழ்ந்த செய்தி களை வேண்டியவாறு புனைந்து விரித்துக் கூறினுள் சூர்ப்பணகை,.

இவற்றைக் கூறும்போது, சீதை திருமகளைக் காட்டிலும் சிறந்தவள் என்றும், அவளை அடைந்து வாழ்வதே இராவணனுக்குத் தக்கது என்றும் பன் முறையும் அவள் வற்புறுத்திக் கூறினாள். சீதையைப் பற்றி அவள் உரைத்த சொற்கள் மெல்ல மெல்ல அவன் செவிக்குள் புகுந்து, உடலில் நஞ்சு ஏறுவது போல உள்ளத்தில் ஏறிப் பாய்ந்ததனால், இராவணன் உள்ளம் காம மயக்கத்தில் கலங்கத் தலைப்பட்டது. சூர்ப்பணகையின் உரையை,

"பாகத்தில் ஒருவன் வைத்தான் ;
பங்கயத்திருந்த பொன்னை
ஆகத்தில் ஒருவன் வைத்தான் ;
அந்தணன் நாவில் வைத்தான் ;
மேகத்தில் பிறந்த மின்னை
வென்ற நுண்ணிடையினாளை
மாகத்தோள் வீர ! பெற்றால்
எங்ஙனம் வைத்துவாழ்தி "[1]

என்று கம்பர் நயமும் திறமும் படக் கூறுகின்றார்.

இதன்கண் "எங்ஙனம் வைத்து வாழ்தி" என்று சூர்ப்பணகை கூறும் கூற்றில், அவன் சீதையை வைத்து வாழமாட்டான் என்ற பொருளும் உள்ளூறு்று நிற்கிறது. "குழலும் யாழும் எழுப்புகின்ற இன்னிசையில் அமிழ்தமும் குழைந்து ஒன்றானால் எவ்வளவு இனிமை தருமோ அவ்வளவு இனிமையுடையவை அவளுடைய மழலை மொழிகள். அவள் இங்கு வந்தபின் கொள்ளை கொள்ளையாயிருக்கின்ற செல்வங்களையெல்லாம் நீ அவளுக்குக் கொடுத்து மகிழ்வாய். இவ்வகையில் நான் உனக்கு நல்லது தேடுபவளாக இருந்த போதிலும், உன்னுடைய மனைவிமார்களுக்கெல்லாம் தீங்கு

1 வானம்போல் உயர்ந்த தோள்களையுடைய வீரனே ! சிவன் தன் மனைவியாகிய உமையைத் தன் இடது பக்கத்தில் வைத்துக்கொண்டான் ; செந்தாமரையில் வீற்றிருந்த இலக்குமியைத் திருமால் மார்பிலே வைத்துக் கொண்டான் ; பிரமனாகிய அந்தணன் தன் மனைவியாகிய சரசுவதியை நாவிலே வைத்துக் கொண்டான் ; நீயும் மேகத்திலே பிறந்த மின்னலைக் காட்டிலும் நுண்ணிய இடையையுடைய சீதையைப் பெற்றால் எவ்விடத்தில் வைத்துக் கொண்டு வாழ்வாய் ?

செய்பவள் ஆகின்றேன்" என்று சூர்ப்பணகை அடுத்தபடியாகக் கூறுகின்றாள். இச் சொல், சீதையை அடைந்தால் இராவணன் பெறக்கூடிய இன்பத்தைப் புனைந்து கூறுவதாக இருந்தபோதிலும், உண்மையிலேயே இராவணன் இறக்கப் போவதையும், அவன் மனைவியர் மங்கலம் இழந்து வருந்தப் போவதையும் குறித்து நின்றது.

சீதையின் பேரெழிலைக் கேட்ட இராவணன், காமக்களி மயக்கில் வீழ்ந்து அதன் வயப்பட்டு எல்லாவற்றையுமே மறந்தான்; தன்னுடைய தங்கை மூக்கிழந்ததையும் மறந்தான்; கரன் முதலான பல துணைவர்கள் இறந்துவிட்டதையும் மறந்தான். சீதையின் நினைவு ஒன்றைத் தவிர மற்றை யாவும் அவன் மனத்தைவிட்டு மறைந்தேபோயின. விளங்கக் கூறுவோமேயானால் இராவணன் நெஞ்சில் சூர்ப்பணகை தீட்டிய சீதையின் சொல்லோவியம் நிறைந்து நீங்காத நிலைமை பெற்றுவிட்டது.

மயில் போன்ற சாயலையுடைய சீதையைக் கவர்ந்து வந்து இலங்கையில் சிறை வைக்கு முன்பே, தன்னுடைய மனமாகிய சிறையிலே அவளை இராவணன் வைத்தான் என்று கம்பர் கூறுகிறார். இதன் காரணமாக அவனுடைய உள்ளம் காம வெப்பம் தாங்காது உருகிக்கருகியது.

> "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
> சூழினும் தான்முந் துறும்".

என்பதற்கேற்ப ஊழ்வினைப் பயனால், அரக்கர் இனமும் தன் வழிமுறையும் அழியும் காலமும் நெருங்கிவிட்டதால் மாட்சியுடன் விளங்க வேண்டிய இராவணன் வீழ்ச்சிப் பாதையில் படிப்படியாக இறங்குவானாயினன்.

காம வயப்பட்ட அவனுக்குக் கெடுகுறியாகத் தட்பத்தையுடைய சந்திரன் வெப்பத்தையே தந்தான்; மன்றல் மணக்கும் தென்றல் குளிர்ச்சி தரவில்லை; அலையும் மனத்துக்கு அமைதி நல்கும் சோலைகள் அந்த அமைதியை அவனுக்கு வழங்க முடியவில்லை. இயற்கையை இனிதின் எளிதில்

வென்றவன் இராவணன். ஆயினும் காம வயப்பட்ட காரணத்தால் அவனுக்குத் தோற்ற இயற்கையும் சொல்லவொண்ணுத வருத்தம் தரவே அவன் மனம் சோர்ந்திருந்தான். சீதையின் உருவெளித் தோற்றம் அவன் கண் முன் தோன்ற, சூர்ப்பணகையை அழைத்து "இவள் தானு நீ கண்ட சீதை?" என்று வினவுகின்ருன். அவள் தன்னை மறந்து 'நெஞ்சின் மிக்கது வாய் சோர்ந்துவிடும்' என்பதற்கு ஒப்பாக, "இது தான் நான் கண்ட இராமனது உருவம்" என்று கூறினுள். இவ்வாறு தத்தம் நிலையை மறந்து பித்தம் தலைக்கேறி நிற்கும் இவர்களைக் காணும்போது இவர்களுடைய தவருன கருத்துக்கள் இலங்கைக்கு என்ன தீங்கு பயக்குமோ? என ஐயுறுகிருேம்.

## 22. மாய மான்

"முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா" என்பது பழமொழி. எவ்வாறாயினும் சீதையை அடைந்தே தீருவது என்று இராவணன் முடிவு செய்து தன் அமைச்சரவையைக் கூட்டினான். தனக்கென ஓர் அறிவும் சிந்தனையும் இல்லாத அமைச்சர்களும் அவனுக்கு உடன்பட்டனர்; இராவணன் விமானத்திலே ஏறி மாரீசனைக் காணச் சென்றான்.

ஏறத்தாழ இருபத்தாறு ஆண்டுகளுக்கு முன் விசுவாமித்திரரின் யாகத்தைக் கலைக்க வந்து, இராம இலக்குவர்களால் வெருட்டியடிக்கப்பட்டவன் இம்மாரீசன். அவன் இராவணனை நோக்கி "நீ வந்த காரியம் யாது?" என வினவ, இராவணன் "இதுவரை நான் மானிடர்களை வலியற்ற பதர் என்றே நினைத்திருந்தேன். அதற்கு மாறாக இன்று அவர்கள் வன்மை மிகப்பெற்று நம்மைப் பூண்டோடு அழிக்க முற்போந்து விட்டனர். மனிதர்களுடன் போர் புரிவது என் ஆண்மைக்கு ஏற்றதன்று. ஆகையால் அரக்கர் இனத்தை அழிக்க வந்துள்ள இராமனுடைய மனைவியாகிய சீதையைக் கவர்ந்து கொண்டு வந்து விடவேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன்; அதற்கு உன்னுடைய உதவி தேவை" என்று கேட்டான்.

மாரீசனுக்கு இச் சொற்கள் தேள் கொட்டினாற்போலச் செவியில் புகுந்து வருத்தின; அவன் உள்ளம் அச்சத்தால் அலைந்தது; உடல் நடுங்கத்தலைப்பட்டது. பிறன் மனைவியை நயத்தலால் இராவணன் அழிந்துவிடுவான் என்று மாரீசன் எண்ணினான். அவன் நெஞ்சம், "இலங்கை வேந்தனான இராவணன் சாதாரணமானவன் அல்லன்; பற்பல யாகங்களைச் செய்து பிரமனிடத்தில் பல வரங்களைப் பெற்றவன்; நான்மறைகள் என்று கூறப்படும் வேதங்களை நன்கு கற்று உணர்ந்தவன்; இலங்கையில் மிக உயர்ந்தவன். அவன், இந்திரன் அகலிகையால் கொண்ட காமத்தால்

அழிந்தது போல அழியப் போகிறானே" என நினைந்தது; அதனால் மிகவும் வருந்தினான் மாரீசன்.

இராவணனைச் சமாதானப்படுத்த வேண்டி "அரக்கர் இனத்தைப் பூண்டோடு அழிக்கவல்ல ஆற்றலுடையவன் இராமன்; அவனோடு பகை கொள்ளுதல் சரியல்ல" என்று மாரீசன் அவனுக்கு அறிவு கூறினான். ஆனால் சிவனுடைய மலையைத் தூக்கிய செருக்குடையவனான இராவணனுக்கு மாரீசனுடைய வாதம் சரியல்லவென்று தோன்றிற்று; அதனால் அவன் மாரீசன்பால் சினம் கொள்ளலானான்.

மாரீசன் இராமனுடைய வீரத்தையும், படை வலத்தையும் எடுத்துக் கூறி, பஞ்சினும் மெல்லிதேயானாலும் பகை சிறிது என்று எண்ண வேண்டா; அஞ்சித்தற்காக்க வேண்டுமென்று அறிவுறுத்தினான். ஆனால் சாவாரை யாரே தடுப்பர்? தடுக்க முடியாது; ஆகவே, மாரீசனுடைய அறிவுரைகள் அவன் செவிக்குள் செல்லவில்லை.

மாரீசன் பொன்மானாகச் சென்று சீதையின் மனத்தை மயக்க வேண்டுமென்றும், அதனைப் பிடித்துத்தர இராமனும் இலக்குவனும் செல்வார்களென்றும், அவ்வமயம் தான் சீதையைத் தூக்கிக்கொண்டு வந்துவிட முடியும் என்றும் இராவணன் கூறினான். இந்தத் திட்டம் மாரீசனுக்குப் பிடிக்கவில்லை. நேரில் சென்று இராம இலக்குவர்களைப் போரில் வென்று வெற்றிச் சின்னமாகச் சீதையைப் பெறுவதே தக்கது என்று இராவணனிடம் மாரீசன் கூறினான். ஆனால் இலங்கை வேந்தன் அதற்கு உடன்படவில்லை. போர் தொடுத்தபோது இராமன் இறந்து விடுவானானால் சீதையும் இறந்து விடுவாள் என்று கூறி அந்தத் திட்டம் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று என்று இராவணன் மறுத்து இயம்பினான். வாதப் பிரதிவாதங்களுக்குப் பின் மாரீசன் இராவணனது சொல்லைத் தவிர்க்க மாட்டாதவனாய்ப் பொன்மான் உருக்கொண்டு சீதை முன் போனான்.

இங்கே கதையைத் தொடர்ந்தோடும் கருத்தைத் தடுத்துச் சிறிது நாம் சிந்தனையிற் செலுத்த வேண்டும். இராவணன் மூன்று உலகங்களையும் வென்றவன்: யாராலும் வெல்லப்படாத தோள்வலி பொருந்தியவன்; தன்னை விஞ்சிய வலத்தையுடைய இந்திரசித்தையும், கும்ப கருணனையும் முறையே மகனாகவும், தம்பியாகவும் பெற்றவன். இத்துணைச் சிறப்புகள் வாய்ந்த இலங்கை வேந்தன் கோழை போல் நடக்கத் துணிந்துவிட்டானே என நினைக்க நமக்கே வருத்தமுண்டாகிறது. இராம இலக்குவர்கள் அரச குமாரர்கள். அவர்களை நேரிலே போரிலே வென்று சீதையைப் பெற எண்ணுவானானால் அவன் அருளற உணர்வு அற்ற வீரன் என்றாவது நாம் கொள்ளலாம். ஆனால், இராமனும் இலக்குவனும் இல்லாத சமயத்தில் சீதையைக் கள்வனைப்போல் கவர்ந்து வருவது அவனுடைய பெருமைக்கு இழுக்குத் தருவதொன்று. வீரனாக முன்னே சென்று, வீரர்களாகிய அவர்களைப் போரிட்டு வென்று சீதையைப் பெற நினையாததற்குக் காரணமாக, இராமன் இறந்துவிட்டால் சீதையும் இறந்துவிடுவாள் என்று அவன் கூறுவது நம் சிந்தனையைத் தலையசைக்கச் செய்கிறது. ஆயினும் இலக்குவனில்லாத நிலையை உண்டுபண்ணி அப்பொழுது சீதையைப் பெற வேண்டுமென்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? இராமன் சென்றபின் இலக்குவனுடன் போர் செய்து சீதையைத் தன் வயத்தில் கொண்டுவர முயன்றிருந்தால் அவனுடைய வீரத்தை நாம் பாராட்ட முடியும்; ஆனால், மாறுவேடத்தில், வீரர்களான இளையர் இருவரும் வெளியில் சென்ற சமயம் பார்த்து வஞ்சனையினால் ஓர் அபலைப் பெண்ணைக் கவர்ந்து சென்றது, அவனை ஒரு கோழையாகவே காட்சி தருமாறு செய்து விடுகிறது.

இராவணன் ஓர் இணையற்ற வீரன் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். இறைவன் உறையும் கயிலை மலையையே அசைத்துத் தூக்கிய பெருமை அவனுடையது என்பர். இராவணன் நான்கு வேதங்களையும் நன்கு கற்று உணர்ந்த வைதிக வேதியன் என்பதிலும் தடையில்லை. சாம வேதம்

பாடுவதில் அவனுக்கு நிகராக ஒருவரும் இருந்ததில்லை. அவனை 'சாமவேதி' என்று சான்றோர் பலரும் கூறுவர். ஆனால் காம வயப்பட்ட காரணத்தால் அவனுடைய ஆற்றல் மாசுபட்டது. என்று சூர்ப்பணகையால் சீதையின் உருவும் திருவும் உயர்வுமாகிய வண்ணங்களைக் கேட்டு, அவற்றைத் தன் உள்ளத்தில் கொண்டானோ, அன்றே அவன் மன நிறையை இழந்தான். அவன் ஓதி உணர்ந்த வேதங்கள் அவனுக்கு அப்போது துணை செய்யவில்லை, பிறருக்கு அவன் உரைத்த நீதிகள் அவனைத் தடுக்கும் தன்மையற்றுப் போயின. "காதல் மிக்குழிக் கற்றவும் கைகொடா" என்பது அவன்பால் மெய்யாயிற்று. இராவணன் மிகவும் உயர்ந்தவன். அறிவும், உருவும், அழகும் அமைந்த பெண்களை 'அருங்கலம்' என்பது உலக வழக்கு. "பெண்ணருங் கலம் இது பெறுதல் மானுடர்க்கு எண்ணரும் தகைத்து" என்பர் தோலாமொழித் தேவர். "உலகில் அரியவை; உயர்ந்தவை; அழகுமிக்கவை என்பனவெல்லாம் அரசர்க்கே உரியவாம்" என்பது வைதிக நூல்களின் அரசியல் முடிவு. அவைகளை நன்கு உணர்ந்தவனாதலால் உலகிலேயே நிகரற்ற அழகி என்று பெண்ணினத்தார் பெரிதும் பாராட்டிப் பேசும் பெண்ணாகிய சீதையை அடைவதுதான் தன்னுடைய குறிக்கோள் என்று இராவணன் எண்ணி விட்டான்.

எத்துணை அறிவாளரானாலும், வீரரானாலும், காம வெள்ளத்திலே களித்திருக்கும் போது கடமைகளை மறந்து விடுவது இயற்கை. அது போலவே மூன்று உலகங்களையும் வென்ற இராவணன் மதுவிலும் மங்கையர் கூட்டத்திலும் பல காலம் ஈடுபட்டிருந்ததனால் தன்னுடைய கடமைகளை மறந்தான்; வீரத்தை வீழ்த்தான்; சீதையைக் கள்வனைப் போலக் கவரவும் கருதிவிட்டான்.

திட்டங்கள் பல தீட்டி நாட்டை நல்ல முறையில் வளமுறச் செய்து, மக்கள் "என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்" என்ற மன நிறைவுடன் இருக்கச் செய்த இராவணன், தன்னுடைய இக்கோழைமைச் செய்கையால் துன்பத்திற்கே

ஓர் உறைவிடமாகப் போகிருனே என்று நாம் வருந்தும் வண்ணம் செய்து விடுகிருன். இது நிற்க.

இலங்கை வேந்தன் மாளுகுமாறு மாரீசனை வேண்ட, அவனும் சீதை காணப் பொன் மாளுகிச் சென்ருன் என்று முன்பு கூறினேம்.

சீதை அப்பொன் மானைப் பிடித்துத் தருமாறு இராமனை வேண்டினுள். இலக்குவன் அது பொய்மான் என்று கூறினுன். சீதை பிடிவாதமாக அந்த மானையே வேண்டு மென்று கேட்கலானுள். ஊழ் வலியிற் பெருவலி யா உள? இராமன் இலக்குவனைச் சீதைக்குக் காவலாக வைத்துவிட்டு அதன் பின்னே ஓடினுன். அம் மாயமான் நெடுந்தூரம் ஓடவே இராமனும் அதனைத் தொடர்ந்து சென்ருன். காலமும் தூரமும் கழிந்தனவே யன்றி மான் கையகப்படு வதாக இல்லை. அதனுல் அம்மானைத் தான் உயிருடன் பிடிக்க முடியாது என நினைந்தான் இராகவன்; அதன்மேல் அம்பெய்து அதனைக் கொன்ருன். அது சாகும்போது இராமன் குரலில் "சீதா, இலக்குமணு அபயம்" என்று கதறி விட்டு இறந்தது. இராமனும் சீதையும் தெய்வக்கூறு ஆதலின், சாகும் உயிர்க்கு இராமன் சீதை என்ற பெயர்கள் உறுதி தரும் என்பது அறிவுடைய மாரீசன் கருத்து. அதனுல் இவ்வாறு கூறி உயிர் விட்டான் என்று கம்பர் கூறுகின்ருர். இக்குரலைக் கேட்ட சீதை மிகவும் வருந்தி இலக்குவனை அழைத்து இராமனுடைய நலம் அறிந்து வருக எனக் கூறினுள். ஆனுல் இலக்குவன் அஃது அரக்கன் எடுத்த பொய்க்கூச்சல் என்றும், தன் அண்ணனுக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்திருக்காது என்றும் கூறினுன். சீதைக்கு இது சரியல்ல என்றே தோன்றிற்று. அண்ணன் ஆபத்தில் சிக்கி, உயிருக்கு மன்ருடும் போது, தம்பி அவனுடைய அபயக் குரலைக் கேட்டும் தேடிச் செல்லாதது தவறு என்று கருதினுள். ஒருவேளை இலக்குவன் அறவுணர் வினின்றும் பிறழ்கிருனே என்ற அச்சமும் அவள்பால் தோன்றியது. இதை

"என்று அவள் இயம்பலும்
எழுந்த சீற்றத்தள்
கொன்று அன இன்னலள்
கொதிக்கும் உள்ளத்தள்
நின்றநின் நிலை இது
நெறியிற்றன்று என
வன்தறு கண்ணினள்
வயிர்த்துக் கூறுவாள்"

என மிக அழகாகக் கம்பர் கூறுகிறார்.

முதல் நூலாகிய வான்மீகத்திலே இலக்குவன் பால் சீதை ஐயமுற்றாள் என்றும், இராமன் உயிர் நீப்பானேயாயின் தான் அவளை அடைந்துவிடலாமென்ற தீய எண்ணம் இலக்குவனுடைய மனதிலே புகுந்து விட்டது என்றும் அவள் கருதினள்; சீதையின் தூய உள்ளத்தில் ஒரு களங்கக் கருத்துப் புகுந்து விட்டது. மணமானது முதல் பதின் மூன்று ஆண்டுகளாக இராமனது நிழல் போல் இலக்குவன் அவனைத்தொடர்ந்து அடித்தொழில் புரிந்து வந்தானாகவும், சீதை அவன் பேரில் ஐயங் கொண்டது பெருங் குற்றம். அவளுடைய தீய சொல், அவனை மிகவும் துன்புறுத்தியதால், இராமன் குரலெழுந்த திக்கு நோக்கி இலக்குவன் தேடிப் போகலானான் என்று கூறப்படுகிறது.

சீதையின் இச்செய்கை, கம்பருடைய கருத்திற்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. மேலும் இது நல்லறிவுடைய எவருக்கும் நற்செய்கையாகத் தோன்றுதல்லவா? சீதை இலக்குவனது தூய்மையில் ஐயங் கொள்ளுவாளாயின் அது சிறந்த குணமாகக் கருதப்படாது என்று நினைத்து வேறு ஒரு காரணத்தை அவர் நமக்குக் கூறுகின்றார்.

---

இலக்குமணன் கூறிய அளவிலே பொங்கித் தோன்றிய கோபத்தையுடைய சீதை, தன்னைக் கொன்றால் ஒத்த துன்பமும் பதை பதைக்கின்ற மனத்தையுமுடையவளாய் அவனை நோக்கி "இது நீதிமுறையன்று" எனக் கூறினாள்.

உயர்ந்த கற்புடைய பெண்கள் தம் கணவனைப் பிரிந்திருக்கும் போது, பிரிவுத் துன்பம் பொறுக்காமல் உயிர் விட்டுவிட மாட்டார்கள். ஏன் எனில் தாங்கள் இறந்து பட்டால், கணவனும் இறந்து விடுவானே என்ற காரணத்தால் என்று பண்டைய பெரியோர்கள் கூறுவர். இங்குக் கம்பனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது: இராமன் ஒரு பால் மாயமானுன அரக்கர்களின் கைப்பட்டு உயிருக்கு மன்ருடிக் கொண்டிருக்கிருன் என்ற எண்ணமுடையவளாக இருக்கிருள் சீதை. இலக்குவனே, அவனைக் காப்பாற்றச் செல்ல மறுக்கிருன். இராமன் இறந்த பின் உயிர் வாழேன் என்று சீதை இலக்குவனிடம் கூறுமாறு செய்து விடுகிருர் கம்பர்.

சீதை இலக்குவனை நோக்கி "ஒருநாள் பழகினவர்களும் தம் நண்பர்களுக்குத் துன்பம் நேர்ந்தவிடத்து அவர்களுக்காகத் தம் உயிரையும் கொடுப்பார்கள். ஆனுல் உடன் பிறந்து நெடுநாள் பழகிய நீ உன் தமையன் உயிருக்கு மன்ருடிக் கொண்டிருக்கும் போது அஞ்சாமல் நின்று கொண்டிருக்கிருயே. எனக்கு வேறு கதி யாது? நான் நெருப்பில் வீழ்ந்து இங்கேயே உயிரை மாய்த்துக்கொள்ளுவேன்" என்ருள். இதனைக் கம்பர்,

> **"ஒருபகல் பழகினுர் உயிரை ஈவரால்**
> **பெருமகன் உலைவுறு பெற்றி கேட்டும் நீ**
> **வெருவலை நின்றனை, வேறென்? யான் இனி**
> **எரியிடை வீழ்ந்துயிர் இறப்பென் ஈண்டு"**

என்று குறிக்கின்ருர்.

அன்னம் போலும் மென்மையுடையசீதையைக் காட்டிலே ஒரு துணையுமின்றி விட்டுச் செல்ல வேண்டுமேயென்ற எண்ணம் மேலிடவே இலக்குவன் அஞ்சினுன். ஆனுல் சீதை இறந்துபடுவாளானுல் அவள் பால் ஆராத காதல் கொண்டுள்ள இராமன் இறந்து விடுவான் என அஞ்சி, அவளை வெம்மையான காட்டுத்தீயில் குதிக்காமல் தடுத்து அவளுடைய திருவடிகளைத் தொழுது வணங்கி விடை பெற்றுச் செல்கிருன் இலக்குவன்.

இலக்குவனுக்கு விதியிலே நம்பிக்கையில்லை என்பதை முன்பே கண்டோம். இராமன் விதியின் பிழை என்று கூறிய போதெல்லாம் "விதிக்கு ஒரு விதி நான் செய்கிறேன்" என்று கூறியவன் இலக்குவன். ஆனால் அவனே தன்னுடைய சீரிய முயற்சிகள் எல்லாம் தோற்றுப்போன பின் யாது செய்வது என்று அறியாமல், விதியின் பேரிலே பாரத்தைப் போடுகிறான். சீதையை நோக்கித் 'தாயே, நீங்கள் ஏன் இறக்கவேண்டும்? நீங்கள் சொன்ன சொற்களுக்கு நான் அஞ்சுகிறேன்; துன்பமில்லாது இவ்விடத்தில் இருப்பீர்களாக; நான் செல்லுகிறேன்; வெவ்விய விதியை வெல்ல முடியுமா? என்பானாய்,

> **துஞ்சுவ தென்னை? நீர் சொற்ற சொல்லையான்**
> **அஞ்சுவென் மறுக்கிலேன், அவலந்தீர்ந்தினி**
> **இஞ்சிரும்; அடியேனேன் ஏகுகின்றனென்;**
> **வெஞ்சின விதியினை வெல்ல வல்லாமோ!**

என வருந்திக் கூறுகிறான்.

சீதைக்குத் தீங்குவரும் என்று அவன் உள்ளுணர்வு கூறின போதிலும் அவளுடைய கடுஞ் சொற்கள் அவன் அறிவைக் கலக்கி உள்ளத்தை வெதுப்பி வேகமாகச் செல்லும் படி அவனை வெருட்டுகின்றன. இலக்குவனோ சிறந்த வீரன். இராமனையே தெய்வமெனப் போற்றி வாழ்ந்து வந்தான். அவனைக் குறைகூறப் போந்த சீதைக்கு அவன் அஞ்சினான். இஃது இயற்கையாக நிகழக்கூடிய ஒன்றுதான். இந்நிலையில் அவனுக்கு அவ்விடத்தை விட்டு அகல்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டியது தான். ஆனால் "அறிகொன்று அறியான் எனினும் உறுதி உழையிருந்தான் கூறல் கடன்" என்ற தமிழ் நெறியே நோக்கின், அவன் அறிவுவலி இழந்து சீதையைத் தன்னந்தனியாக விட்டுவிட்டுச் சென்றது குற்றம் குற்றமே.

இராமன் மாயமானைக் கொன்றுவிட்டிருப்பான் என்று இலக்குவன் தெளிவாக அறிவான். ஏது நேரினும், இராமனுடைய கட்டளையை மீறி அவனைத் தேடிச் செல்வது

ஆபத்திலேயே முடியுமென்பதையும் அவன் உணர்ந்தான். அப்படியிருக்க அவன் என்ன செய்திருக்கவேண்டும்? சீதைக்கு இராமனிடம் போகிறேன் என்று கூறிவிட்டுச் சீதை யின் கண்ணுக்கு எட்டாத தூரத்திலிருந்து அவளைப் பாது காத்திருக்கவேண்டும். சடாயுவுடன் போரிட நேர்ந்த இராவணன் இலக்குவன் மறைந்திருப்பதைக் கண்டிருப்பா னுயின், சீதையைத் தூக்கிச் செல்ல நினைத்திருக்கவே மாட்டான். இது சீதையிடம் பொய் கூறுவதாகத் தோன்றுமே எனச் சிலர் நினைக்கலாம். ஆனுல் புரையற்ற நன்மையைச் செய்யுமாயின் பொய்யும் மெய்யாய்ப் பயன்படும் என்ற கருத்துப்பட,

> "பொய்ம்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த
> நன்மை பயக்கு மெனின்"

என்று வள்ளுவப் பெருந்தகை வழங்கியுள்ளார்.

அவனுடைய நெஞ்சம், தான் சீதையைவிட்டுப்பிரிந்தால், அவளுக்கு இன்னல் வரும் என்று கூறிற்று. இராமனுடைய கட்டளையோ சீதையை விட்டுப்பிரியக் கூடாது என்பது. இவ்விரண்டையும் பொருட்படுத்தாமல், இலக்குவன் சென்றது தவறுடையதேயாகும்.

சீதை கூறிய கடுஞ்சொற்களைக் கேட்டபின் அவள் முன் நிற்பது சரியல்ல வெனினும் அவளை வேறு எவ்வகை யாலேனும் காக்கமுயன்றிருக்கவேண்டும். ஆனுல் எத்துணை அறிவாளிகளாக இருந்தாலும், விதி சதி செய்துவிடுகிறது. அது போலவே இலக்குவனும் தன் இயல்புக்கு மாருக "விதியின் பிழை" என்று கூறிவிட்டு இராமனை நோக்கிச் செல்லும் பிழைக்கு ஆளாகின்ருன். இவையெல்லாவற்றிற் கும் மேலாக இராமன்பாலும் ஒரு குற்றமுண்டாகிறது. பொன்மானின் தோற்றத்தைக் கண்டதும் சீதையின் பெண்மை மனம் அதை விரும்பிற்று என்பதற்காக இராமன் பெண்வழிச் செல்லும் பேதைமைக்கு உட்பட்டிருக்கக் கூடாது. இதனையே கம்பர்,

**இம்மா இங் நிலத்தினில்இல் லையெனு**
**எம்மான் இது எனச் சிறிது எண்ணல் செயான்**
**செம்மா னவள்சொற் கொடுதே மலரோன்**
**அம்மா னும்அருத் தியன்ஆ யினனுல்**

என்று பாடுகிறுர். இப்பாட்டில் "எம்மான் இது எனச் சிறிதும் எண்ணல் செயான்" என்பது கம்பனது கருத்தை நன்கு புலப்படுத்துகிறது. வாலிவதையிற் போல இங்கே கம்பனுக்கு இராமன் குற்றத்தை எடுத்துப் பேசுவதற்கு வாய்ப்பில்லை; இதை நெஞ்சில் வைத்துக்கொண்டே வாலி வதையில் கம்பன் உண்மையை விரிவாகக் கூறிவிடுகிறுன்.

# 23. வஞ்சத்துறவி

தன் கண்முன் தோன்றியது மாயமான் என்பதை இராமன் அறிந்தவுடன் தன்னுடைய தவறுக்காக மிகவும் வருந்தினன். இலக்குவன் தடுத்தும் தான் சீதையின் விருப் பத்தைப் பூர்த்தி செய்ய அந்த மானைத் தொடர்ந்து ஓடியது அறியாமை என்று எண்ணினன், 'சீதா இலக்குமண' என்று மான் கூறியதைச் கேட்டதும் சீதைக்கு இடையூறு வரவிருக் கிறது என நினைத்து விரைந்து வரும் வழியிலே இலக்கு வனைக் கண்டான். இராமனிடம், சடாயுவைப் பாதுகாவ லாக வைத்துவிட்டு வந்திருப்பதாக இலக்குவன் கூறினன். இராமன் சீதைக்கு ஆபத்து என்ற எண்ணத்துடன் பன்ன சாலை நோக்கி மிகவும் விரைந்து வந்துகொண்டிருந்தான்.

இலக்குவன் பன்னசாலையை விட்டு இராமனைத் தேடிச் சென்றபின் சீதைக்கு என்ன துன்பம் வந்தது என்பதைப் பார்ப்போம். இராவணன் ஒரு துறவி வேடத்தில் சீதையின் முன் வந்தான். விருந்தினர்களை உபசரிப்பது பண்டைக் காலத்து முறை. அது போலச் சீதையும் அவனுக்குத் தக்க படி அமுது படைத்தாள்.

மலரின் இதழ்கள் மெல்ல மெல்ல விரிந்தாற் போன்ற மெத்தென்ற நடையுடையவளும், தாமரைக் கண்களையுடைய வளுமான சீதையின் மேனியழகிலே ஈடுபட்ட இராவணன், அவளிடம் இப்பன்னசாலைக்கு உரியவர் யார் என்று கேட் டான். இதற்கு விடையாகத் தன்னுடைய கதை முழுவதும் அவள் அவனிடம் கூறி எவ்வாறு வனம்புக நேரிட்ட தென்பதையும் கூறி "நீங்கள் யார்" என்று அவனை வினவினள்.

**இராவணத் துறவி:** இலங்கையிலே இராவணன் என்று ஒரு மன்னன் ஆண்டு வருகிறன். அவன் பிரமாவின் பேரன். அந்தணர் குலத்திலே பிறந்தவன்; இந்திரனுக்கு

மேலான செல்வத்தைக் பெற்று வாழ்கின்றான். அவன் ஒரு காலத்திலே ஈசனுடைய இமயமலையையே தூக்கியவன். அவனுக்காகப் பல பெண்கள் தவம் கிடக்கின்றார்கள். அவன் தனக்கு விருப்பமான ஒரு பெண்ணைத் தேடிக் கொண்டிருக்கிறான், அத்தன்மையுடையவனுடன் சில காலம் வசித்துவிட்டு இங்கு வந்திருக்கிறேன்.

*சீதை :—*இலங்கை நாடு அரக்கர்களுடையதாயிற்றே! அங்கே சகல நற்குணங்களுமுடைய நீங்கள் எவ்வாறு வாழத் துணிந்தீர்கள்?

*இராவணன் :—*சந்திரன் போன்ற ஒளியுடைய முகத்தை யுடையவளே! அரக்கர் என்பவர்கள் தேவர்களைக் காட்டிலும் தீயவர்கள் அல்லர்; எங்களுக்கு அரக்கர் இனம் நன்மை செய்யும் இனமேயாகும்.

*சீதை :—*(அரக்கர் தலைவனை இராவணனிடம் பேசுகின்றோம் என்று அறியாது) தீயவர்களைச் சார்ந்தவர்களும் தீயவர்களெனவே கருதப்படுவார்கள். அரக்கர் இனத்தை என் கணவனை இராமன் அழிக்கவே இங்கு வந்துள்ளான்; அவனால் உலகம் இன்புறும்.

*இராவணன்:—*மனிதர் அரக்கரைக் கொல்லும் வல்லமை யுடையவர்களோ?

*சீதை:—*விராதன், கரன் முதலானவர்களை இராமன் கொன்றதைத் தாங்கள் அறிந்ததில்லையோ?

*இராவணன்:—*மனதில் தோன்றியதைத் தோன்றுகின்றபடி கூறுகின்ற பேதைப் பெண்ணே, மகாமேரு மலையைத் தோண்டி எடுக்க வேண்டுமானாலும், வடவா முகாக்கினியை அவித்துவிட விரும்பினாலும், உலகத்தையே ஒருசேரத் தூக்க வேண்டுமானாலும் இராவணன் ஒருவனால்தான் முடியும்!

*சீதை:—* இராவணனுடைய இருபது தோள்களைக் காட்டிலும், இராமனுடைய இரண்டு தோள்கள் மிகவும் பராக்கிரமம் பொருந்தியன என்பதைத் தெரிந்துகொள்ளும்.

இவ்வார்த்தைகளைக் கேட்டவுடன் இராவணன் மிகவும் கோபம் கொண்டு சீதைக்குத்தன் சுய உருவத்தைக் காட்டினன். அவ்வுருவத்தைக் கண்டு சீதை அஞ்சி நின்றாள். சமாதானப்படுத்த வேண்டி அவளை இராவணன் நோக்கி "அன்னப் பறவை போன்றவளே! நடுக்கம் அடைய வேண்டாம். என்னுடைய தலையில் மகுடம் தாங்குவது போல, உன்னை என் சிரமேல் வைத்து மகிழ்வேன்- தேவ மாதர்களும் உன் அடிபணிவர். பதினன்கு உலகையும் ஆளுகின்றேனுதலால், நீ பெருஞ் செல்வத்தோடு வாழ்வாய்" எனக்கூறினன்.

சீதை இராவணனைப் பழித்துக் கூறினள். ஆனல் இராவணன் இராமனுடைய அம்பு அவனை யாதும் செய் யாது என்று கூறிப் பின்னும் அவளைத் தன் எண்ணத்திற்கு உடன்படக் கூறினன். ஆனல் சீதை அவனுடைய சொற் களுக்குச் செவி சாய்க்கவில்லை.

சீதையின் அழகிலே மயங்கியவனுயினும், தான் விரும்பாத பெண்ணைத் தொட்டால் அழிய நேரும் என்று ஒரு சாபம் தன்மேல் இருப்பதை எண்ணினன். அதனல் அவன் சீதையைத் தொடுவதற்கஞ்சிப் பன்னசாலையுடன் அவளைத் தூக்கிச் சென்றான். இதனைக் கம்பர்,

ஆண்டு ஆயிடைத் தீயவன் ஆயிழையைத்
தீண்டாவெனும் மேலுரை சிந்தை செயாத்
தூண்டான் எனல் ஆம் உயர் தோள்வலியால்
கீண்டான் நிலம் ஓசனை கீழ்புடையே

என்று கூறுகின்றார்.

முதல் நூலாகிய வான்மீகத்தில் இராவணன் சீதையைப் பன்னசாலையுடன் தூக்கிக் கொண்டு போனதாகக் கூறப்பட வில்லை. "புதன் ரோகிணியைப் பிடிப்பது போல இடது கையால் சீதையின் தலைமயிரையும், வலது கையால் துடை களையும் சேர்த்துப் பிடித்து எடுத்தான்; தங்கத்தாலும், இரத்தினத்தாலும், அலங்கரிக்கப்பட்ட விமானத்திலே, அவளை ஏற்றி, இலங்கைக்குக் கொண்டு சென்றான்" என்று வான்மீகி கூறுகின்றார்.

**வாமேனே சீதாம் பத் மாக்ஷீம் மூர்த்த ஜே ஷு க ரேணச: ।**
**ஊர் வோஸ்து தக்ஷிணே னைவ பரிஜக்ராஹ பாணிநா. ॥**

என்பது வான்மீகம்.

இவ்வாறு இராவணன் சீதையைக் கொண்டு செல்லும் போது சீதை இராவணனை நோக்கி, "அரக்கனே, நீ மிகவும் வல்லவன் என்று கூறிக்கொள்ளுகிறாயே! உனக்கு வல்லமை யிருந்தால் தேரைச் செலுத்தாது நிறுத்து. என் கணவனை இராமனிடத்தில் போர் செய்து வெற்றி பெற்றுப் பின் செல்வாயாக. அவனிடம் தோற்று விடுவோமென்ற பயத்தினா லன்றோ நீ என்னைக் கள்வனைப் போல் கவர்ந்து செல்லுகிறாய்" என்று சொல்லவும், இராவணன், "வலிமையில்லாத உடம்பையுடைய மனிதர்களுடன் நான் போரிடுவது என் ஆண்மைக்கு இழுக்குத் தருவதொன்றாகும்; ஆகையால் தான் இராம இலக்குவர்களுடன் போர் செய்ய விரும்ப வில்லை" என்று விடை கூறினான்.

சீதையின் கூக்குரலைக்கேட்ட சடாயு, அவளைக்காக்க முன் வந்தான். இராவணனுக்கும் சடாயுவிற்கும் எழுந்த போரில் சடாயு மிகவும் உக்கிரமாகப் போர் செய்து பல காயங்களுடன் மண்மீது விழுந்தான். இராவணன் சடாயுவை வென்ற பின், இலங்கைக்குத் தன் விமானத்தில் சீதையைக் கொண்டு சென்றான்.

# 24. துன்பமாலை

சீதைக்கு மிகவும் ஆபத்து வந்துள்ளது என்று எண்ணி வந்த இராமலக்குவர்கள் சீதையைக் காணாது வருந்தினர். அப்பொழுது, முன்பு பன்னசாலை இருந்த இடத்திற்கு அருகில் தேர் ஓடிய சுவட்டைக் கண்டனர். அந்தச்சுவடு சிறிது தூரத்திற்குத் தான் சென்றது. பின்னர் அந்தச் சுவடுகள் மறைந்திருந்ததைக் கண்டு விமானத்திலேறி வந்த ஓர் அரக்கன்தான் சீதையைக் கவர்ந்து சென்றிருக்க வேண்டும் என்று முடிவு செய்தனர்.

அந்த நாளிலே விமானம் இருந்ததோ இல்லையோ நாம் அறியோம். ஆனால் விமானம் எவ்வாறு இருக்கும்? எவ்வாறு போகும் என்று அக்காலத்தினர் நன்கு அறிந்திருந்தனர் என்பதைக் கம்பராமாயண இரு பாடல்களால் அறிகிறோம்,

தேர் பூமியில் ஓடியதையும், பின்னர் விண்ணிலே சென்றதையும் கம்பன் கவிகளிலே நாம் காணும்போது, அவை இன்று ஆகாய விமானங்கள் பூமியிலே சிறிது தூரம் சென்று மெல்ல மெல்ல விண்ணிலே பறப்பதை நமக்கு நினைவூட்டுகின்றன. கற்பனைக்கும் எட்டாத இவ்வுண்மை நிகழ்ச்சியை ஏறத்தாழ 800 ஆண்டுகளுக்கு முன்னரே,

> ஆம் அதே இனி அமைவது என்று அமலனும் மெய்யில்,
> தாம வார்கணைப் புட்டிலும் முதலிய தாங்கி,
> வாம மால்வரை மரன்இவை மடிதர வயவர்
> பூமி மேலவன் தேர்சென்ற நெடுநெறி போனார்.

> மண்ணின்மேலவன் தேர்சென்ற சுவடெல்லாம் ஆய்ந்து
> விண்ணின் ஓங்கிய தொருநிலை மெய்யுற வெந்த
> புண்ணி னூடுறு வேலென மனமிகப் புழுங்கி
> எண்ணி நாம்இனிச் செய்வதுஎன் இளவலே என்றான்

எனக் கம்பர் அழகாக இரண்டு கவிகளால் மிகவும் நயம்படக் கூறியிருக்கின்றார்.

தெற்கே தேர் சென்றுள்ளது என அறிந்து அந்தத் திசையை நோக்கி, இராம இலக்குவர்கள் சென்றனர். வில் அம்புகள் ஒடிந்து கிடப்பதையும், வீணை பொறிக்கப் பட்ட கொடி விழுந்து கிடப்பதையும் கண்டனர். சடாயு விடம் அரக்கர்கள் போர் செய்துவிட்டுச் சென்றிருக்க வேண்டும் என்று துணிந்து சடாயுவைத் தேடிச்சென்றனர். சடாயு இராவணனால் முறியடிக்கப்பட்டுத் தரையின்மீது வீழ்ந்து கிடப்பதைக் கண்டதும், அவன் மேல் வீழ்ந்து இராமன் அழுதான்.

சடாயு இராமனுக்குச் சில நல்லுரைகளைக் கூறலுற்று, "சீதையானவள் அரக்கனால் கவர்ந்து செல்லப்பட்டு விட்டாள். விதிக்கு முன்னால் மனிதர்கள் இயல்பான தங்களுடைய சக்தியை இழந்து நிற்கின்றனர். மதியினாலும் விதியை வெல்ல முடியாது. ஆகையால் மனிதன் துன்பம் வருங்காலத்திலும் மனதைத் தேற்றிக்கொள்ள வேண்டும். துன்பமும் இன்பமும் வருமிடத்து எதனையும் விலக்க நம்மால் முடியாது. நான் எவ்வளவோ முயன்று போர் செய்தும் அவனை வெல்ல முடியவில்லை. அவன், தனக்குச் சிவன் தந்த வாளால் என்னை வெட்டி வீழ்த்தி விட்டான்" என்று சொன்னான்.

இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றுவிட்டான் என்று கேட்டவுடன் இராமனுக்கு மிகுந்த கோபம் ஏற்பட்டது. அவனுடைய கோபம் உலகத்தையே கலக்கும் வலிமை பெற்றிருந்தது. என்றாலும், அவனுடைய நிலை மிகவும் சாதாரண மனிதனுடைய மன நிலையையே கொண்டு இருந்தது.

சடாயு அவனைச் சமாதானப் படுத்திச் சீதையைத் தேடு வதற்கு ஆயத்தம் செய்யுமாறு கூறிவிட்டு உயிர்விட்டான். இராமன் சடாயுவைத் தந்தைக்குச் சமமாக நினைத்தா னதலால் அவனுக்கு வேண்டிய ஈமக்கடன்களைத் தானே முன்னின்று செய்தான்.

அதன் பின் தம்பியுடன் சீதையைத் தேடி அலைய லுற்றான். அவர்கள் அவ்வாறு அலைந்து கொண்டிருக்கும்

போது இரவு நேரம் வந்துவிட்டது. சீதையைப் பிரிந்து துயரத்துடன் அவன் வாடியிருக்கும் போது தோன்றிய வெண்நிலவின் தோற்றம் அவனுடைய நெஞ்சின்கண் சீதையின் நினைவை எழுப்பி அவளை இழந்த வேதனையை அதிகரிக்கச் செய்தது. இராமன் சீதையை நினைந்து நினைந்து வருந்தினன். மன்மதனுடைய கணைகள் இராமன் மார்பிடையே பாய அவன் சீதையின் நினைவால் வாடினன்.

நீண்டு கொண்டே போய்விடுமோ என்று இராமன் அஞ்சிய இரவும் மறைந்தது. சூரியன் உதயமானன். இலக்குவனும், இராமனும் சீதையைத் தேடிப் பல யோசனை தூரம் சென்றனர். வழியில் ஒரு பளிங்குப் பாறையைக் கண்டு அங்கே தங்கினர். இராமனைத் துன்பத்திற்கு ஆளாக்குவதற்குத் திரும்பவும் இரவு வந்தது. இராமனுக்குத் தாகமேற்பட இலக்குவனை அழைத்துத் தண்ணீர் கொண்டுவரச் சொன்னன். அவனும் அவ்வாறே சென்ருன். சென்றவிடத்தில் அயோமுகி என்னும் அரக்கி ஒருத்தி அவன் மேல் தீராக் காதல் கொண்டாள்.

இலக்குவன் அயோமுகியைப் பார்த்து, "நீ யார்?" என்று கேட்டான். அவனுக்கு அயோமுகி "பேரெழில் மிக்கவனே, நான் உன் மேல் மிகவும் காதல் கொண்டுள்ளேன். என்னை உய்விப்பாயாக" என்ருள். அயோமுகியின் ஆசைக்கு இசையாமைகவே, அவள் அவனைத் தானே தூக்கிக் கொண்டு சென்ருள்.

மிக்க நேரமாகியும் இலக்குவன் வராதது கண்டு இராமன் அவனைத் தேடிச் செல்லலானன். அவன் இருட்டிலே தேடிச்செல்ல வேண்டியிருத்தலால் தன்னுடைய கையிலிருந்த ஓர் அஸ்திரத்தை எடுத்து முடுக்கவும் அங்கு உள்ள இருள் போய்விட்டது. இது நாம் இப்பொழுது இரவிலே உபயோகிக்கும் "டார்ச் லைட்" என்று கூறப்படும் மின் விளக்கை ஞாபகப்படுத்துகிறது. இதனைக் கம்பர்,

அங்கியி னெடும்படை வாங்கி அங்கு அது
செங்கையிற் கரியவன் திரிக்கும் எல்லையில்
பொங்கிரு ளப்புறத் துலகம் புக்கது
கங்குலும் பகலெனக் காட்டிற்றே

என்று இசைக்கின்றார்.

அயோமுகி என்னும் அரக்கியின் கையிலே இலக்குவன் அகப்பட்டுக் கொண்டான் என்பதை இராமன் இருள் நீக்கத்தில் அறிந்தான். பின்னர் இலக்குவன் அயோமுகி யுடன் போர் செய்து அவளை வென்று அவளுக்கு உயிர்ப் பிச்சை தந்துவிட்டு இராமனிடம் வந்து சேர்ந்தான்.

பின்னர்க் கவந்தன் என்ற அரக்கன் கையில் இராம இலக்குவர் சிக்குண்டனர். கவந்தனது இரு தோள்களையும் அவர்கள் வெட்டி வீழ்த்தவே அவன் தன் முற்பிறப்பை உணர்ந்தான். அவன் இராமனை நோக்கி "இராமனே, நான் தனு வமிசத்தவனான ஸ்ரீ என்பவனுடைய குமாரன். விசுவாவசு என்று என்னைக் கூப்பிடுவார்கள், ஒரு முனிவ னுடைய காய்கனிகளைக் கவர்ந்ததனால், என்னை அம் முனிவர் சபித்து விட்டார். நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்ள இராமனால் இச் சாபம் நீங்கும் என்று கூறினார்" என்றான்.

கவந்தன் சாபம் நீங்கப்பெற்று, நல்ல உருவத்துடன் இராமனை வணங்கினான். அவன் இராமனை நோக்கி "உங் களுக்குத் தக்கத் துணை வேண்டுமானால், மதங்கர் ஆசிரமத் திற்குச் செல்லுங்கள்" என்று கூறினான்.

சபரி முனிவர் இராமலக்குவர்களுக்கு நல் விருந்திட் டார். அம்முனிவர் அவர்கள் இருவருக்கும், சுக்ரீவனைப் பற்றிக் கூறி அவனது உதவியால் சீதையை மீட்கலாம் என்று கூறினார்.

பின்னர் முயன்று பெற்ற தவவலிமையினாலே சபரி முத்தியடைய இராம இலக்குவர்கள் அவ்வாசிரமத்தை விடுத்துப் பம்பைப் பொய்கையை அடைந்தார்கள்.

# 25. உண்மை விளக்கம்

கிட்கிந்தா காண்டம் ஆரணிய காண்டம் போலச் சிறப்புடைய பகுதியாகும். கம்ப இராமாயணத்திலே நடு நாயகமாக இது விளங்குகிறதென்ருலும் இராமனுடைய குண நலங்களில் குறைகண்டு சாதாரண மக்களுள் ஒருவனுக அவனை நினைக்குமாறு செய்துவிடுகிறது இக்காண்டம்.

இராமன் தன் மனைவியின்பால் கொண்ட மட்டற்ற காதலால், பொன்மானைத் தேடிச்சென்று பல இன்னல்களை அடைந்ததோடு பெண்ணேவல் செய்த பேதையாய்ப் பெரும் பழிகளையும் சுமந்தான் என்று பலரும் இகழும் வண்ணம் சில நிகழ்ச்சிகள் இக்காண்டத்திலே நடைபெறுகின்றன.

வரலாற்று முறையில் நோக்கினுல், கிட்கிந்த மலையிலே வாழ்ந்த உயரிய நாகரிகமும் பண்பாடுமில்லாத மக்கள் கூட்டத்தின் வரலாற்றைக் கூறுகின்றது இக்காண்டம் என்றும், இவர்கள் குரங்கு எழுதிய கொடியும் இலச்சினையும் உடையவர் என்றும் நாம் கொள்ளவேண்டும். இராமன் இக்கூட்டத்தாரிடத்தில் மிகுந்த அன்பு வைந்திருந்தானு? என்றும் நாம் ஐயுறுகிருேம்.

இராமன் "வாலியோ ஒரு மிருகம், அதனுல் தான் நான் அவனை வேட்டையாடினேன்" எனக் கூறுகிருன். ஆனுல் இக்குரங்குக் கூட்டத்தைக் கொண்டுதான் 'முக்கோடி வாழ்நாளும் முயன்று பெற்ற தவவலியும், எக்கோடி யாராலும் வெல்லப்படாய்'என்று இறைவன் கொடுத்த வரமும் உடைய இராவணனை இராமன் வென்ருன் என்று எண்ணும்போது நம்முடைய சிந்தனை கலந்து இராமன் வரலாறு ஒரு கட்டுக் கதைதானே என ஏமாந்து மேலே செல்ல மறுக்கிறது. பகுத்தறிவு, "குரங்காவது பாலம் கட்டுவதாவது! அரக்கர்களை வெல்வதாவது! எல்லாம் கட்டுக்கதை" என்று கூறுகிறது. வரலாறு தன்னுடைய ஏடுகளைத் திறக்க மறுக்

கிறது. இராமாயணம் என்கிற உயரிய கட்டிடத்தின் அமைப்பும் உள்ளீடும் இங்கே அசைந்து ஆட்டம் கொடுக்கின்றன.

அந்த எண்ணச் சுழலிலே மனம் அலமரும்போது, பாலை வழிப்போக்கனுக்குப் பசும்புற் சூழல் கிடைத்தது போல வான்மீகி இராமாயணத்தில் சில சுலோகங்கள் கிடைக்கின்றன. அவற்றிலே மிகவும் சிறப்பான சுலோகத்தின் பொருள் பின்வருமாறு:—

"நான் வாலியால் துரத்தியடிக்கப்பட்டபின், உலகங்களைச் சுற்றிவந்தேன்; அப்பொழுது நாம் வசிக்கும் இப்பூமியானது தீயுருண்டை வடிவத்துடன் பிரகாசமாகத் தோன்றியது. இவ்வுலகம் பசுமாட்டின் கால் குளம்பைப்போல இருந்தது. அது தன்னைத்தானே சுற்றிக் கொண்டும் இருந்தது" என்றும் சுக்ரீவன் சொல்லுகிறான்.

நாம், இன்று ஆகாயவிமானங்களில் சென்றுகொண்டிருக்கிறோம். அங்கிருந்து உலகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் உலகம் சுற்றுவதை நாம் கண்டதில்லை. சுக்ரீவன், தான் உலகத்தைக் கண்டதாகவும், அது ஏறத்தாழ உருண்டை வடிவமாகவும், தன்னைத்தானே சுற்றிக் கொள்ளும் தன்மையுடையதாகவும் இருப்பதைக் கண்டான். இதன் கருத்து என்ன?

உலகம் உருண்டை வடிவமாக இருப்பதையும் தன்னைத் தானே சுற்றிவருவதையும் நாம் இன்று உலக வரலாற்றில் படித்து வருகிறோம். மேலைநாட்டில் கொலம்பசிற்கு முன் வாழ்ந்த பழங்குடி மக்கள் உலகம் தட்டை என்றே நம்பியிருந்தனர். ஆனால் வரலாற்று ஏடுகள் காணாத காலத்திலேயே நம் நாட்டவர்கள் உலகம் உருண்டை என்பதைக் கண்டிருந்தனர்.

உலகம் உருண்டை வடிவாய் நின்று சுற்றிக்கொண்டிருப்பதைக் காண வேண்டுமானால், நாம் இப்பொழுது வெளியென்று கூறப்படுகின்ற (Stratosphere) வாயுமண்டலத்துக்கு அப்பால் "வலியிடை வழங்கா வழக்கரு நீத்தம்"

என்ற புறநானூறு கூறும் நிலைக்குச் சென்றால் தான் காண முடியும். கிட்கிந்தையில் வாழ்ந்த "பண்பாடு அற்ற மனிதர் கள்" என்று கூறப்படுகின்ற வானரர்கள் அந்த வெளிக்கு அப்பாலும் சென்றிருக்கின்றனர். விஞ்ஞானத்தின் உண்மை களையும், பூமி சாத்திரங்களையும் அறிந்த ஒரு கூட்டத்தை நாகரிகமற்ற மிருகசாதி என்று ஏன் கூறுகிறார்களோ நமக்குப் புரியவில்லை.

வான்மீகி காலத்திலே இராமாயணம் நடந்தது என்று பலரும் கூறுகின்றனர். ஆனால் வான்மீகியில் காணப்படும் பல இடர்ப்பாடுகளைக் காணும்போது, இராமனுடைய கதை வான்மீகிக்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்னதாகவே நடந்திருக்கவேண்டும் என்ற ஐயம் எழுகின்றது. இராமா யணத்தை நாரதன் கூறினான்; வான்மீகி, தன்னுடைய சொல் வன்மையினால், எழுதினான். இதிலே கூறப்பட்டுள்ள பல விடயங்கள் வான்மீகியின் சொந்தச் சரக்கு என்பதற்கு முதல் அத்தியாயமே சான்று பகர்கின்றது. அங்கே பிரம தேவன் தோன்றி, "இராமனுடைய கதையை எழுதுவாயாக; என்னுடைய உதவியினால், பல உண்மைகள் உனக்குத் தோன்றும்" என்று கூறுகின்றான். இதிலிருந்தே நாரதர் கொடுத்த வெளிச்சட்டத்தை வைத்துக்கொண்டு பிரமன் அருளால் வான்மீகி தன் பாவன்மை ஒன்றையே கொண்டு புலமையைக் கைவிட்டு எழுதிய காவியம் இந்த இராமாயணம் என்பது தெளிவாகத் தெரிகிறது. அதனால் அவர் உண்மை காணும் திறமின்றிக் கிட்கிந்தையிலே வாழும் வானரர்களைக் குரங்குகளாக நினைத்துவிட்டார், அவர்களுக்கு நீண்ட வாலும், குட்டையான வாலும் உள்ளன என்று பாடியிருக் கிறார். உண்மையை நோக்குமிடத்து, வானரங்கள் என்று கூறப்படுகின்ற இனம் வான்மீகி போன்ற மனித இனமே அன்றி வேறு விலங்கினம் அல்ல என்பது தெளிவாகும்.

அரசியல் வரலாற்று நூல்களை ஆராய்ந்து படிப்பவர், கொடியின் பெயராலும், மரத்தின் பெயராலும் பண்டை நாளில் மக்கள் குறிக்கப்பட்டனர் என்பதை அறிவர். இன்றும் இவ்வுண்மையைக் காண்கிறோம். பிரித்தானிய தேசத்தவர்

களை, "ஜான்புல்" (புல்—எருது) என்றும், ருசிய மக்களைக் "கரடி" என்றும் கூறுவது இயல்பு. 'ருசியக் கரடிகள் போலந்துக்குள் சென்றன' என்று நாம் நாளிதழ்களில் படிக்கும் போது நாம் அவர்களை விலங்கினங்களில் ஒன்ருகக் கருதுவதில்லை.

ஆஸ்திரேலியாக் கண்டத்திலே உள்ள பழங் குடிகள் தங்களுடைய குடிகளை விலங்கினங்களின் பெயர் கொண்டே வழங்கிவந்தனர். நம் நாட்டில் காணப்படும் கல்வெட்டுக்கள் ஒன்றில் "கோழி யானையை இங்கு வென்றது" என்ருெரு வாக்கியம் காணப்படுகிறது. இதனைக் காணும்போது கோழி யாவது யானையை வெல்வதாவது என்ற ஐயம் என் மனதிலே ஏற்பட, நான் அதைப் பற்றிப் பல அறிஞர்களிடத்தில் கேட்டேன். கோழிக் கொடியையுடைய ஒரு கூட்டத்தார், யானைக் கொடியுடைய ஒரு கூட்டத்தை வென்ற இடம் அது என்று கூறினர். இன்னும் சில குடும்பங்களுக்குப் பெயர்கள் பல வழிவழியாகக் குறிக்கப் படுகின்றன. அவற்றை ஆராய்ந்து நோக்கினுல் சில மரங்களின் பெயராகவும், விலங்குகளின் பெயராகவும், பறவைகளின் பெயராகவும் இருந்து வருகின்றன. அகத்தியன் குடத்தில் தோன்றினுன், அனுமன் காற்றில் தோன்றினுன், சோழன் சூரியனில் தோன்றினுன் என்று கூறப்படுவனயாவும் இப்படித் தோன்றினவே என்பதை அறிவுடையோர் எண்ணிப்பார்க்க வேண்டும். அறியாமையால் இவ்வுண்மையைப் பொய்யான கதைகள் தோன்றி மறைத்துவிடுகின்றன.

கால மாறுதல்களினுல் சில உண்மையான நிகழ்ச்சிகளும் வெறும் கதைகளாக மாறிவிடுவதைக் காண்கிருேம், அது போல வானரங்கள் என்ற மனித இனம் வாழ்ந்தது என்று நம்ப முடியாத நிலையிலே நாம் இன்று இருக்கிருேம்.

விஞ்ஞான அறிவும் உலகியல் அறிவும் பெற்றவர்களும் வீரர்களுமான வானரர் தலைவனை வாலியை ஏன் இராமன் "நீ ஒரு மிருகம்; அதனுல் வேட்டையாடினேன்" என்று கூறினுன் என்ற கேள்வி எழுகிறது. இதற்கு விடை நம் திருவள்ளுவப் பெருந்தகை கூறுகிருர். மக்கள் நன்கு கற்று

உணர்ந்தவர்களாக இருக்கவேண்டும். ஆனால் மிகுந்த கல்வி அறிவு பெற்ற பின்னும் அறநெறியினின்றும் தவறிய ஒருவனை விலங்கு என்றே கருதவேண்டும். வாலி தன் தம்பியின் மனைவியை அவனிடமிருந்து பிரித்துத் தனக்கு உரியவளாக்கிக் கொண்டதனால் அவன் அற நூல்களைக் கற்றவனாக மாட்டான். கல்லாதவன் எவனாயினும் விலங்கிற்குத்தான் ஒப்பான் என்பது வள்ளுவர் கருத்து ; இதனை அவர்,

> " விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
> கற்றாரோடு ஏனை யவர் "

என்று கூறுகின்றார்.

மக்களே போன்ற கயவர்களும் இருக்கின்றார்கள். உயர் குடியில் பிறந்தும் அற உணர்வை இழந்து, தம் மனம் போன படி செய்பவர்களும் கயவர்களின் கூட்டத்திலே சேர்க்கப்படத் தக்கவர்களே. தேவர்களானாலும் அவர்கள் தான்தோன்றித் தனமாகக் காரியங்களைச் செய்தால் அவர்களும் கயவர்களே யாவர். இராமன் வாலியைக் கொல்ல வாக்களித்தபோது, கிட்கிந்தை நாட்டிலுள்ள நாகரிகத்தை அறிந்தவனல்லன். அங்கு மறை வழிவந்த மணமுறையில்லை. கல்வி கேள்விகளில் உயர்ந்திருந்த போதிலும், மக்கள் அங்கு ஒரு கட்டுப்பாடான வாழ்க்கையைக் கொண்டிருக்கவில்லை. தாங்கள் நினைத்தபடி செய்கின்ற கூட்டமாக இருந்ததால், இராமன் அவர்களிடம் பெருமதிப்பு வைக்கவில்லை. குண நலங்களில் மிகவும் தாழ்ந்து இருந்ததினால், இராமன் அக்கூட்டத்தை விலங்குக் கூட்டம் என்று கூறியதில் தவறொன்றுமில்லை.

கிட்கிந்தையில் பரவியிருந்த நாகரிகம்தான் பிராமணனான இராவணன் முதலிய அரக்கரிடத்தும் இருந்திருக்கிறது. சுக்ரீவன் மனைவியை வாலி கவர்ந்து கொண்டதற்கும், இராமன் மனைவியை இராவணன் தூக்கிக்கொண்டு ஓடியதற்கும், அசமுகி இலக்குவனைத் தூக்கிச் செல்ல முயன்றதற்கும் இதுபோன்ற மற்ற நிகழ்ச்சிகளுக்கும் அதுவே காரணமாகும். இப்படி ஒரு நாகரிகம் இராமாயண காலத்தில் இருந்திருக்கிறது என்பதுதான் நாம் இங்கே கருதவேண்டியது. இதனுடைய அடிப்படை என்ன

வென்றால், அழகுடைய பொருள் எதுவாயினும் அது வலி யுடையவர்களுக்கே உரியது என்பதாகும். சுந்தோபசுந்த நியாயம் என்ற கொள்கையும் இந்த அடிப்படையில் உண்டானதே. மேனாட்டவர்கள் அழகுடைய பெண்ணைப் பெறுவதற்காக ஒருவரோடு ஒருவர் வேலும், வாளும், துப் பாக்கியும் கொண்டு பூசல் இடுவதும் (Single combats involving love) இந்த நாகரிகத்தின் கூறேயாகும்.

வானரங்கள் தமிழர்களுடைய இனம் என்று சிலர் கூறு வதை ஏடுகளிலும், மேடைகளிலும் கேட்கிறோம். அது முற்றி லும் தவறு; அவர்களுடைய பண்பாட்டிற்கும், பண்டைத் தமிழருடைய பண்பாட்டிற்கும் யாதொரு தொடர்பும் இருப் பதாகத் தெரியவில்லை. மேலும் தமிழரிடம் இந்த நாகரிகம் எக்காலத்திலும் இருந்ததில்லை, பிறர்மனை நோக்காமையே பேராண்மை என்ற தமிழ்க் கொள்கையை வற்புறுத்துவதே திருவள்ளுவர் கருத்து என்பது அவர் கூறிய பிறன்மனை நயவாமை என்ற அதிகாரத்தில் இனிது விளங்குகிறது.

அழகுடைய பொருளை வலியுடைய எவரும் அனுபவிக் கலாம் என்ற கொள்கை வடநூல் மிருதிகளில்தான் உண்டு. இது பண்டை நாளில் வடமொழியாளரிடத்தும் மேலை நாட்டவரிடத்தும் இருந்தது; இன்றும் இருந்து வருகிறது. அந்தக் கொள்கையின்படியே வாலி இறந்தவுடனே சுக்கிரீவ னிடம் சென்று மது உண்டு, அவனுடன் இன்பம் நுகரும் தாரை எங்கே? "பிறர் மனம் புகுவதே கற்பிற்கு இழுக்கு" என்று கருதும் தமிழினம் எங்கே! இதனைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

வானரங்கள் என்ற இனம் மனித இனம்தான் என்ப தையும், அவர்கள், வீரத்திலும், கல்வி அறிவிலும் மிக்க வர்கள் என்பதையும் நாம் அறிகிறோம். ஆனால், நாகரிகம் என்ற பெயரால் மனிதப் பண்பாட்டையே மறந்து, வள்ளுவர் கூறியதுபோல, விலங்குகளைப் போலவும், கயவர் களைப் போலவும் கிட்கிந்தையிலும் அதனைச் சூழவுள்ள பகுதி யிலும் ஒருவகை மக்கள் இராமாயண காலத்தில் வாழ்ந்து வந்தார்கள் என்று கூறி இப்பொழுது அமைவோம்.

## 26. இருளில் ஓர் ஒளி

பம்பையாற்றை அடைந்த இராமன், அந்த ஆற்றிலே நீராடினன். அவனுடைய காதல் வெப்பம் தாங்கமாட்டாமல் அந்நதியினுடைய நீர், தன்னுடைய தட்பமெல்லாம் இழந்து வெம்மையுற்று நின்றது.

அந்த ஆற்றிலே விளையாடிய அன்னங்களும், மலர்ந்து நின்ற தாமரைப் பூவும், பிறவும் இராமனுக்குச் சீதையின் நடையையும் முகத்தையும் நினைப்பித்த வண்ணமிருந்தன. இராமன் சீதையை நினைந்து நினைந்து வருந்தித் தன் நினைவையே இழந்து நின்றான். கடிமணம் புரிந்தது முதல், இருபத்தைந்து ஆண்டுகள், கனவிலும், நனவிலும், சீதையின் நினைவன்றி வேறு ஒன்றும் கொண்டிராதவன் இராமன்; அவள் பிரிந்தபின் அவன் பித்தனுகிவிட்டான், காதல் நினைவினல் பித்தம் தலைக்கு ஏறியபின், எல்லாக் குண நலங்களுமுடைய இராமன்பாலும் குற்றம் ஏற்படத் தொடங்கியது. 'கழிகாமம், அறம் தெரி திகிரிக்குத் தடைசெய்யும் தீது' என்பது தமிழர் அறநூல் விதி. இதனை முன்னரே கூறுவாராய்ப், பம்பையாற்றுப் படலத்திலே கம்பநாடர், இராமனுடைய அவல நிலையை அழகாகக் கூறிவிடுகின்றார்.

இராம இலக்குவர்கள் சீதையைத் தேடிக்கொண்டே சென்றனர். அவ்வாறு சென்றவர்கள் இருசியமுக பருவதத்தின் ஊடே செல்வாராயினர். அங்கே வானரர் பெருங் கூட்டமாக வாழ்ந்தனர். அவர்களுக்குத் தலைவன் சுக்கிரீவன்; அவன் இராம இலக்குவர்களைக் கண்டதும் அச்சத்தினல் விரைந்து மறைந்து ஓடினன். ஓடிய அவன் சேமமான ஓர் இடத்திலே இருந்துகொண்டு தன் துணைவனை அனுமனை வருவித்து, "அதோ இரண்டு வீரர்கள் வருகின்றார்கள்; அவர்கள் ஏன் இங்கு வருகிறார்கள்? காரணத்தை அறிந்துவா" என ஏவினன். இராம இலக்குவர்கள் வாலியின் ஆட்கள் அல்லர் என்பதை அறிந்துவந்து

சுக்கிரீவனுக்குக் கூறி அவனது அச்சத்தை அனுமன் தவிர்க்கின்றான்.

சுக்கிரீவன் ஆணைப்படி வந்த அனுமன் இராம இலக்கு வர்களை நோக்கினான், "இவர்களைத் தேவர்களுக்கெல்லாம் தலைவர்கள் என்று கருதலாம்; ஆனால் அவர்களோ மூவர்; இவர்களோ இருவர்; ஆகவே அவ்வாறு நினைக்க இடமில்லை. கம்பீரப் பார்வையிலே, இந்திரனையும் நல்லொழுக்கத்தில் தருமனையும், வடிவிலே மன்மதனையும், வல்லமையிலே கூற்றையும் போலவரும் இவர்கள் யாவராக இருக்கலாம்?" என்று நினைத்தான். இதனைக் கம்பர்,

> "கதமெனும் பொருண்மையிலர் கருணையின் கடலனையர்
> இதமெனும் பொருளலதுஓர் இயல்புணர்ந்திலர் இவர்கள்
> சதமன்அஞ் சுறுநிலையர் தருமன்அஞ் சுறுசரிதர்
> மதனன் அஞ்சுறுவடிவர் மறலி அஞ்சுறுவிறலர்"

என்று கூறுகின்றார்.

இக் கருத்தினையே சிந்தாமணியாசிரியர், சச்சந்தன் இயல்பு கூறுமிடத்து,

> "தருமன் தண்ணளி யால்தனது ஈகையால்
> வருணன் கூற்று உயிர் மாற்றலின் வாமனே
> அருமை யால்அழ கிற்கணை ஐந்துடைத்
> திருமகன் திரு மாநில மன்னனே"

என்று கூறுவது ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது. கம்பர் திருக்குறளிலே ஓர் அகப்பையும் சிந்தாமணியில் ஓர் அகப்பையும் முகந்து கொண்டார் என்பது பழமொழி; அதற்கு ஈது ஒரு சான்று.

தன் முன்னே வந்து நின்ற அனுமனை இராமன் நோக்கி, "உன்னுடைய வருகை துன்பமில்லாத நல்வர, வாகுக. நீ எவ்விடத்திலிருந்து வருகின்றாய்? நீ யார்?" என்று கேட்டான்.

அனுமன் தான் வாயுபகவானுக்கும் அஞ்சனை என்பவளுக்கும் பிறந்தவன் என்றும், வானரர் தலைவனான

சுக்கிரீவனுக்கு உற்ற நண்பனென்றும் கூறிச் சுக்கிரீவனது வரலாற்றையும் விளங்கவுரைத்தான். சுக்கிரீவனுடைய, துன்ப நிலையை அறிந்த இராமன் அவனைத் தன்னிடத்தே அழைத்து வருமாறு அனுமனைப் பணித்தான்.

அனுமன் சுக்கிரீவனிடம் சென்று, "ஐய, இங்குவந்திருக்கின்ற இரு வீரரும் நமது பகைவனை வாலியின் ஆட்கள் அல்லர். அவ்வாலியை, வலியப் போரிட்டு மடக்கி வெற்றி கொள்ளும் ஆற்றலுடையர். மூன்று உலகங்களிலும் இந்த இராம இலக்குவர்களுக்கு இணையாக யாருமே இருக்க முடியாது. இவர்களைவிட உயர்ந்தவர்களை எட்டுத்திக்கிலும் நாம் காணமுடியாது. இவர்கள் அமுதம் போன்றவர்கள்," என்று மிக்க களிப்புடன் கூறினன், இக் கூற்றைக் கம்பநாடர்,

**"மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுளார்**
**எண்ணுளார் இயலுளார் இசையுளார் திசையுளார்**
**கண்ணுளா ராயினர் பகையுளார் கழிநெடும்**
**புண்ணுளார் ஆருயிர்க் கமிழ்தமே போலுளார்"**

என்று சிறப்பித்துக் கூறுகின்றார். பின்னர் அனுமன் துணையால் சுக்கிரீவனும் இராமனும் சந்தித்தனர். ஒருவரை ஒருவர் நன்கு அறிந்து பாராட்டிக் கொண்டனர். இருவரிடமும் சிறந்த நட்புத்தோன்றத் தொடங்கியது. இராமன், அம்மலைக்குத் தான் வந்த காரணத்தைச் சுக்கிரீவனிடம் கூறினன்.

கிட்கிந்தையில், வல்லவனுன வாலி என்று கூறப்பட்ட வானர வேந்தன் வசித்து வந்தான். அவன் தேவராசனுக்கு மகன். ஒரு காலத்தில் தேவர்களும் அசுரர்களும் ஒன்று கூடிப் பாற்கடலைக் கடையும்போது, அவர்கள் வலியிழந்து நிற்கும் நேரத்திலே, வாலி ஒருவனே வாசுகியின் தலையையும் வாலையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தான். பிறிதொருகால் வாலி இராவணனை வென்று, அவனை அலட்சியமாகத் தூக்கிச்சென்று, அவனுடைய போர்ச் செருக்கை அடக்கினன்.

இத்தகைய பெருமை வாய்ந்த வாலிக்குத் தம்பி சுக்கிரீவன்; வாலி, பேரரசனுகவும், சுக்கிரீவன் இளவரசனுகவும் இருக்கும் நாளில், மாயாவி என்ற அசுரன் வாலியைப் போருக்கு அழைத்தான். வாலிக்கும் மாயாவிக்கும் நடந்த போரிலே, அரக்கன் போர் செய்ய முடியாமல் தோல்வியுற்றுப் பின்வாங்கி ஓடினுன். இவ் உலகத்திலிருந்தால் வாலி கொன்று விடுவான் என்று அஞ்சி அவன் பிலத்துவாரத்திற் புகுந்து பாதாள லோகத்திற்குச் சென்றுன். வாலி, தன் தம்பியைப் பிலத்துவாரத்திற்குப் பக்கத்தில் இருந்து காவல் செய்யும்படி கூறிவிட்டு மாயாவியைத் தொடர்ந்து பாதாளத்திற்குச் சென்றுன்.

இருபத்தெட்டு மாதங்கள் வரையிலும் பாதாளத்தில் இருவர்க்கும் போர் நிகழ்ந்தது. நெடுநாள் கழிந்தும் வராததால் வாலிக்கு யாதேனும்தீங்கு வந்திருக்குமோ? என வானரர்கள் அஞ்சினர். வாலியைத் தேடிச்சென்று கண்டு பிடிப்பதாகவும், அன்றேல் தானும் அவ்வசுரனுடன் போர் செய்து மடிவதாகவும், சுக்கிரீவன் கூறினுன். அமைச்சர்கள் அதற்கு உடன்படாது போகவே, சுக்கிரீவன் தன் அண்ணனுக்குப் பதிலாக இருந்து அரசுபுரிய உடன்பட்டான். பிலத்துவாரத்தை அடைத்துவிட்டுச் சுக்கிரீவனுக்கு வானர மக்கள் மணிமகுடம் சூட்டினுர்கள்.

மாயாவியை வெற்றிகண்டு திரும்பி வந்து பார்க்கையில், பிலத்துவாரம் மூடியிருப்பதை வாலி கண்டான். அப்பிலத்தை மூடியிருந்த கல்லே ஒரே உதையில் உதைத்துத் தள்ளிவிட்டுத் தன் நாடு வந்து சேர்ந்தான். அங்கே தன் தம்பி சுக்கிரீவன் நாட்டையாண்டு வருவதைக்கண்டு மிகவும் சினங்கொண்டு, சுக்கிரீவனே ஒன்றும் கேளாமலே, வாலி அவனே நாட்டைவிட்டுத் துரத்திவிட்டான்; அவனுடைய மனேவியான தாரையையும் தனக்கு மனேவியாக்கிக் கொண்டான்.

இதன் பின், சுக்கிரீவன், உலகங்களில் எந்தப்பாகத்திலிருந்தாலும், வாலி தன்னேக் கொன்று விடுவான் என்ற எண்ணத்தினுல் இருசியமுக பருவதத்தில் தங்கி வாழ்ந்து

வரலானுன். இருசியமுக பருவதத்தில் வாலி வந்தால் மடிந்துபோவான் என்று ஒரு சாபம் இருந்தது. அதன் காரணமாகத்தான் இது கா றும் வாலியின் பயமின்றிச் சுக்கிரீவன் வாழ்ந்து வந்தான்.

இவ்வாறு அனுமனும் சுக்கிரீவனும் தங்கள் வரலாற்றைக் கூறிய பின், சீதையின் ஆபரணங்களை இராம இலக்குவர்க்குக் காட்டினுர்கள். இலக்குமணனுக்குச் சீதை யின் கால்விரலில் அணிந்த மோதிரத்தைத்தவிர வேறு ஒன்றையும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. சீதையின் ஆபரணங்களே அவைகள் என்று இராமன் துணிந்தான். இந் நிலையில் சுக்கிரீவன் மனதில் இராமன் பால் வாலியை வெல்லக்கூடிய வலியுண்டோ என்ற ஓர் ஐயம் தோன்றி அலைத்தது. இராமனது வன்மையைத் தான் அறிந்தாலன்றி, அவனுடன் தொடர்பு கொள்வதில் சுக்கிரீவ னுக்கு ஆர்வம் இல்லை. அதனைக் குறிப்பால் உணர்ந்த இராமன், துந்துபியின் பெரிய உடலைத்தன் கணைக்காலி னுல், வெகுதூரம் சென்று விழும்படி எற்றினுன். பின்னர், ஏழு மராமரங்களைத் தன் ஒரே அம்பினுலே எய்து தன் திறமையைக் காட்டினுன்.

சுக்கிரீவன் இவ்வீரத்தைக் கண்டபின் இராம இலக்கு மணர்களைத் தன் மாளிகைக்குக் கூட்டிச்சென்று விருந்திட் டான். விருந்தின் முடிவில் சீதையைத் தேடிக்காண வேண் டிய செயலை இராமன் எடுத்து மொழிந்தான். அதனை அமைதியுடன் கேட்ட சுக்கிரீவன் இராமனை நோக்கி "நண்ப, என் மனைவியை அபகரித்துக் கொண்ட வாலியைக் கொன்று, எனக்கு முடிசூட்டுவாயானுல், நான் சீதையைத் தேடித் தரு கிறேன்" என்றுன்.

இராமன் அதற்கு உடன்பட்டான். ஆனுல், அண்ணன் தான், தாய், தந்தை, கடவுள் என்று மதித்து வாழ்நாள் முழுவதும், தன் சுகதுக்கங்களையெல்லாம் மறந்து, இராம னுடைய சுகம் ஒன்றே பெரிது என்று கருதி வந்த இலக்குவ னுக்கு இச்செயல் பிடிக்கவில்லை. அண்ணனைக் கொன்று தம்பிக்கு அரசு கொடுக்கக்கூடாது என்று கூறினுன். இதற்கு

விடையாக இராமன், "அப்பா இதுகேள். பகுத்தறிவில்லாத விலங்கினங்களின் ஒழுக்க முறைமையை இப்படி ஆராய்ந்து பேசுதல் தக்கதன்று. எந்தத் தாயார் வயிற்றிலும் பின் பிறந்தவர்கள் எல்லோரும் இணங்கியே நடந்தால், பரதன் மிகவும் சிறந்தவன் என்று கருதப்படுவானே" என்று கூறினன். இதனைக் கம்பநாடர்,

> "அத்தா இதுகேள்என ஆரியன் கூறுவான்அப்
> பித்தாய விலங்கின் ஒழுங்கினைப் பேசலாமோ.
> எத்தாயார் வயிற்றினும் பின் பிறந்தார்களெல்லாம்
> ஒத்தால் பரதன் பெரிதும் உத்தம னாதலுண்டோ.''

என்று குறிக்கின்றார், இங்கு நாம் சிறிது சிந்திக்கவேண்டும். பரதன் அயோத்தி நாட்டிலே, ஒரு துன்பமுமின்றி அரசாண்டு வருகிறான், அவனுக்கு இலக்குமணனைப் போல், மனைவி மக்களை விட்டுக் காய் கனிகளைத் தின்று, புல்லின் மேல் படுத்து வாழவேண்டிய அவசியமே ஏற்படவில்லை. அப்படியிருக்க, எல்லாத் தாயிடத்தும் பிறந்த மக்கள் எல்லோரும் ஒத்திருப்பார்களானால் பரதன் பெரிதும் உத்தமனாவதுண்டோ என்று கூறியிருக்க வேண்டிய அவசியம் என்ன?

இராமனுடைய தம்பியரிலே மிகச்சிறந்தவன் பரதன் என்பதுதான் கம்பனுடைய கருத்து. இலக்குவனுக்கும் பரதனுக்கும் உள்ளவேறுபாடுகளைப் பலர் இன்னும் அறியாதது வியப்பே. இலக்குவன், இராமனுக்குத் தம்பி என்பதோடன்றி அவனுக்கு அடிமையும் ஆவன். இதனை, சுமித்திரையே இலக்குவனைக் காட்டிற்கு அனுப்பும்போது கூறி, இராமனுக்குப் பணிவிடை செய்வதே அவனுடைய கடமை என்பதைக் கூறினாள். ஆனால் பரதனே அயோத்தி நாட்டிற்கே உரியவன்; சக்ரவர்த்தியின் திருமகன். இராமனுக்குத் தம்பியேயாயினும் கைகேயி பெற்ற வரத்தினாலே அரசுரிமை பெற்றுவிட்டான். இக்காரணத்தினால் அவன் இராமனைக்காட்டிலும், உயர்ந்த பதவிக்கு உரியவனானான். அவ்வாறு உயர்ந்து நின்ற நிலையிலும் இராமனிடத்தில் அன்புகொண்டு தான் பெற்ற செல்வத்தைத் தமையனுக்கே

தந்து பெருமைப்படத்தக்கவனுனன். இராமனுடன் தானும் காடு செல்ல வேண்டுமென்ற கருத்து அவனுக்கு ஏற்பட்ட போதிலும், தமையன் ஆணைக்கு அஞ்சியே நாடு திரும்பி னன். பிறர் நுகர்தற்குரிய சுக துக்கங்களை அவர் நன்கு பெறுதற்குத் துணை செய்யாவிட்டாலும், அத்துணையைச் செய்தலாகிய நற்பணியை விரும்பி ஏற்றுக்கொள்ளும் மனப்பாங்குடையவர்கள் மிகவும் உயர்ந்தவர்கள் என்ற கருத்தை ஆங்கிலநாட்டுக் கவிஞரான மில்டன் "யார் ஒருவன் பணி செய்வதற்குச் சித்தமாக நிற்கின்றனே அவனும் பணிசெய்தவனுகவே கருதப்படுவான்." (They also serve, who stand and wait) என்று கூறுகிருர். இதனுல் பங்கமில் குணத்தவனை பரதனே சிறந்த தம்பி என்று எல்லோராலும் போற்றப்படுவதால் இராமன் இலக்குமணனைக் கூருமல் பரதனையே கூறினன்.

## 27. "திகைத்தனை செய்கை"

இராமன் குண நலம் நிறைந்தவன் என்று நாம் முன்பே கண்டுள்ளோம். ஆனால், அவன் வாலியை மறைந்து நின்று கொல்லத் துணிந்து விட்டான் என் பதைக் காணும்போது, ஏன் அவன் இவ்வாறு கோழையைப் போல் துணிந்தான் என்று கேட்கத்தான் நமது இயற்கை யறிவு தூண்டுகிறது. அவனுக்கு உதவி தேவையாயிருந் தால், வாலியிடமே கேட்டுப் பெற்றிருக்கலாமே என்று ஒரு சாரார் நினைக்கின்றனர். ஆனால் உலகியலுக்கு அது நன்கு பொருந்துவதாகத் தோன்றவில்லை. வாலியோ மிகவும் உயர்ந்த நிலையிலே அரசாட்சி செலுத்தி வருபவன். இராவணனை வென்றவனேயாயினும், அவன் இப்பொழுது பிறனுடைய மனைவியைக் காப்பாற்றும் பொருட்டுப் போருக்குச் செல்வான் என்பது நினைக்க முடியாத காரிய மாகும். ஆகையால்தான் இராமன் அவனிடம் சென்று அவனது துணையைப்பெற விரும்பவில்லை.

இராமன் சீதையின் பிரிவால் வாடுபவன். அவனிடம் சுக்கிரீவன் வந்து, தானும் மனைவியை இழந்தவன்; மனைவி யைத் திரும்பப்பெற உதவி செய்க என்று கேட்கும்போது, ஒரே நிலையிலுள்ள இரு உள்ளங்களும் ஒன்றுபட்டன, உடனே இராமன், "உன் பகைவன் என் பகைவன்; எது வேண்டுமானாலும் உனக்குச் செய்கிறேன்" என்று கூறினான். இஃது இயற்கையான நிகழ்ச்சியேயாகும். இனம் தானே இனத்தைச் சேரும்!

இராமன் வாலியின் வலிமையை அறிந்தவன். வானரர் தலைவனான வாலியின் முன்பு செல்வோர் யாவரும் தம் முடைய வலிமையை இழப்பர் என்பதை நன்கு அறிவான். சிலர், ஒருவன் எவ்வாறு பகைவனுடைய பலத்தைத் தான் வாங்கிக்கொள்ள முடியுமென்று ஐயுறலாம். ஆனால், நாம், உலகியலிலே இதனைக் காண்கிறோம். நேரு பெருமகனைப்

போன்ற மக்கள் முன்னிலையில் அவரிடத்தில் நேரில் ஒன்றை எதிர்த்துச் சொல்லுவதற்கு அவருக்குத் துணைவர் எனப் படத்தக்க அமைச்சியல் உறுப்பினர்களும் அஞ்சுவதை நாம் காண்கிறோம். அப்படி அஞ்சும் உறுப்பினர்களிடத்திலே சென்று, ஐயா, இங்கு வாய்கிழியப் பேசினீர்களே, உங்களுடைய மிடுக்கு நேருவின் முன் பலிக்கவில்லையே என்று கேட்போமானால் "நாங்கள் என்ன செய்வது? அவர் முன் வாயடைத்துப் போய்விடுகிறது" என்று கூறுவதை இன்றும் பார்க்கின்றோமல்லவா? அது போலவே, உலகிலே பல பகுதிகளிலும், ஏறத்தாழ இந்நிலையில் பலர் இருப்பதைக் காண்கின்றோம். இந்த வகையில் சிறந்தவர்களில் வாலியும் ஒருவன்.

இராமன், சீதையின் பிரிவால் தன் மனநிலை கலங்கிப் பேதுறுகின்ற அளவு மயங்கிவிட்டான். காமக் களிப்பிலே மூழ்கியிருக்கின்றவர்கள் வீரர்களாகக் காட்சிதர முடியாது. சினம்மிக்க காலத்திலும் ஒருவன் தன் நிறை இழப்பது கண் கூடு. சினம் கொண்டிருக்கும் ஒருவரைக் காணில், "அவர் மிகவும் கோபமாக இருக்கிறார், பிறிதொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம்" என்போம். காதலியை இழந்த சோகத்தால் அறிவு நிலையிழந்த இராமன் செய்வகை அறியாது திகைத்துப்போனான். சீதையைத் திரும்பப் பெறும் பொருட்டு அவன் எதையும் செய்யக்கூடிய மனிதனைக் காட்சியளிக்கின்றான். காதலியைக் கவர்ந்து சென்றவர்மேல் எழுந்த சினம் தணிந்ததும், காதற்சோகம் கையகன்றதும், அவன் மனம் திரும்பவும் நல்வழியிலே செல்வதைக் காண்கிறோம். மேலும், மிகுந்த துக்கத்திலே ஆழ்ந்திருக்கும் ஒருவன், தன் பகைவனைக் கொன்றாலும் இப்பொழுது இருக்கும் சட்டம் அவன் கொலைக் குற்றத்தை மன்னித்து விடுகிறது. அது போலவே இராமனும், காதலியைப் பிரிந்த சோகத்தால் துயரக்கடலில் மூழ்கி அயர்ந்திருந்தான்; காதலியின் காதல் நினைவால் அவன் உள்ளம் தான் செய்யும் செய்கையின் நலம் தீங்குகளை அறியும் திறன் இழந்துவிட்டது. இந்நிலையில்தான் இராமன் சுக்கிரீவனுக்காக வாலியை மறைந்து நின்று கொல்ல இசைந்தான்.

வாலியும் சுக்கிரீவனும் போரிட்டார்கள். முதலிலே இராமன் தன் அம்பைச் செலுத்தவில்லை. வாலியின் தாக்குதலை ஆற்றுமல் உளம்நொந்து உடல் வருந்தின சுக்கிரீவன், இராமனிடம் வந்து அவன் வாக்குத் தவறியதை உணர்த்தினுன். இராமன் அவனைச் சமாதானப்படுத்தித் திரும்பவும் போர் தொடுக்குமாறு சுக்கிரீவனுக்குக் கூறினுன். சுக்கிரீவனின் நீங்கி, வாலிக்கு மனைவியாகிய தாரை, புத்திசாலி; சுக்கிரீவன் துணையுடன் வந்திருக்கிருன் என்று ஒற்றர்கள் மூலம் அறிந்ததும் அவள் மறுபடியும் போருக்குச் செல்லாதபடி வாலியைத் தடுத்தாள். ஆனுல், அவன் தாரை மொழிந்த சொற்களைக் கேட்காமல் மீண்டும் போருக்குச் சென்ருன். இராமன் மறைந்திருந்தபடியே, அவன் மேல் தன் கூரிய அம்பைச் செலுத்தினுன். இராமனுடைய அம்பு வாலியின் மார்பில் தைக்கவும் அவன் அடியற்ற மரம்போல் தரைமேல் வீழ்ந்தான். தன்னை வீழ்த்தியவன் எங்கோ மறைந்து இருந்துதான் கொன்றிருக்கவேண்டும் என்று எண்ணினுன். தன் மார்பில் தைத்த அம்பைப் பிடுங்கி அதிலே பொறிக்கப்பட்ட எழுத்துக்களைப் பார்த்தான். அஃது இரகுகுலத் தோன்றலான இராமனுடைய அம்பு என்பது தெரிந்தது. அப்பொழுது இராமனும், அவன் எதிரிலே சென்று நின்ருன். இராமனைப்பற்றி அவன் முன்பே கேள்விப்பட்டிருக்கிருன். பரதனுடைய அண்ணனும் தசரத குமாரனுமாகிய இராமன், பரதனுக்கு நாட்டைக் கொடுத்துவிட்டுக் காட்டிற்கு வந்துவிட்டானென்றும், அவன் பிரிவை ஆற்றுமல் தசரதன் இறந்துவிட்டான் என்றும் வாலி நன்கு அறிவான். அதனுல் அவன் இராமனை நோக்கி, "சத்தியத்தையும் மரபையும் நோக்கி அவற்றிற்காகத் தன் இனிய உயிரைக் கொடுத்தவன் உன் தந்தை தசரதன்; அவன் மிக்க தூயவன்; அந்தத் தசரதன் மகனுகவும், பரதனுக்கு அண்ணனுகவும் நீ பிறந்தாய் என்பர்; அதை நான் நம்பமுடியவில்லை. பிறர் தீய செயல் செய்யாதபடி காத்து ஓம்புபவன் தான் தீமை புரிந்தால் அது நன்ருகுமா"? என்ருன். இதனைக் கம்பர் :

வாய்மையும் மரபும் காத்து
　　மன்னுயிர் துறந்த வள்ளல்
தூயவன் மைந்தனே நீ
　　பரதன்முன் தோன்றினையே !,
தீமைதான் பிறரைக் காத்துத்
　　தான்செய்தால் தீங்கன்றாமோ
தாய்மையும் அன்றி நட்பும்
　　தருமமும் தழுவி நின்றாய் !!

என்று வாலி கூற்றில் வைத்துக் கூறித் தன் தமிழ்ப் பண்பின் நேர்மையுள்ளத்தை நாம் அறியக் காட்டுகின்றார்.

இங்கே தசரதனுக்குப் பல அடைமொழிகளைத் தந்த வாலி பரதனுக்கு ஓர் அடைமொழியையும் குறிக்காதது நோக்கத்தக்கது. அடைமொழிகளால் நடைபெற்றியலும் பொருளினும், யாதோர் அடையுமின்றித் தனித்து இயலு வது உயர்ந்தது என்பது தமிழ் மரபு. வாய்மையையும், மரபையும் காத்து உயிர்விட்ட பின்தான், தசரதன் வள்ளல் என்பதையும், தூயவன் என்பதையும் உலகம் அறிந்தது. ஆனால், பரதன் தன்னுடைய பொன்றாப் புகழினால், தனக்கே உரித்தான ஒரு புகழிடத்தைப் பெற்றுவிட்டான் என்பது நாம் நினைவிற் கொள்ளவேண்டிய உண்மையாகும்.

பரதன் மிகவும் சிறந்தவன் என்பதும், அவனை உலகம் நன்கு அறிந்திருந்தது என்பதும் வாலியின் மூலம் நாம் தெரிந்துகொள்கிறோம். அப்பரதன் பிறந்த குலத்திலே அவ னுக்கு முன்னவனாகத் தோன்றிய இராமன் தன் குலம் கல்வி களை எல்லாம் மறந்து வாலியை மறைந்து நின்று கொன்றது மிகவும் தவறுடைய செய்கையாகும்.

வாலி இராமனைக் கண்டவுடன் அவன் மேனி அழகிலே ஈடுபட்டுவிட்டான். அவனைக் கோபத்துடன் ‘உன்னுடைய குலத்திலே பிறந்தவர்கள் எல்லோரும்’, என்று சொல்லி அவனைப் பார்த்தவுடனேயே, தான் ஏது சொல்வது என்று அறியாமல், “சித்திரத்தாலும் எழுத முடியாத எழிலைப் பெற் றவனே” என்று வாலி கூறுகிறான். பின்பு வாலி சிறிது சிந்தனையில் ஆழ்ந்தான். அழகாலும் குணத்தாலும் சிறந்த

இராமன், பரதனுக்குத் தமையனும், தசரதனுக்கு மகனு மாவான் ; அவன் பிழை செய்வான் என்பதை வாலி உள்ளம் ஏற்க மறுத்தது. அவன் சிந்தனையின் முடிவு இதுதான். "உயிர் போன்றவளும், அன்னப் பறவையைப் போன்ற வளும் அமிழ்தம் போன்று அருமையாகக் கிடைத்தவளுமான சீதையாகிய மனைவியைப் பிரிந்த பின்னர், நீ பைத்தியம் பிடித்தவனாகிவிட்டாய்" என்று வாலி கூறினான்.

வடநாட்டு அரசர்கள் மனுநீதியைப் போற்றுபவர்கள். ஆனால் தென்னாட்டிலே, வள்ளுவர் குறளைப்படித்தவர்களுக்கு மனு கூறிய உண்மைகளை ஏற்க மனம் ஒப்புவதில்லை. ஆகையால் தென்னாட்டவர்கள் மனுநீதி சாத்திரத்தை "ஒரு குலத்திற்கு ஒரு நீதி கூறும் நூல்" என்று இகழ்ந்து கூறுவர். மனு நூலின்படி அரசு நிகழ்ந்த காலத்தில் அந்தணர்கள் செய்யும் குற்றத்திற்குத் தண்டனை கொடுப்பதில்லை. ஆனால் வேறு வருணத்தவர்கள் அதே குற்றத்தைச் செய்வார்களா னால் மிகுந்த தண்டனை கொடுக்கப்பட்டிருக்கிறது. இங்கு இருவர், ஒரே குற்றத்தைப் புரிந்திருக்கின்றனர். ஒருவன் இராவணன், மற்றொருவன் வாலி. அந்தணனான காரணத் தால், இராவணன் பால் இராமன் பரிவுடன் நடந்து கொண்டுவிட்டு, வாலியிடம் மிகவும் கடுமையாக நடந்து கொண்டுவிட்டானோ என்ற ஐயம் கம்பருக்கு ஏற்பட்டுவிட் டது. ஆகையினால் வாலி பேசும்போது அவன் வாயால் மனுநீதியைப் பழித்துக் கூறும் வண்ணம் செய்துவிடுகிறார்.

கம்பருக்கு ஏற்பட்ட எண்ணம் வாலிக்கும் ஏற்பட்டது போலும், ஆகையால் அவன் இராமனை நோக்கி "அரக்கர் களான இராவணன் கூட்டம், உன் மனைவியைக் கொண்டு போய்விட்டால், அதற்காகக் குரங்கின் அரசனைக் கொல்லு தல்தான் உன் மனு நூலில் கண்ட நீதியா? என்னிடத்தில் என்ன குற்றத்தைக் கண்டாய் ? நீயே இந்தப் பெரும்பழியை ஏற்றுக்கொண்டால் இனிப் புகழைப் பெறவல்லவர்கள் யார்?" என்றான். இதனைக் கம்பர்,

> "அரக்கர் ஓர் அழிவு செய்து
> கழிவரேல் அதற்கு வேறோர்
> குரக்கினத்தரசைக் கொல்ல
> மனுநெறி கூறிற்றுண்டோ

**இரக்கம் எங்கு உகுத்தாய்? என்பால்**
**எப்பிழை கண்டாய்? அப்பா**
**பரக்கழி யிது நீ பூண்டால்**
**புகழை யார் பரிக்கற்பாலார்?''**

என்று வினவுகின்றார்;

இராமனுக்கே ஏகபோகமாக உரியது கோசலநாடு என்று மக்கள் எல்லோரும் நினைத்திருந்தனர். வேறு கூட்டில்லாத அந்த நாட்டைத் தன் தம்பியாகிய பரதனுக்குத் தந்துவிட்டுக் காட்டிற்கு வந்துவிட்டான் இராமன். ஆனால் காட்டிலோ, மூத்தவனை வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு நாட்டைத் தந்துள்ளான். இதனைச் சிந்தித்துப் பார்த்தான் வாலி. இராமன் செய்த காரியம் அவனுக்குப் புதிராகவேபட்டது. அதனை அவன்,

**"கூட்டு ஒருவரையும் வேண்டாக்**
**கொற்றவ, பெற்ற தாதை**
**பூட்டிய செல்வம் ஆங்கோர்**
**தம்பிக்குக் கொடுத்துப் போந்து**
**நாட்டொரு கருமம் செய்தாய்!**
**எம்பிக்கு இவ்வரசை நல்கிக்**
**காட்டொரு கருமம் செய்தாய்!**
**கருமம்தான் இதன்மேல் உண்டோ?"**

என்று கேட்கின்றான்.

வாலி மிகவும் அழகாக இராமன் செய்தது குற்றம் என்பதை விளக்கிக் காட்டிவிடுகிறான். "நெற்றிக் கண் காட்டினும் குற்றம் குற்றமே" என்ற பண்டைத் தமிழரின் வீரவுணர்ச்சியை இழந்து நின்றான் இராமன். இருபத்தொரு தலைமுறைக்கு முன் பிறந்த தமிழர் குடியிலே, மன்னர் மரபிலே தோன்றிச் சிபிச்சக்கரவர்த்தியின் பின்னவனான இராமன், காமக்களிப்பில் மூழ்கித் தன்வயம் இழந்தான். காமவயப்பட்டவர்கள் நேர்மை தவறுவார்கள் என்பது பலருடைய கருத்து. காமமென்னும் மதம்கொண்ட, இளமை

என்னும் யானை- கல்வி என்னும பாகனது கோலுக்கு அஞ்சாமல் ஓடும் தன்மையுடையது என்று சான்றோர் கூறுவர்.

இளங்கோவடிகள் முதல் பலரும் இக்கருத்தைத்தான் கூறுகின்றார்கள். இராமன் மணமானது முதல் சீதையை விட்டுக் கணமும் பிரியாதவன். கனவிலும் நனவிலும் சீதையின் இன்பநிலை தவிர எந்தச் சிந்தனையிலும் ஈடுபடாது வாழ்ந்து வந்தவன். உயிரனைய காதலியைப் பிரிந்தவுடன் பித்தனாகிவிட்டான். காதற் பித்தம் கரை புரண்டு ஓடிய நேரத்தில்தான் இராமன் வாலியைக் கொன்றது. தானும் தன் மனைவியை இழந்துவிட்ட கதையைச் சுக்கிரீவன் இராமனிடம் கூறினவுடன், இராமன் கொண்ட பித்தம் கொலை செய்தற்குரிய மென்மை எய்திவிட்டது; அதனால் அவன் மனம் வாலியை எவ்வகையிலும் கொல்வதென்றே முடிவு செய்துவிட்டது. முழுச் சந்திரனிலுள்ள மறுப்போல், இராமனுடைய உயர்ந்த குண நலங்களுக்கு இடையே வாலியைக் கொன்ற குற்றம் அமைந்துவிட்டது.

உலகத்தை உய்விக்கத் திருமாலே பரவைகுந்தத்திலிருந்து இறங்கிவருவதாகக் கூறுவர். ஆனால் முழுமுதலான பரம்பொருளின் குண நலங்கள்யாவும் மக்கள் கண்டால் கண்ணேறுபடுமென்றோ, யாதோ, அவன் அப்பொழுதும் அந்நலங்களைக் காட்ட மறுத்துவிட்டான். இராமன் சாதாரண மனிதன் என்றும், சக்கரவர்த்தித் திருமகன் என்றும் கொள்ளுவோமாயின் குற்றமில்லாத ஒரு மனிதனைப் படைத்துவிட முடியாது என்ற தத்துவத்தைக் கூறுவதற்குத் தான், இராமனிடம் ஒரு குறைபாட்டைக் காப்பியப் புலவன் வைத்தான் போலும் என்று நாம் எண்ண வேண்டியிருக்கிறது. இனி "மக்கள் மேனியுருவில் விளங்கும் புறஅழகும் உடலின் அகத்தே இலங்கும் அறிவு அழகும் ஒப்ப இருக்கும் என்று நினைப்பது குற்றம்; அழகாகத் தோன்றும் மக்கள் யாவரும் அறிவு நலம் பெற்றிருப்பர் என்பது ஒருதலையன்று" என்ற உண்மைக்கு இலக்கியமாதல் வேண்டுமென்று கருதி இக்குறை இராமன்பால் உண்டாகியிருக்கிறதோ என்ற எண்ணமும் நம்மனத்தே எழுகின்றது.

# 28. தேடப் பணித்த திறம்

வானரர் கூட்டத்தின் தலைவனை வாலியைக் கொன்ற பின், சுக்கிரீவனை அரசனாக்கினான் இராமன். அங்கதன் வாலியின் மகன். அவனும் சுக்கிரீவனுடன் ஒத்துழைக்கிறேன் என்று கூறியபின் சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டிய நிலை வந்தது. ஆனால் அரசபோகத்தைப் பெற்ற சுக்கிரீவன் இராமனைப் பற்றிய நினைவை மறந்தான். "பெறலரும் திருப் பெற்ற பின் சிந்தனை பிறிதாம்" என்பார் கம்பர். கார் காலம் வந்து குறுக்கிடவே, சீதையைத் தேடிச் செல்லும் வேலை சுணங்கிற்று. அப்போது அதையே காரண மாகக் கொண்டு சுக்கிரீவன் மதுவிலும் மங்கையர் கூட்டத் திலும் ஈடுபாடுடையவனானான்.

மழைக் காலம் கழிந்த பின்பு, சுக்கிரீவன் இராமனையும், அவன் மனைவியான சீதையைத் தேடித் தரவேண்டுமென்ற எண்ணத்தையும் மறந்தான். இராமன் வானரர் தலைவனிடம் இதை எதிர்பார்க்கவில்லை. அவனுக்குச் சினமிகவே இலக்குவனை அழைத்துச் சுக்கிரீவனிடம் சென்று அவன் நிலையை அறிந்து வருமாறு பணித்தான். இலக்குவன் மிகுந்த சினத்துடன் வந்ததைக் கண்ட அங்கதன் சுக்கிரீவனிடம் சென்று செய்தியைச் செப்ப எண்ணினான்.

மதுவில் களித்து மங்கையர் கூட்டத்தில் திளைத்து மூழ்கிய சுக்கிரீவன் இராமனுடைய சினம் கண்டு அஞ்சவில்லை. அங்கதன் அவனிடம் பலமுறை எடுத்துக் கூறியும் இவன் கேட்கவில்லை. பின்னர் அங்கதன் அனுமனிடம் சென்று இலக்குவன் வந்த செய்தியைக் கூற, அனுமன் அவனைத் தாரையிடம் அழைத்துச் சென்றான். இங்கே கம்பன் தாரையைக் கற்புக்கடன் காத்த கைம்பெண்ணாகவே நமக்குக் காட்டுகிறான். அவள் தூய உள்ளத்துடன் தன்னுடைய இறந்த கணவனை வாலியின் நினைவேயன்றி மற்ற எந்த

நினைவுமே இல்லாதவளாகக் கம்பனது இராம காதையில் காட்சியளிக்கிருள்.

சுக்கிரீவனைத் தேடிச்சென்ற இலக்குவன் முதலிலே தாரையைக் காண்கிருன். இயற்கையாகவே இலக்குவன் பெண்கள் முன்னே நிற்க நாணுபவன். அவன் தாரையைக் கண்டவுடன் அவளைப் பார்க்கவும் கூசினுன். அவள் இலக்குவனை நோக்கி "மைந்தனே, அளவற்ற காலம் தவம் செய்தால் தான் பெறமுடியும் என்ற இந்திர பதவியைக் காட்டிலும் பெரும் பதவியைப் பெற்றவனே, உன்னுடைய திருவடிகள் எங்கள் இல்லத்திலே பட நாங்கள் என்ன புண்ணியம் செய்தோமோ? நாங்கள் நற்கதி அடைந்து விட்டோம்!" என்ருள். இதனைக் கம்பர்,

**அந்தமில் காலம் நோற்ற**
**ஆற்றலுண் டாயி னன்றி,**
**இந்திரன் முதல வானோர்**
**எய்தலாம் இயல்பிற் றன்றே**
**மைந்த! நின் பாதம் கொண்ட**
**எம்மனை வரப்பெற் றுய்ந்தேம்**
**உய்ந்தனம் வினையும் தீர்ந்தேம்**
**உறுதிவேறு இதனின் உண்டோ?**

என்று தாரை கூற்ருக இசைக்கின்ருர்.

இலக்குவன் தாரையைக் கண்டவுடன் தன்னுடைய தாயின் நினைவு அவனுக்கு ஏற்பட்டது. அவன் தாய் அவன் மனக்கண்ணில் பேரழகுடையவளாய் விளங்கிப் பேரரசனது உத்தம பத்தினியாய் நெடுங்காலம் வாழ்ந்து, பின்பு அக் கணவனை இழந்து கைம்பெண்ணுகிக் கண்டவர் இரங்கத் தக்க நிலையிலிருந்தாள். அவளை மனக்கிழியில் பார்த்தவுடன் இலக்குவனுடைய உள்ளம் வருத்தத்திலே ஆழ்ந்தது. தன்னைப் போலவே பிறரையும் கருதும் அருள் அறமுடைய ஆன்ருேர்களின் குடியிலே பிறந்தவனுதலால், இலக்குவன் தன் குடும்பத்தின் நிலைமையையும் நினைக்கத் தொடங்கினுன். கணவனை இழந்த பெண்களுக்கு யாரையும் காட்டிச்

சமாதானப்படுத்த முடியாது என்பதுபற்றியே இளங்கோவடிகளும், "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்" என்று கூறுகின்றார். காட்டுவதற்கு அரிய தசரத மன்னனை இழந்து கோசலையும் தன் தாயாகிய சுமத்திரையும் எத்துணைத் துயரம் கொண்டனரோ என்று எண்ணத் தொடங்கினான். அவனுடைய உள்ளம் அலையத் தொடங்கியது. இதனைக் கம்பர்,

"ஆர்கொலோ உரை செய்தார் என்று
அருள்வரச் சீற்றம் அஃகாப்
பார்குலாம் முழு வெண்டிங்கள்
பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலாம் முகத்தினானை
இறைமுகம் எடுத்து நோக்கித்
தார்குலாம் அலங்கல் மார்பன்
தாயரை நினைந்து நைந்தான்

என்று உளம் கனிய உரைக்கின்றார்.

இலக்குவன், தாரையின் வார்த்தைகளில் நம்பிக்கை கொண்ட பின், அனுமானையும் அங்கதனையும் அழைத்துக் கொண்டு சுக்கிரீவனிடம் சென்றான். சுக்கிரீவனும் தான் செய்த பிழைக்காக வருந்தி இராமனிடம் சென்று தன்னை மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டான்.

இராமனிடம், தான் படைகளைத் திரட்டுவதாகவும் தேடுவதற்கு ஆட்களை அனுப்புவதாகவும் கூறிவிட்டு விடைபெற்றுக்கொண்டு சுக்கிரீவன் செல்கிறான்.

கம்பராமாயணத்தில் தாரையைக் கைம்மை விரதம் காத்த கற்புடைய பெண்ணாக நாம் காண்கின்றோம். நமது பண்பாட்டிற்கு ஏற்ப நல்ல ஒரு பெண்ணாக—கனவிலும் கணவனையன்றி வேறு யாரையும் எண்ணாதவளாக நாம் காண்கின்றோம். ஆனால், வான்மீகியோ தாரை மதுவுண்டு சுக்கிரீவனுடன் காம இன்பத்தில் களிமிக்குத் தோய்ந்து கிடப்பதாகவே காட்டுகின்றார்.

உலகிலே, இவ்வகையான வாழ்க்கை முறையைப் பல சமுதாயங்களில் நாம் காண்கின்ளும். தமிழ்ச் சமுதாயத் துக்கு அம்முறை மிக்க அருவருப்பைத் தரும் என்பதைக் கம்பர் நன்கு அறிவார். அதனுல் வீரனுன வாலியின் மனைவி இவ்வகையான வாழ்க்கையை நடத்திஞள் என்பதைக் கூறக் கம்பரது உள்ளம் இடம் தரவில்லை. ஆகையிஞல்தான் அவளைக் கைம்மை விரதம் காத்த கைம்பெண்ணுகச் செய்து விடுகிருர் கம்பர். என்ருலும், முறை தவறின வாழ்க்கையிலே வானரர்கள் ஈடுபட்டிருந்தனர் என்பதை அவருடைய பாட் டுக்கள் மறைக்கவில்லை. வாலி, இராமனிடம் "வீரனே, இது கேள். மனம் போனபடி நடக்கும் நடக்கைகள்தாம் எங்களுக்கு உள்ளன; வைதிக முறைப்படியுள்ள திருமணங் கள் எங்கள் நாட்டிலே இல்லை; நீங்கள் கருதும் நற்பண்பு பலவும் எங்களிடமில்லை" என்று கூறுவதே இதற்குத் தக்க சான்று என்ருன். இதனைக் கம்பன்,

> "மணமு மில்லை மறைநெறி வந்தன,
> குணமு மில்லை குலமுதற்கு ஒத்தன,
> உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கலால்
> நிணமும் நெய்யும் இணங்கிய நேமியாய்"

என்று உரைப்பது காண்க.

இந்த இடத்தில் ஒரு பெரும் ஐயப்பாடு எழுந்துள்ளது. இதைப் பற்றி ஓர் ஆராய்ச்சியாளர் கூறுவதாவது:

"தாரையை வான்மீகி காட்டுவது போலக் காண்போ மாயின், மறைநெறி வந்த மணம் எம்பால் இல்லை என்று வாலி கூறுவது பொருத்தமாகும். கம்பர் கூறுவது போலத் தாரையைக் கைம்பெண்ணுகக் கொள்ளின் கதை நிகழ்ச்சி பெரிதும் குற்றமெய்துகிறது. தாரை சுக்கிரீவனுக்கு மனைவி தானு என்று ஓர் ஐயமும் தோன்றிவிடுகிறது. சுக்கிரீவன் மனைவியாயின், வாலி இறந்த பின் அவள் கைம்மை மேற் கொள்ளக் காரணமில்லை. உணர்வு சென்றுழிச் செல்லும் ஒழுக்கமே வானரர் ஒழுக்கமாயின், தாரையைக் கைம்பெண் ணுகக் காட்டுவதால் பயனில்லை; இதனுல் இந்த வாலி வதை

கூறும் பகுதியில் ஏதோ இடைச் செருகல் முயற்சியொன்று தோன்றிக் கம்பருடைய பாட்டுக்களில் குழறுபடைகள் செய்துள்ளது என்று தெரிகிறது. சுக்கிரீவனெடு கூடிக்கிடந்த தாரையின் அலங்கோலத்தைக் கண்டு இலக்குவன் அருவருத்து ஒதுங்கினுன் என்ற நிகழ்ச்சியை மறைத்தற்கு இலக்குவன் நினைத்ததாக வரும் பாட்டுக்கள் இங்கே படைத்துச் செருகப்பட்டன போலும். இது மட்டுமோ? தாரை கைம்மை மேற்கொண்டிருந்தாள் என்பதே உண்மையாயின் தனக்கு உரியவளான தாரையை வாலி தன் வயப்படுத்திக் கொண்டதாகச் சுக்கிரீவன் இராமனிடம் கூறியது பொய்யுரையாவதோடு இராமனை உண்மை காணும் திறமில்லாத புல்லியோனுகவும் ஆக்கி விடுகிறது.

இனி, இராமன் மறைந்து நின்று எய்த அம்பு மிகவும் விரைந்து சென்று வாலியின் மார்பில் தைக்கவும். அவன் அது தன் மார்பை ஊடுருவி முதுகின் வழிக் கழன்று செல்லாதபடிக் "கரம் இரண்டினும் காலினும் வாலினும் கழற்றிப் பரமன் இன்னவன் பெயர் அறிகுவென் எனப்பறிப்பான்" என்று கம்பரது பாட்டுக் கூறுகின்றது; அம்பு சிறிது வெளி வரக் கண்டு அதற்கு உரியவன் இராமன் என்பதை வாலி அறிந்தானும்; பின்பு அவன் இராமனைச் சினந்து வைததும் சிந்தை தெளிந்து பாராட்டியதும் கூறிய கம்பர், வாலி தன் சுற்றத்தாரை இராமனுக்கு அடைக்கலமென்று சொல்லிக் கைகூப்பித் தலை மேல் வைத்து வணங்கினுனும் என்பாராய், "மன்னர் மன்னன் மைந்த, மற்று இவன் (சுக்கிரீவன்) சுற்றத்தோடும் உன்னடைக்கலம் என்று உந்தி உயர்கரம் உச்சி வைத்தான்" என்று கூறுகின்றுர். கையை உச்சியில் வைக்க உண்டான நெகிழ்ச்சியால் இராமன் அம்பு வாலியின் மார்பை விட்டு நீங்கக் காணேம்! வாலி பின்னும் சில பேசிய பின்பு கையைச் சிறிது நெகிழ்த்ததும் அம்பு அவன் மார்பை ஊடுருவிக்கொண்டு மேலெழுந்து போய்க் கடலில் மூழ்கிவிட்டு மீண்டும் இராமன் அம்பருத் தூணியில் வந்து புகுந்தது என்பாராய்க் கம்பர்,

" கையவண் நெகிழ்த்த லோடும்
கடுங்கணை கால வாலி
வெய்ய மார்பகத்துள் தங்காது
உருவி மேக்குயர மீப்போய்த்
துய்ய நீர்க்கடலுள் தோய்ந்து
தூய்மலர் அமரர் சூட்ட
ஐயன் வெந்நிடாத கொற்றத்து
ஆவம் வந்தடைந்த தன்றே"

என்று பாடுகின்றார். இவற்றை நோக்கினல் கம்பரது இராமா யணத்தில் கருங்காலிகளின் கைவேலை எவ்வளவு தூரம் நடை பெற்றிருக்கிறது என்பது நன்கு தெரியும். கல்லிலும் செம்பிலும் வெட்டப்பட்டுள்ள எழுத்துக்களிடையே எத்தனையோ நாச வேலைகளைச் செய்த கருங்காலிகள் ஏடுகளில் செய்தற்கு அஞ்சமாட்டார்கள் அல்லவா? சுமார் 700 ஆண்டுகட்கு முன் தொடங்கிய இந்த நாசகாரிகளின் கைத்திறம் இன்னும் நடைபெற்றுக்கொண்டுதான் இருக்கிறது. "கம்பர், வான் மீகத்தை அறிந்தவர்கள் சுவைக்கும் வண்ணம், வான்மீகி யின் கருத்தை மறைமுகமாகக் கூறுவதாகவும் கொள்ளலாம்" என்பர். இஃது அறிஞர்கள் ஆராயத்தக்க தொன்றாகும்.

தென் திசை தவிர மற்ற எல்லாவிடங்களுக்கும் சீதையைத் தேடுதற்கு ஆட்கள் அனுப்பப்பட்டனர். தென் திசைக்குச் செல்ல அனுமனே தக்கவன் என்று முடிவு செய்யப்பட்டது. அனுமனைக் கூப்பிட்டு, இராமன், "தக்கோய்! என்பால் பேரன்புடையவளான மனைவியைப் பிரிந்த பின் என் சுய நினைவை இழந்து விட்டேன். அவளுடைய அழகின் திறத்தைக் கூறுகிறேன் கேள்" என்று கூறி அங்கம் அங்க மாகச் சீதையை வருணித்து விடுகிறான் இராமன்.

இராமன் தன் மனையாளுடைய அங்கங்களை அனுமனுக்கு வருணித்துரைப்பது பொருத்தமில்லை என்பது உண்மையே. ஆயினும் ஒரு பெருங்காப்பியத்திற்கு ஒரு பெண்ணைக் கவிஞன் தலை முதல் கால் வரையிலும் வருணிக்க வேண்டு மென்ற நிலை முன்னாளில் இலக்கணமாக விதிக்கப் பட்டிருந்தது. இந்நாளில் எவரேனும் காணாமற் போய்

விடின் அவருடைய நிழற்படம் (Photo) இருக்குமாயின் அதனை வெளியிடுவது வழக்கம். அந்த நிழற்படம் காணமற் போனவரின் அங்க அடையாளங்களைச் சிறிதும் விடாமல் காட்டிவிடும். பண்டை நாளில் சொற்களும் அவற்றிடையே விரவும் உவமைகளுமே ஒருவருடைய அங்க அடையாளங் களைப் பிறர்க்கு உணர்த்தும் செயலை மேற்கொண்டிருந்தன. அதனால் காப்பியக் கலைஞர்கள் எல்லா அங்கங்களையும் சொல்லோவியம் செய்வது இலக்கணமாய் அமைந்தது. மேலும், இச் சொல்லோவியங்களே கல்லிலும் மரத்திலும் சுதையிலும் அமைக்கப்படும் ஓவச் செய்தி (சிற்பம்) கட்கு உறுதுணையாக இருந்தன என்பதையும் நாம் நினைவு கூர்தல் வேண்டும். சங்க இலக்கியங்களில் பொருள்கள் சீர்த்த அடை மொழிகளாலும் கூர்த்த உவமைகளாலும் சிறப்பிக்கப் படும் இயல்பை உணர்ந்தவர்கட்கு இதன் அவசியம் நன்கு தெளிவாகும். மேலும், முதல் நூலாகிய வான்மீகத்திலே, சீதையின் அங்கங்களை அப்பெரும் புலவர் இராவணன் வாயிலாக வருணித்திருப்பதைக் கண்டவன் கம்பன். அன்று நாட்டிலே நடமாடி, நல்லதோர் புகழைப் பெற்ற சீவக சிந்தாமணியிலும் பெருங் கதையிலும் பெண்களின் வருணனைகள் சிறந்து இருந்ததையும் அவன் கண்டுள் ளான். ஆகையால், தமிழர் பண்பாட்டிற்குச் சிறிதும் இழுக்கு வராவண்ணம் கம்பர் மிகவும் திறம்படப் பாடியுள்ளார். அதனால் அவர் சீதையின் எழிலைச் சித்திரித்துக் காட்டுகிறார்.

இராமன் தன் மனையாளான சீதையின் மேனியழகை வருணித்துக் கொண்டு சென்ற போதிலும் அதை அனுமன் கேட்டதாகக் கம்பன் கூறவில்லை. இராமன் பெண் என்று கூறியவுடன் அனுமன் வேறு சிந்தனையில் இருந்ததாகக் கூறி விடுகிறார். அதனால் அனுமன் சீதையின் மேனி நலங்களில் சிறப்புடையவற்றையே கருத்தில் கொண்டான்.

அனுமன் சீதையை நேரில் அறிந்தவனல்லன். ஆகை யால், சீதையும் இராமனுமே அறிந்தவற்றை, அனுமன் அறிந்தால்தான் அவனிடம் சீதை நம்பிக்கை கொள்ள

முடியும். இதை உணர்ந்தே இராமன் சீதையிடம் சொல்லு மாறு சில நுண்ணிய அடையாளங்களைக் கூறுகின்றான். இதனை வான்மீகம், "நற்குணமுடையவனே, அவளைப் போல ஒப்பான மங்கையை உலகில் காணமுடியாது. சந்தேகமில்லாத உனது மனத்தையே சான்றாகக் கொண்டு அச் சீதை இருக்குமிடத்தை நீ அறிவாயாக" என்று கூறு கிறது. இதனையே கம்பர்,

> மங்கைய ரவளை யொப்பர்
> மற்றுளா ரில்ல ரென்றும்
> சங்கையில் உள்ளந் தானே
> சான்றெனக் கொண்டு சான்றோய்
> அங்கவள் நிலைமை யெல்லாம்
> அளந்தறிந்து அருகு சார்ந்து
> திங்கள் வாண் முகத்தி னுட்குச்
> செப்பெனப் பின்னும் செப்பும்

என்று திறம்படக் கூறுகின்றார்.

நல்லவர்களுக்கு ஐயம் ஏற்படின் அவர்களுடைய உள்ளமே வழிகாட்டியாக நிற்கும் என்பது ஆன்றோர் கருத்து. வள்ளுவப் பெருந்தகையும், "தன்நெஞ்சு அறிவது பொய்யற்க, பொய்த்தபின் தன் நெஞ்சே தன்னைச் சுடும்" என்று கூறுவர். இக்கருத்தையே காளிதாசனும் சாகுந்தலத் தில் "ஸதாம்ஹி ஸந்தேஹப தேஷிவஸ்து ஷீப்ரமாணம் அந்தஃகரண ப்ரவ்ருத்தய:"என்று கூறுகிறான்.

இராமன் அனுமனை நோக்கி, "அனுமனே நான் காட் டிற்குப் புறப்படும் போது, அவளை நோக்கி, 'மடமைக் குண முடையவளே, நீ என்னுடன் பின் வந்து எனக்கு மகிழ்ச்சியை விளைவிப்பாய் என்று எண்ணுகிறாயா? நீ வருவதால் எனக்கு ஏதாவது துன்பம் ஏற்படுமோ,' என்று கேட்டேன். அதற்கு அவள் 'என்னைத் துறந்த பின் உமக்கு இன்பம் ஏற்படுமோ' எனக்கேட்டாள். பின்னர் நாங்கள் காடு நோக்கிப் புறப்பட்டு அயோத்தி நாட்டின் எல்லையைக்

கடந்தவுடனேயே "எல்லையில்லாத கொடிய காடு எவ்விடத்திலுள்ளது என்று வினவினாள்," என்று கூறினான்.

பின்னர் இராமன் தன் கணையாழியை அனுமனிடம் கொடுக்க, அனுமன் பக்தியுடன் அதனைப் பெற்றுக்கொண்டான். கட்டப்பட்ட வீரக் கழல்களையுடையவனான இராமனுடைய கருணையை முன்னிட்டுக்கொண்டு அனுமன், சீதையைத் தேடச் சென்றான். இதனைக் கம்பர்,

"இனையவா றுரைசெயா இனிதின் ஏகுதிஎன<br>
வனையுமா மணிநன்மோ திரம்அளித்து, அறிஞ! நின்<br>
வினையெலாம் முடிகஎன விடைகொடுத்து உதவலும்<br>
புனையும்வார் கழலினான் அருளொடும் போயினான்"

என்று உரைக்கின்றார்.

அனுமன் சீதையைத் தேடித் தெற்கே சென்றான்; மற்ற வானரர்கள் பல திக்குகளுக்கும் சென்றார்கள்.

மனைவியை இழந்து மனமுடைந்து நிற்கும் இராமனோ இலக்குவனோ யாருமே இச்செய்தியை அயோத்தி நாட்டிற்கும் மிதிலை நாட்டிற்கும் தெரிவித்து உதவிபெற நினைக்கவில்லை. இது நாம் குறிக்கொள்ளத்தக்க தொன்று.

## 29. சம்பாதி.

சுக்கிரீவன் கட்டளைப்படி தென் திசைக்கு ஏகிய வானரங்கள் வழியிலே ஒரு பாலைவனத்தை அடைந்தன. அங்கே அதன் வெப்பம் தாங்க மாட்டாது மிகவும் வருந்தின. அவ்விடத்தே ஒரு பிலத்துவாரம் காணப்படவே அதனுள் அனுமன் முதலிய வானரர்கள் சென்றனர். அப்பிலம் இவ்வுலகத்திலே உள்ள பேரிருள் சூரியனைக்கண்டு அச்சமுற்று அங்கு வந்து அடைந்திருந்தது போலிருந்தது. வானர வீரர்கள் மிகவும் திகைத்தனர். அனுமன் மிகவும் சாதுரியமாக அவர்களை வெளியிலே கொண்டுவந்தான். அதனுள் ஓர் அழகிய நகரம் மிகவும் சிறந்திருந்தது. சூரிய சந்திரர்களின் ஒளிக்கதிர்கள் அங்கே பரவவில்லையாயினும், இரத்தினத்தாலும், மணிகளாலும், முத்துக்களாலும் அலங்கரிக்கப்பட்டமையால் அந்நகரம் மிகவும் ஒளிபெற்று விளங்கியது. உலகத்தாராற் புகழப்படுகின்ற குலோத்துங்க சோழனாகிய பெருமைபெற்ற மன்னன் தோள் வலிமையைப் புகழ்ந்துபாடிய புலவர்களின் வீடுகள்போல அந்த நகரிலே பல பொருள்கள் குவிந்து கிடந்தன என்று கம்பர் கூறுகின்றார். கம்பர் தமது இராமாயணம் முழுதுமே தமிழ்நாட்டையும் தமிழ் மன்னனையும் மறக்கவில்லை என்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாகும். அவர்,

> "புவிபுகழ் சென்னிபேர் அமலன் தோள்புகழ்
> கவிகள்தம் மனையெனக் கனக ராசியும்
> சவியுடைத் தூசுமென் சாந்து மாலையும்
> அவிரிழைக் குப்பையு மளவி லாதது"

என்று கூறுகின்றார்.

எல்லா நலங்களும் நிரம்பப் பெற்ற அந்நகரைக் கண்டவுடன் வானரர்கள் தாங்கள் சுவர்க்கத்திற்கே வந்து விட்டோமோ என்று திகைத்தனர். ஆயினும் அமர வாழ்வின் மற்றப் பகுதிகளை அடையாதது கண்டு அவர்கள் ஐயமுற்ற

னர். ஒருவேளை சீதையைத் தேடி வருகின்றோமென்று அறிந்துதான் இராவணன் இவ்விருட் பிழம்பை உண்டாக்கி நம்மை இறக்கிவிட்டானே எனச் சாம்புவான் கருதினன். அனுமன் அவனது அச்சத்தைப் போக்கி, முயன்றால் முடியாத காரியம் ஒன்றுமில்லை என்று கூறி அவனைத் தேற்றினன். பின்னர் அவ்வானரர்கள் தவமே உருவெடுத்தாற்போன்ற ஒரு பெண்ணைக் கண்டனர். அவள் பெயர் சுயம்பிரபை; சீதையோ என்று ஐயமுற்று வானரர்கள் அவள் அருகில் சென்றனர். ஆனால் அனுமன், அவள் சீதை இல்லையென்று துணிந்து கூறினன். பின்னர் அப்பெண் தன் கதையைக் கூறினள்.

"அரசசிற்பியான மயன் என்பான் தவ வலிமையினால் அப்பட்டினத்தை உண்டாக்கினன். அவன் தேவமாதருள் ஒருத்தியை விரும்ப அம்மங்கையின் உயிர்த் தோழியான சுயம்பிரபை, அவளை மயனிடத்தில் சேர்ப்பித்தாள். மயனும் அத்தேவமாதும் இன்பமாக இருந்து கொண்டிருந்த காலத்தே இந்திரன் தன் சபைக்குப் பல நாட்களாக அந்த மாது வராதது கண்டு சினந்து அவளைத் தேடினன். அவள் இங்கிருப்பது கண்டு அவன் அத்தேவ மாதை நோக்கி "நடந்தது கூறுக" எனக் கேட்டான். சுயம்பிரபைதான் அவளைத் தேவலோகத்திலிருந்து கொண்டுவந்தாள் என்று அறிந்ததும், அவளைப் பிலத்திலேயே தனித்து வாழும்படி இந்திரன் சபித்து விட்டான். இச் சாபம் எப்போது நீங்கும் என அவள் கேட்க, அவன், "இராம தூதர்கள் இங்கு வரும் போது நீங்கும்" என்று கூறினன். அதுமுதற் கொண்டு அங்கு அவள் யோக நிலையிலே வாழ்ந்து வந்தாள்."

இவ்வாறு சொல்லிச் சுயம்பிரபை துறக்க நாடு சென்றாள். அனுமனும் மற்றையோரும் பல ஆறுகளைக் கடந்து, தூமிரன் என்ற அசுரனைக் கொன்று, பல நாடுகளில் சீதையைத் தேடி அலைந்தனர். அவர்கள் தேடிய நாடுகளுள் தமிழ் நாடும் ஒன்றாகும். தொண்டை நாட்டை அடைந்து அதன் வளத்தைக் கண்டு வியந்தனர். பின்னர் சோழநாடு சென்று, அங்குள்ள நீர்வளத்தையும் நிலவளத்தையும் கண்டனர்.

பின்பு பாண்டிய நாடு இனிமையான தமிழ் வழங்கப்பட்ட நாடு என்று கூறப்படுகிறது. ஏழு உலகத்தாராலும் புகழப் படுகின்ற முத்தும், இயல் இசை நாடகம் என்ற மூன்று தமிழும் தழைத்திருக்கின்ற அந்த நாடு தேவலோகம் போலக் காட்சி தந்தது. இதனைக் கம்பர்,

> **"அத்திருத்தகு நாட்டினை யண்டர் நாடு**
> **ஒத்திருக்கு மென்றால் உரை யொக்குமோ**
> **எத் திறத்தினும் ஏழுலகும் புகழ்**
> **முத்தும் முத் தமிழும் தந்து முற்றலால்"**

என்று செம்மாந்து கூறுகிறார்.

முன் காலத்திலே, தென் பாண்டி நாட்டையே தமிழ்நாடு என்று கூறி வந்தனர். சங்கம் என்ற வட சொற்குக் கூடல் என்பது தமிழ்ப் பெயர்; இது கபாடபுரம் என்று அன்று வழங்கி வந்தது. கபாடம் என்ற வடமொழிப்பதம், "வாயில்" என்று பொருள் படும். மதுரைக்குத் தமிழிலே கூடல் வாயில் என்று ஒரு பெயர் இருந்தது. அதனாலேதான் வடமொழி யாளர் கபாடபுரமென அதனைக் கூறினர். தமிழ்ப்பெரு மக்க ளெல்லாம் அங்குக் கூடியதால் அதற்குக் கூடல் என்ற பெயர் பொருந்துவதாயிற்று. கூடல்வாயில் என்பதன் மொழி பெயர்ப்புக் கபாடபுரம் என்று கூறப்படுவதன் உண்மையை அறியும் திறமில்லாத வரலாற்றாராய்ச்சியாளர் பாண்டி நாட்டுக் குத் தலைநகரம் கபாடபுரம் எனத் தவறாகக் கூறிவிட்டனர்.

அந்தத் தமிழ்த் திருநாட்டில் அரக்கர்கள் வாழ்ந்தனர் என்பதற்கு யாதும் சான்றுகள் இல்லை. அரக்கர்களே புகாத படி காக்கப்பட்ட நாடு என்று இ ரா ம னா லே சிறப்பிக்கப் பட்ட தமிழ் நாட்டில் சீதையைக் காணவில்லை என்பதில் வியப்பொன்றுமில்லை.

சீதையைத் தேடிச் செல்லும்போது அனுமன் சம்பாதி என்ற பறவையரசனைக் கண்டான்; இவன் இராவணன் சீதையைத் தூக்கிக்கொண்டு சென்றபோது, அவனோடு எதிர்த்துப் போர் செய்த சடாயுவின் தமையன். அனுமன் சீதையின் கதையையும், சடாயு இறந்த நிகழ்ச்சியையும் கூறி னான். உடனே சம்பாதி மிகவும் வருந்தி, மூத்தவனை தான்

உயிருடனிருக்க, தம்பி இறந்துவிட்டானே என வருந்தினன். இராமனுடைய புகழைக் கூறியவுடன் சம்பாதிக்கு இறக்கைகள் முளைக்கத் தொடங்கின. பின்னர்ச் சம்பாதி இராமனைப் போற்றிச் சீதை இருக்குமிடத்தைத் தெளிவாகக் கூறினன்.

கடலைக் கடந்து இலங்கைக்குச் செல்லவேண்டுமென்று தெரிந்தவுடன், வானரர்கள் சிறிது மலைத்தனர். ஆனல் அனுமன் சிறிது சிந்தனையில் ஆழ்ந்தான். சாம்பவான் அவனுடைய பலத்தைக்கூறி, அவனே இலங்கைக்குச் செல்ல வேண்டுமென்று கூறினன். அனுமன் பலகாலம் வரை தன்னுடைய பலத்தை அறியாதிருந்தான். ஆனல் அவனுக்கு ஊக்கமூட்டி அவனுடைய ஆற்றலைக் கூறியபின் அவன் மனம் தெளிவுற்றது. அவன் தன்னுடைய சிறிய உருவத்தை விட்டு ஒரு பேருருவம் பெற்றன் என்று கூறுகின்றார் கம்பர்.

“பொருவரு வேலை தாவும்
　　புந்தியான் புவனம் தாய
பெருவடி உயர்ந்த மாயோன்
　　மேக்குறப் பெயர்ந்தான் போல
உருவறி வடிவின் உம்பர்
　　ஓங்கின உவமை யாலும்
திருவடி யென்னும் தன்மை
　　யாவர்க்கும் தெரிய நின்றன்”

பேருருவங்கொண்டு நின்ற அனுமன், மகேந்திர மலையின்மீது ஏறி, இலங்கையைக் கடக்க ஆயத்தமானன்.

## 30. சுந்தரம்

சுந்தர காண்டம் சீதை இராமனது எழில்வளத்தை நினைந்து உள்ளம் உருகிய பாகத்தைக் கூறுகிறது. சுந்தர காண்டம் என்ற தமிழ்நெறித் தலைப்பு வடமொழி இலக்கண நெறிக்குப் பொருந்தாமையால் வான்மீகி தமிழ் அறிந்தவரா என்ற ஐயம் எழுகின்றது. இக்காண்டத்திலே தமிழைப் பற்றி வான்மீகி கூறியிருப்பதால் அதனைச் சிறிது ஆராய் வோம்.

வான்மீகியார் வடமொழியில் இராமாயணத்தை இயற்றி யவர் என்பதை நாம் அறிவோம். இவர் இச் சிறந்த காவி யத்தை இயற்றுமுன் அம்மொழியில் வேதங்களைத் தவிர வேறு காப்பிய நூல்கள் இல்லை. அந்த வேதங்களும், இன்பம் பயக்கும் காவிய நடையைக் கைக்கொண்டவை யல்ல. ஆகையால், வான்மீகி, வடமொழியில் காவியம் எழுதும் திறம்பெற்றதற்கு வேறு காரணமிருக்கவேண்டும். இதற்குக் காரணம் நாரத பகவானின் உபதேசமும், பிரமா வின் அனுக்கிரகமும் என்பர். அவர்களும் வேதம் ஒன்றைத் தான் அறிவர். இனி வரலாற்று ஆராய்ச்சியாளர் கண் கொண்டு நோக்குவோமாயின் அவர் இராமாயணத்தை இயற்றுமுன் சிறந்த காவியங்களமைந்த வேறு மொழியில் பயிற்சியுடையராக இருந்திருக்க வேண்டும் என்பது இனிது விளங்கும்.

இவர் காலம் அகத்தியர், தொல்காப்பியர் முதலிய சங்க மருவிய சான்றோர்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்திருந்த காலம் என்பதும், இவருக்குத் தமிழ்நாட்டில் நல்ல பயிற்சியுண் டென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபு.

சங்கச் சான்றோர்கள் பாடிய பாட்டுக்களையுடையது புற நானூறு. அந்நூலில் ஒரு பாட்டைப் பாடியவர் பெயர் வான்மீகியார் என்றும் வான்மீகையார் என்றும் எழுதப்பட் டிருக்கிறது. வான்மீகி என்ருல் தவத்தில் பெரியவர் என்று

பொருள் கூறுவர். அவர் பாடிய பாட்டுக் கீழே தரப்பட்டிருக்கிறது.

> "பருதி சூழ்ந்தவிப் பயங்கெழு மாநிலம்
> ஒருபகல் எழுவர் எய்தி யற்றே
> வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
> ஐயவி யனைத்தும் ஆற்ருது ஆகலின்
> கைவிட் டனரே காதலர்; அதனுல்
> விட்டோரை விடா அள் திருவே;
> விடா அ தோரிவள் விடப்பட் டோரே"

இதன்கண் அமைந்த பொருள்: கதிரவன் ஒளியாலே விளங்குகின்ற இவ்வுலகத்தை ஒரு மன்னன் ஒரு குடைக்கீழ் வைத்து ஆள்வதைப் பார்க்கும்போது தவத்தின் பெருமை மிகவும் பெரிதாகத் தோன்றுகிறது. இவ்வையகத்தின் வாழ்வை ஒரு தட்டிலும், தவப்பயனுல் உண்டாகும் பெரு வாழ்வை ஒரு தட்டிலும் வைத்துச் சீர்தூக்கினுல், தவ வாழ்விற்கு வையத்தின் வாழ்வு ஒரு சிறு வெண்கடுகளவும் ஆற்ருது நொய்தாகும் என்பது.

இந்தத் தவப்பாடலைச் செய்தவரும் இராமாயணத்தை இயற்றியவரும் ஒருவர் என்றே சில அறிஞர்கள் கருதுகின்றனர். அப்படியாயின் வான்மீக முனிவருக்குத் தமிழிற் பயிற்சி உண்டா என்பதை ஆராயவேண்டும். இதற்குத் தக்க சான்றுகள் வான்மீகி இராமாயணத்தில் சுந்தரகாண்டத்தில் உள்ளன.

இராமாயணத்தில் காண்டங்கள் தோறும் சொல்லப்படும் பொருள்பற்றியே, ஒவ்வொரு காண்டத்திற்கும் வான்மீகி பெயரிட்டிருக்கிருர். சுந்தரம் என்ற வட சொல்லுக்குத் தமிழில் அழகு என்பது பொருள். இதனுல் அக்காண்டம் அழகுடைய காண்டம் என்று பொருள் கொள்ளக்கிடக்கிறது. இவ்வாறு பொருள் கொண்டால், அக்காண்டத்தின் அழகு பற்றிப் பெயரிட்டதாகுமல்லது அக்காண்டத்தில் பலவிடங்களில் சொல்லப்பட்ட இராம விருத்தாந்தம் பற்றிப் பெயரிடப்பட்டதாக்க் கொள்வதற்கு இடமில்லை. இராமனது வடிவழகே சீதையை உய்யக்கொண்டமையால் அச்சிறப்புப்

பற்றி அக்காண்டத்திற்குச் சுந்தர காண்டம் என்று பெயரிட்டிருக்கலாமெனத் தோன்றுகிறது. ஆயினும் இது வடமொழி வழக்கிற்குப் பொருந்தாமல் இருப்பதுபற்றி வடமொழியாளர் வேறு வேறு பொருள் கூறுகின்றனர்.

சுந்தரம் என்பது வடசொல்; இது தமிழில் வந்து வழங்குகிறது. வடமொழியாளர் குணிப் பொருளல்லது அழகு என்னும் குணப்பொருள் கொள்வதில்லை என்பது உண்மையே. தமிழ்ப் புலவர்கள் அழகின் பரியாயமாகிய சௌந்தரியம் என்னும் வடசொற் பொருளையும் சுந்தரம் என்ற சொல்லால் வழங்குவர். இதனை

> “ சுந்தரம் அணங்கு மஞ்சு
> சொக்குத் தேசிகம் அம்பொன்னே
> சந்தம்காரிகை கவின் பூத்
> தாமமே வாமம் காமர்
> அந்தமே வனப்பே யொண்மை
> ஆய்ந்தவா றேழுந்தானே
> வந்திடும் அழகின்பேராம் ”

என்ற நிகண்டினாலும் அறியலாம். தமிழ்ப் புலவர்கள் வடமொழிக் குணிப்பெயர்களையும் பெரும்பாலும் குணப்பெயராலேயே வழங்குவர். இதனைத் தரித்திரம் என்னும் குணிப்பெயரால் தாரித்திரியம் (வறுமை) என்னும் குணத்தையும், கவி (புலவன்) என்னும் குணிப் பெயரால் அக்கவியின் செயலாகிய கவிதை என்னும் பண்பையும், வீரம் என்னும் குணிப்பெயரால் வீரியம் என்னும் பண்பையும் வழங்குதல் காணலாம். கம்பரும் “ வீரமும் களத்தே போட்டு வெறுங்கையோடு இலங்கை புக்கான் ” என்பது போலப் பலவிடங்களில் வழங்குவர்.

இவ்வாறே சுந்தரம் என்ற குணிப் பொருளின் பெயர் (தர்மி வாசகம்) சௌந்தரியம் (அழகு) என்ற குணப்பொருளின் பெயராக (தர்மவாசகமாக) வழங்குதல் தமிழ்ப் புலமை பற்றிய வழக்கென்று தெளிவாக அறியலாம். வடமொழிப் புலமையுடையராகிய வான்மீகி தாம் எழுதிய வடமொழிக் காவியத்துள் வடமொழி வழக்கிற்கு மாருகச் சௌந்தரிய

காண்டமென்று பெயரிடாது தமிழ் வழக்குப்பற்றிச் சுந்தர காண்டம் என்று பெயரிடுவானேன்? இக்கேள்விக்குப் பதில்: வான்மீகி முனிவர் கருத்தில் தமிழ் வழக்குகளும் இடம் பெற்றிருந்தமை கொள்ளத்தகும். இதனை வடமொழிப் புலவர்களும் அறியவேண்டும் என்ற கருத்தாலே தம்முடைய நூலின் இடையிடையே தமிழ் வழக்குகளை எடுத்துக் கூறியிருக்கின்றார் என்பர்.

இராமன் காலத்தில் வடநாட்டில் தமிழ்மொழி வழக்கில் இருந்தது என்றும், இராமன், சீதை, இலக்குவன் மூவரும் தமிழில் பேசினர் என்றும் சுந்தர காண்டத்திலே மிகத்தெளிவாக வான்மீகி குறித்திருக்கின்றார். 'பாம்பின் கால் பாம்பறியும்' என்ற தமிழ்ப் பழமொழியை அவர் வடமொழியில் நன்கு கையாண்டிருப்பதே இதற்கு ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும்,

இராமன் தமிழ்ப் பெருங்குடியின் வழியிலே தோன்றியவன் என்றே கம்பரும் கருதினர். தன்னை மிகப் பரிவுடன் ஆதரித்து வந்த சடையப்ப வள்ளலின் முன்னோர்களான தமிழர்களும் இராமன் நாட்டிலே மிகச் சிறப்புடன் வாழ்ந்து வந்தார்கள் என்பது அவர் கருத்து. அதனால் தான் "......... வெண்ணெயூர்ச் சடையன்றன், மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மோலி" என்று கம்பர் கூறுகின்றார்.

சிபிமன்னன் சோழ அரசர்களில் மிகவும் சிறந்தவன். அவன் மனுவின் வழிவந்தவனென்றும், இராமனுக்கு முன்னோன் என்றும் கூறப்படுகின்றான். செம்பியன் என்ற தமிழ்ப் பெயர்தான் சைப்பியர் எனக்குழறுபடையாகிச் சிபி என்று மருவி வழங்கலாயிற்று. பாகவத புராணம், இராமனுக்கு முன்னோனும், சூரியகுலத்தின் முதல்வனுமான சத்தியவிரதன், பாண்டிய நாட்டிலுள்ள வையைக்கரையில் தவம்செய்து கொண்டிருந்தானென்றும், அவன்தான் பின்னர் வைவச்சுத மனுவானான் என்றும் கூறுகிறது. இவன் திருமாலை வழிபட்டதின் காரணமாகத் தனக்கு ஒப்பான இக்குவாகு முதலாயுள்ள பத்துப் புத்திரர்களைப் பெற்றான் என்றும் அந்நூல்

கூறுகிறது. இக்குவாகு குலத்திலே பிறந்தவன் இராமன் என்பதை இரகுபதி யென்ற அவன் பெயரே காட்டுகிறது.

கந்தபுராணத்திலும், தெற்கே உள்ள அரசகுலத்தினர் தான் வடநாடு சென்று தங்கள் ஆட்சியை நிறுவினர் என்று கூறப்படுகிறது. பாரத-கீதையிலும், இக்கருத்திற்கு உடன்பாடு காணப்படுகிறது. கிருஷ்ண பகவான் அருச்சுனனை நோக்கி: 'நான் இந்தக் குறையற்றதாயுள்ள ஞானயோகத்தை விசுவாசனுக்குச் சொன்னேன்; விசுவாசன் (தன் புத்திரனை) மனுவிற்குச் சொன்னான்; மனு (தன் புத்திரனை) இக்குவாகுவிற்குச் சொன்னான்; இந்த முறையே, பரம்பரையாய் வந்த ஞான யோகத்தை ராஜ ரிஷிகள் அறிகிறார்கள் என்று கூறியதாகப் பகவற் கீதையைப் பாடிய வியாசர் விளக்குகின்றார்.

இந்த ஞானம் அருச்சுனன் காலத்தே மறைந்ததற்குக் காரணம், 'மானுஷபாஷையான' தமிழ் வடநாட்டில் மறைந்து, தேவ பாஷையான வடமொழி' பரவிய காரணத்தால் என்பது ஒன்று. மச்ச புராணத்தில், சூரிய புத்திரனை வைவச்சுத மனு தன் புத்திரனை இக்குவாகுவிடம் அரசை ஒப்படைத்துவிட்டுப் பொதியமலையின் ஒரு பகுதியில் யோக முயற்சியை மேற்கொண்டிருந்தான் என்பர். இவன் இமயம் விரும்பாது, பொதியமலையிலே யோகநிலை விரும்பிப் பெற்றது, இவன் தென்னாட்டான் என்பதையும் தமிழன் என்பதையும் விளக்குவதாகும். மேலே கூறிய பல சான்றுகளாலும், வைவச்சுத மனுவின் மகன் இக்குவாகுவும் தென்னாட்டுத் தமிழனாய்த் திருவரங்கம் கோயில் கண்டவனென்று சொல்லப்படுவதும், மனுவைச் சோழன் என்று சேக்கிழார் கூறியிருப்பதும் பொருந்துகின்றன.

இராமன் தமிழன் என்பதற்குப் பல நூல்கள் சான்று பகருவதால் வைவச்சுத மனு வந்ததிலிருந்து இராமாயண காலம் வரையிலும் பரதகண்டம் முழுவதும் தமிழே மக்கள் மொழியாக வழங்கப்பெற்று வந்தது என்பது தெளிவாகும். "சதுர்மறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினது" என்று ஆராய்ச்சி வல்லுநரான சுந்தரம் பிள்ளையவர்கள் தமிழைப்

பற்றிக் கூறியது இங்கே நினைவு கூறத்தக்கது. வடநாட்டில் அக்காலத்தே தமிழ்மொழி வழக்கிலிருந்ததால், வான்மீக முனிவர் நன்கு தமிழ் பயின்றவர் என்பதில் ஐயமில்லை. வான்மீகியும் தமிழ் அறிந்த பெருமகன் என்பதை மனத்திற் கொண்டு சுந்தர காண்டத்தைப் படிக்கத் தொடங்குவோமானல் நாம் அங்கே கூறியுள்ள நுட்பங்களை நன்கு அறிதல் கூடும்.

# 31. இலங்கைக் காட்சி.

அனுமான் மிகவும் பலம் படைத்தவன். ஆனால், அவன் ஒரு சாபத்தினால் தன்னுடைய பலத்தைத் தானே அறியாதிருந்தான். தன் பலத்தை அறிந்த பின்பே கடல் கடந்து இலங்கை அடையத் துணிவு கொண்டான். விண்ணுலகமும் மண்ணுலகமும் அவனது வேகம் கண்டு அஞ்சும்படி அவன் கடலின்மேல் தாவினான். அரக்கர்களுடைய தலைவனான இராவணன் வாழ்ந்த நாடு ஒரு பண்பாடற்ற—நாகரிகத்தின் சுவடே காணாத—ஒருநாடு என்றுதான் நாம் எல்லோரும் நினைப்போம். இராவணன் கொடுமை நிறைந்த மனத்தை யுடையவனென்றும், அவன் நாட்டில் மக்கள் அல்லலுற்று மனம் அழிந்து வாழ்ந்து வந்தனர் என்றும் நாம் பலகாலும் பலரும் சொல்லக் கேட்டுள்ளோம். ஆனால் கம்பனை ஊன்றிப் படிப்பவர்களுக்கு இக்கருத்துக்கு மாறான உண்மை வெளிப்படும்.

ஒருவரைப்பற்றியோ ஒரு நாட்டைப்பற்றியோ, நாம் அறிய வேண்டுமானால், அந்நாட்டிலே பற்றுள்ளவர்களிடத்திலே நாம் கேட்டுத் தெரிந்து கொள்ளக்கூடாது. அந்நாட்டைப்பற்றிய குறைபாடுகளை அவர்கள் நமக்குக் கூற மாட்டார்கள். ஆனால், அந்நாட்டின்பால் பற்றற்ற கருத்துக் கொண்டிருப்பவர்களிடம் நாம் அந்நாட்டைப்பற்றிக் கேட்போமானால், அவர்கள் அந்நாட்டில் காணும் குறைகளையே கூறுவார்கள். அந்நாட்டில் வேற்றுமைக் கருத்துக் கொண்டவர்கள் கூட, அந்நாட்டைப்பற்றிச் சிறப்பாகக் கூறுவார்களேயானால், அந்த நாடு ஒரு சிறந்த திருநாடு என்று கொள்வதில் தடையிராது.

அனுமன், இலங்கை நாட்டின்பால் அன்பு கொண்டவனல்லன். பவள மலையினின்று அவன் இலங்கையைப் பார்க்கிறான். அளப்பருந் தன்மையுடைய இலங்கையின் வளப்பெருங்காட்சியைத் தன் இரு கண்கொண்டு முற்றும்

காண்பது என்பது முடியாத ஒன்று என்று உணர்ந்தான் பொன்னை மண்ணாகக்கொண்டு இரத்தினங்களை அதிலே பதித்துக் கட்டப்பட்ட பல கட்டிடங்கள் சந்திரனைத்தொடும் அளவுக்கு உயர்ந்திருந்தன. மேக மண்டலங்களைத் தழுவி உயர்ந்த அக்கட்டிடங்கள் மின்னலைக்கொண்டு கட்டினார் களா, சூரிய காந்தக் கல்லைக் கொண்டுகட்டினார்களா என்று ஐயமுற்று அதிசயிக்கும் வண்ணம் இருந்தன. இதனைக் கம்பர்,

"பொன்கொண் டிழைத்து மணியைக் கொடுபொதிந்த
மின்கொண் டிழைத்த வெயிலைக் கொடு சமைத்த,
எண்கொண் டியற்றிய எனத் தெரிகிலாத
வன்கொண் டல்தாவி மதி முட்டுவன மாடம்"

என்று கூறுகின்றார்.

இலங்கை மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் உயர்ந் திருந்தது. அந்நகரத்து மாளிகையின் சுவர்களெல்லாம் இரத்தின மயமானவையாதலால், அவற்றிலே தோன்று கின்ற தம் பி ர தி பி ம் ப ங் க ளை க் கண்டு அஃது உண்மை உருவமா, நிழலா எனக் காண்போர் ஐயமுற்றனர். அம் மாளிகையிலே, குழல், வீணை, யாழ் முதலிய இசைக் கருவிகள் எழுப்புகின்ற நா த த் தி லே தோன்றும் இன்னிசையைக் காட்டிலும், மகளிர் இனிமையான மழலைச் சொற்களைப்பேசிக் கிளிப்பிள்ளைகளுடன் விளையாடி, அவைகட்குத் தங்களுடைய மொழியைக் கற்றுக்கொடுத்தனர். இதனைக் கம்பர்,

"குழலும் வீணையும் யாழுமென்றினையன குழையும்,
மழலை மென்மொழி கிளிக்கிருந்தளிக்கின்ற மகளிர்
சுழலுநன்னெடுந் தடமணிச்சுவர்தொறுந் துவன்றும்
நிழலுந் தம்மையும் மெய்மை நின்றறிவரு நிலைய"

என்று சிறப்பித்துக் கூறுகிறார்.

இலங்கை மன்னனான இ ரா வ ண ன், இயற்கையை வென்று, அதனை மக்களுக்குப் பயன்படும் வகையில் அமைத் தான். சூரியன் தன் வெப்பமான கதிர்களை அங்கு வீசச்செய் வதற்கு அஞ்சினான். காற்றும் மழையும் இலங்கை மன்னன்

ஏவலில் நின்றன. இவ்வாருக, இயற்கையின் தீச்செயல் வகையை வென்று, பலகாலம் நாட்டை நல்ல முறையிலே அரசுசெய்து செல்வத் திருநாடாக்கினன் இராவணன். மக்கள் மனவமைதியுடன் வாழ்ந்து வந்தனர்.

பகைவர் நாட்டிலே நடுநிசியிலே அனுமன், துக்கமே உருவான ஒரு பெண்ணைக் காண வேண்டுமென்று வந்தான். அவன் இலங்கைக்குள் நுழையும்போது ஓர் ஐயம் ஏற்பட்டது. அந்த இலங்கை நாட்டில் துன்பமே உருவான பெண்ணை எவ்வாறு காண இயலுமென அவன் எண்ணினன். அந்நாட்டிலே, துன்பத்தின் அடிச்சுவடு கூடக் காணுது துணுக்குற்ருன். ஒவ்வொரு மனையிலும் கணவனும் மனைவியும் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டு வாழ்ந்தனர். எனவே கலங்கிய பெண்களின் சோகக் குரலை அவன் கேட்கவில்லை. இளம் பெண்கள் தம் கணவர்களுடன் களிப்புடன் வாழ்ந்து வந்ததால் அவர்களின் சோகக் குரலும் அங்கில்லை. எல்லாரும் இன்ப வெள்ளத்திலே திளைத்திருந்தார்களாதலால் அங்கே துக்க மெய்தியவர்கள் ஒருவரையுமே அனுமன் காணவில்லை.

ஒரு நாட்டில் அமைதி நிலவுகின்றது என்பதற்கு மற்ருெரு சான்று வேண்டுமானுல், இரவிலே மக்கள் என்ன செய்து கொண்டிருக்கின்றனர் என்பதை நன்கு கவனிக்க வேண்டும். இலங்கை நாட்டிலே உட்பகையில்லை. ஆகையால் அரசனுக்கு எதிராகச் சதி செய்பவர்கள் தங்கள் திட்டங்களை அங்கே தீட்டவில்லை. நாள்தோறும் முறை தவருமல், தங்களுடைய கருமங்களைச் செய்கின்றவர்களான ஆன்மஞானத்தை யுடையவர்களுக்கும் யாரிடமிருந்தும் துன்பம் வராததால் அவர்கள் நன்ருக இரவிலே உறங்கினுர்கள். யோகியர்களும் இரவிலே தூங்கினுர்கள். பைத்தியம் பிடித்தவர்களுக்கு இரவிலே தூக்கம் வருவது கடினம்; ஆனுல் இலங்கையின் அமைதியான பண்பாடு பித்தர்களையும் இனிது உறங்கச் செய்தது. அங்குள்ள மதங்கொண்ட யானைகளும் தூங்கின. இவ்வாருக அமைதியே நிலவிய இலங்கையைக் கண்டான் அனுமன். இதனைக் கம்பர்,

"நித்தநியமத் தொழிலராய் நிறையும் ஞானத்து
உத்தமர் உறங்கினர் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களிறு உறங்கின மயங்கும்
பித்தரு முறங்கினர் இனிப் பிறிதென்னும்"

என்று கூறுகின்றார்.

இராவணன், மாட்சியுடன் நல்லமுறையிலே நாட்டை ஆண்டு வந்தான் என்பதைத்தான் கம்பர் மூலம் நாம் அறிந்து கொள்ளுகிறோம். அவன் கொடிய உள்ளத்தினனாகவோ கடமையைமறந்தவனாகவோ இருந்திருப்பானானால், அவன் தன் நாட்டைச் செல்வத் திருநாடாக்கி, மக்கள் களிப்புடன் இனிது வாழும் வண்ணம் செய்திருக்கமுடியாது. எல்லோரும் நல்லமுறையிலே வாழ்ந்து அமைதியான செல்வ வாழ்வுடையவர்களாக விளங்கினார்கள் என்று இராவணனுடைய பகைவனான அனுமனே சிறப்பித்துக் கூறுவதால், இராவணன் தன் நாட்டு மக்களுக்கு நல்ல மன்னனாகவே இருந்தான் என்பதில் ஐயமேயில்லை. மாட்சியுடன் வீற்றிருக்க வேண்டிய அவன் சீதையின் பேரில் கொண்ட தீய காமத்தால் வீழ்ச்சியடைய முற்பட்டான். ஆனந்தத்திலே ஆழ்ந்திருக்கின்றவர்களைத் தவிர வேறு மக்களைக் காணாத அனுமன், அசோக வனத்திலே அரக்கியர்களின் மத்தியில் சோகமே உருவான சீதையைக் கண்டான். அப்பொழுது, அரக்கியர்கள் எழுந்து நிற்பதைக் கண்டு மரத்தின்மேல் ஏறி ஒளிந்துகொண்டு, என்ன நடக்கிறது என்று கவனித்தான். கம்பீரமான தோற்றமுடைய இராவணன் அசோக வனத்தினுள்ளே நுழைவதை அவன் கண்டான்.

## 32. இராமதூதன்

சீதையின் முன்னே இராவணன் நின்றான். தேவமகளிர் புடைசூழ வந்து தன்முன் நின்ற இராவணனைக் கண்டதும் சீதை அச்சமுற்றாள். அவன் அவள் முன் சென்று, "மிகவும் நுண்ணிய இடையும் குயில் போன்ற சொல்லும் உடையவளே, இப்போது நீ எனக்கு அருள் செய்து இன்சொல் ஒன்று சொல்லுவாயா" என்று கேட்டான். தனது வழிபடு தெய்வமாகிய சிவபெருமானிடத்திலும் தனது வலிமைச் செருக்குக் குறையப்பெறாது வன்மனம் பெற்று நின்றவன் இராவணன். அவன் வீற்றிருக்கும்போது அந்த ஈசனே முன்வந்து நிற்பினும், வணங்காத முடி மன்னனான இராவணேசுவரன், சீதையிடம் கொண்ட மட்டற்ற காமத்தால் உள்ளம் மடங்கி வணக்கமான மொழிகளைக் கூறினான்.

சீதைபால் இராவணன் கொண்ட காமக்காதல் தீது என்பதை எடுத்துரைக்க இராவணனது நாட்டிலே ஒருவரும் இல்லையோ என நாம் நினைக்க வேண்டியிருக்கிறது. இடிப்பாரையில்லாத ஏமுற்ற மன்னனாக அவன் இருந்ததால், தன்னுடைய பெரும் புண்ணியத்தின் பயனாகக் கிடைக்கப் பெற்ற பெரும் பாக்கியத்தைப் பெரும் பாதகமான செயலால் பிறர் மனையை நயத்தலால்—இழந்துவிடப் போகிறானே என நாம் அவன்பால் கழிவிரக்கம் கொள்ளுகிறோம்.

முன்பு இராமனுக்கும் தமிழ் முனிவனான அகத்தியனுக்கும் நடந்த பேச்சிலே, அரக்கர்களை அழித்து முனிவர்களைக் காப்பாற்றுவேன் என்று இராமன் கூறியதைச் சீதை கேட்டுள்ளாள். அரக்கர்களை அழிக்க வேண்டுமென்று முனிவர்கள் ஏன் கேட்கின்றார்கள் என்பதை அவள் அப்பொழுது அறியவில்லை. இராவணன் தன்னைத் தூக்கிச் சென்றபின், அரக்கர்கள் அறத்திற்கு மாறுபட்டவர்கள் என்ற கருத்தினால் தான் அவர்கள் அரக்கர் மேல் பகை கொண்டுள்ளனர் என்பதை அறிந்தாள். அவள் இராவணனை நோக்கி "அரக்கர்

தலைவனே, நீ என் பேரில் கொண்ட தீய காமத்தால் அழிந்துவிடுவாய். ஆகையால், நீ செய்த புண்ணியத்தால் பெற்ற நல்வாழ்வை நலிவுருமல் காப்பதே நலம். பெறற்கரிய புண்ணியப் பயனுல் ஏற்பட்ட செல்வத்தைத் துறந்து விடாதே" என்று அறிவுரை கூறினுள். இராவணனே அவள் கூறியதைச் செவியிற்கொள்ளாது அரக்கியர்களை நோக்கி, "எப்படியாவது சீதையின் மனத்தை மாற்றி விடுமின்" என்று கூறிவிட்டுச் சென்ருன்.

இராவணன் சென்றபின் சீதை சிறிது சிந்தித்தாள். ஒரு பெண்ணைக் காமவுணர்ச்சியுடன் ஒருவன் பார்த்தால் அந்த உணர்ச்சியுண்டாக அப்பெண்ணிற்கு மனம் இடம் தராது. பின்னையும், அவன் சொல்லும் பல வார்த்தைகளைக் கேட்டுக்கொண்டிருக்க வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டு விடுமாயின் அவளுக்கு அது மிகவும் துன்பம் தருவதொன்ருகும். "பிறர் தன்னை விரும்புகிருர்கள் என்பதை அறிந்தும், அவர்கள் கூறிய சுடு சொற்களைக் கேட்ட பின்னும் உயிர் வைத்திருக்கின்ற நான் ஓர் அரக்கிதான். கபடமாய் வந்த மானின் பின்னே இராமனை அனுப்பிவிட்டு, பின் என் மைத்துனனையும் பின் செல்க என ஏவிவிட்டு, நானே அரக்கர் மாளிகைக்குள் வந்துவிட்டேன்; இத்தகைய பெண்ணைத் தேடுதல் சரியல்லவென்று என்னை இராமன் வெறுத்துவிட்டானே? எப்பொழுது இப்பழி எனக்கு வந்துவிட்டதோ அப்பொழுதே நான் உயிர் விடுவது நல்லது;" என்று கூறி உயிர்விடத் துணிந்தாள். இதனைச் சீதை,

> உன்னினர் பிறர் என உணர்ந்தும் உய்ந்தவர்
> சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்
> மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்
> என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கொலோ
>
> வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கினேன்
> மஞ்சனைப் போக்கிப்பின் வழிக் கொள்வாயென
> நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான்
> உய்ஞ்சனென் இருத்தலும் உலகம் கொள்ளுமோ

எனக் கூறுவது காண்க.

இராமன் சீதையிடத்தே பேரன்பு கொண்டிருந்தான் என்பதை அவள் நன்கறிந்தவள். ஆகையால், தான் இறந்துபோனல் இராமனும் உயிர்விடுவான் என்ற கருத்தால் இதுவரையிலும் தன் உயிரைக்காத்து வந்தாள். ஆனல் பல மாதங்கள் சென்ற பின்னும் இராமன் வராத காரணத்தால், பிறர்மனை புகுந்த பெண்ணை விரும்பி ஏற்றுக்கொள்ள அவன் உள்ளம் இடம் தரவில்லைபோலும் என ஐயுற்றுத் தன் உயிரை மாய்த்துக்கொள்ள எண்ணினள். இதை அனுமன் அறிந்தான். அவளை நெருங்கி அவள் தற்கொலை செய்து கொள்வதைத் தடுக்காதிருக்க அவன் மனம் இடம் தரவில்லை. உடனே "இராமதூதன் நான்" என்று கத்தினன். கத்தினவன், பின் சீதை எதிரிலே சென்றுன்.

# 33. சோகச் சோலையிற் சொல்லாடல்

இராமாயணத்திலே சீதையை அனுமன் சந்திக்கும் சந் தருப்பத்தைக் கூறுமிடத்து வான்மீகி ஓர் உண்மையை வெளிப்படுத்தியிருக்கிறார்; அனுமன் சீதையுடன் பேசிய மொழி தமிழ் என்று குறிக்கின்றார். இலக்கணத் தமிழிலே பேசினால் சீதை தன்னை ஐயுறுவாள் என நினைந்து பேச்சுத் தமிழிலே பேசினான் எனக் கூறுகின்றார். சீதையுடன் சொல்லாடும் அனுமன், தான் பேசுவது இன்ன மொழி என்று அங்குள்ள அரக்கர் யாரும் அறியாதவாறு பேச வேண்டும். அரக்கர் நாட்டிலே அன்று தமிழ் வழங்கவில்லை; வடமொழி ஒன்றையே அரக்கர் தங்கள் தாய்மொழியாகக் கொண்டு வழங்கினர். அவர்கள் நாட்டிலே, யாரும் அறி யாத வண்ணம் அனுமனும் சீதையும் (அவர்கள் அறியாத) தமிழிலே உரையாடினார்கள் என்று கூறுகின்றார்.

வான்மீகியின் சுலோகக் கருத்து வருமாறு:

" நான் இங்கு அரக்கியர் இல்லாத சமயம் அடைந்திருக் கிறேன். மிகுந்த மனக்கொதிப்புள்ள இவளை மெல்ல ஆறு தலடைவிப்பேன். நான் மிகச் சிறிய வடிவுடையவனாகவும் வானரமாகவும் இருக்கிறேன். இங்கு இலக்கணங்களால் நன்றாகச் செய்யப்பட்ட ' மாநுஷ பாஷை ' பேசுவேனாயினும், இரு பிறப்பாளன் போல் ' சமஸ்கிருத பாஷையில் ' பேசுவே னாயினும் வானரனுக்குச் சிறப்பாகத் திருந்திய வாக்கு எப் படி உண்டாகக்கூடும் என்று எண்ணிச் சீதை என்னை அரக் கன் என்று நினைந்து அச்சமுறுவாள். ஆதலால் இன்றி யமையாது பேசத்தக்கது பொருள் விளங்கத் தக்க 'மாநுஷ பாஷையே'; அதுகொண்டு இவள் என்னால் ஆறுதல் அடைவிக்கத் தக்கவளாவள்.

" இங்ஙனம் பொருள் எளிதில் விளங்கும், 'மாநுஷ பாஷையிற்' பேசாது சமஸ்கிருத பாஷையில் பேசுவேனால் இவளுக்கு என்னால் ஆறுதல் அளிக்க முடியாது"—என்பது.

"வடவேங்கடம் தென் குமரியாயிடைத் தமிழ் கூறும் நல்லுலகத்து வழக்கும் செய்யுளும்"—என்று சங்கம் மருவிய சான்றோர்களால் கூறப்படுவதால் வழக்கு என்பது விளங்கத் தக்க 'மாநுஷ பாஷை' என்பதும், செய்யுள் என்பது இலக் கணங்களால் நன்ருகச் செய்யப்பட்டது என்பதும் தெளிவா கின்றன. தமிழ் மொழியிலே பேசுவதென்று முடிவு செய்த பின், தமிழ் மொழியில், சீதையும் அனுமானும் உரையாடினர் கள்.* என்ருலும், இலங்கை நாட்டிலே அது வழங்கவில்லை என்பதை வான்மீகியின் மூலம் நாம் அறிகிருேம்.

அனுமன் சீதையுடன் பேசிச் சென்ற பின் அரக்கியர் களுக்கு அவர்கள் என்ன உரையாடினர்கள் என்பது தெரியா ததால் சீதையிடம் சென்று "அனுமன் உன்னிடம் என்ன கூறினன்?" என்று கேட்டார்கள். அதற்கு விடையாக, சீதை "அவன் யார் என்று நான் அறியேன்; ஒருகால் அவன் அரக்கனுகவேயிருக்கலாம்; பாம்பின் கால் பாம்பறியும்" என்று கூறினள். பாம்பின் கால் பாம்பறியும் என்பது தமிழ்ப் பழமொழி. இதற்குப் பொருள், "பாம்பு உறையுமிடம் பாம் பிற்கே தெரியும்; அதுபோல, அரக்கர்கள் உறையுமிடங் களை அரக்கர்களே அறிவர் என்பது. "கால்" என்ருல் இருக்குமிடம் என்றும் பொருள்படும். வாய்க்கால், கொடிக் கால் என்பன போல. தமிழ்ப் பழமொழியை வான்மீகி உப யோகித்திருப்பதால் அவர் தமிழ் அறிந்தவரென்றும், அவரு டைய வடநாட்டில் அப்போது தமிழ் வழக்கில் இருந்தது என்றும் அறியக்கிடக்கின்றன.

இங்கே சீதை கூறியது பொய்யேயாயினும், பொய்மை யும் நன்மை பயந்து தீதற்றதாக இருந்தால் மெய்யாகவே கருதப்படும் என்று அறநூல் கூறுவதால் அவள் பேசியது மெய்யேயாகும்,

---

* பகுவியா: விதோ: விதேயித்வா—வெகு விதமாக ஆலோசனை செய்து; வைதே ஹ்யா—சீதா தேவிக்கு; சம்ஸ்ரவே—காது கேட்கும் தூரத் தில்; மதுரம் வாக்யம்—மதுர சப்த பரியாயமான தமிழ் என்னும் பெயருடைய் மொழியை—வான்மீகம்.

அங்கே சீதையைச் சூழ இருந்த அரக்க மகளிருள் திரிசடை என்பவள் சீதைபால் அன்பு கொண்டவள். அந்தத் திரிசடை வீடணனுடைய மகள். அவனுக்கு இராவணன் செயல் சிறிதும் பிடிக்காமையால் பின்னர் இராமனிடம் அவன் சரண் அடைவதைக் காண்கின்றோம். அப்படிப்பட்டவனுடைய மகளை ஏன் இராவணன் சீதைக்குத் தோழியாக்கினான்? சீதையுடன் திரிசடை இல்லாதிருந்தால் இராமாயணம் முற்றிலும் வேறுபட்டிருக்குமோ என ஐயுறும் வண்ணம் அவள் அமைந்துள்ளாள். இதனால் அறியப்படுவது ஒன்று: இராவணன், தனக்குச் சீதைமேல் ஏற்பட்ட தீய காமத்துக்கு இரையாகிய போதும் தன்னுடைய மக்களிடத்தோ உறவினரிடத்தோ அவன் பகை கொள்ளவில்லை. பின்னர் அவன் சீதைக்காகத்தான் நாம் போர் செய்யவேண்டும் என்று கூறிய போது அவனுடைய தம்பியரும் மைந்தரும் உடன்படவில்லை. அப்பொழுது இராவணன் தன் கருத்தைத் தெளிவாகக் கூறுகிறான்: "என் புயவலி ஒன்றை நம்பியேதான் சீதையைக் கொண்டுவந்தேன்" என உரைக்கின்றான். உட்பகையைப் பற்றி அவன் சிறிதும் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. வேறு ஒரு மன்னனாயின் வீடணன் இராமனிடத்தில் பேரன்பு பூண்டிருக்கிறான் என்று அறிந்த பின்னும் அவனை "நீ வேண்டுமானால் இராமனிடம் செல்" என்று கூறியிருக்க மாட்டான்; சிறையில் அடைத்திருப்பான். இங்கு இராவணனிடம் கருத்து வேற்றுமையைப் பகைமையன்று என்று கருதும் சிறந்த குணப் பண்பாட்டைக் காண்கின்றோம்.

அரக்கியர் உறங்கிவிட்டனர். சீதை திரும்பவும் சிந்தனையில் ஆழ்ந்து உயிர்விடுவதே மேல் என்ற முடிவுக்கு வந்தாள். பிறருடைய வீட்டிலிருக்கும் பெண்ணை விரும்பிக் கொணர்ந்து வைத்துக்கொள்ளுதல் தகுதியன்று என நினைத்துத்தான் இராமன் வரவில்லையோ என நினைத்தாள். மானின் பின்னே நாயகனை அனுப்பிவிட்டுத்தான் அரக்கர்களுடைய மாளிகையிலே புகுந்துவிட்டதாகத் தன்னையே நொந்து கொண்டாள். பிறர் மனம் புகாத கற்புடைய பெண்டிராக வாழ வேண்டும் என்பதன்றோ பெண்மை வாழ்க்கையின்

குறிக்கோள். ஆனால் சீதையோ பிறர் மனம் புகுந்ததோடல்லாமல் இராவணனால் இலங்கைக்குக் கொண்டு வரவும்பட்டுவிட்டாள். பின்னும் சொல்லத்தகாத வெல்லாம் அவன் சொல்லக் கேட்கத்தக்க நிலைமையையும் அடைந்து விட்டாள். இந்நிலையில் என்ன செய்வது?

இதனைக் கம்பர்:

"உன்னினர் பிறர் என உணர்ந்தும் உய்ந்தவர்
சொன்னன சொன்னன செவியில் தூங்கவும்
மன்னுயிர் காத்து இருங்காலம் வைகினேன்
என்னின் வேறு அரக்கியர் யாண்டையார் கொலோ?"

என்று கூறுகின்றார்.

அண்மையில் ஏடுகளிலும், மேடைகளிலும், நாடகத்திலும் சீதையைப் பற்றிப் பலர் பலவற்றைக் கூறக் கேள்விப்படுகிறோம். பெண்களின் மனம் பூவினும் மெல்லியது. அவரைக் கொண்ட ஆடவரின் மனம் அலைந்து திரிவதனால், அவர்களிற் பலர் மனம் உடைந்து வாழ்வை இழந்து அவதியுறுகின்றனர். தாங்கள் செய்யும் குற்றங்களை எல்லாம் அரிவையர் மேல் சுமத்திவிடும் கீழ்மை அன்றும் இருந்தது. அதையேதான் நாம் இன்றும் காண்கின்றோம்.

# 34. கலங்கிய காட்சி.

இலங்கை முழுவதும் சுற்றித்திரிந்தான் அனுமன். "பொன்னால் ஆக்கப்பட்டனவாயும், விசித்திரமாயும் உள்ள தோரணங்கள் நிறைந்ததும், சிறந்த இரத்தினங்களாலும் பவளங்களாலும் இழைக்கப்பட்ட தளவரிசைகள் கொண்டதும், ஒளிர்கின்ற அற்புதமான விமானங்களால் நிரம்பப் பட்டதுமாகி வானுலகத்துத் தேவேந்திர நகரம்போல் அன்றோ இந்த இலங்கை விளங்குகின்றது!" என அனுமன் நினைத்தான். இத்துணை இராசலட்சுமியை அடைந்திருந்தும் தீய எண்ணத்தால் தனக்கே கேடு விளைவித்துக் கொள்கிறானே என அவன் உள்ளம் இராவணன்பால் கழிவிரக்கம் கொண்டது.

இராவணன் சென்ற பின், அனுமன் சீதையை அசோக மரத்தில் இருந்துகொண்டே பார்த்தான். கருமுகில்களுக் கிடையில், மின்னற்கொடி போன்று கொடூர உருவம் கொண்ட அரக்கியர் இடையே சின்னஞ் சிறு இடையை யுடைய சீதையை அவன் கண்டபோது கருநாகம் போன்று ஒரே மயிர்ப் பின்னலுடன் விளங்கவேண்டிய அவள் கூந்தல், பரட்டையாய்ப் பரந்து கிடந்தது; கணவன் பால் வைத்த மனத்துடனும், உணவின்மையால் இளைத்த தேகத்துடனும், கண்ணீரால் நனைக்கப்பட்ட முகத்துடனும் கடும் வெயிலால் வெதும்பிய தாமரை ஓடையைப்போல் சீதை விளங்கினாள்.

இராமன் வருவான் வருவான் என எண்ணி அவள் மனம் நைந்தாள். பூரண சந்திரனும், நிலவும், இராமனுக்கு விரகதாபத்தைக் கொடுக்கவில்லையே என வருந்தினாள். காமனும் தன் வில்லின் திறத்தை இராமனிடம் காட்ட அஞ் சினான் போலும் என எண்ணினாள். கற்புக்கடம்பூண்ட தான் இராமனிடம் கொண்ட ஆசையால் உயிருடன் இருப்பது தவறோ என எண்ணினாள். பிறர் மனம் புகாத கற்பின் சிறப்புத்தான் மிகவும் உயர்ந்தது எனக் கருதினர் நம்

பண்டையோர். சிறிது சிந்தனையில் ஆழ்ந்த சீதை "சீ! பாக்கியமற்ற நான் மிகவும் உறுதியுடனிருப்பது வியப்பினும் வியப்பே. இராமனை விட்டுப் பிரிந்தும், அரக்கர்களுடைய மாளிகையில் சிறை வைக்கப்பட்டும், கேட்கத் தகாதனவும் மனதிற்குத் தோன்றியபடி உரைக்கப்படுகின்றவையுமான சொற்களைக் கேட்டும், நான் இன்னும் உயிர் தரித்திருக் கிறேனே" என்று மனம் வெதும்பினாள்.

இராவணன் சென்றபின் அரக்கியர், மூவுலகத்திற்கும் தலைவனான இராவணனை அவள் வெறுக்கக்கூடாது என்றும், அவன் குற்றம் செய்தவன் அல்லனென்றும், அவன் அவள் மீது வைத்த அன்பைப் பாராட்டாது வெறுப்பது சீதைக்குத் தகுதியல்லவென்றும் கூறினர். இதனையெல்லாம் கேட்ட பின் சீதை தான் இறந்துவிடுவதே மேல் என்ற முடிவுக்கு வந்தாள். சீதை இறந்துபோனால், அவள் மாமிசத்தைத் தின்னலாம் என்று கூறிய அரக்கியர் இடையே திரிசடை "அரக்கர் அழியவும் இராமன் வெற்றி பெறவும் கனாக் கண்டுள்ளேன்" என்றாள். இதைக் கேட்ட சீதை நாணமும் மகிழ்ச்சியும் கொண்டு "இவள் கூறியது உண்மையானால், எல்லோரையும் யான் காப்பேன்" என்றாள். இது வான் மீகத்திலுள்ளது.

சீதையின் உள்ளத்தில் ஓர் எண்ணம் ஏற்பட்டது: ஒரு பெண் தான் கற்புடையவள் என்பதை எவ்வாறு மெய்ப்பிப் பது? இராமன் ஒருகால் இலங்கை போந்து, இராவணனை வென்று அவளை மீட்டபோதிலும் ஏற்றுக் கொள்ளாமல் "அரக்கன் மாளிகையிலே இருந்த நீ என் வீட்டிற்கு வரத் தகுதியற்றவள்" எனக் கூறினால் என்ன பதில் சொல்வது?

> "அற்புதன் அரக்கர்தம் வருக்கம் ஆசற
> விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
> இற்புகத் தக்கிலை என்னின் யானுடைக்
> கற்பினை எப்பரிசு இழைத்துக் காட்டுகேன்?"

உயிர் விடுவதே மேல் என்ற எண்ணம் மேலிட அரக் கியர் தூங்கும் வரையில் காத்திருந்தாள் சீதை. பின்னர்

அவள் அருகேயிருந்த குருக்கத்திக் கொடியின் மருங்கில் சென்று உயிரை மாய்த்துக்கொள்ள முயன்ருள். இதனை அனுமன் கண்டான். அருகில் சென்று அவள் மேனியைத் தொட்டு நிறுத்த அவள் உள்ளம் அஞ்சிற்று. உடனே "இராம தூதன் நான்" என்று உரக்கக் கூறினன். இவ் வார்த்தைகள் சீதையின் காதில் தேனும் பாலும் போலச் சென்றன. உடனே அவள், தன் நாயகனது திருநாமத்தைக் கூறியவன் அரக்கனேயாயினும் அவன் போற்றுதற்குரியவன் என நினைத்தாள். அனுமனும் கீழே இறங்கி வந்து இராமன் அடையாளமாகக் கொடுத்த மோதிரத்தை அவளிடம் கொடுத்தான். இறந்தவர் மீண்டும் உயிர் பெற்றதைப் போலவும், மறந்தவர் நினைவைப் பெற்றதைப் போலவும் இருந்தது சீதையின் நிலை.

அனுமன் இராமனது மேனியழகை வருணித்துவிட்டு, அவன் வாலியைக் கொன்ற வீரத்தைப் புகழ்ந்தான். இச் சிறிய வடிவத்துடன் எவ்வாறு அனுமன் கடலைக் கடந்தான் என்று சீதை ஐயுறவும், அனுமன் கடலைக் கடக்கக் கொண்ட பேருருவைக் காட்டினன். பின்னர்ச் சீதை அனுமனைப் பாராட்டினுள். பின்னர்த் தான் வைத்திருந்த சூளாமணியைக் கொடுத்து இராமனுக்குச் செய்தி அனுப்பினுள்.

# 35. பேரடையாளம்

மாதவிக் கொடியின் மருங்கில் நின்ற சீதைக்கு அனுமன் அவளை இராமனிடமே கொண்டு சேர்த்து விடுகிறேன் என்று கூறினன். ஆனல் அதற்குச் சீதை உடன்படவில்லை. அனுமன் அவளைக் கொண்டு செல்லும்போது அரக்கர்கள் அவனை வென்று சீதையை மீட்பார்களானல் சீதையின் நிலை மிகவும் மோசமாகிவிடும். மேலும் அனுமனையே சீதை இன்னும் நன்கு அறிந்துகொள்ளவில்லை. தன்னுடைய ஆத்திரப் புத்தியினல் பல இன்னல்களை அடைந்த சீதை எண்ணித் துணிய வேண்டுமென்ற நிலைக்கு வந்து விட்டாள். ஆகையால் அனுமனுடைய வேண்டுதலை அவள் அறவே மறுத்ததில் வியப்பில்லை.

அனுமன் அதனல் ஊக்கம் கெடவில்லை. "இராமனிடம் யான் சொல்ல வேண்டுவது யாது" எனச் சீதையைக் கேட்டான். இதற்கு விடையாக "நன்னெறியின்பால்தான் என்மனம் செல்லும். இன்னும் ஒரு மாத காலம் நான் உயிருடன் இருப்பேன். அதற்குள் இராமன் இங்கு வராது போனல் நான் மாள்வேன். மிதிலையிலே என்னை மணம் புரிந்துகொண்ட நாளிலே இல்வுலகத்திலே எடுத்த பிறப்பில், உன்னையன்றி வேறு ஒருத்தியையும் மனத்தினலும் எண்ணமாட்டேன் என்று இராமன் கூறியதை ஞாபகப் படுத்துவாய்" என்று சொன்னுள் சீதை, மேலும் பேசத் தொடங்கி, "வலிமையுடைய பருத்த தோள்களை உடையவனே! ஒரு துணையுமில்லாத என்னைக் காக்க வந்த தூயவனே! வாழ்வாயாக. என்னுடைய மனம் கள்ளம் கபடமற்றிருக்குமாயின், பதினன்கு உலகங்களும் அழிந்த போதிலும் நீ அழியாது வாழ்வாயாக," என அனுமனை வாழ்த்தினள்.

இராமனும் சீதையுமே அறிந்த ஒரு செய்தியை அனுமனிடம் அவள் கூறினள். சானகி கன்னியாக இருந்த

காலத்தில் ஒரு கிளியை அருமையாக வளர்த்துவந்தாள், அவளுக்கு வரும் கணவனே அதற்குப் பெயரிட வேண்டு மென்றும் நினைத்தாள். இராமனுடன் தனித்திருக்கையிலே, அதற்கு என்ன பெயரிடுவது என்று கேட்டாள். அதற்கு இராமன் அன்பே உருவானவளும் எல்லா நற்குணங் களுக்கும் உறைவிடமானவளுமாகிய எம் அன்னை கைகேயி யின் பெயரை வை" என்று கூறினன். இதனைச் சீதை,

"என்னோரின்னுயிர் மென்கிளிக் கார்பெய ரீகேன்
மன்ன வென்றலும் மாசறு கேகயன் மாதென்
அன்னை தன் பெயராக்கென அன்பினெ டன்நாள்
சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி மெய்ம்மை
தொடர்ந்தோய்"

என்று சொன்னுள்.

அனுமன் சூளாமணியைப் பெற்றுக்கொண்டு சென்று விடுகிருன். அதற்குப்பின் நடந்த நிகழ்ச்சியைக் கம்பர் கூற வில்லை. ஆனல் வான்மீகி, ஓர் அழகான காட்சியைச் சித்திரித்துக் காட்டுகிருர். அரக்க மகளிர், அனுமனும் சீதை யும் உரையாடிக் கொண்டிருப்பதைக் கேட்டனர். ஆனல் அவர்கள் என்ன பேசினர்கள் என்பதைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் சீதையிடம் வந்து "பெண்ணே, உன்னுடன் பேசிக்கொண்டிருந்தவன் யார்? அவன் பேசி யது எங்களுக்கு விளங்கவில்லையே" என்று வினவினர். "அரக்கர்களுடைய வடிவம் அச்சத்தைத் தரத்தக்கது. அதனை அறிவதற்கு எனக்கு எந்த வல்லமையுமில்லை. இவன் என்ன செய்வானே? அதை நீங்கள் அறிவீர்கள்; நான் அறியேன். இவன் நினைத்தபடி வடிவம் கொள்ளும் அரக்கன் என்றே நினைக்கிறேன். பாம்பின் கால் பாம்பறியும்" என்று சீதை கூறினள்.

இங்கு அரக்கர்களுக்குப் பாம்பும், அவ்வரக்கர் மறைந்து வாழும் வேடங்களுக்கு, அப் பாம்பு மறைந்து வாழும் இட மாகிய கால்களும் உவமமாக வேண்டும். பாம்பினுடைய

---

பாம்பின் கால் பாம்பறியும் என்ற பழமொழியையே வான்மீகரும் "கஹி ரெவஹ ஹெ:வா உரநுவிஜாநாதி" என்று மொழி பெயர்த்திருக்கிருர்.

கால்களைப் பாம்புகள் அறிவதால் யாதும் பயனில்லையாத லால், "பாம்பறியும் பாம்பின் கால்" என்ற தமிழ்ப் பழ மொழிக்கு வேறு பொருள் கொள்ளுதல் வேண்டும். இத் தமிழ்ப் பழமொழியிலுள்ள கால் என்னும் சொல் பாம்பிற்கு நடக்கும் கால் இல்லாமையால் அதனை உணர்த்தாமல் இட விசேடப் பொருள்களில் ஒன்றாய்ப் பாம்பு மறைந்திருக்கும் இடத்தை உணர்த்தும், இதனை வாய்க்கால், கால்வாய், கொடிக்கால் என்னும் சொல்லாலும் காணலாம்.

தமிழ்நாட்டில் வழங்கும் பல பழமொழிகளின் பொருளை நாம் நன்கு அறிந்து கொள்ளுவதில்லை. எடுத்துக்காட்டாக ஒன்று கூறலாம். "தையல் சொற்கேளேல்" என்பது ஆத்திசூடி. தையல் என்ற சொல் பெண்களைக் குறிக்கும். பெண்கள் சொல்வதைக் கேட்கக் கூடாது என்பது இதன் பொருள். இதைப்பாடிய ஔவையாரும் பெண்ணாகையால் இது எப்படிப் பொருந்தும்? அறிவு ஆண் பெண் இரு பாலார்க்கும் பொது. எப்பொருள் யார் யார் வாய்க்கேட் பினும் மெய்ப்பொருள் காண்பது கடனே தவிர, சொல்பவர் ஆணா பெண்ணா என்று காண்பது அறிவுடைய செயலாகாது. தெய்வமாகப் பேணத்தக்க தாயும் பெண்ணாதலால் அவள் சொல்லைக் கேட்கலாகாது என்பது அறமா? "தாய்போல் கழறித் தழீஇக் கோடல்கு ஆய்மனைக் கிழத்திக்கு உரித்தென மொழிப," "அறிவும் அருமையும் பெண்பாலான" என்று தொல்காப்பியர் கூறுவதனால் பெண்கள் சொல்லைக் கேட்கக் கூடாது என்பது பொருத்தமாக இல்லை. அப்படியானால் தையல் சொல் கேளேல் என்பதன் பொருள்தான் என்ன? தையல் என்ற சொல்லுக்கு அலங்கரித்தல் என்பது பொருள். பிறர் தன்னைக்கண்டு விரும்புமாறு அலங்கரித்துக்கொள்ளும் இளம் பெண்ணுக்குத் தையல் என்ற பெயர் பொதுவாக உரியது; ஆனால் தன் நலத்தை விற்பனை செய்வதற்காக அலங்கரித்துக் கொள்ளும் பரத்தையர்க்குத் தையல் என்பது சிறப்பாகப் பொருந்துவதால் அதுபற்றிப் பரத்தையரை ஔவையார் தையல் என்று குறித்து, தையல் சொற் கேளேல் என்று பாடினார். பரத்தையர்களை நம்பினால், செல்வத்தை

இழந்து தெருவில் நிற்பார்கள் என்பதே இதன் பொருள். இதுபோலப் பழமொழியின் உட்கருத்தை அறிந்தால்தான் அதன் சிறப்புத் தெரியும்.

சீதையும் அனுமனும் பேசிய மொழி தமிழ் என்றும் வட மொழி ஒன்றையே அறிந்த இலங்கை மக்கள் இதனைப் புரிந்துக்கொள்ளவில்லை என்றும் வான்மீகி கூறுகின்றார். இராமாயண காலத்தில், இப் பழமொழியைக் கூறிய சீதை யும், அவள் கணவன் இராமனும், மற்றுமுள்ள சுற்றமும் தமிழராய் இருந்திருக்க வேண்டுமென்பதை இதனால் குறிப் பாகத் தெரியப்படுத்துகிறார் வான்மீகி.

# 36. அசோகம் விளைத்த சோகம்

அனுமன் சீதை இருக்குமிடத்தை அறிந்து வரவே சென்றவன்; ஆகையால் சீதையிடம் இராமனைப்பற்றிக் கூறிவிட்டுச் சூளாமணியைப் பெற்று இலங்கையைவிட்டுச் சென்றுவிடுவதே அவன் செயற்கு உரியது. ஆனால், அவன் இலங்கையின் வளத்தைக் கண்டபின், இத்தகைய சிறந்த நாடான இலங்கையின் மன்னனையும் காணவேண்டுமென்று நினைத்தான்; மாட்சியுடன் விளங்க வேண்டிய அரசன், தீய காம வயப்பட்டு அறிவுக்கண்ணிழந்து மாக்களினத்தைச் சேர்ந்து விட்டானே என அவன்பால் இரக்கம் கொண்டு, "ஓதி உணர்ந்தும், பிறர்க்கு உரைத்தும் அவனிடத்திலுள்ள காமக் களிப்பு அடங்கவில்லையே, பேதையாகி விட்டானே" என நினைந்தான். இராவணனைக் கண்டு அவனுடைய குற்றத்தை எடுத்துக் காட்டித் திருத்த நினைத்தது அவனது உள்ளம். இதற்கு வழி என்ன என்று ஆராய்ந்தான்.

அழகான பொழிலாகிய அசோகவனத்தை அழிப்பது என்று எண்ணினான். அவ்வாறு அழித்தால், இராவணன் தன்னுடைய வரவை உணர்வான் என்று நினைத்து அந்தப் பொழிலை அழிக்கத் தலைப்பட்டான். இராவணனுடைய வீரர்கள் அனுமனைக் கட்டி இராவணன்முன் கொணர முயன்றும் முடியாமல் போயினர். அதனை அறிந்த இராவணனுக்கு வருத்தமும் சினமும் மிகுந்தன.

தன் மனைவியான மண்டோதரி அலங்கரித்துக்கொள்ள வேண்டும் என்ற விருப்பினால் அவ்வனத்தை அவன் நிறுவியிருந்தான். ஆனால் இவ்வசோக வனத்தின் தளிர்களைக் கூட அவள் அன்பிற்காகவேனும் இராவணன் கொய்ததில்லை. வெளியில் வீசுகின்ற தென்றல் காற்றும் இதனுட் புகுந்து பலமாக வீச அஞ்சும். இந்திரனுடைய கற்பகச் சோலையும் நிகராகமாட்டாமல் கமழும் தன்மையது அவ்

வசோகவனம். தேவர்களும் காண்டற்கு அஞ்சும் வலிமிக்க இராவணனுடைய இந்தப் பூங்கா அழிக்கப்பட்டுவிட்டது. இதையறிந்த இராவணன் உலக முடிவில் ஏற்படும் பிரளய கால சூரியன்போல் கடுஞ்சினத்துடன் வீரர்களை நோக்கி "அந்த அனுமனைக் கட்டிப் பிடித்து வாருங்கள்" என்றான். அவர்கள் அனைவரும் அனுமன் முன் காற்றில் அடிபட்ட பஞ்சுபோல் பறந்தோடினர். பிறகு இந்திரசித்தே அனுமனுடன் போர் செய்யச் சென்றிருக்கிறான் என்று கேட்டுச் சிறிது அமைதியுடனிருந்தான்.

அன்று சந்திரன் மறைந்தான். இஃது இயற்கையாக நிகழ்கின்ற காட்சி. ஆனால், கம்பரது கற்பனை சக்திக்கு ஒரு சிறிய பொருளும் ஓர் உண்மையை விளக்கும் செய்தியாகப் படுகிறது. இராவணன், சந்திரனைக் காண்பானேயானால், "அழகிய கோவைக் கனியைப் போன்ற சிவந்த வாயையுடைய சீதையின் நிமித்தமாக என்னைச் சுட்டாய். என்னுடைய பகைவர்களான தேவர்களின் முன், பரந்த சோலையை ஒரு குரங்கு முறித்து அழிக்கவும், அதனை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாய்" என்று கோபம் கொள்வான் என்று அஞ்சிச் சந்திரன் ஓடினான் என்று கூறுகின்றார்.

இதனைக் கம்பர்.

> "தொண்டையங் கனிவாய்ச் சீதை
> துயக்கினால் என்னைச் சுட்டாய்
> விண்டவானவர் கண்முன்னே
> விரிபொழி லிறுத்து வீக்கக்
> கண்டனை நின்றா யென்று
> காணுமே லரக்கன் காய்தல்
> உண்டென வெருவினான்போல்
> ஒளித்தனன் உடுவின் கோமான்"

என்று இசைக்கின்றார்.

கடலில் இருந்து இயற்கையாகவே சூரியன் எழுவதையும் கம்பரது கவியுள்ளம் காண்கின்றது. தன் மகளான இலக்குமி தேவியின் கூறான சீதை, தன்னிடத்திலுள்ள

ஆபரணங்களை எல்லாம் முன்னமேயே கழற்றி எறிந்து விட்டு, எஞ்சிய ஒன்ருக வைத்துக்கொண்டிருந்த சூளாமணி ஒன்றையும் அனுமனிடம் கொடுத்துவிட்டாள். ஒரு ஆபரணமுமின்றி, எளியவளாய்த் தோற்றமளித்த சீதைக்குச் சமுத்திரராசன், சூரியன் என்ற சூடாமணியைக் கொடுத் தான் என்பராய்

"உறுசுடர்ச் சூடைக் காசுக்
கரசினை யுயிரொப்பானுக்கு
அறிகுறி யாக விட்டாள்
ஆதலான் வறிய ளந்தோ,
செறிகுழற் சீதைக் கென்ருேர்
சிகாமணி தெரிந்து வாங்கி
எறிகட லீவ தென்ன
வெழுந்தனன் இரவியென்பான்"

என்றும் பாடுகின்ருர்.

பலர் முயன்றும் முடியாத காரியத்தை முடிக்கவல்ல இளைஞன் ஒருவன் உளன் என்ருல் அவன் இந்திரசித்து ஒருவனேயாகும். உயுத்தகாண்டத்திலே, அவனது பெருமைகளையெல்லாம் நன்கு உணரப்போகிருேம். அவன் அஞ்சுவது அஞ்சுகின்ற அறிவும் ஆண்மையும் சிறந்தவன். அனுமனும் இந்திரசித்துவும் போர்செய்தனர். முடிவிலே அனுமன் இந்திரசித்தால் கட்டப்பட்டான். எனினும், இந்திரசித்து அனுமனுடைய வீரத்தைப் பெரிதும் மெச்சினன்.

அனுமன் இராவணன் முன் கொண்டுவந்து நிறுத்தப் பட்டான். அப்பொழுது மிகச் சிறந்த முறையிலே இராவணன் அரசு வீற்றிருந்தான். அந்நிலையைக் கண் களால் அனுமன் நன்கு கண்டான். இராவணன் அவை யிலே முத்துச்சரங்கள் நாற்புறமும் அழகுறத் தொங்கவிடப் பெற்றிருந்தன. அவனது வெண்கொற்றக் குடையானது, இந்தப்பூமிக்குமாத்திரம் ஒளிதருகின்ற இச்சந்திரனன்றி மூன்று உலகங்களுக்கும் ஒளிதரக்கூடிய வேருெரு சந்திரன்

உதித்து வளர்ந்து விளங்கினாற்போல், குளிர்ச்சியான நிழலையும் குளிர்ச்சிமிக்க ஒளியையும் பரப்பிக் கொண்டிருந்தது. அங்கே இராவணன் வலிமைமிக்க கைகளைக் கொண்டு, நில உலகத்திலிருந்து ஆகாயத்தை அளாவுமாறு மேலே தூக்கிய அழகுகொண்ட பெரிய சிறந்த வெள்ளி மலையாகிய கயிலாயம்போல விளங்கினான். இதனைக் கம்பர்,

"தலங்கண் மூன்றிற்கும் பிறி தொருமதி தழைத்தென்ன
அலங்கல் வெண்குடைத் தண்ணிழ லவிரொளிபரப்ப
வலங் கொள்தோளினான் மண்ணினின்று வானுற எடுத்த
பொலங்கொண் மாமணி வெள்ளியங்குன்றெனப்

பொலிய வீற்றிருந்தான்" என்று கூறுகின்றார்.

இராவணன், வீடணனை அழைத்து வருமாறு கூறிச் சிந்திக்கத் தொடங்கினான். "தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகூடினாலும் இலங்கையுட்புகுவதை மனத்தினாற்கூட எண்ணமுடியாது. அவ்விதமிருந்தும், தன்னை மதியாமல், ஒரு வானரன் நுழைந்துவிட்டானே; நான் ஈசுவரனின் கயிலை மலையையே ஒருகால் அசைத்தேன்; அவனுடைய அருள் பெற்றதனால் மற்றவர்களை யான் மதிக்கவில்லை; அந்தக் காரணத்தால், நந்தியே குரங்கு உருவமெடுத்து வந்து என்னை மருட்டுகிறதோ?" என்று சிந்திக்கின்றான். இந்நிலையில் வீடணன் வருகின்றான். இராவணன் அவனை நோக்கி, "அரக்கர்களைக் காணவேண்டித் தானாகவே பிடிபட்டதாகக் கூறும் இக்குரங்கு யார்?" என்று வினவினான்.

வீடணன்: மன்னர் மன்ன, "நீயார்?" என்று அவனையே கேளும்.

இராவணன்: வானரனே! நம்முடைய அகநகரத்திற்குள் சிறந்த மனவலியுடன் எவ்வாறு எதற்காக நுழைந்தாய்? நீ யாவன்?

அனுமன்: என் தாய் அஞ்சனாதேவி; என் தந்தை வாயு; என்னை அனுமன் என்று கூறுவார்கள்; நான் இராமனால் அனுப்பப்பட்டவன்.

வீடணன்: பெரியோனை இராமன் எதற்காக உன்னை அனுப்பினான்?

அனுமன்: இராமன் கட்டளையைக் கேளுங்கள்.

இராவணன்: கட்டளை! என்ன நெஞ்சுரம்?

அனுமனுடைய நெஞ்சுரத்தைக் கண்டான் இராவணன். இவன் யமனோ என ஐயுற்றான். ஒருகால் இவன் அகத்திய முனிவன்தானோ என்றெல்லாம் நினைத்தான்.

முருகனும் அகத்தியனும் முறையே தமிழர்களைக் காக்கும் கடவுளும் முனிவருமாவர். முருகனுடைய வேல் சூரபதுமனை வென்றது. ஆகையால் அரக்கர்கள் த்மிழர் களைக் கண்டு அஞ்சினர். அரக்கர்களின் தலைவனை இராவணனைத் தமிழ் நாட்டிற்குள் புகாதபடி வெருட்டினவன் அகத்தியன்; பத்துப் பாட்டினுள் மதுரைக் காஞ்சி "இராவணனைத் தமிழ் நாட்டை ஆளாதபடி போக்கிய, கிட்டுதற்கு அரிய வலிமையுடைய, பழமை முதிர்ந்த அகத்தியன்" எனக் கூறுகிறது. ஆகையால், அரக்கர்கள், தமிழர்களைக் கண்டு மட்டுமே அஞ்சினர். தமிழர் மரபிலே பிறந்த இராமன், அரக்கர்களை வென்று விடுவானோ என்ற அச்சமும் அவர்கள் பால் தோன்றியது. இதனைக் கம்பர்,

> "நின்றிசைத் துயிர்கவர் நீலக் காலனோ
> குன்றிசைத் தயிலுற எறிந்த கொற்றனோ
> தென்திசைக் கிழவனோ திசை நின்றுட்சியர்
> என்றிசைக் கின்றவர் யாவருள் யாவன் நீ?"

என்று கூறுகிறார்.

இராவணன்: அந்த இராமன் என்ன கூறினான்?

அனுமன்: அவன் சாதாரண மனிதன் அல்லன் உன் நண்பன் வாலியின் வீரத்தைப் புகழ்ந்து கூறினையே, அவன் இராமன் கையால் இறந்துபட்டான். அத்தகைய வலிமை யுடைய இராமனுடைய தூதன் நான்.

இராவணன்: உங்கள் தலைவனை இராமன் கொன்று விட்டான். அவனுக்கு நீ அடிமை. நன்று நன்று. குலத்

தலைவனை பெரியவனைக் கொன்றவனுக்கு அடிமைத்தொழில் புரியத் தலைப்பட்ட பின்னும், உங்களுடைய புகழ் அழிவடையாமல் உங்களோடு இருக்கிறதென்றால், மேகத்தினால் வளம் பெற்று விளங்குகின்ற இப்பூவுலகமானது பெண்களின் தன்மையான பேதமையுடையது.

"உன்குலத் தலைவன் தன்னோடு
ஒப்பிலா உயர்ச்சி யோனை
வெங்கொலை அம்பிற் கொன்றார்க்
காட்டொழில் மேற்கொண் டீரேல்
எங்குலப் புறும்நுஞ் சீர்த்தி
நும்மொடும் இயைந்தது என்றால்
மங்குலிற் பொலிந்த ஞாலம்
மாதிமை யுடைத்து மாதோ"

*அனுமன் :* பிறர்மனை நயந்த குற்றமுடையோய், ஒழுக்கம் மன்னனுக்கு உயர்வைத்தரும். அதை உயிரைக் காட்டிலும் மேலாகக் காக்கவேண்டியவன் நீ. ஆனால் உணர்வு சென்ற வழியிலே செல்லும் கயவனாகிவிட்டாய். சீதையை இராமனிடம் சேர்ப்பித்துவிடு. அன்றேல், உன் உயிரை இராமனுடைய கூரம்பு குடித்துவிடும்.

*இராவணன் :* விண்ணும் மண்ணும் என் ஆளுகைக்கு உட்பட்டவை. புலத்தியன் மகனான குபேரனும் என்னிடம் தோற்றுப் புட்பக விமானத்தைக் கொடுத்துவிட்டுச் சென்றான். இராமன் மனிதன்; அவன் என்னை எதிர்ப்பது எவ்வாறு?

*வீடணன் :* அனுமனே நீ நன்கு உரைத்தாய். துறவி வேடம் பூண்டுதானே இராவணன் சீதையைக் கொண்டுவர முடிந்தது.

*இராவணன் :* பகைவனுக்காகவா நீ பரிந்து பேசுகிறாய்?

*வீடணன் :* மன்னர் மன்ன, பொறுத்தருள்க. உங்கள் கண்களைப்போல் நானிருக்கிறேன். காம வயப்பட்டுக்

கண்ணை இழந்து விடாதீர்கள். இந்த நாடு உங்களால் ஆக்கப்பட்டது; ஒத்துக்கொள்கிறேன்; அரக்கர் குலத்திலே சிறந்தவர் நீங்கள்: தடை யாதுமில்லை. ஆனால் தங்களால் அரக்கர் இனம் அழிய நாங்கள் ஒத்துக்கொண்டிருக்க வேண்டுமென்கிறீர்கள். நான் இதற்கு உடன்படேன். மக்களுக்காக மன்னனேயன்றி, மன்னனுக்காக மக்கள் இல்லை. அனுமன் ஒரு தூதன்; அவனை வதைப்பது சரியல்ல. அவனை விட்டுவிடுவதே தருமம். நான் சிறிதுகூற விரும்புகிறேன்.

இராவணன் : அஞ்சவேண்டாம், கூறுக.

வீடணன் : மாட்சியுடன் விளங்கி மக்களுக்கு மாண்பு தரும் வகையில் அரசு செலுத்தி வந்த நீ, சீதையைக் கவர்ந்த தீய நடத்தையால் அரக்கர் குலத்தை அழிக்க முற்பட்டு விட்டாய்.

இராவணன் : என்னைப் பொருட்படுத்தாது பகைவனிடம் பற்றுடையவனாய் இருக்கின்றாய். உன்னைக்காண எனக்கு வெறுப்புண்டாகிறது. நீ வெளியே சென்றுவிடு.

வீடணன் : மன்ன! நான் குற்றமற்றவன். உமது ஆணைக்கு அஞ்சுகின்றேன். சினத்தையும் காமத்தையும் விட்டு விட்டு அறவழியில் செல்வீராக. (தனக்குள்) "எழிலுடைய இராமனுடன் சேர்ந்து அழிந்து போகின்ற அரக்கர் குலத்தை மறுபடியும் ஓங்கச்செய்கிறேன்"

வீடணன் இராவணன் மாளிகையிலிருந்து வெளியே சென்றுவிட்டான்.

இராவணன், அனுமன் வாலில் தீப்பந்தத்தைக் கட்டி விடுமாறு கூறிவிட்டு நாட்டைக் காப்பதற்கு என்ன செய்ய வேண்டுமென்பதை ஆராய அமைச்சர் குழுவுடனும் மற்றையோரிடமும் கலந்து ஆலோசிக்கச் சென்றான்.

# 37. பெண்மையைக் கண்ட ஆண்மை.

அனுமனுடைய வாலில் அரக்கர் தீப்பந்தத்தைக் கட்டி விடவே அதைக்கொண்டே அவன் இலங்கையைத் தீ வைத்துக் கொளுத்தினன் என்பது வரலாறு. இங்கே, அனுமன் குரங்கா மனிதனு என்ற ஐயப்பாடு எழுவது அறிவிற்கு இயல்பு. வான்மீகியாரும் பலவிடங்களில் குரங்குப் படைகளின் வால்களைப் பற்றிக் கூறியிருக்கிருர். அனுமனுக்கோ வானர இனத்தவர்க்கோ வால் உண்டு என்று கூறுவது உலகியலுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. இங்கு சிறிது ஆழ்ந்து சிந்திக்க வேண்டும்.

வான்மீகி காலத்திற்கு முன்பே இராமனுடைய வரலாறு நடந்திருக்க வேண்டும். ஆகையால்தான், நாரத முனிவர் வான்மீகிக்கு இக்கதையை ஆதியோடு அந்தமாகக் கூறினர். ஆனல் அவர், வரலாறு முழுவதும் நன்ருக அறிந்து கொள்ளவில்லை. இக்கதையைப் பற்றி அவர் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது பிரமதேவன் வந்து, "உன்னுடைய கற்பனு சக்தியை உபயோகித்து இராம சரித்திரத்தை முடி" என்று கூறினர் என்பர். வரலாற்றிற்கும் காவியத்திற்கும் வேறுபாடுகள் பல உண்டு.

உண்மையைக் கண்டு உள்ளபடி கூறுவது வரலாறு. ஆனல் உண்மையின் அடிப்படையில், கவி, தன் கற்பனு சக்தியைக் கொண்டு, மக்கள் மகிழும் வண்ணம் செய்யும் கலை காவியம் எனப்படும். இதை மனதிற்கொண்டே இளங்கோவடிகளும் கோவலன் கண்ணகியின் இயற்கையான வாழ்க்கையைக் காவியமாக்கிவிட்டார். கோவலன், தான்

கட்டிய மனைவியைக் கைவிட்டு மாதவி என்ற கணிகையுடன் வாழ்ந்தான். பின்னர் மாதவியிடம் மனம் வேறுபட்டுக் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்றான். அங்கு அரசனுக்கு நீதியை எடுத்துக் கூறிவிட்டுப் பலவிடங்களில் அலைந்து திரிந்து உயிர்விட்டாள் கண்ணகி. இதுதான் கோவலன் கதை என்று கூறியிருந்தால் சிலப்பதிகாரம் "நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம் என்று ஓர் மணியாரம் படைத்த தமிழ்நாடு" என்று போற்றப்பட்டிருக்காது. இராமாயணத்தில் இலங்கை எரிவது போல சிலப்பதிகாரத்தில் மதுரை எரிந்தது. ஆனால், இளங்கோவடிகள் மதுரை எரிந்ததற்குக் கண்ணகி காரணமல்லவென்றும், அஃது இயற்கையாகவே நடந்தசெயல் என்றும் மதுரா தெய்வம் வாயிலாகக் கூறி, கண்ணகி சாதாரணப் பெண் என்பதை நாம் மறக்காதபடி செய்கிறார்.

இது போலவே, அனுமனுடைய இலங்கை எரியூட்டு படலத்தைக் காண்போமானால் இராமனுடைய வரலாற்றில் சிக்கல்கள் ஏற்படா. நாம் முன்பே கூறியிருப்பது போல், வானரங்களை மனிதர்களெனவே கொள்ளவேண்டும். மேலும், வான்மீகி காலத்தில் வால் என்பதற்கு என்ன பொருள் என்பதும் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. காலவெள்ளத்தில் பல சொற்கள் பொருள் மாறுவது இயற்கை. எடுத்துக் காட்டாக 'நாற்றம்' என்னும் சொல் முதலில் நல்ல வாசனையுடையவைகளைக் குறித்தது. ஆனால் இன்று துர்நாற்றத்திற்கே நாற்றம் என்பது வழங்கக் காண்கின்றோம்.

இலங்கை எரியூட்டு படலம் இயற்கைக்குப் புறம்பானது என்று கொண்டாலும், அது நீக்கப்பட்டு விட்டால் கதை ஓட்டம் தடைப்படுவதில்லை. இலங்கை எரியவில்லையானாலும்,

போர் மூண்டேயிருக்கும். ஆகையால், இராமாயணத்தில் நாம் காணும் சிற்சில நிகழ்ச்சிகள் இயற்கைக்குப் புறம்பானவை. அவைகளைக் கலையுரைத்த கற்பனை என்று கொண்டும் உண்மை நிலை எனக் கொள்ளாமலுமிருந்தால், இராமன் வரலாற்றை நன்கு அறியமுடியும். இதை மனத்திற் கொண்டால், இராமனுடைய பண்பாட்டின் உயர்வையும், பிற நல்ல படிப்பினைகளையும் இராமாயணம் மூலம் கற்றுக் கொள்ளலாம்.

இலங்கையை எரியூட்டிய பின், அனுமன் இராமன் பக்கல் செல்லுகிறான். இராமனும் சீதையைப் பற்றிய தகவல் வரவில்லையேயென மிகவும் வருந்தி வாடியிருந்தான். அப்பொழுது, அனுமன் இராமன் முன் தோன்றிக் "கண்டேன் சீதையை" என்று கூறுகின்றான். சீதையை என்று முதலில் கூறினால், ஒருகால், இராமன் சீதைக்கு ஏதாவது நேர்ந்து விட்டதோ என்றெண்ணி மூர்ச்சித்து விடுவான் என அஞ்சிக் "கண்டேன்" என்று முதலில் சொல்லியபின் "சீதை" என்று கூறினான். அனுமன் சீதையை எவ்வாறு கண்டான் என்பதைக் கம்பர் மிகவும் அழகாகக் கூறுகிறார்.

அனுமன் இலங்கையினின்று மீண்டு வருமுன், இராமன் மிகுந்த துக்கத்தில் ஆழ்ந்திருந்தான். சில சமயங்களில் சீதையைப் பிரிந்த சோகம் தாங்கமாட்டாமல் அவன் மூர்ச்சித்து விடுவதும் உண்டு. அப்பொழுதெல்லாம் சுக்ரீவன் ஆறுதல் கூறி வருவான். தென்திசைக்குச் சென்ற வானரர்கள் திரும்பி வராததால் ஒருவேளை அவர்கள் மாண்டு விட்டனரோ எனவும் இராமன் ஐயுறுவான். தன் உயிருக்குயிராகிய சீதை உயிருடன்தான் இருக்கிறாள் என்று கூறிக்கொள்வான்.

இங்ஙனம் இராமன் எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கும்பொழுது அங்கதனால்

குத்தப்பட்டுக் குருதி சொட்டச் சொட்டத் ததிமுகன் என்ற வானர வீரன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் சுக்கிரீவனிடம் 'மதுவனம் அழிந்தது' என்று கூறினான். "யார் அழித்தது" எனச் சுக்கிரீவன் வினவ அவன் "அங்கதன் அனுமதியினால் வானரங்கள் மதுவனத்தை அழித்து அங்குமிங்கும் ஓடியாடி மதுவருந்தி உல்லாசமாயிருக்கின்றன" என்று கூறினான். ஏதோ நல்ல செய்தி வந்திருக்கிறது என்பதை ஊகித்து உணர்ந்து கொண்டான் சுக்கிரீவன். அனுமான் சீதையைக் கண்ட செய்தி பரவினதால் தான் இது நடந்தது என்பதைச் சுக்கிரீவன் உணர்ந்து கொண்டான். அப்பொழுது அனுமனும் அங்கு வந்து சேர்ந்தான்.

வந்த அனுமன் இராமனை வணங்கவில்லை. அவன் சீதை இருந்த திக்கை நோக்கி வணங்கினான். இராமனுடைய பாதங்களை வணங்குவதை மறந்து அவனுக்கு நேரேயே கால்களை நீட்டி வேரற்ற மரம்போல் அனுமன் வணங்கினான் என்று சொல்லுதலால் கம்பர் சீதையின் உயர்ந்த குணத்தை இராமன் அறியும்படி அனுமன் குறிப்பால் தெரிவித்தான் என்று கூறுகிறார். இதனைக் கம்பர்,

> "எய்தினன் அனுமனும், எய்தி ஏந்தல் தன்
> மொய்கழல் தொழுகிலன் முளரி நீங்கிய
> தையலை நோக்கிய தலையன் கையினன்
> வையகந் தழீஇ நெடிது இறைஞ்சி வாழ்த்தினான்"

என்று சிறப்பித்துக் கூறுகின்றார்.

அனுமன் : உலகங்களுக்கெல்லாம் தலைவனே! கடலால் சூழப்பெற்ற இலங்கை நகரிலே, கற்பே உருவான சீதையைக் கண்டேன். என் கண்களாலேயே நான் கண்டேன். இனி

நீ உன் சீதையை அடைவாய். உன்னுடைய பெருமை மிக்க மனைவி என்னும் சொல்லிற்கும் உன் தந்தையின் மருமகள் என்ற பெயருக்கும் சனகன் மகள் என்ற பெயருக்கும் பெருமை தந்துவிட்டாள் அவள். எனக்கு அவள் தெய்வ மாகக் காட்சி தருகிறாள். வில் சுமந்த அகன்ற தோள்களை யுடைய இராமனே! இலங்கை நாட்டிலே ஒரு பெண்ணைக் கண்டேன் என்றா கூறினேன். இல்லை இல்லை, தவறே செய்து விட்டேன். உயர்ந்த குடிப் பிறப்பு ஒன்றும், சிறந்த பொறுமையான குணமும், கற்பு என்ற பண்பும், அங்கு ஒன்று சேர்ந்து களிப்புடன் நடனமாட நான் கண்டேன் என்றான்; அதனைக் கம்பர்,

> "விற்பெரும் தடக்கைவீர
> வீங்குநீர் இலங்கை வெற்பில்
> நற்பெரும் தவத்தளாய
> நங்கையைக் கண்டேனல்லேன்
> இற்பிறப்பென்ப துஒன்றும்
> இரும்பொறை என்பது ஒன்றும்
> கற்பெனும் பெயரது ஒன்றும்
> களி நடம் புரியக் கண்டேன்"

என்று சிறப்பித்துக் கூறுகிறார்.

அனுமன்: சீதை உன் நினைவாக இருக்கின்றாள். "கருத்து இலாள் ஒருத்தியைக் காம ஆசையுடன் நெருங் கினால் நீ அழிவாய்" என்று முன்பே தோன்றியுள்ள சாபத் தால் இராவணன் அவளைத் தொடவும் அஞ்சுகிறான். தன்னை அகழ்கின்றவர்களையும் தாங்கும் நிலம்போல் சீதை அன்னையாதலால் அவனையும் பொறுத்திருக்கிறாள். பிறர் தன்னை விரும்பினார்கள் என்று அறிந்தும் அவர் சொல்லிய கொடுஞ் சொற்களைக் காதாற் கேட்டுக்கொண்டும் ஏன் உயிர் வாழ்கிறாள் என்றால், உன்பால் உள்ள தீராத

காதலால்தான் என்ருன். இராமன் சீதை தூயவள் என்பதை நன்குணர்ந்து கொண்டான். அனுமன், தான் எவ்வாறு சீதையைக் கண்டு உரையாடினுன் என்பதை விளக்கமாகக் கூறினுன்.

இராமன்: அனுமனே நான் கொடுத்த மோதிரத்தை அவளிடம் நீ கொடுத்தவுடன் அவள் கூறியதென்ன?

அனுமன்: ஒரே நேரத்தில் இரண்டைக் கண்டேன். உன்னுடைய மோதிரத்தைத் தன் மார்பகத்திலே வைத்தவுடன்உன்னிடத்திலிருந்து பிரிந்ததனுல் ஏற்பட்ட பிரிவாகிய செழித்த நெருப்பினுல் அம்மோதிரம் வெந்து உருகியது ஆனுல் நீ சீக்கிரம் வருவாய் என்ற அந்த நினைப்பினுல் ஏற்பட்ட குளிர்ச்சியால் உருகிய அந்தத் தங்கம் மீளவும் மோதிரமாகி விட்டது.

இதனைக் கம்பர்,

"ஒரு கணத்திரண்டு கண்டேன்
ஒளி மணி யாழியான்ற
துருமுலைத் தடத்து வைத்தாள்
வைத்தலும் செல்வ நின்பால்,
விரகமென் பதனின் வந்த
வெங் கொழுந் தீயால் வெந்து
உருகியது, உடனே ஆறி
வலிந்தது குளிர்ப்புள் ளூர"

என்று இயம்புகின்ருர்.

சீதை தந்த சூடாமணியை, அனுமன் இராமனிடம் கொடுக்கவும், அவன் அதைப் பெற்றுக்கொண்டான். சீதையை விரைவினில் பெறுவோம் என்ற நம்பிக்கை ஏற்படவும் இராமனுடைய விரகதாபம் சிறிது சிறிதாகக் குறையத் தொடங்கியது. இராமனுடைய மயிர்களெல்லாம் சிலிர்த்தன.

ஆனந்தத்தால் கண்களிலிருந்து நீர் பெருகியது. வியர்வைத் துளிகள் உண்டாயின. இவ்வாருகச் சீதையை நேரிலே கண்டால் என்ன இன்பப் பெருக்கு இராமன்பால் ஏற்படுமோ அவையாவும் ஏற்பட்டன.

இதனைக் கம்பர்,

> " பொடித்தனவுரோமம், மென்மேற்
> பொழிந்தன கண்ணீர், பொங்கித்
> துடித்தன மார்பும் தோளும்,
> தோன்றின வியர்வின் துள்ளி,
> மடித்தது மணிவாய், ஆவி
> வருவது போலவாகித்
> தடித்தது மேனி, என்னே
> யாருளர் தன்மை தேர்வார்!"

என்று கூறுகின்ருர்.

சுந்தரகாண்ட முடிவிலே, பெண்ணுசையின் விளைவாகப் பரந்த துன்பவிருள் நெக்குவிட்டுப் புலரும் நிலையை அடைகிறது. ஒரு மனிதன் மனத்தில் எழும் ஆசையானது மண், பெண், பொன் என்ற மூன்றின்மேல் பற்றுக்கொண்டு நிற்கும். இராமனுக்கோ, மண் மேலோ பொன் மேலோ ஆசையில்லை. சீதையின்மேல் உண்டாகிய பெண்ணுசை அயோத்தியா காண்டத்தில் வெளிப்படையாக விளங்கவில்லை. தசரதனுக்குப் பெண்ணுசை மிக்கிருந்தது என்பது பொதுவாகக் கூறுமிடத்து உண்டு. ஆனுல் கதைக்குள் நோக்கினுல், வாய்மையின்மேல் ஏற்பட்ட பற்றுல்தான் இராமனைக் காடு செல்லச் சொன்னுன் என்பது விளங்கும். கைகேயி மண்ணுசை கொண்டவள் என்று கூறுவது உலக வழக்கு; ஆனுல் அவள் தன் கணவனை வாய்மையும் மரபும் காத்தவனுகச் செய்யவே மண்ணுசை கொண்டவள்போல் நடித்தாள் என்பது விளங்கும். ஆசையானது பொன், மண், பெண், புகழ் என்ற எதன்பால் சென்ருலும், அழிவுதான் ஏற்படும். "ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்" என்ற திருமந்திரப்படி, சீதை இராமன்மேல் ஏற்பட்ட கழிபெருங் காதலி

ஞல் உடன் வருகிறேன் என்று கூறுமிடத்தும், துன்பம் சொல் வடிவில் தலைகாட்டுகிறது. இராமன் சீதையை நோக்கி "என்னுடன் வரத்துணிந்தால், எனக்கு எல்லை யில்லா இடர்தரப் போகின்ருய்" என்பதும், சீதை "என்னைத் துறந்த பின்தான் உங்களுக்கு இன்பம் வரும்போலும்" என்பதும் ஆசை விளைவின் துன்பத் தோற்றங்களேயாகும்.

ஆரணிய காண்டத்தில் இராமனுக்குச் சீதைபால் இருந்த பெண்ணுசை முறுகிப் பெருகி நின்று இயற்கைக் காட்சிகளைக் காணும்போது விஞ்சி நிற்கின்றது. சூர்ப்ப ணகையின் தோற்றமும் சொல்லாடலும், பெண்ணுசையின் இயல்பு காட்டித் துன்பத்திற்கு அடிகோலுகின்றன. முடிவில் இராவணன் மனத்தைச் சீர்குலைத்து, அறிவை நெறி திறம்பு மாறு கெடுத்துச் சீதையைக் கவருமுகத்தால், இராமனுக்குப் பெருந்துன்பத்தைச் செய்து, இராவணனுக்கும் அவன் குலத்திற்கும் அழிவு விளைவிக்கும் தீயபாதையில் அவனைக் கொண்டு நிறுத்தியிருக்கின்றன. இடையிடையே விராதன், அயோமுகி முதலியோர் வரலாறுகள் ஆசையின் அழிவுப் பாதையில் கைகாட்டி மரங்கள்போல் காட்சிதருகின்றன. கிட்கிந்தா காண்டத்தில் சுக்கிரீவன், வாலி என்ற இருவரை யும் விரோதிகளாக்கி, ஒருவர் ஒருவரைக் கொல்லக்கருதும் அளவிற்குப் பெண்ணுசைச் சூழல் பெருகிப் பிறங்குகின்றது. சுக்கிரீவன் இராமனைக்கொண்டு வாலியைக் கொன்றுவிடு கிருன்; இராமனும் தன் வீரத்திற்கு மாசு தேடிக்கொள் கிருன். சீதையை இழந்த இராமன் துன்பக்கடலில் மூழ்கிக் கரைகாணுது திகைத்துத் தத்தளிக்கிருன்.

சுந்தரகாண்ட முடிவிலே, இராமனுடைய பெண்ணுசை மறைய, வீரம் சுடர்விட்டுத் தெரிகிறது. பெண்ணுசையால் ஏற்பட்ட மயக்கம் தீர்ந்தவுடன் பகைவனுக்கு அருளும் பண் பட்ட உள்ளம் அவனை வந்தடைகிறது. ஆசைக்கும் விதிக் கும் அடிமைப்பட்ட இராமன் விதிக்கும் விதிசெய்யும் வீரனுக மாறுகிருன். இஃதன்றே வீரம்!

# நாரணன் விளையாட்டு

(மூன்றும் பாகம்)

## 38. யுத்த காண்டத்தின் தோற்றுவாய்

சுந்தரகாண்ட முடிவில், இலங்கையில் இராவணனும் கிஷ்கிந்தையில் இராமனும் சீதையின் எதிர்காலத்தைப் பற்றித் திட்டங்கள் தீட்டுவதைக் கண்டோம். இந்த முயற்சியின் பலனுக இராமனுக்கும் இராவணனுக்கும் ஒரு பெரும் போர் மூண்டது. இராமராவண யுத்தம் நடந்து பல்லாயிரம் ஆண்டுகள் சென்ற பின்னும் அதனைப்பற்றிய நினைவுகள் இன்றும் மக்களிடையே நிலைபெற்றுள்ளன. உலகின் பல பாகங்களிலும் இந்த யுத்தத்தைப்பற்றிய உண்மைகள் பலர் அறியப் பரந்து கிடக்கின்றன.

"இராமன்" என்ருல் உயர்ந்தவன் என்ற கருத்து இந்த யுத்தத்திற்குப்பின் உலகெங்கும் பரவிற்று. கிறித்து பிறப்பதற்கு முன்பே இக்கருத்துக்கள் பரவியிருந்தன என்பதற்குத் தக்க சான்றுகள் உள்ளன. கிறித்தவர்களுக்கும் முகம்மதியர்களுக்கும் யூதமக்களுக்கும் பொதுவான வேதமாகிய விவிலிய நூலின் பழைய ஏற்பாட்டில் உயர்ந்த இடத்திற்கு "இராமா" என்ற பெயரிட்டு இருப்பதைக் காண்கிருேம். "இராமா" என்ற இடத்தில் அழுகைக்குரல்கள் கேட்டன. தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைக் காணுமல் அழுதனர் என்று விவிலிய நூல் ( மத்தேயு 18 ) கூறுகிறது.

பகவத் கீதையிலும் இராமாயணத்திலும் பகவானது அவதாரத்தின் குறிக்கோள் கூறப்பட்டுள்ளது. "அதருமம் வளர்ந்து தருமம் அழியும்போது நான் பிறக்கிறேன்" என்று கண்ணன் கூறுவதாக இந்திய மக்கள் நம்பினர். இக்கருத்து இந்தியாவுடன் அக்காலத்திலே தொடர்பு கொண்ட நாடுகளிலெல்லாம் பரவத் தொடங்கியது. ஒவ்வொரு நாட்ட

வரும் தங்கள் தங்கள் நாட்டிலும் பகவரன் தோன்றுவார் என்று எண்ணத் தலைப்பட்டனர்.

மக்களுக்குச் செய்கின்ற தொண்டே ஆண்டவனுக்குச் செய்யும் பணி என்பதை மறந்து, இறைவன் தமக்கே சொந்த மென்றும், பிறரை அழிக்கும் வல்லமையுடன் தமக்கு உதவியாயிருக்கின்ருர் என்றும் ஒரு சில மக்கள் கருதினர். அவர்கள் வாழ்ந்து வந்த நாட்டிலே ஏசுநாதர் தோன்றினுர். ஈசனை வாழ்த்துவது, தாமுயர்ந்து பிறர் எல்லாம் தம்முடைய அடி பணிய வேண்டுமென்பதற்கல்லவென்றும், அன்பு நெறியே அறநெறியென்றும் அவர் கூறினுர். பாரினில் எவர்க்கும் இனி அடிமை செய்யோம், பரிபூரணன் ஒரு வனுக்கே அடிமை செய்து வாழ்வோம் என்றும் அவர் கூறி னுர். மேலும், துறவிகள் "யாமார்க்கும் குடியல்லோம்" என்னும் மனப்பான்மையுடன் இறைவனுக்கே குடிமக்களாய் வாழவேண்டும் என்று கூறினர். இவ்வாறு அதர்மம் உயர்ந்து, தருமம் அழியும் சமயம் மக்களை நல்வழியிலே திருப்பிய ஏசுநாதரும் அவதார புருடர்களில் ஒருவராவர்.

"விஷ்ணு" என்ற வடமொழிச்சொல்லிற்கு, "உள்ளுக்குள் செல்" (To enter & pervade) என்பது பொருள். உள்ளத் திலே பொய்யாது வாழ்ந்து மக்கள் மனத்திற்குள் எல்லாம் சென்றதனுல், இராமன் விஷ்ணுவின் அவதாரமென்று கருதப் பட்டான். மக்களது மனத்திற்குள் சென்று உறையும் கார ணத்தால், இந்திய நாட்டிலே ஏசுநாதரும் "விசுவாசம்" என்று அழைக்கப்படுகிருர். "திருவுடை மன்னரைக் காணில், திருமாலைக் கண்டேனே" என்று நம் முன்னுேர் கூறினர். இரா மன் தசரத சக்ரவர்த்தியின் திருமகனுகத் தோன்றியவன்.

இராமன், சக்ரவர்த்தியின் திருமகனுகப் பிறந்து, உள்ளத்தாற் பொய்யாது, வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை யைக் கடைப்பிடிப்பதனுல், திருமாலின் அவதாரம் என்றும், வானுறையும் தெய்வமென்றும் அன்றைய மக்களால் போற்றப்பட்டான்.

மன்னன் எவ்வாறு வாழவேண்டுமென்ற உண்மையைக் கூறுகிறது இராமராவண யுத்தம். பிறர்மனை நயப்பது பெருங்குற்றம் என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப் பட்ட உண்மை. மங்கையரின் கற்பை மாண்புறச் செய்ய வேண்டிய மன்னனே, மதுவிலும் மங்கையர் கூட்டத்திலும் ஈடுபடுவானானால் அந்நாட்டின் கதி என்னவாகும்?

திட்டங்கள் பல தீட்டி, நாட்டிலே வறுமையையும் பிணியையும் அகற்றி, மாடமாளிகை கூடகோபுரங்கள் கட்டி, இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று மக்கள் உண்டு உடுத்து மனவமைதியுடன் உறங்கச்செய்தாலும், அறம் தவறும்போது அதுவே மன்னனுக்குக் கூற்றாகிவிடும். மக்களுக்காக மன்னனேயன்றி, மன்னனுக்காக மக்கள் அல்லவென்று எடுத்துக் கூறவேதான் இராமராவண யுத்தம் ஏற்பட்டது. 'பழி எனில் உலக முழுதும் தரினும் கொள்ளேன்; புகழெனில் உயிரும் கொடுப்பேன்' என்னும் உயர்ந்த குறிக்கோளுடன் மன்னன் வாழவேண்டும். "யானோ அரசன்? யானே கள்வன்!" என்று கூறும் நெடுஞ்செழியனும், பொற்கைப் பாண்டியனும் வாழ்ந்த தமிழகத்தை உலகமெங்கும் காண வேண்டும் என்ற கருத்தால் கம்பரது இராமாயணம் எழுந்தது.

கற்பின் மிக்கவள் சீதை. இதையும் யுத்தகாண்டம் தெளிவுபடுத்துகிறது. பத்துமாதங்களாகக் காமமோகத்தில் ஈடுபட்டு, மக்களினத்தினின்று வேறுபட்டு, மாக்களினப் பண்பிலே சென்று கொண்டிருந்த இராவணன் மனத்திலே கூடச் சீதையின் உயர்ந்த பண்பாடும் குணமும் ஒரு தெளிவை ஏற்படுத்தின. இராமராவண யுத்தத்தின் முடிவிலே, இராவணன் ஒரு சுத்த வீரனாகவே காட்சியளிக்கிறான். இறுதிநாளில் அவன் சீதையின் நினைவு சிறிதுமின்றி, இராமனுடைய வீரத்தைப் புகழ்ந்துகொண்டே தூயமனத்துடன் இறக்கின்றான்.

சீதையினுடைய உறுதிப்பாடு, இராவணனைச் சிந்திக்கச் செய்து தூயவனாக ஆக்கியது என்றால், ஏன் இராமனிடம் அவனைச் சேர்ப்பித்துச் சமாதானம் செய்துகொள்ளச் செய்யவில்லை என்ற கேள்வி எழலாம்.

உண்மையிலேயே இராவணனுக்கும் இவ்வெண்ணம் எழுந்தது; ஆனால் மானம் அவனைத் தடுத்தது. முன்வைத்த காலைப் பின்வைத்தால் தன்னைக் கோழை என உலகம் தூற்றுமே என அஞ்சினன். சால்பும் இயல்பும் மாண்பும் குன்றின், அவைகளைத் திரும்பப் பெறமுடியாது என்ற உண்மையை அறிந்தவன் அவன்; அவனை மாசற்றவனாக உலகம் கருதாது எனவும் கண்டான்; நாசம் வந்தது என்பதை நன்றாக உணர்ந்தான். ஆனால் நல்ல பகைவனிடத்திலே மடிகிறோம் என்ற பெருமிதத்துடன் அவன் போரிலே கடைசிவரையில் நின்று போராடி மாண்டான். மறுவிலா மனத்தளாதலால், சீதை இராவணனைத் தூயவனாகவும், வீரனாகவுமாக்கினாள். இத்தகைய சீதையை உயர்வுசால் பத்தினி என்று இன்று உலகம் போற்றுகிறது.

சீதை காரணமாக ஏற்பட்ட போரிலே, இருதரப்பிலும் பெரும்பான்மையோர் மடிந்துவிட்டனர். இராவணனும் மடிந்து வீரசுவர்க்கம் அடைந்தான்.

வீரர்களை வீரர்களே மதிப்பர்; அதனைத்தான் நாம் இங்கே காண்கிறோம். அதுபோலவே இராமனும் இராவணனுடைய வீரத்தைப் போற்றுகிறான். எந்தச் சீதைக்காக இராமன் ஏழ் உலகங்களையும் அழிக்கத் துணிந்தானோ, எந்தக் குறிக்கோள் ஒன்றிற்காக வாலியை மறைந்து நின்று கொன்று மீளாப் பழியையும் பெற்றானோ, அந்தச் சீதையைப் பற்றி அவன் நினைக்கவில்லை. எந்தப் பெண்ணிற்காகத் தன் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தர நினைத்தானோ அந்த மங்கை தன்னிடம் முடிவிலே வந்தபோது அவளை ஏற்கவும் அவன் மனம் கூசியது.

சீதைக்காக ஏற்பட்ட யுத்தத்தின் முடிவிலே அந்தச் சீதை மறக்கப்பட்டாள், இது கதை என்பார்கள். ஆனால் உண்மை; கட்டுக்கதைகளைக் காட்டிலும் விசித்திரமானது. இராவணன் சீதையின் நினைவை எவ்வாறு மறந்தான், எவ்வாறு தூயவனானான் என்பதைக் கம்பர் மிகவும் திறம்பட அருமையாக யுத்தகாண்டத்திலே எடுத்துக்காட்டுகிறார். கம்பரும், வான்மீகியும் நேரில் கண்ட காட்சிகளைக் கூற

வில்லை என்று பலமுறை வற்புறுத்தியிருக்கிறோம். வரலாற்றைக் கேட்டு அறிந்து அவரவர்கள் காலத்திற்கும் பண்பாட்டிற்கும் ஏற்ப இயற்றிய இரு காவியங்களிலே ஆழ்ந்து பொதிந்து கிடக்கும் கருத்துக்களைத்தான் நாம் காண வேண்டும். கலை உரைத்த கற்பனைகளை உண்மை என நம்பி விடாமல், அந்தக் காவியத்திலே மறைந்து கிடக்கும் பல நுட்பங்களே வேண்டப்படுவன. பஞ்சபூதத்தின் நுட்பம் கூறும் புத்தம் புதிய கலைகள் அன்று மெத்த வளர்ந்திருந்ததையும் வாழ்விற்குப் பயன்தர வேண்டிய விஞ்ஞானம் அழிவிற்கே அன்று பயன்பட்டதையும் நாம் காணலாம். அதன் காரணமாகச் சிறந்த பண்பாடுகள் அழிந்ததும், அதன்பின் விஞ்ஞான அறிவு மறைந்ததும்தான் நாம் காண்கிறோம். அணுகுண்டு நீர்வாயுக்குண்டு போன்ற அழிக்கும் சக்தி வாய்ந்த போர்க்கருவிகள் மலிந்துகிடக்கும் இந்நாளில், இராமராவணப் போர் ஒரு தத்துவத்தைத் தருகிறது என்று மனத்திற்கொண்டு யுத்த காண்டத்தைத் தொடங்குவோம்.

# 39. வீடணன் வரவு

இராமன் இராவணனுடன் போர் செய்வது என்று முடிவு செய்துவிட்டான். எந்த நாட்டை வெல்ல வேண்டு மானாலும் அந்த நாட்டைப்பற்றி அறிந்தவர்களைத் துணைக் கொண்டே போர் தொடுக்கவேண்டும். ஒரு நாட்டிலே, பலகுழுவும் உட்பகையும் வளருமானால், அந்த நாடு அழி வுறும்; இலங்கை நாட்டிலே பல குழுவும் பாழ்படுத்தும் உட்பகையும் இல்லை. ஆனால், இராவணன் பெண்ணின் பெருமையை அறியாது, பெண் இனத்திற்கே மாசு ஏற்படும் வண்ணம் சீதையைக் கவர்ந்து வந்துவிட்டான். இச் செய்கை இராவணனுடைய உறவினர் அனைவருக்கும் பிடிக்க வில்லை. என்றாலும், இராவணன்பால் கொண்ட அன்பின் மிகுதியால் அவர்கள் அவனுக்கு எதிராகச் செல்ல விரும்ப வில்லை. ஆனால் "பெண்ணுயிர் அவலம் நோக்கிப் பெருந் தகை வாழ்விற் சாதல்" சிறந்தது என்று எண்ணிய வீடணன், பெண்ணின் பெருமையைக் காக்கக் கங்கணம் கட்டிக்கொண்டு இராவணனை எதிர்க்க முற்பட்டான். நம் நாட்டில் வீடணனை ஐந்தாம்படை என்று கருதுவாரும் உண்டு. ஆனால், அவன் ஏன் இராவணனை எதிர்த்தான் என்று சிறிது ஆராயுமிடத்து நாம் அவன்பால் அனுதாபப் படவே வேண்டியிருக்கிறது.

பல திட்டங்கள் தீட்டி, இயற்கையை வென்று மக்களுக்கு நல்வாழ்வு அளித்தான் இராவணன். இலங்கை மக்கள் நல்ல பண்பாட்டுடனும் நாகரிகத்துடனும் வாழ்ந்து வந்தனர். எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ்ந்து வந்த மக்கள் அவதியுறும் வண்ணம் வீடணன் இராம னுடன் சேர்ந்து இலங்கையை அழிக்க உடன்பட்டது சரியா என்று கேட்கலாம். இதற்கு விடை கூறுதல் அருமையன்று.

இவ்வுலகிலே பல சமுதாயங்கள் பண்பாட்டிலும் நாகரி கத்திலும் உயர்ந்து வாழ்ந்துவந்ததை உலக வரலாறுகளால்

அறிகிறோம். ஆனால், அச்சமுதாயங்களெல்லாம் இன்று வாழ்வு இழந்து நிற்பதையும் காண்கிறோம். உலகியலில் நாம் ஒன்றைக் காண்கிறோம். எந்தச் சமுதாயம் தன் நலம் ஒன்றையே பெரிதெனக் கருதிப் பிறரைத் தனக்கு அடிமைப் படுத்த நினைக்கின்றதோ அச்சமுதாயம் தானே அழியும். அது போலவே, இராவணன் என்று தன் நலம் கருதி, தருமத்தை மறந்து, தன்னுடைய மக்கள் தன் இன்ப வாழ்க்கைக்கு உறு துணையாக நிற்க வேண்டுமென்று எண்ணினானே அன்றே அவன் அழிவுறத் தலைப்பட்டான்.

இத்தகைய மாந்தர்களைத் திருவள்ளுவர்,

> " தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலையின் இழிந்தக் கடை "

என்று உரைக்கின்றார்.

தலையிலே இருக்கின்ற வரையிலும், மயிரை எண்ணெயிட்டு வாசனையிட்டு முடிக்கிறோம். ஆனால் அது தலையின் நீங்கித் தரையிலே உதிர்ந்து விடுமாயின் அதைப்பற்றி யாருமே கவலைப்படுவதில்லை. அது போலவே மாட்சியுடன் விளங்க வேண்டிய இராவணன் வீழ்ச்சியுறவே, அஞ்சுவதை அஞ்சுகின்ற வீடணனும் அவனை விட்டுப் பிரிந்தான்.

இது நிற்க. கதையைத் தொடர்வோம்.

வீடணன் இராமனிடம் அடைக்கலம் தேடி வந்தான். வானரர்கள், "வீடணனை ஏற்றுக்கொள்ளுவது ஆட்டுக்கு நரியைக் காவல் வைப்பது போலாகும்" என்று கூறி மறுத்து விடும்படி இராமனை வேண்டினர். அவன் இராவணனுடைய தம்பியாகையால் அவனுடைய கருத்தையும் அவர்கள் ஐயுறத் தொடங்கினர். ஆனால் அனுமன் ஒருவனே வீடணனை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற கருத்துடையவனாக இருந்தான்.

வீடணனைப் போல் ஒருவன் இல்லையானால் அந்நாட்டை வென்று சீதையை அடைய முடியாது என்ற எண்ணமுடையவனாக இருந்த இராமன் வானர சேனைகளை நோக்கினான்.

"வானர வீரர்களே, மனத்தினிலே மிகவும் ஆராய்ந்து தான் தகுந்த காலத்திலே இவன் நம்மிடம் வந்திருக்கிறான்; மிகவும் நுண்ணிய அறிவு உடையவன் இவ் வீடணன்; விடாமுயற்சியாலும், வ லி மை ய ா லு ம் குறித்த பொருளை அடையக் கூடிய தன்மையுடையவன்; இவனுக்கு இப்பொழுது இலங்கை நாட்டை அரசாட்சி செய்யவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டுவிட்டது; தக்க காலத்திலே நம்மிடம் வந்து சேர்ந்திருக்கின்ற இவனை, நாம் நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும்" என்று விளம்பினான்.

வானர வீரர்களுக்கு, அனுமனும் இராமனும் கூறிய வார்த்தைகள் மனவமைதி தரவில்லை. வீடணனைத் துணைக் கொண்டு வெற்றி பெறுவது 'மண் குதிரையை நம்பி ஆற்றிலே இறங்குவது போல' என்று அவர்கள் கருதினார்கள். இராமன் அவர்களை நோக்கி "அடைக்கலம் என்று வந்தவனைத் தள்ளக்கூடாது; ஒருகால் அவன் துரோகம் செய்தாலும், துரோகம் அவன்பாற் செல்லுமேயல்லாது நம்மை வந்து அடையாது. சிபிச்சக்கரவர்த்தியின் வரலாற்றை நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஒரு நாள் அவனை ஒரு புறா அடைக்கலம் வேண்டிற்று. அவனும் அடைக்கலம் தந்தான். பின்னர் ஒரு பருந்து வந்து "எனக்கு உணவாக வேண்டிய புறாவை என்னிடம் தந்துவிடு" என்றது. "அடைக்கலம் புகுந்த பொருளைத் தவிர வேறு எதனை வேண்டுமானாலும் தருகிறேன்" என்று அத் தமிழ் மன்னன் கூறினான். "இந்தப் புறாவின் எடையளவு தசை தருக" என வேண்ட, வேந்தன் தன் உடம்பிலுள்ள உறுப்புக்களை ஒவ்வொன்றாக அறுத்து வைத்தும் எடை குறையாமையால், தானே தராசுத் தட்டில் ஏறி நின்றான். தேவர்கள் அவனுடைய தன் நலம் கருதாத வாழ்வை மெச்சி, அவனுக்கு வரமளித்து மறைந்தனர். அத்தமிழ் மன்னன் மரபிலே தோன்றியவன் நான். ஆகையால் அபயம் அளிப்பதே தகுதி" என்றான்.

வள்ளன்மையை வளமுடன் வளர்த்தது வண்டமிழ் நாடு. பெருங் கொடை வள்ளலான பாரியைப் போன்ற மன்னர்கள் வாழ்ந்த தமிழகத்தில், பிற்காலத்தில் கொடுக்கா

தவர்கள் வாழத் தலைப்பட்டனர். அவர்களை நோக்கினார் சுந்தரமூர்த்தி நாயனார்; உடனே அவர் தாம் பாடிய பதிகத்தில் "கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறினும் கொடுப்பாரிலை" என்று நயம்படப் பாடினார். தன்னையே பரிசாகத் தந்து மடிந்த பாரி போன்ற வள்ளல்கள் பிறந்த நாட்டில் தமிழர் பெருங்குடியில் பிறந்தவன் இராமன். வீடணனுக்கு அடைக்கலம் தர மறுத்தால், தன்னை வையம் இகழுமென்றும், பாரியும் சிபியும் பிறந்த குடியில் தோன்றினும், அப்பண்பாடு அற்றவன் என்று மக்கள் தன்னை ஏசுவார்களே எனவும் அஞ்சினான். எந்த உண்மையை எடுத்துக்காட்ட வேண்டுமானாலும், மூன்று சான்றுகளைப் பகர்ந்தால்தான் அந்த உண்மையைத் தெளிவுபடுத்த முடியும். தன் முன்னோர் செய்த தீரச் செயல்களைக் கூறிய பின், இராமன் தன் வழிபடு தெய்வமாகிய சிவபெருமானது தியாகத்தைப் பற்றிக் கூறினான்.

"திருப்பாற்கடலைத் தேவர்களும், அசுரர்களும் சேர்ந்து கடைந்தபோது, அதன்கண் ஆலகால விடம் தோன்றியது. தேவர்களும் அசுரர்களும் அதைக் கண்டு அஞ்சினர். ஆனால் சிவபெருமான் அந் நஞ்சை உண்டு அக் கடலிலே பின் உண்டான அமிர்தத்தைத் தேவர்களுக்கு வழங்கினார். இளங்கோவடிகளும் பிறவாயாக்கைப் பெரியோனான இறைவன் செய்த இச் செயலை வியந்து பாடுகின்றார். "விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்து அருள் செய்குவாய்" என்று குறிக்கின்றார். பிறருடைய குறிக்கோள் வெற்றி பெறுவதற்கு நாம் உறுதுணையாக நிற்க வேண்டுமென்பதுதான் தமிழ் மக்கள் கொண்ட உயர்ந்த நோக்கம். அவர்கள் தங்கள் குறிக்கோள் வெற்றி பெறுவதற்காக நஞ்சைத் தந்தாலும் வாங்கி உண்ணவேண்டும். இதை நடைமுறையில் காட்டுவார்போல் இறைவன் நஞ்சை உண்டார். இதனையே வள்ளுவப் பெருந்தகையும்,

> "பெயக் கண்டும் நஞ்சுண்டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்"

என்று கூறினர்.

"பெண் புருவைப் பிடித்துக்கொண்டு தன்னையும் பிடிக்க வந்த ஒரு வேடனுக்கு உதவி செய்யும் பொருட்டு அவன் குளிர் காய்வதற்கு மூட்டிய தீயிலே ஆண் புருவும் விழுந்து அவனுடைய பசியைத் தணித்தது." இச் செய்கை நான் மறைகளைக் காட்டிலும் மேலானதல்லவா?

"தன் முன்னோரும் சரி; இறைவனும் சரி; எல்லோரும் சரணடைந்தவர்களைக் காத்தார்கள். அதோடு மட்டுமல்லா மல் 'எனக்கு உதவி யாரும் இல்லையா?' என்று கேட்ட சீதைக்காகச் சடாயு உயிர் நீத்தான். இதுபோலப் பலர் தம் உயிர்க்கு உறுதி எண்ணுமல், கடமையை நிறைவேற்றிய கதையை நினைவு படுத்தி, இவனால் நமது உயிருக்கு ஆபத்து வருமோ என அஞ்சி அவனை ஏற்றுக்கொள்ளாவிட்டால் எனக்கு மீளாப் பழி வந்தெய்தும்; சரணமென்று வந்தவ னைத் தள்ளுதல் தகுதியும் முறைமையும் அல்ல" என்று சொல்லி இராமன் வீடணனை ஏற்றுக்கொண்டு வரவிடுத்தான்.

வீடணன் வந்து இராமனை வணங்கினுன். வெள்ளை நிறமுடையவர்கள் வானரர்கள்; வெண் மணல் பரந்த கடற் கரையிலே, பூரண நிலவு போல அவர்களிடையே இராமன் அமர்ந்திருந்தான். அவன் அருகிலே இலக்குவன் நின்று கொண்டிருந்தான். இராமன், வந்து எதிரே வணங்கிய வீடணனுக்கு இருக்கை அளித்து இலங்கை அரசை அவ னுக்கே கொடுப்பதாகவும் வாக்களித்தான்.

பகைவர் நாட்டினைத் தான் கொள்வதற்கு முன்னமே கொண்டாற்போல வேண்டியோருக்கு அதனைக் கொடுக்கும் தன்மையைக் "கொள்ளார்தேஎம் குறித்த கொற்றம்" என்று தொல்காப்பியரும் கூறுவர்.

வீடணனுக்கு இலங்கை அரசைக் கொடுத்தாய்விட்டது. இங்கே இராமாயணம் படிப்போருக்கு ஒரு வியப்பு ஏற்படு வது இயற்கையே. இக் காவியத்திலே இரண்டாவது பிறந் தவர்களே அரசுரிமை பெறுகிறுர்கள். பரதன் அரசு புரித

லும், சுக்கிரீவன் அரசு புரிதலும், இதற்குச் சான்றுகளாகும். பின் கூறப்பட்டவர்கள் அரசைத் தேடிப்பெற்ருர்கள் ஆனல் பரதனே, தன்னைத் தேடி வந்த அரசை வெறுத்து ஒதுக்கினன். தான் மூத்தவனகப் பிறந்தும் அரசாள முடிய வில்லையே என்ற வெறுப்பினல்தான், இராமன், தன்னைக் கொன்று தன் தம்பிக்கு அரசு நல்குகின்ருன் எனக் கருதினன் வாலி. அதனல் அவன் "கூட்டு ஒருவருமில்லாத கொற்ற வனகிய உனது நாட்டைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு அங்கு ஒரு நல்ல கருமம் செய்தாய். அதுபோலவே எல்லா விடத்திலும் தம்பியே ஆள வேண்டுமென்பது உன் எண் ணம் போலும்" என்று சொல்லி நகைத்தான்.

இராமன் வீடணனுக்கு அரசைக் கொடுத்ததோடல்லா மல் அவனைத் தம்பியரில் ஒருவனகவும்ஆக்கிக் கொண்டான்.

## 40. கடல் அணை

வீடணன் இராமனை வந்தடைந்து விட்டான். இராமன் தன்னுடைய காரியம் நிறைவேறிவிட்டதென்றே நினைத் தான். இலங்கையை வெல்லுவதற்கு இராவணனுடைய தம்பியின் உதவி கிடைத்து விட்டது. ஆனால் சமுத்திரத்தைக் கடந்து சென்றாலன்றி இலங்கையை அடைய முடியாது. கடலைக் கடக்க என்ன உபாயம் என்று வீடணனை இராமன் கேட்டான். வீடணன் வருணனை வேண்டி வழி பெறல் வேண்டும் என்பானாய்,

> "கரந்து நின்ற நின் தன்மையை அது செலக் கருதும்
> பரந்தது உன் திருக்குல முதல் தலைவரால் பரிவாய்
> வரந்தரும் இந்த மாக்கடல் படைசெல வழி வேறு
> இரந்து வேண்டுதி எறி திரைப் பரவையை"

என்று கூறவும், இராமன் கடற்கரையை அடைந்தான்.

இலங்கைக்கும், இராமனிருக்குமிடத்திற்கும் சிறிது தூர மேயுள்ளது. இத்தூரத்தை அனுமன் தாவிக் கடந்தான். கடலும் அனுமனுக்கு வழிவிட்டு உபசரித்ததாக நாம் படித் தோம். அக்கடல் இராமன் வந்தவுடன் மௌனமானதேன்? இராமனுடைய தூதனுக்குக் கொடுத்த மரியாதையைத் தானும், கடல் ஏன் இர்ாமனுக்குத் தரமறுத்தது? இது சரி தானா? என்ற கேள்வியும் இங்கே எழுகிறது.

எவ்வாறு இது சரி என்பதைப் பின்னர்க் கூறுவோம். இலங்கையைச் சூழ்ந்துள்ள கடலே அதற்கு அகழியாக இருக்கின்றது. இயற்கையாக அமைந்த அந்த அகழியின் கரையிலே துக்கமே வடிவமாகச் சீதையை நினைத்தபடி இராமன் நின்றுகொண்டிருந்தான். அவனுடைய வருத்தம் மிகும்படி செந்தீ வண்ணமான அந்தி வானம் தோன்றியது. அப்பொழுது தோன்றிய சந்திரன், "சீதை என்னைத் தன் முகப் பொலிவால் வென்றாள். அதற்கு மாறாக நான் அவள்

கணவனுன இராமனை வெல்கிறேன்" என்று தனது நில வாகிய வேற்படையை இராமன் மேற் செலுத்தினுன். சந்திரன் உதயமாகும்போது சமுத்திரம் பொங்கி எழுவது இயற்கையாக ஏற்படும் நிகழ்ச்சி. ஆனுல் கடல் பொங்கி எழுந்தது கம்பன் மனக் கண்ணிலே கற்பனைப் பொருளாக மாறியது. தன்னை நிறத்திஞல் வென்ற இராமன் அந்த வெற்றியோடு மன அமைதி பெருமல் வானர சேனையைக் கொண்டு அணைகட்டி அடைக்கவும் வந்தானென்று கடல் சினந்து எழுந்தது போலிருந்தது என்கின்ருர்.

அந்தி வானமும் இருளும் பூரண சந்திரனும், மெல்லிய தென்றல் காற்றும் மன்மதனுக்குத் துணை என்பர். அம் மன்மதனும் இவைகளைத் துணையாகக் கொண்டு சீதையைப் பிரிந்த துன்பத்தை இராமனுக்கு மிகுவித்தான். சீதையின் நினைவால் வாடிய இராமனைச் சுக்கிரீவன் அணுகித் "தாங் களே இவ்வாறு துன்பப்பட்டுக்கொண்டிருந்தால் மேல் நடக்கவேண்டிய காரியங்களைப் பற்றி ஆராய்பவர் யார்? வீடணனுடன் கலந்து ஆலோசித்து ஒரு முடிவிற்கு நாம் வருதல் வேண்டும்" என்ருன்.

வீடணன் சொற்படி ஒரு வார காலம் சமுத்திர ராசனை நோக்கி இராமன் தவம் கிடந்தான். சமுத்திர ராசன் அவ னுக்கு அருள் புரிவதாகக் காணும். சமுத்திரம் தனக்கு வழிவிட மறுத்தபின், வேறு வழியின்றி அதனுடன் போர் தொடுப்பதே சிறந்தது என்ற முடிவிற்கு வந்தான் இராமன். மற்றவர்களை நோக்கி "எனக்கு இக்கடல் வழி விடாவிட்டால், இதை என் அம்புகளினுல் எரித்து நீரைப்போக்கிச் சேருக்கிக் கொல்லப்பட்ட மீன்கள் சிதறிக் கிடக்கின்ற தரையாக்கி விடுகிறேன்" எனக் கூறினுன்.

பல அழகிய கற்களினுல் இழைக்கப்பட்ட முடியும், சிவந்த கண்களும், நீலோற்பலம் போல நீல நிறமுள்ள மேனியும் கொண்ட வருணன், நீரின் நடுவிலிருந்து மத யானையைப் போல அழகிய நடையுடன் இராமன் முன்னே போந்து நின்று வணங்கினுன்.

வருணன்: அடியேன் வணங்குகிறேன்.

இராமன்: வருணனு, வருக வருக! வணங்குகிறேன்.

வருணன்: இயற்கையனைத்தையும் வென்ற தேவ ராசனே, நீர் என்னை வணங்குதல் தகாது. அரசர்க்கரசரே! என் மீது சினம் வேண்டாம். உமது கட்டளை என்ன? விரைவில் சொல்வீராக.

இங்கே, தான் அழைத்தபோது வராமல் தாமதித்து வந்தமை பற்றி வருணன் மேல் பெருஞ் சினம் கொண்டிருந்த இராமன், வருணன் வந்து அபயம் என்றதும் சினம் தெளிந்தான்.

> " மொழி உனக்கு அபயம் என்ருய்
> ஆதலால் முனிவு தீர்ந்தேன்
> பழி எனக்கு ஆகும் என்று
> பாதகர் பரவை என்னும்
> குழியினைக் கருதிச் செய்த
> குமண்டையைக் குறித்து நீங்க
> வழியினைத் தருதி "

என்று இராமன் கேட்டான் எனக் கம்பர் கூறுகின்ருர்.

வருணன்: இதோ வழி. நீங்கள் என்னைக் கடந்து செல்லலாம். நான் விடைபெற்றுக் கொள்ளுகிறேன். ஆனல் ஒன்று; இக் கடலை இப்போது வற்றச் செய்தால், கடலின் தன்மை மாறிவிடும்; கடலின் பெருமை அதனுல் கெடும்; அக் குற்றங்கள் தங்களைச் சேரும். ஆகையால் என் தலைமீது சேது (அணை) கட்டிச் செல்வதே நலம்.

இராமன்: நன்று, அப்படியே செய்கிருேம். கடலின் பெருமை நம்மால் குன்றுமாயின், சேது கட்டுவதே தக்கது.

இவ்வாறு மொழிந்த இராமன் வருணனுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு வானரர்களை நோக்கி அணை கட்டுமாறு பணித்தான்.

வானர வீரர் மலை முதலியவற்றைக் கொண்டுவந்து இலங்கைக்கு ஒரு பாலத்தைக் கட்டி முடித்தனர். நளன்

என்னும் வானரன் பாலத்தைக் கட்டுகின்ற அரும் பெரும் செயலை முன் நின்று செய்து முடித்தான். இதனைக் கம்பன் "சடையப்ப வள்ளல் தன்னை அடைந்தவரைத் தாங்குதல் போல் தாங்கிச் சேதுவைக் கட்டினன்" என்று சிறப்பித்துக் கூறுவாராய்,

> "மஞ்சினில் திகழ்தரு மலையை மாக்குரங்கு
> எஞ்சுறக் கடிந்தெடுத் தெறியவே நளன்
> விஞ்சையில் தாங்கினன், சடையன் வெண்ணெயில்
> தஞ்ச மென்றோர்களைத் தாங்கும் தன்மை போல்"

என்று கூறுகின்றார்.

இராமன் பாலம் கட்டுவதற்கும், வருண பகவான் சீற்றத்திற்கும் என்ன சம்பந்தம் என்று இயற்கையறிவு நமக்குள் எழுந்து கேட்பது இயல்பே. கலை உரைத்த கற்பனையை ஒதுக்கித் தள்ளிவிட்டு நடு நிலைமையுடன் நின்று ஆராய்பவர்களுக்கு ஓர் உண்மை தோன்றாமற் போகாது. புராணக் குப்பைகள் என்று தள்ளி விடுங்கள் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். தெய்வத் தன்மையினால் ஏற்பட்டது என்று ஒரு சாரார் கூறுகின்றனர். ஆனால் உண்மை வேறு இடத்தில் உள்ளது. புராணங்களையும் இதிகாசங்களையும் ஊன்றிக் கவனிப்போர், பஞ்ச பூதத்தின் நுட்பம் கூறும் புத்தம் புதிய கலைகள், அப் பழம் புராணங்களுக்குள் மறைந்து பொதிந்து கிடப்பதைக் காணலாம். அவ் விஞ்ஞான உண்மைகளின் உதவி கொண்டு இராமன் பாலத்தை அமைத்தான். இயற்கையை எவ்வாறு இராமன் வென்றான் என்பதைக் கவிஞர்கள் கற்பனை உலகில் நின்று பேசுகிறார்கள். அது நமக்குப் புரியவில்லை. இதனை உணர்ந்தார் அண்மையிலே வாழ்ந்த இராமலிங்க அடிகள். "கலை உரைத்த கற்பனையை நிலை எனவே கொண்டாடும் கண்மூடி வழக்கமெல்லாம் மண் மூடிப் போகும் காலம் வருமா?" என ஏக்கத்தோடு கூறினார்.

விசுவாமித்திரன் ஒருபுதிய உலகைப் படைத்தான் என்று புராணங்களில் நாம் படித்திருக்கிறோம். இப் புராணக் கதையை வெறும் பொய் என்று கூறி எள்ளி நகையாடினர்.

ஆனால் இன்று ஒரு புதிய உலகத்தை உருவாக்கும் முயற்சியிலே அமெரிக்க நாடு இறங்கிவிட்டது. இது போலப் புராணங்களிலே கூறப்படுகின்ற தத்துவங்களை நாம் நோக்குவோமானால் அக்காலத்தினர் விஞ்ஞானத்திலே எவ்வளவு முன்னேறியிருந்தனர் என்பதைக் காணலாம்.

இலங்கைக்குப் பாலம் கட்டியாகிவிட்டது. ஆனால் இலங்கையை வெல்லுவது மிகவும் கடினமான செயல் என்பதையும் இராமன் உணர்ந்தான். கும்பகருணனும் இந்திரசித்துவும் மிகவும் வலிமையானவர்கள். அவர்களைப் போரில் வெல்வது மிகவும் அருமையான காரியம் என்பதை வீடணனும் இராமனுக்கு எடுத்துரைத்தான். இராமனுடைய சேனைகளுக்கு இலங்கையின் பல கோட்டை கொத்தளங்களை வருணித்து, மிகவும் சாமர்த்தியமாகப் போர் நிகழ வேண்டும் என்பதையும் அவ் வீடணன் சொல்லிக் கொடுத்தான். சீதை முன்னமே அனுமனுக்குக் கூறியது போல, அரக்கர்கள் எங்கு எங்கு எவ்வாறு உறைகின்றார்கள் என்பது அரக்கர்களுக்குத்தான் தெரியுமேயல்லாது, வேறு யாருக்கும் தெரிவதற்கு நியாயமில்லை, 'பாம்பின் கால் பாம்பறியும்' என்றபடி அரக்கர்களின் உறைவிடத்தையும், அவர்களுடைய பலத்தையும், பலவீனத்தையும் நன்கு அறிந்தவன் வீடணன். இதோடுமட்டுமல்லாமல், திரிசடையும் சீதையுடன் வாழ்கிறாள். வெளிப் பகையைக் காட்டிலும் உட்பகை மிகவும் கொடியது. இதனால்தான் வள்ளுவரும் "பாழ் செய்யும் உட்பகை" என்று கூறினார்.

இராமன் அணை மேல் நடந்து இலங்கையை நோக்கிச் செல்லலுற்றான். திருமாலின் படுக்கையான ஆதிசேடனே, "வருந்துகின்ற சானகியைக் காண என் மேல் நடந்து செல்லுங்கள்" என்று கூறுவது போல இருந்தது அந்தப் பாலம். இராமன் முதலியோர் அணையை நடந்து கடந்து இலங்கைக்குள் புகுந்தார்கள். அங்கு ஒரு மலையின் மீது பாடி வீடு அமைத்து அவர்கள் தங்கினார்கள். சூரியன் மறைந்து இரவும் வந்தது. மன்மதன் இராமன் மேல் அம்

பெய்வதற்காக வில்லை வளைத்தாற்போல், வானத்தின் மேல் பிறைச் சந்திரன் தோன்றினான். இதனைக் கம்பன்,

"மாலுறு குடகவானின்
வயங்கிய வந்து தோன்றும்
பாலுறு பசுவெண்டிங்கள்
பங்கய நயனத் தண்ணல்
மேலுறு பகழி வாங்கி
வெகுண்டனன் விரைவில் வந்த
காலுற வழைத்த காமன்
வில்லெனக் காட்டிற்றன்றே"

என்று கூறுகின்றான்.

சீதையின் எழில் முகம் கோபத்திலும் அழகாயிருக்கும் தன்மையுடையது. அந்தப் புன்னகை தவழும் முக மதியைக் காணாததினால் இராமன் தூக்கத்தை மறந்தவனானான். அவன் தோளின்மீது நிலவு உலவி வரும் காட்சி, மழை முகில் நீங்கிய மலைமீது வெள்ளை நிறப் பிள்ளைப் பாம்பு மெல்ல ஊரும் தோற்றத்தை ஒத்திருந்தது. இராமன் சீதையை நினைத்து வருந்தினான். "முத்தன்ன வெண் நகையாய்; முன்பு காட்டிலே என் முன் வந்து தித்திக்கப் பேசுவாயே! இனி உன் மழலை மொழியையும், மதி முகத்தையும் கேட்டும் கண்டும் இன்புறும் நாள் எந்நாளோ?" என்று புலம்பினான்.

இவ்வாறு இராமன் வருந்திக் கொண்டிருக்கும் போது, இராவணனுடைய ஒற்றர்கள் குரங்கு உருவத்திலே அங்கு வந்தனர். இதனை வீடணன் கண்டுபிடித்து அவர்களை இராமன் முன் கொண்டு வந்தான். இராமன் அவர்களுக்கு ஏதும் துன்பம் செய்யக்கூடாது என்னும் கருத்துடையவனாய்,

"தாம் பிழை செய்தாரேனும்
தஞ்சம் என்று அடைந்தோர் தம்மை
நாம் பிழை செய்யலாமோ?
நலியலிர், விடுமின்"

என்று சொன்னான். அது கேட்ட வீடணன், அவர்கள் குரங்கு உருவில் வந்த 'சுகன்' 'சாரணன்' என்ற அரக்க ஒற்றர்கள் என்று உரைத்தான்.

அவர்களையே இராவணனுக்குச் செய்தி அனுப்பும் ஆட்களாக நினைத்தான். அவர்களை நோக்கி, "சானகியைக் கவர்ந்ததனால், இராமன் தாரமிழந்து தானாகவே வலிந்து போருக்கு இழுக்கப்பட்டிருக்கிறான். அவன் உன்னைப் போர்க் கோலத்தில் காண விருந்தினனாக வந்திருக்கிறான். அவ் விருந்தினனை எதிர்கொண்டு அழைக்க இன்னும் வரவில்லையே என்று நான் கூறியதாக அவனிடம் கூறுங்கள்" என்று கூறி ஒற்றர்களை நோக்கி,

> "நோக்கினீர் தானை யெங்கும்
> நுழைந்து நீர், இனி வேறொன்றும்
> ஆக்குவ தில்லையாயின்
> அஞ்சல் என் றஃது உண்டன்றே
> வாக்கினில் மனத்தில் கையில்
> மற்று இனி நலியா வண்ணம்
> போக்குமின்* விரைவில்"

என்றான். அது கேட்ட ஒற்றர் இராமனை வணங்கிவிட்டு உய்ந்தனம் என்று போனார்கள்.

* போக்குமின்—போய்விடுவீர்களாக

# 41. போர்ப் பாதை

இலங்கைக்குக் கடலே அகழியாக உள்ளது. அக்கடலைக் கடந்து யாருமே உள்ளே வரமுடியாது என்று எண்ணி இறுமாப்புடன் இருந்தான் இராவணன். ஆனால் கடலின் மேல் அணை கட்டப்பட்டுவிட்டதென்பதையும், அதன்மேல் நடந்து வானர வீரர்கள் இலங்கைக்குள் புகுந்துவிட்டார்கள் என்பதையும் இராவணன் அறிந்தான். தன் ஒருவனுக்கே இயற்கை அஞ்சுமென்று மனப்பால் குடித்துக்கொண்டிருந்த இராவணனுக்குக் கடல் இராமனுக்கு அஞ்சி வழிவிட்டது வியப்பாகவே இருந்தது. அவன் இந்த நிலையிலே யாது செய்யத் தக்கது என்று ஆலோசிக்கக் கருதி, அறிஞர்களை அழைத்துத் தன் கருத்தை வெளியிட்டான்.

மாலியவான் இராவணனுடைய தாயைப் பெற்ற பாட்டன். அவன் இராவணனுடைய தீய பண்பால் நாடு அழிவதை விரும்பவில்லை. அதனால் "வானரர்கள் கடலிலே அணையைக் கட்டிவிட்டனர் என்ற சொற்கள், அவனுக்கு நெஞ்சிலே சூலத்தைக் கொண்டு துளைப்பது போல இருந்தன. இலங்கை தீக்கிரையாகியதைக் கண்டோம். அரக்கர்களில் பலர் கொல்லப்பட்டதையும் கண்டோம். எதிரிகள் கண்ணெதிரிலே வந்துவிட்டதையும் காண்கிறோம். ஆகையால் இனி நாம் என்ன செய்யமுடியும்? சீதையை இராமனிடத்தில் சேர்ப்பித்து அவனுடன் நல்லுறவு கொள்ளுவதே சாலச் சிறந்தது" என்ற கருத்துப்பட,

> "ஈதெலாம் உணர்ந்தேன்; ஆயின்
> என்குலம் இறுதியுற்றது
> ஆதியில் இதனால்; என்றும்
> உன்றன் மேல் அன்பினாலும்

**வேதனை நெஞ்சின் எய்த**
**வெம்பியான் விளைவசொன்னேன்**
**சீதையை விடுதியாயின்**
**தீரும் இத்தீமை ''**

என்று சொன்னான்.

தன் பாட்டனிடம் இவ்வார்த்தைகளை எதிர்பார்க்கவில்லை இராவணன். அம்மையுடன் அமர்ந்திருந்த இறைவனுடைய கயிலை மலையை அசைக்கும் வன்மையுடைய இராவணன், கேவலம் ஒரு மனித அரசகுமாரனுக்கு அஞ்சுவதா என்று எண்ணினான். கடும் சினம் முடுகி எழுந்தது; கண்களில் தீப்பொறி பறந்தது. மீசை துடித்தது. அவன் மடித்தவாயி லிருந்து வெடித்த சொற்கள் வெளிவந்தன.

**'' பேதை மானிடவரோடு**
**குரங்கல பிறவேயாக ;**
**பூதல வரைப்பில நாகர்**
**புரத்தினப் புறத்ததாக ;**
**காது வெஞ் செருவேட்(டு)**
**என்னைக் காந்தினர் கலந்தபோதும்**
**சீதை தன் திறத்தினாயின்**
**அமர்த்தொழில் திறம்புவேனோ ?''**

'' நன்று ! நன்று !! யாருடன் உறவு கொள்ள வேண்டு மென்று கூறுகிறீர்கள். வீடணனுடன் கூடி நீவிர் வேண்டு மானால் வாழுங்கள் '' என்றான்.

அவ்வமயம் படைத் தலைவன் குறுக்கிட்டு இவர்கள் இருவருக்கும் இடையில் சமாதானம் செய்ய முயன்று, இராவணனை நோக்கி '' மன்னர் பெரும, மாநிலமெல்லாம் உன்னைக் கண்டு அஞ்சுகிறது. எட்டுத் திக்குகளையும் இயற்கையனைத்தையும் வென்றவன் நீ. குரங்குகள் மலை களைக் கொண்டு சேதுசமைத்த பெருமையைக் கூறுகின்றார் உன் பாட்டன். ஆனால் நீ கயிலையைத் தூக்கிய பெருமையை மறந்துவிட்டார். மதியிழந்த மானிடர்கள் தம்மை விதி பிடித்துத் தள்ள, சாவதற்கே இங்கு வருகிறார்கள்.

"சாவாரை யாரே தடுப்பர்?" என்ருன். அப்பொழுது வெளியிலே ஒரு கூச்சல் கேட்டது. காவலர்கள் உள்ளே வந்து "ஒற்றர்கள் வந்திருக்கிருர்கள்" என்றனர். அவர் களை உள்ளே விடுமாறு இராவணன் கட்டளை இட்டான். குருதி உடலில் வழிந்து ஓட அச்சம் உள்ளத்தை அசைக்க நின்ற ஒற்றர்களை இராவணன் நோக்கி, "இராமன் வலியன்; வீடணன் மாட்சியுடன் வீற்றிருக்கிருன்; அவர்களது சேனை மிகப் பெரியது; இவைகளின் பெருமையைத்தானே செப்ப வந்தீர்கள்" என்ருன். அதற்கு மறுமொழியாக, "தலைவரே, வீடணன் இராமன் பக்கத்தில் இருக்கும் வரையில் நமக்கு ஆபத்து தான்; எங்களை அவன்தான் காட்டிக் கொடுத்தான் இராமன் வீரத்தைக் காட்டிலும் இவ்வரக்கனின் உட்பகை மிகவும் பயங்கரமானது. வானர சேனைகளும் மிகுதியாக உள்ளன. ஆகையால் தேவரீர் மிகவும் பாதுகாவலுடன் இருக்கவேண்டியது அவசியம்" என்றனர்.

இராவணனே சமாதானத்தை விரும்பவில்லை. சீதையை விடுவதைக் காட்டிலும் உயிரை விடுவதே மேல் எனக்கருதிப் பாட்டனுடைய அறிவுரைகளை மறுத்தான்; உலகம் பழிக்கிற தொழிலாகிய பிறர்மனை நோக்குகின்ற ஆண்மையற்ற செயலையே பெரிதென மதித்தான். உயிரை ஒழுக்கத்திலும் மேலென எண்ணினன். இதன் விளைவு யாது என இனிக் காணலாம்.

வீடணனை இராவணன் ஒரு ஐந்தாம்படை எனக் கருதி ஞன். இரணியனுடைய மகன் பிரகலாதன் தன் தந்தைக்கே எமனைத் தோன்றினன். தன் தந்தைக்கு எதிரியாக நின்று திருமாலை நரசிம்ம அவதாரம் எடுக்கச்செய்து, இரணியன் சாவதற்குக் காரணமாக இருந்தவன் பிரகலாதன் என்பது தான் இராவணனுடைய எண்ணம். அந்தப் பண்புகள் அனைத்தையுமே, தன் தம்பியான வீடணன் கொண்டுள் ளான். விதியின் வலிமையால் தீவினை இராவணனை வந் தடையவும், அதனை எதிர்த்துப் போர்செய்து தோற்றபின் அவல நிலையிலே இராவணன் இருக்கிருன். இந்த நிலையில், இராவணன், தான் இராமனுடன் போர் தொடுத்துத்

தோற்றுப் போவானுனல், தன் தம்பி வீடணனை இலங்கை யின் அரசு கட்டிலில் வீற்றிருந்து அரசாளலாமென்று எண்ணத்திலுள்ளான் என்று மிகவும் வருந்தினன்.

இந்தச் சிந்தனையில் இராவணன் ஆழ்ந்திருக்கும் போது சுக்கிரீவன், அரக்கர் படைகளுக்கிடையில் சென்று இராவணனுடைய மணிமகுடத்தைப் பறித்துக்கொண்டு இராமன்பால் சென்று சேர்ந்தான். இராவணன் இதை எதிர்பார்த்தவனல்லன். இந்த நிகழ்ச்சி நேர்ந்தபின் போர் அண்மையில் வந்துவிட்டதென்பதை உணர்ந்த இராவணன் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்ய முனைந்தான்.

இராமனுக்குச் சுக்கிரீவனுடைய துணிச்சல் அச்சத்தைத் தந்தது. சுக்கிரீவன் தன் பதற்ற குணத்தினுல், பெரும் கெடுதியைத் தனக்குத் தேடிக்கொள்ளுவானே என்று அஞ்சி அவனைக் கண்டித்தான்.

தஞ்சம் என்று வந்தவர்க்கு அடைக்கலம் தருதல், தமிழ் மரபிற் பிறந்த தனக்குப் பெருமை தருகிறது என்று கூறி வீடணனை ஏற்றுக்கொண்ட காரணத்தால், இலங்கையிலே உட்பகையை உண்டாக்குவதற்கு அடிகோலிவிட்டான்.

பல திட்டங்கள் தீட்டி, நாட்டை நலமுறச் செய்தவன் இராவணன். இலங்கை மக்களுக்கு நன்மை தரும் பல திட்டங்களைத் தீட்டியவன் என்று அவர்கள் நம்பியதால், இலங்கையிலே அவனுக்கு எதிர்ப்பு ஏற்படவில்லை. சீதையும் பிறநாட்டு நங்கையாதலால், அவளுடன் இராவணன் கொண்ட காதல் தீது எனினும், அவை மக்களிடம் பரபரப்பை உண்டுபண்ணவில்லை. ஆகையால் வீடணனைத் தவிர மற்றவர்கள் எல்லோரும், அவனைத் திருத்த நினைத்தார்களே ஒழிய, அவனை விட்டுப் பிரிந்து எதிரியாக வாழ விரும்பவில்லை. இதனை இராவணனும் உணர்ந்திருந்தானுதலால், தன் தம்பி கும்பகர்ணனும் மகன் இந்திரசித்துவும் இருக்குமளவும் தனக்கு ஏதும் கெடுதி வராது என்று நினைத்து அவர்களைப் போருக்கு அனுப்புவது என்று முடிவு செய்தான்.

இராமனும் போருக்கு ஆயத்தம் செய்ய முனைந்தான். தன்னுடைய இடக்கையிலே வில்லைத் தாங்கிக்கொண்டு இருந்தான். மற்றொரு கையினால் அம்பைச் சுற்றிய வண்ணம் இருந்தான். இக்காட்சி வானரர்களுக்கு கண்கொள்ளாக்காட்சியாக இருந்தது. தமிழ்க் கடவுளான முருகப் பெருமான் போன்ற வனப்புடன் இராமன் இலங்கையிலே காட்சி தந்தான்.

வசிட்டர் இராமபிரானுக்கு முடிசூட்ட வேண்டுமென்று அயோத்தியில் முடிவானவுடன் இராமனை அழைத்து, "யாரோடும் பகை கொள்ளவில்லை என்று நீ முடிவு செய்வாயானால், போர் ஒடுங்கும்; புகழ் ஓங்கும்" என்று அறிவுரை கூறினார். ஆனால் இராமன் இராக்கதர்களிடம் பகை கொண்டதன் காரணமாகப் போர் எழுந்தது. பெரியோருடைய வாக்குப் பொய்யாகாது என்று நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். அதுபோலவே வசிட்டர் வாக்கும் பலித்துவிட்டது. இராமராவணப் போரால் இன்று இராமனுடைய புகழ் பல இடங்களில் ஓங்கியிருந்த போதிலும், தமிழ் நாட்டில் சில மக்களிடம் அவனுடைய பெயரிலே தாழ்வு ஏற்பட்டுவிட்டது.

# 42. அங்கதன் ஆண்மை

இராவணன் இலங்கையிலே வீற்றிருந்த காட்சி, அனுமன் உள்ளத்தையேயன்றி எல்லோருடைய மனத்தையும் கவர்ந்தது. இராமன் உள்ளத்திலும் ஒரு மாற்றத்தைத் தந்தது. வாலிபால் காட்டாத ஓர் உள்ளன்பு இராவணன் பால் ஏற்பட்டது. காம வயத்தில் ஈடுபட்ட இராமனது உள்ளமும் திருந்தும்படியான ஆட்சி இலங்கையிலே இருந்தது. வீரனுடைய குணங்கள் யாவும் இராமன்பால் வந்தடைய அவன் "போர் தொடங்குமுன் தூது அனுப்புதல்தான் சாலச் சிறந்தது; முறையுமாகும்" என்ற கருத்துப்பட,

> "தூதுவன் ஒருவன் தன்னை
> இவ்வழி விரைவில் தூண்டி,
> மாதினை விடுதியே என்று
> உணர்த்தவே மறுக்குமாகில்,
> காதுதல் கடன் என்று உள்ளம்
> கருதியது; அறனும் அஃதே
> நீதியும் அஃதே"

என்று வீடணனுக்கும் சுக்கிரீவனுக்கும் கூறினன். அவர்களும் அதற்கு உடன்பட்டனர். ஆனல் இலக்குவன் என்றுமே ஆத்திரமுடையவன். வாலியிடம் பரிவு காட்டாத தன் தமையன், இராவணன்பால் பரிவு கொள்வதைக் கண்டு வியப்புற்று, "இராவணன் தீயவன்; கள்வனும் கூட; தூது விடுதல் தருமம் அல்ல" என்ருன்.

> "என்னுடைய நாமம் நிற்கும்
> அளவெலாம் இலங்கை மூதூர்
> மன்னவன் நீயே"

என்று வீடணனுக்கு உறுதி கூறியிருப்பதால், அதனைச் சுட்டி அம்பு விடுதலே முறை; வீடணனுக்கு நீங்கள் வாக்குத் தந்து விட்டீர்களே அது என்ன ஆவது? முனிவர்களிடத்

தில் ' இராவணனையும் அவனைச் சார்ந்த அரக்கர்களையும் வேரோடு அழித்து விடுவேன் ' என்று கூறினீர்களே.

" அறந்தரு தவத்தை ஆயும்
அறிவினுல் அவற்றை முற்றும்
மறந்தனை, எனினும் மற்று இவ்
இலங்கையின் வளமை நோக்கி
இறந்து இது போதல் தீது என்று
இரங்கினை எனினும், எண்ணில்
சிறந்தது போரே "

என்றான். மேலும், " முன்னே சொன்ன அவ்வாக்குறுதி என்ன ஆவது? போர் புரிவதே தக்கது" என்றான். இராமன் இலக்குவனைப் பார்த்துப் புன்னகை செய்துவிட்டு "அரக்கர்கள் செய்த அட்டூழியங்களை நான் மறந்தவனல்லன் என்றாலும், போருக்குமுன், தூது அனுப்புவதே தகுதியும் முறைமையும் ஆகும். அத் தீயோன் நல்வழிக்கு வரமாட்டான். முடிவாக நடக்கப் போவது போர் என்பதில் ஐயமேயில்லை,

புயத்துறை வலியரேனும்
பொறை யொடும் பொருந்தி வாழ்தல்
நயத்துறை; அறனும் அஃதே

ஆதலால் நீ சிறிது அமைதியாக இருப்பாயாக" என்றான்.

தூது அனுப்புவது என்று முடிவானவுடன் அங்கதனைத் தூது அனுப்புவதே சரி என முடிவு செய்தனர். "சீதையைத் தர மறுத்தால், சீற்றத்துடன் இராமன் இலங்கையை அழித்து விடுவான். வாழ்வா, மரணமா என்பதை முடிவுகட்டிப் போருக்குத் தயாராக இரு"

" ஏந்திழையாளை விட்டுத்
தன்னுயிர் பெறுகை நன்றோ?
அன்றெனில் தலைகள் பத்தும்
சின்னபின்னங்கள் செய்யச்
செருக்களம் சேர்தல் நன்றோ?
சொன்னவை இரண்டில் ஒன்றே துணிக "

எனத் தெரிவிக்குமாறு இராமன் அங்கதனிடம் கூறினான். அங்கதனும் தூது சென்றான்.

இராவணனுடைய அவையை அடைந்தவுடன் இலங்கேசுவரன் அங்கதனை நோக்கி "நீ யார்? எங்கு வந்தாய்? எனக் கேட்டான்.

அங்கதன்: "நான் வாலியின் மகன். இராம தூதன்."

இராவணன்: "மைந்த, உன் தந்தையான வாலி என் நண்பன். அவன் அநியாயமாக இராமனால் கொல்லப்பட்டு விட்டான். உன்னுடைய தந்தையைக் கொன்றவனுடன் நீ நட்புரிமை பெற்றிருப்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. நீ என்னுடன் வந்து சேர்ந்துவிடு. இராமனைப் பூண்டோடு ஒழித்துவிடுவோம்.

"உந்தை என் துணைவன் அன்றே
ஓங்கு நற்சான்றும் உண்டால்;
நிந்தனை இதன்மேல் உண்டோ
நீ அவன் தூதனாதல்?
தந்தனன் நினக்குயானே
வானரத் தலைமை; தாழா
வந்தனை; நன்று செய்தாய்,
என்னுடைமைந்த"

என்று இராவணன் இயம்புகிறான்.

அங்கதன் இராவணனுடைய இனிய பேச்சிலே மயங்கி விடவில்லை. இதற்கு விடையாக "இயற்கை அனைத்தும் வென்றவனே, சீதையை விட்டுவிடு, அல்லது செத்து மடியப் போருக்கு வா. கோட்டைக்கு உள்ளேயிருந்து சாவாயானால், உனக்குப் புகழ் வராது" என்றான். இராவணனுக்குச் சினம் மிகுந்தது. வீரர்களை ஏவி அங்கதனைப் பற்றி எற்றுமாறு ஏவினான். அங்கதன் அவர்களைத் தள்ளிவிட்டுப் "போர்" "போர்" என்று இராமன் முன் வந்து குதித்தான். இராமன், என்ன செய்தி? என்று கேட்க யாவரும் அவன் யாது கூறப் போகிறான் என்று ஆவலோடு அவனைப் பார்க்கவும், அங்கதன்,

"முற்ற ஓதி என்? முடித்தலை மூர்க்கன்
அற்றபோது அன்றி ஆசை அறான்"

என்று சுருக்கமாகச் சொன்னான்.

# 43. இராம ராவணப் போர் நலம்

இடிப்பாரையில்லாத மன்னன் தானுகவே கெடுவான் என்பது உலக வழக்கு. இராவணனிடத்திலே நல்ல அமைச்சரவை இருந்தது. இலங்கை மன்னன் கோபம் கொண்டபோதும் அமைச்சர் நீதியை விடாது எடுத்துக் கூறினர். தம் உயிரையும் பொருட்படுத்தாது விளையப் போகும் காரியங்கள் இவை என ஓர்ந்து உணர்ந்து கூறும் உண்மையான உறவினர்களும் அமைச்சர்களும் அவன் அர சவையைச் சிறப்பித்தனர். அவர்கள் நேர்மையை நினைந்து கூறியவை அவன் மனத்திற்குத் துன்பத்தைத் தந்தன. இலங்கை வேந்தனுக்குப் போர் ஒரு பொருளாகத் தோன்ற வில்லை. வென்ருல் புகழ், மாண்டால் வீரசுவர்க்கம் என்றே அவன் எண்ணினுன்; ஆதலால் அமைச்சர்கள் கூறிய நல்ல உரைகளை இகழ்ந்து தள்ளிவிட்டான். தான்கொண்ட கொள்கையை நிறைவேற்ற வேண்டுமென்ற ஒரே எண்ணத் துடன் பிடிவாதமாகப் போர் புரிவதென்றே முடிவு செய் தான். சாவாரை யாரே தடுப்பார்!!

கற்புடைய மங்கையர்கள் குறைவின்றி விளங்கப் போர் தொடுக்க வேண்டுமென்ற எண்ணம் இராமனுக்கும் ஏற்பட்டது.

சானகியினுடைய துயரம் அளவிடமுடியாதது. அவ ளுடைய துயரம் தீராமல் போரே மூண்டது.

இராம இராவண யுத்தத்தின் முடிவு இராவணனது மரணமும், இராமனது வெற்றியும்தான். இதை யாவரும் அறிவர். ஆனுல், போரின் நடுவிலே இராவணன் உள்ளத் திலே ஒரு புயல் உண்டாகிறது. அப்புயல் அவன் மனத் திலே ஒரு மாற்றத்தையும் செய்துவிடுகிறது, சீதையின் கற்பு மாண்பைக் கூறுவது இராமாயணம். இராவணன் சீதையின் ஆசையாலே சாவானேயானுல் அவனுடைய எண் ணம் ஈடேறும் வரையிலும் பிறந்து பிறந்து இறக்கவேண்

டும். அவன் திரும்பவும் பிறப்பானுயின், சீதையின் கற்பு என்னவாகும்? மானத்துடன் வாழ்ந்து வீரசுவர்க்கம் அடைய வேண்டிய இராவணன் காம வயப்பட்டு இறப்பது வீரமன்று. ஆகையால் வீரசுவர்க்கம் அடையப் போகும் அவன் சீதையின் நினைவு சிறிதுமின்றியே இறக்கப்போவதை நாம் காணப்போகிறோம். இம் மனமாற்றம் எவ்வாறு எப்படி வந்தது என்பதை ஆழ்ந்து படிப்பவர்களே அறியும் வகையில் கம்பர் தன் புலமைத் திறத்தினுல் விளக்குகிறுர்.

போரின் முடிவு ஒருபுறமிருக்க இன்று இராமனுடைய புகழும், இராவணனுடைய வீரமும், கதிரவனும் கலைமதியும், இமயமும் கடலும்போல் நிலைபெற்று விளங்குகின்றன.

"ஒழுக்கம் விழுப்பம் தருதலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்" என்பது வள்ளுவர் வாக்கு. ஒழுக்கம் அச்சாணி போன்றது. தேர் எவ்வளவு பெரிதாக இருந்தாலும் வனப்புடன் அலங்கரிக்கப்பட்டிருந்தாலும் அச்சாணி முறிந்து போகுமானுல், அது வீழ்ந்துவிடும். இராவணனிடம் மற்ற குணங்கள் யாவையும் பெரிய தேர் போல அமைந்திருந்த போதிலும், ஒழுக்கம் என்னும் அச்சாணி குன்றியதால் வீழ்ந்தான்.

இராவணன் மிகவும் சிறந்த சிவபக்தன்; தேவாரப் பதிகங்களிலும் போற்றப்படுகிருன். ஆனுல், அவன் சிவனை வாழ்த்தியபோதும், உள்ளத்தே தன்னலம் ஆழ்ந்து கிடந்தது; மாணிக்கவாசகப் பெருந்தகை கூறியது போல அவன் வாழ்த்தியதும் தான் வாழவேண்டியே, மனத்தை ஈசன்பால் செலுத்தியதும், தான் உயர்ந்து தன்னை மற்றவர்கள் எல்லாம் தொழ வேண்டுமென்ற குறுகிய கருத்திலேயாம். உலகம் வாழவேண்டும்; அதிலே ஒருவனுகத் தானும் அதன்கண் வாழ்தல் வேண்டும் என்ற எண்ணம், என்று இராவணனுடைய உள்ளத்திலிருந்து மறைந்ததோ அன்றே அவன் வீழத் தொடங்கினுன்.

சுயநலமும் காமமும் அவன் கண்களை மறைத்தன. தானும், தன் நாடும் வாழவேண்டும் என்ற ஒரே கருத்துடையவனுக மாறிப் பிறரை அடிமையாக்கும் நோக்கம் அவன்

மனதில் ஏற்பட்டவுடனேயே, பல நாட்களாக அல்லும் பகலும் உழைத்துப் புத்தம்புதிய கலைகளையும் பஞ்சபூத நுட்பங்களையும் துணையாகக்கொண்டு கற்பனைக்கும் எட்டாத வகையிலே சமைக்கப்பட்ட இலங்கை அழியத் தொடங்கியது. இவ்வாறே எத்தனையோ சமுதாயங்களும் நாகரிகங்களும் நம் உலகில் தோன்றி மறைந்துவிட்டன. ஏன் என ஆராய்வோமானால், என்று அந்தச் சமுதாயத்திலோ அந்த நாட்டிலோ சுயநலம் குறுக்கிட்டதோ அன்றே அந்தச் சமுதாயம் அழியத் தலைப்பட்டதை நாம் காணலாம். ஆகையால்தான் தமிழரினம், "ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற மனப்பான்மையிலே உலகம் வாழவேண்டும்; சைவநீதி உலகமெல்லாம் பரவ வேண்டு"மென்று வாழ்த்தி வருகிறது. அந்தப் பெருநோக்கத்தினால்தான் இன்றும் தமிழருடைய சமயம், பண்பாடு, மொழி முதலியன அழிந்து ஒழிந்து போகாமல் இளமையுடன் காட்சி தருகின்றன.

இராவணன் முடிவு எவ்வகையாயினும் அவன் சிறந்தவன்; தடையில்லை. ஆனால் இராம இராவணப் போர் இனப் போர் எனக்கொள்ளாமல், தத்துவத்தை விளக்குகிற ஒரு காவியம் எனக்கொண்டு, இராவணன் முடிவை ஆராய்தல் வேண்டும். அவ்வாறு செய்தோமானால், இராவணனாகிய ஆன்மா கல்வி செல்வம் மாதர்களின் கண்கள் என்ற இடர்களிலிருந்து விடுபட்டு இறைவனுடன் கலக்கின்ற தத்துவத்தை நாம் காணலாம்.

இராமன் முடிசூட்டிக்கொள்ளுமுன், வசிட்டர் "யாரோடும் பகை கொள்ளக்கூடாது; பகை கொள்வது இல்லையென்றால் புகழ் ஓங்கும்; போர் ஒடுங்கும்" என்று கூறினார். ஆனால் இராமன் காட்டிற்கு வந்தவுடன் இவ்வறிவுரைகளை மறந்தான். சீதை எவ்வளவோ மீட்டும் மீட்டும் எடுத்துக் கூறிய போதிலும் அவன் கேட்கவில்லை; அரக்கர்களிடம் பகையே கொண்டான்; போர் மூண்டது. இராமனுடைய புகழ் எங்கும் பரந்து இருப்பினும், அவன் பிறந்த தமிழ் நாட்டிலே அவனுடைய புகழ் குன்றத் தொடங்கியது. தமிழனைக் காட்சிதர வேண்டிய அவன், இன்று தமிழர்களின்

பகைவன் எனச் சிலர் கருதும் வண்ணம் ஆராய்ச்சியாளர் கள் பொய் பரப்பி விட்டனர், மன்னவன் மகன், வேடன் வீட்டிலிருப்பது போல அவன் இன்று வடநாட்டாளுகக் காட்சி தருகிறுன். இராமன் நம் தென்ளுட்டவன்; சக்கர வர்த்தியின் திருமகன் என்று தமிழ்நாடு என்று அறியுமோ? இது நிற்க.

நாம் இனிக் கதையைத் தொடர்வோம்.

# 44. எண்ணத்தில் மண் வீழ்ந்தது.

கோட்டை கொத்தளங்கள் சிதறுண்டன என்பதைக் கேள்விப்பட்டவுடன் இராவணன் சீதையை யாதேனும் ஒரு மாயையால் வென்றுவிடலாமென எண்ணினுன். அதனுல் இராமனைப்போல ஓர் உருவைச் செய்து சீதைமுன் கொண்டுவந்து காட்டி, இராமன் இறந்து விட்டானென்றும், இலக்குவன் அனுமன் சுக்கிரீவன் முதலியோரெல்லாம் அஞ்சி ஓடிவிட்டனர் என்றும் கூறினுன். இதற்குச் சான்ருக, இராவணன் விதுயுசுவானைக் கூப்பிட்டு, இராமனது தலை யைக் காட்டச்சொன்னுன். அத்தலையில் இரத்தம் கொட்டிக் கொண்டு இருந்தது. இராவணன் திரும்பவும் சீதையைப் பார்த்து "இதற்குப் பின்னுவது என்னை ஏற்றுக் கொள்ளக் கூடாதா? இறந்தவர்களைப் பற்றி நீ இனிக் கவலைப்படுவது ஏன்?" என்று கூறினுன். அது கேட்டதும், "என்னை அவருடன் வைத்து எரித்துவிடுங்கள், எந்த உலகத்திற்கு அவர் சென்ருலும் நானும் அவருடன் செல்லுவேன்" என்று சீதை கதறினுள். ஆனுல் இராவணன் பதில் கூறுமுன், யுத்தத்தைப்பற்றிச் சில முக்கியமான விஷயங்களைப் பேச வேண்டுமென்று அமைச்சர்கள் அறிவிக்கவே, இராவணன் சென்றுவிட்டான்.

இச் செய்திகள் வான்மீகத்தில் கூறப்படுகின்றனவே யன்றிக் கம்பரில் கூறப்படவில்லை. தூதுசென்ற அங்கத னுடைய நல்லுரைகளைத் தசக்கிரீவன் ஏற்றுக்கொள்ளாமல் போரின் எல்லைக்கே சென்று நின்ருன். அதைக்கேட்டவுடன் வானரர்களும் போருக்கு ஆயத்தமானுர்கள்.

போர் மூண்டவுடன் நகரைக் கைப்பற்றுவதுதான் முதல்வேலை என்று வானர வீரர்கள் எண்ணினர். அதனுல் அவர்கள் அகழிகளை அழித்துவிட்டுத் தலைநகருக்குள் செல்ல முயன்றனர். இதனை அறிந்த இராவணன் நான்கு வாயில்களிலும் சேனைகளை வைத்து அவைகளைப் பலப்

படுத்த எண்ணி வச்சிரமுஷ்டி என்பவனது தலைமையில் வடக்கு வாயிலைக் காவல்புரிய ஒரு பெருஞ்சேனையை அனுப்பினான். அங்கே சுக்ரீவன் தன் வானரப் படையுடன் சென்று அவர்களை வென்றான். இதுபோலவே மற்ற வாயில்களிலும் அரக்கர்களுக்கும் வானர வீரர்களுக்கும் கடும்போர் நடந்தது. நான்கு வாயில்களிலும் அரக்கர்களுக்குத் தோல்வியே உண்டாயின. தோல்விகளால் செவி சுடப்பட்ட இராவணன் பெருமூச்சு எறிந்து இன்னது செய்வது என்று தெரியாது கோபக்கனல் பொங்க நின்றான். இதைக் கம்பர்,

> "கட்ட திந்திரன் வாழ்வைக் கடைமுறை
> பட்டது இங்கோ குரங்கு படுக்க என்று
> இட்ட வெஞ்சொல் எரியினில் என் செவி
> சுட்டது என்னுடை நெஞ்சையும் சுட்டதால்"

என்று கூறுவதால் அறியலாம்.

பிரகத்தன் இறந்துவிட்டான் என்று கேட்டவுடன் தானே யுத்தத்திற்குச் செல்வதென்று இராவணன் முடிவு செய்தான். தக்க பெருந்தானையுடன் போர்க்களத்திற்குள் இராவணன் புகுந்துவிட்டான் என்ற செய்தியை இராமனுக்குத் தூதுவர் கூறினர். இராமனுடைய தோள்கள் பூரித்தன. போர்க்கோலம் பூண்டு இராவணன் நின்ற களத்திற்கு இராமன் வந்தான். இலக்குவன் அவன் நிழல் போல் உடன்வந்து நின்றான். யுத்த சன்னத்தராகக் களம் புகுந்த காளைகள் இருவரையும் இராவணன் கண்டான். இராவணனுடைய நாணோசையைக் கேட்ட வானர வீரர்கள் அஞ்சி ஓடத் தலைப்பட்டனர். அரக்கர்கள் அழிக்கப்பட்டார்கள் என்று கேட்டவுடனே இராவணனுடைய கண்கள் அனற்பிழம்புபோல் சிவந்தன; அதனால், அவன் பார்ப்பவர்களுக்குப் பயங்கரமாகக் காட்சி தந்தான். இராவணனது முழக்கத்துக்குத் தேவர்களும் பிறரும் அஞ்சி நடுங்கினர். ஆனால், மூவர் மட்டும் இவைகளைப் பொருட்படுத்தாமல் அமைதியுடனிருந்தார்கள். ஒருவன் வீடணன்; ஒருவன்

அவனோடுகூட இருந்த இலக்குவன்; மற்றவன் சுக்கிரீவன். இதனை,

“ வீடணன் ஒருவனும் இளைய வீரனும்
கோடணை குரங்கினுக் கரசும் கொள்கையால்
...டினர் நின்றனர் நாலு திக்கினும்
ஓடினர் அல்லவர் ஒளித்த தும்பரே ”

என்று கம்பர் கட்டுரைக்கின்றார்.

இராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் பெரும் போர் மூண்டது. இராவணன்முன் சுக்கிரீவனது திறம் பயனற்றுப் போய்விட்டது. சுக்கிரீவன் சோர்ந்துவிடவே அனுமன் அவனுடைய உதவிக்கு வந்தான். இவன் முதலில் கடும்போர் செய்து, இராவணனுடைய தோள் வலயத்தைத் தட்டிவிட்டு மராமரத்தை எறிந்து இராவணனுடைய சாரதியின் தலையையும் துண்டித்துவிட்டான். ஆயினும், இராவணன் தோள் வலியின்முன் அனுமனுடைய புயவலி நிற்க முடியவில்லை. ஆகவே, அவன் சலித்துவிடக் கண்ட இலக்குவன் போர்க்குத் தயாராகி நாணொலி செய்ய ஆரம்பித்தான். அவனுடைய நாணொலியைக் கேட்டு எல்லோருமே அஞ்சினர்.

இலக்குவன் வீரருள் வீரன். புவனங்கள் பதினான்கையும் பொசுக்கிவிடக் கூடிய பெரும் பலம் படைத்தவன்; அவன் போர்த்திறத்தைக் கண்டு இராவணனும் வியப்புற்று,

“ கானின் அன்று இகல் கரன்படைபடுத்த அக்கரியோன்
தானும் இந்திரன் தன்னையோர் தனுவலம் தன்னால்
வானில் வென்ற என் மதலையும் வரிசிலை பிடித்த
யானும் அல்லவர் யார் உனக்கு எதிர்?”

என்று கூறினான்.

இலக்குவனுக்கும் இராவணனுக்கும் மிக்க கடும்போர் ஏற்பட்டது. இலக்குவன் அரக்கர் பலரை அழித்தான்.

இராவணன், முதலில் இலக்குவன் அனுமன் முதலாயினாரோடு யுத்தம் செய்தான். அவனுடைய புயவலிமை

சிறந்ததனால் முடிவில் இராமனுடன் போர் செய்யுமளவிற்கு அவன் வந்துவிட்டான்.

இலக்குவன்மீது இராவணன் பிரமாத்திரத்தைச் செலுத்த இலக்குவன் அயர்ந்துவிட்டான். அவன் வீழ்ந்த பின் வானரப் படைகளிடத்திலே ஒரு பீதி ஏற்பட்டது. இராவணன் இலக்குவனைத் தூக்கிச்செல்ல வேண்டுமென்று முடிவு செய்தான். ஆனால், அனுமன் விரைந்துவந்து இராவணன் எண்ணத்தில் மண் போட்டுவிட்டு இலக்குவனை இராமன்பால் கொண்டு சேர்த்தான். இச் செய்தியை,

> "எடுக்கலுற்று அவன் மேனியை ஏந்துதற் கேற்ற
> மிடுக்கு இலாமையின் இராவணன் வெய்துயிர்ப் புற்றான்
> இடுக்கில்நின்றஅம் மாருதி புகுந்தெடுத்து ஏந்தித்
> தடுக்கலாததோர் விசையினில் எழுந்து அயல் சார்ந்தான்"

என்று கம்பர் பாடுகின்றார். இலக்குவன் வீழ்ந்து அயர்ந்தமை கண்டதும் இராமன் ஆற்றாமல் மூர்ச்சித்து வீழ்ந்தான்.

## 45. மறத்துக்கும் அன்பே துணை.

இலக்குவன் மூர்ச்சை அடைந்து விட்டான்; இராமனுக்கு உற்ற துணைவனாக நின்று இன்னல் வந்த போதெல்லாம் பெருத்த உதவியாயிருந்தவன் அவன். அவன் வீழ்ந்துவிட்டான் என்று கேட்டவுடனேயே, வானர வீரர்கள் கலக்கமடைந்தனர். இராமனும் அயர்ந்துவிட்டான்.

இராம ராவணப் போரில் விளங்காத புதிர் ஒன்று உள்ளது: இராவணன் மாறுவேடத்துடன் சீதையைக் கவர்ந்து சென்றுவிட்டான்; இராமனும் இலக்குவனும் சீதையைத் தேடிக்கொண்டே செல்லுகின்றவர், சுக்கிரீவன் அனுமன் என்போருடைய நட்பைப் பெற்று வாலியை வதம் செய்கின்றனர். சீதையை இழந்த செய்தியை இராமன் தன்னிடத்தில் ஆராத் காதல் கொண்ட பரதனுக்கோ சீதையின் தந்தையான சனகனுக்கோ தெரிவித்ததாகத் தெரியவில்லை. கங்கைக் கரையிலே கண்ணிமை கொட்டாமல் காலமெல்லாம் இராமன் வருவானென்று காத்திருக்கின்ற குகனுக்கும் சீதையைப் பற்றிய செய்தி தெரிவிக்கப்படவில்லை. இராவணன் தென் திசையிலே சீதையைத் தூக்கிக்கொண்டு சென்றுவிட்டானென்று அறிந்தபின்பும், எல்லாவிடங்களுக்கும் ஆட்களை அனுப்பித்தேடிய இராமன், பரதனுக்கும் சனகனுக்கும் குகனுக்கும் இச்செய்தியை அறிவிக்காமலிருந்த மர்மம் இன்றளவும் விளங்காத புதிராகவே உள்ளது. இராமனுக்குப் பட்டம் சூட்டி மகிழ நினைத்த தசரதன் பரதனுக்கும் சனகனுக்கும் ஏன் ஓலை அனுப்பவில்லை என்பதற்காகவாவது காரணம் வான்மீகியார் கூறுகிறார். ஆனால் அவரும் சக்கரவர்த்தித் திருமகனான இராமன் ஏன் பரதனுக்குச் செய்தி அனுப்பவில்லை என்பதற்குள்ள காரணத்தை எந்த வகையிலும் கூறவில்லை.

கோதாவிரிக் கரையிலிருந்து தெற்கே வந்து வாலியை வதம் செய்த பின்னாவது வானரதூதரை அயோத்திக்கும்

மிதிலைக்கும் கங்கைக் கரைக்கும் அனுப்பியிருக்கலாம். இராமன் இதைச் செய்யவில்லை. தேவர்களுக்காக அசுரர்களைப் பகைத்துக்கொண்ட இராமனை இந்திரன் கங்கை நதி தீரத்திலே வந்திருந்த போதும் சந்திக்க விரும்பவில்லை. பதின்மூன்று ஆண்டுகளுக்குப்பின் இராமஇலக்குவர்களுக்கு உதவவும் அவன் முன்வரவில்லை. இவைகளை எல்லாம் நோக்கும் போது, வான்மீகி இராமகாதையினுல் பல கட்டங்களில் நேர்ந்துள்ள சிக்கல்களை நன்ருக அறிந்துகொள்ளவில்லை என்றுதான் தோன்றுகிறது. நாரதரும் பிரமனும் கூறியபடி தன் கவிதா சக்தி ஒன்றையே கொண்டு எழுதினர் வான்மீகி என்றுதான் தெரிகிறது. அவர் இன்னும் விரிவாகச் சிந்தித்துக் கூறியிருப்பாரேயாளுல், இராமன் வாழ்ந்தது உண்மையா இல்லையா என்ற ஐயமும் வாதமும் அறிஞர்களிடையே ஏற்பட இடமிருந்திருக்காது. இது நிற்க,

இலக்குவன் இராமனுடன் கானகம் செல்லச் சுமித்திரையிடம் விடைபெற்றபோது, அவள் அவன்பால், "மைந்த, இராமன் உனக்கு அண்ணன் மட்டுமல்ல; தலைவனுங்கூட. அவனுடைய தம்பி என்று கருதிச் செல்லாமல் அடிமை என்ற கருத்துடனே நீ செல்ல வேண்டும்; அவனுக்கு ஒரு சிறுஇடையூறு நேருமாயினும் உன்னுடைய உயிரைக்கொடுத்துக் காக்கவேண்டும்" என்று கூறினுள். அக்கட்டளையின்படியே இலக்குவன் இராமன் உயிரைக் காப்பது குறித்துப் பிரமாத்திரத்தை ஏற்று மூர்ச்சையடைந்தான். இலக்குவன் இறந்துவிட்டானென்று இராமனும் எண்ணினுன்.

இங்குக் கம்பர் கூருத ஒன்றை வான்மீகி கூறுகின்ருர். அது பின்வருமாறு:-

இராமன் சிறந்த வீரன் என்பதில் ஐயமில்லை. ஆனுல் அவன் யார் பேரிலாவது பற்றுக்கொண்டு அந்த நினைவால் வாடும்போது அவனை அறியாமலே தன் பலத்தை மறந்து விடுகிருன். நாகபாசத்தால் கட்டுண்ட இலக்குவனைக் கண்டவுடன் இராமன் மனம் உடைந்துவிட்டான். சுக்கிரீவனை நோக்கி, " சீதைக்காக ஏற்பட்ட போரில் இலக்குவன் இறந்துவிட்டான். உடன்பிறந்த என் தம்பி

காலமெல்லாம் கண் விழித்துக் காவல் செய்த கடமையின் சிகரம்; அவன் இறந்தபின் உயிர்வாழ எனக்கு விருப்ப மில்லை. சுக்கிரீவனே, நீ செய்த வீரச் செயல்களெல்லாம் விழலுக்கு இறைத்த நீராகிவிட்டன. ஆகையால் நீ கிட்கிந்தைக்கே செல்" என்றான்.

அந்நிலையில் வீடணன் இராம இலக்குவர்களின் நிலை யைக் கண்டு வருந்தச் சுக்கிரீவன் அவனைத் தேற்றினான். இராமன் ஏன் இங்கே இவ்வாறு மனம் குழைந்துபோனான் என்று எல்லோரும் பிரமித்து மரம்போல் செயலற்று இருக்கையில் இராவணன் சீதையை விமானத்தில் ஏற்றி அவர்களுடைய கையற்ற நிலையைக்காணச் செய்தான். அவளும் ஆறாத் துயரமடைந்தாள். திரிசடை அவளைத் தேற்றினாள். அப்பொழுது கருடன் வரவும் இலக்குவன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்.

இராம இலக்குவர்கள் திரும்பவும் போர்க்குரிய ஏற் பாடுகள் செய்யலாயினர். அதை அறிந்ததும் இராவணன் திரும்பவும் போருக்குத் தயாரானான்.

இலக்குவன் தானாகவே தேறினான் என்றும், இராமன் கலக்கமடைந்தானே யன்றிச் சோர்ந்துவிடவில்லை என்றும் கம்பர் கூறுகின்றார்.

இராமனுக்குச் சிறிது நேரத்தில் தெளிவு ஏற்பட்டது. அனுமன் கூறியதற்கு இணங்கி அவன் தோளில் ஏறிக் கொண்டு இராமன் இராவணனுடன் யுத்தம் செய்யப் புறப்பட்டான். இந்தக் காட்சியைக் கண்டு கருடாழ்வானும் நாணினான்; ஆதிசேடன் நடுக்கமுற்றான். இராமனுக்கும் இராவணனுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. இருவர் அம்பு களும் எரிகனலைக் கக்கின.

இராமனுடைய வில்லின் நாணோசையைக் கேட்டு எல்லோருமே கலங்கினர். அரக்கர் அனைவரும் போரில் அடிபட்டு வீழ்ந்தனர். கடைசியில் இராவணன் ஒருவனே எஞ்சினான். அவனுடைய பல்வேறு வகைப் படைகளையும் இராமன் அழித்துவிட்டான். மகுடம் முதல் யாவையும்

இழந்த இராவணன் நாணி வெறுங்கையனாய் நிலத்தில் நின்றான்.

இந்நிலையில் இராமன் அவனை நோக்கி "அறத்தினாலன்றி வெறும் மறம் ஒன்றையே துணையாகக் கொண்டு போர் செய்தால் வெற்றி கிடைக்காது. என் கையால் உன்னைக் கொன்றுவிடலாம். ஆனால் உன் தனிமையைக் கண்டு இன்று உன்னை விட்டுவிடுகிறேன். நீயே உன்னுடைய பெருங்குலத்தையும், சுற்றத்தையும் அழிக்கின்றாய். சிறையிலே வைத்திருக்கின்ற சீதையை விட்டுவிடு. பின்னர் வீடணனுக்கு அரசைக் கொடுத்துவிட்டு அவனுடன் ஒன்றி வாழ்; 'வீழ்ந்தவர் வீறு பெறுவர்; வெற்றி பெற்றவர் வீழ்ச்சியடைவர்' என்று எண்ணுவாயானால் நாளை போருக்கு வா" என்றான். இதனைக் கம்பர்,

> "ஆளையா உனக்கு அமைந்தன? மாருதம் அறைந்த
> பூளையாயின கண்டனை இன்று போய்ப் போரற்கு
> நாளை வா என நல்கினன், நாகிளங் கமுகின்
> வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்"

என்று கூறுகின்றார்.

ஒருகால் இராவணனுடன் உடன்பாடு ஏற்பட்டு இலங்கை அரசை இராவணனுக்கே கொடுத்துவிட வேண்டுமென்ற நிலை ஏற்படுமாயின் இராமன் வீடணனுக்குக் கொடுத்த வாக்குத் தவறிவிடும். இராவணன் உடன்பாட்டிற்கு வருவானேயானால், கோசலை நாட்டைத் தந்துவிட்டுச் சீதையைத் திரும்பப் பெற்றுக்கொண்டு செல்வது இராமன் கருத்து என்ற ஒரு நயம் கோசலநாடு உடைய வள்ளல் என்பதனால் பெறப்படுகிறது.

---

"'குரங்குக் கைம்மாலை" போல' உன்னுடைய சேனைகள் அழிந்துவிட்டன என்பதை உன் கண்ணாலேயே கண்டுவிட்டாய்; இனியும் பொருவது உன் கருத்தாயின் நாளை வா," என்று மிக்க இளமையுள்ள கமுகு மரத்தின் மீது துள்ளிப் பாயும் வாளைமீன்களையுடைய நீர்வளமும், நிலவளமும் கொண்ட கோசல நாட்டு உரிமையாளனும் வள்ளலுமான இராமன் இராவணனுக்கு உரைத்தான்.

வீரர்களை வீரர்களே போற்றுகின்ற காட்சிகளை நாம் வரலாற்று ஏடுகளில் காண்கிறோம்.

உலகமெல்லாம் வெற்றிக்கொடி நாட்டிய கிரேக்க மன்னன் அலெக்சாந்தர், புருஷோத்தமனை வென்று விட்டான். என்றாலும், இந்திய மன்னனின் வீரம் கிரேக்க மன்னன் மனதைக் கவர்ந்துவிட்டது. அவனைத்தோற்றவன் என்று கருதவும் அவன் உள்ளம் ஒப்பவில்லை. அவன், "மன்னவனே, நீ எவ்வாறு நடத்தப்பட வேண்டுமென்று நினைக்கிறாய்" என்று கேட்டான். "மன்னனாகவே" என்று பெருமிதமான பதில் வந்தது. உடனே, தான்வென்ற சில நாடுகளையும் அவனுக்குத் தந்து மன்னனாக்கிவிட்டுச் சென்றான் என்று வரலாறு கூறுகின்றதன்றோ! அந்த நிலை இராவணன் முன் தோன்றியிருக்கிறது.

இராவணன் இராமனுக்கு என்ன விடை கூறப் போகிறான்?

## 46. பண்பட்ட உள்ளம் புண்பட்டது.

முதல்நாட் போரில் முழுத் தோல்வி அடைந்த இராவணன் மறுநாள் போரிடவேண்டுமென்று திட்டமிட்டுச் சேனையைத் திரட்டும்படி அவர்கட்குக் கூறிவிட்டு, அந்தப்புரத்தில் மலர் மெத்தையிலே படுக்கலானான். அந்த மலர் மெத்தை அவனுக்கு மனவமைதியைத் தரவில்லை. தான் கொண்ட எண்ணங்கள் எல்லாம் வெறும் பேராசைக் கோட்டையாகிவிடுமோ என அவன் மனம் வருந்தினான்.

தேவர்களையும் மக்களையும் வென்று தன்னுடைய தோள்வலிமையைக் காட்டியவன் இராவணன். தன்னால் முன்னர் வெல்லப்பட்ட பகைவர்களெல்லாம் தன் தோல்வி கண்டு ஏளனமாக நகைப்பார்களே என்று கூட அவன் வருந்தவில்லை; இனித் தன் வாழ்வில் தான் பெறவேண்டியது சீதையின் அன்பு ஒன்றே என்ற ஒரே குறிக்கோள் கொண்டானாதலால், அதற்கு ஏற்ப மிதிலை வேந்தன் மகளான சீதை தன்னை வீரனாக மதிக்கமாட்டாளே என்றுதான் அவன் மிகவும் வருந்தினான்.

உலக மக்களும் தேவர்களும் இராவணனது பெருமையை அறிந்தவர்கள். ஆனால் சீதை இதுகாறும் இராவணனுடைய பெருமையை அறிய வாய்ப்பு ஏற்படவில்லை. அவள் இராமனுக்கு இணையான வீரன் இவ்வுலகில் எங்கணும் இல்லை என்று இறுமாந்திருந்தாள். தன் கணவனுடைய புயவலியையும், மைத்துனனின் வீரத்தையும் கண்டு அஞ்சியே இராவணன் தன்னைக் கள்வன்போல் கவர்ந்து விட்டான் என்று அவள் எண்ணியிருந்தாள். அதனால் இராமனிடம் முதற்போரிலே தோற்ற இராவணன் சீதையின் எள்ளல் நகைக்கு அஞ்சினதிலே வியப்பொன்றுமில்லை. இதனைக் கம்பர்,

"வானகும் மண்ணு மெல்லாம்
நகும் நெடுவயிரத் தோளான்
நானகு பகைவரெல்லாம்
நகுவரென்று அதற்கு நாணுன்
வேல்நகு நெடுங்கண் செவ்வாய்
மெல்லியல் மிதிலை வந்த
சானகி நகுவள் என்றே
நாணத்தால் சாம்புகின்றான்"

என்று அழகுறக் கூறுகின்றார்.

இராவணன் மாலியவானிடம் தனக்கு நேர்ந்த தோல்வியைக் குறிப்பிட்டு மானிடர்களால் தனக்குக் கேவலம் ஏற்பட்டுவிட்டதே என மிகவும் மனம் வருந்திக் கூறினான்.

இலக்குவனுடைய வலிமை மிகவும் பெரிது என இராமனே பல முறை கூறிவருவதை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஒருகால் அது தம்பியின்பால் அவன் வைத்த தனிப்பெருங் காதலினால் என்றுகூட ஐயப்பட இடமுண்டு. ஆனால் இராவணனே அவனது வீரத்தை வாயார மாலியவானிடத்தில் புகழ்ந்து கூறுவது மிகவும் சிறப்பாக இருக்கிறது.

சீதையால் காமக் களிமயக்குற்ற இராவணன் உள்ளத்திலே சிறிது தெளிவு ஏற்படுவதை இங்குக் காண்கிறோம். இந்தத் தெளிவின் முடிவு என்னவாகும் என்பதை ஊன்றிக் கவனித்தால் இராவணன் வீரமும் தூய்மையும் எய்துவது முடிவில் தெரியும்.

இலக்குவனது வீரம் மட்டும் இராவணன் உள்ளத்தைக் கவரவில்லை. இலக்குவனுடைய உரை, தன் அண்ணன் இராமன் வீரத்தையும் தசக்கிரீவனுடைய தடுமாறும் மனத்தையும் தடுத்து அவன் உள்ளத்தைத் திருத்தி விடுமோ என்று ஐயுறும் வண்ணம் இராவணன் நெஞ்சிலே குடி புகுந்துவிட்டது. அமைச்சரும், அவையோரும் இராவணன் மனமாற்றத்தைக் கண்டு வியந்தனர். அரக்கர் தலைவன் தன் பாட்டனிடம் —"தாத்தா, இராமன் வீரத்தை என்ன

வென்று புகழ்வது! இளமையில் அவன் கூனியின் கூனல் முதுகின்மேல் களிமண் உண்டைகளை எய்து விளையாடியது போலவே யுத்த களத்திலே போரையும் விளையாட்டாகச் செய்துவிட்டான். விளையாட்டாகவே பல ஆயிரக்கணக் கான யுத்த வீரர்களைக் கொன்று குவித்துவிட்டான். ஊழிக் கால வெள்ளத்தின் கொடுமைகளைக் கேள்விப்பட்டிருக் கிறோம். அந்த ஊழிக் காலம் ஓய்ந்தாலும் ஓயும், இராமன் வில்லிலிருந்து வெளிவரும் அம்புகள் ஓய்வதில்லை. ஊழிக் காலத்தில் ஏற்படும் அக்கினியையும் வென்றுவிடக்கூடிய அரும்படைகள் அவை. ஈரேழு புவனங்களையும், மேரு மலையையும், கடலையும் எல்லாம் ஊடுருவிப் பாய வல்ல படைவலி உடையவன் அந்த இராமன். அவனுடைய அம்பு களை எதற்கு ஒப்பிட்டுக் கூறுவேன்! கவிஞர்களுடைய நாவிலே எழுகின்ற சிறப்புடைய சொற்களைப் போலவும் இசையைப் போலவும் வனப்பு வாய்ந்துள்ளன'' என்று சொன்னான்.

கருமேகங்களுக்கிடையிலே, பளிச்சென்று தோன்றி மறையும் மின்னல்களைப் போல. இராவணனது காமாந்த காரம் நிறைந்த நெஞ்சிலே, அறிவொளிகள் மின்னலைப் போலத் தோன்றித் தோன்றி மறைந்தன. இராமன் வீரத்தைப் புகழ்வதோடு அவனுடைய படைகளைச் சிறந்த கவிஞருடைய அருட்பாக்களுக்கு ஒப்பாகவும் இசைக்கு ஒப்பாகவும் அவன் கூறுவதிலும் ஒரு நயத்தைக் காணலாம். இசையும், சிறந்த கவிஞர்களுடைய பாக்களும், துன்பம் நேர்ந்த காலத்தும், அறவொளி மங்கி அறம் தாழ்ந்த காலத் தும் உற்ற துணையாக நின்று ஊக்குவிக்கும் பொருள்கள். இறைவனைக் காணும் காட்சி பெற்றவர்களும் இசையையும் அருட்பாக்களையுமே விரும்புவது இயற்கையாக அமைந்து விடுவது இந்தக் காரணத்தினால்தான். அவை இராவணன் உள்ளத்தையும் தூய்மைப் படுத்திவருவதை அவனே உணர்ந்தானதலால், அவன் இராமனுடைய படைகளை இசைக்கும் அருட்பாக்களுக்கும் ஒப்பிட்டுக் கூறினான்.

இராவணனுடைய பண்பட்ட உள்ளத்திலே அமைதி அறவே மறைந்துவிட்டது. இராமனது வீரமும் சீதையின் எழிலும் மாறி மாறிக் காட்சி தந்தன. இதுவா, அதுவா என்ற எண்ண மேலீட்டால், இராவணன் திக்குத்தெரியாத காட்டிலே அலையும் அபலைபோல் ஆனான். இவனுக்கு அமைச்சர்கள் எவ்வழி காட்டப் போகிறார்கள் என்று மாலிய வானும் மூக்கின்மேல் விரல்வைத்துக்கொண்டு, இராவணன் மேலும் என்ன கூறப்போகிறான் என்பதைக் கருத்தோடு கேட்கலானான்.

"தாத்தா, இந்திரனுடைய வச்சிராயுதத்தை நான் கண் டிருக்கிறேன். பரமசிவனது மூவிலைச் சூலாயுதத்தையும், திருமாலின் சக்கராயுதத்தையும் அறிவேன். அவற்றிற்கெல் லாம் அஞ்சாத என் நெஞ்சம் இராமனது படைவலிமையைக் கண்டு அஞ்சுகின்றதே! மயானத்தே பேய்க் கூட்டத்தோடு ஆடுகின்ற சிவபெருமானுடைய எட்டுத்தோள்களும், இந்திர னுடைய இரண்டு வலியதோள்களும், பூமண்டலத்தையே வாயிலிட்டு உண்ட திருமாலின் ஆயிரம் தோள்களும் இராம னுடைய சுண்டுவிரலுக்கு இணையாகா.

"சீதை என்னை ஏன் ஏறெடுத்தும் பார்க்கவில்லை என் பதை இப்பொழுதுதான் அறிந்துகொண்டேன். இராமன் மேனி அழகு ஆடவரையும் மனம் கவர்க்கும் தன்மையுடை யது. அவனுடைய மேனியழகிலே உள்ளத்தைப் பறி கொடுத்த எந்தப் பெண்ணும் வேறு யாரையும் திரும்பிக் கூடப் பார்க்கமாட்டாள். குணத்திலும், அழகிலும், வீரத் திலும் சிறந்த இராமனையன்றி வேறு யாரையும் சீதை இனி நினைக்கமாட்டாள். நான் அழிந்துபோவது நிச்சயம். தாத்தா, நாசம் வந்துற்றபோதும் நல்ல பகைவனையே பெற்று விட்டேன் என்ற எண்ணத்திலே என் உள்ளமும் தோள்களும் பூரிப்படைகின்றன" என்று இராவணன் எடுத்துரைத்தான்.

இராமனுடைய தோள்வலியிலும் அவன் மேனி அழ கிலும் தன் உள்ளத்தைப் பறிகொடுத்த இராவணன், தன் னுடைய நாசகாலத்தில்கூட, நல்ல ஒரு பகைவனைத் தான் பெற்று விட்டதாகவே நினைக்கின்றான். சிவன், திருமால்,

பிரமன் முதலானவர்களின் கோபத்தினுல் தான் நாசமடை வதைக் காட்டிலும் நல்ல வீரனுடன் போர் செய்து மடிவதே நலமெனக் கருதுகிருன். மாலியவான், இராவணன் உள்ளம் தூய்மை அடைந்து வருகிறது என்று கண்டு, எவ்வாரு யினும் சீதைபால் உண்டான அவனுடைய தீய காமவேட் கையை அகற்றிவிட்டு, அரக்கர் கூட்டத்தையும் இலங்கை அரசையும் காக்கச் செய்யவேண்டுமென்று எண்ணினுன்.

மாலியவான் இராவணனுக்குக் கூறிய புத்திமதிகளைக் கேட்ட மகோதரன் வெகுண்டு எழுந்தான். "வெற்றியும் தோல்வியும் ஒரு நிலையில் இருப்பனவல்ல. நீங்கள் பல உலகங்களையும் வென்றவர்கள். கயிலைமலையைத் தூக்கிய பெருமை உங்களுடையது. தேவியை விடுகின்ற பேச்சை விட்டுவிடுங்கள். இனிமேல் பேசுவதானுல் ஆவியை விடு கின்ற பேச்சாக இருக்கவேண்டும். தம்பியுடையான் பகைக் கஞ்சான் என்று கூறும் உலக வழக்கை மறந்து விட்டீர்களா? கும்பகருணனை அனுப்பிப் போரை வெற்றியுடன் முடியுங் கள்!" என்று மகோதரன் இராவணனைப் பார்த்துக் கூறினுன். இராவணனும் அதற்கு உடன்பட்டுக் கும்பகருணனைக் கூட்டி வரும்படி கூறினுன்.

# 47. உறங்கும் தம்பி

கும்பகருணன் இராவணனுடைய தம்பி; வீடணனுக்கு மூத்தோன். இவன் சாசுவதமாக இருக்கவேண்டுமென்று வரம்பெறப் போனதாகவும் வாய்குழறியதால் உறக்கத்தை வரமாகப் பெற்றதாகவும் வரலாறு கூறப்படுகிறது. ஆனால் ஒருவன் ஆறுமாத காலம் தூங்குவான் என்பது இயற்கைக்குப் பொருந்தாத ஒன்றாகும். நாம் முன்னரே கும்பகருணனைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோம். சீதையை இலங்கைக்குக் கொண்டுவந்ததில் அவன் இராவணன்பால் வெறுப்புக் கொண்டவன். வீடணனைப்போல், அண்ணனுடன் அத்துணை வெறுப்புக் கொள்ளவில்லையாயினும், தன் அண்ணனை விட்டு நீங்கி மாற்றாரோடு சேர்ந்துவிடும் அளவுக்கு இடம் கொள்ளவில்லை அவன் தூய உள்ளம். கதைக்குள் நோக்கும்போது இராவணன் செயலில் வெறுப்புக்கொண்ட அவன், ஆறு மாதங்கள் போரிலே பங்கு கொள்ள விரும்பாதவனாய் ஒதுங்கி நின்றுவிட்டான். இதைத்தான் நாரதமுனிவன் தன் கற்பனா சக்தியால் அவன் உறங்கினான் என்று கூறியிருக்கவேண்டும். அண்ணன் போரிலே தன் உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் வேளையில் உண்டு உடுத்து உறங்கிக்கொண்டிருந்த கும்பகருணனைக் கண்டவர்கள் அவனைச் சோம்பேறி என்றும், தூங்குமூஞ்சி என்றுமே கருதியிருக்க வேண்டும்; ஆனால் அவன் வெளிப்பார்வைக்கு அவ்வாறு கூறப்பட்டானாயினும் அவன் உள்ளத்திலே ஒரு பெரும் போர் நடந்துகொண்டுதான் இருந்தது. அதை உலகம் நன்கு அறியவில்லை.

சானகியின் பெருந்துயரம் தணிய வேண்டுமானால், அண்ணனுக்கு இன்னல்கள் பல பெருகித்தானாக வேண்டும். தானே திருந்துவதைத் தவிர வேறு யாராலும் திருத்த முடியாத வகையிலே இராவணனது செருக்கும் செருவலியும் அமைந்துவிட்டன. கும்பகருணனுடைய கூரிய மொழிகள்

அவன் செவியிலே ஏறவில்லை. அண்ணனுடைய உள்ளம் பண்படவேண்டுமென்ற எண்ணத்திலே ஒதுங்கி நின்ற கும்பகருணனை இராவணனும் வற்புறுத்தவில்லை. ஆயினும், தனக்குத் தோல்வி தொடர்ந்து வருவதைக் கண்ட பின்பே ஒதுங்கியிருந்து உறங்குகின்ற கும்பகருணனை எழுப்பி வருமாறு கூறுகிறான்.

கும்பகருணன் தூங்குவதாகவே கற்பனை செய்யப்பட்டதனால், அவனை எழுப்புவதற்குப் பல மல்லர்கள் அனுப்பப்பட்டார்கள். அவன் ஒருவாறு சிரமத்துடன் எழுந்து, அரக்கர் கூட்டத்தை நோக்கி, "போர் வந்துவிட்டதா! தூய கற்பினளான சீதையின் துயரம் இன்னும் தீரவில்லையா?" என்று கேட்டான். முதற் போரிலே இராவணன் தோற்ற செய்தியைக்கூறி அவனைப் போருக்கு ஆயத்தமாகும்படி கூறினர். அவன் மதுவும் மாமிசமும் உண்டபின் எழுந்தான். அவன் எழுந்திருந்ததைத் கண்டவுடன் மும்மூர்த்திகளுமே நடுங்கும்படி அவனது வீராவேசமும் கம்பீர நடையும் இருந்தன.

கும்பகருணன் இராவணனைக்கண்டு வணங்கி நின்றான். உயர்ந்த குன்று ஒன்று மிக நீண்ட கால்களை உடைய வேறொரு குன்றைத் தழுவினாற்போல, இராவணன் கும்பகருணனைத் தழுவினான். பின்னர் அவன் கும்பகருணனுக்கு வீரப்பட்டம்கட்டி நெற்றியில் திலகம் வைத்தான். கும்பகருணன் போரை விரும்பியவனல்லன், தன் அண்ணன் தன்னைப் போர்க்கோலம் கொள்ளுமாறு கூறியது கண்டு, தான் ஏன் போருக்குச் செல்லவேண்டுமென்று இராவணனைக் கேட்டான். "வானரப் படைகள் நம்முடைய நாட்டிலே வந்து வெற்றி கண்டுவிட்டன. எவரும் பெறாத வெற்றியை அவர்கள் பெற்றுவிட்டார்கள். நீயாவது சென்று வெற்றியுடன் திரும்புவாயாக" என்றான்.

கும்பகருணன் பேசலுற்று "அண்ணா, கற்புடைய பெண்ணான சானகியின் துயரம் தீரும் என்று எண்ணினேன். ஆனால் நீங்கள் அவளை விட்டுவிடாமல் போரையே விரும்பிப் பெற்றுவிட்டீர்கள்; நம்முடைய புகழ் சாதாரணமானதன்று.

வானுகத்திலும் இவ்வுகத்திலும் நமது புகழ் ஓங்கச் செய்த வர்கள் நீங்கள். அப்புகழை எல்லாம் உங்கள் கையாலேயே அழிக்க முற்பட்டு விட்டீர்கள். அந்த வான்புகழ் மறையும் காலம் வந்துவிட்டதோ? நமக்கு அழிவு காலந்தான் கிட்டி விட்டதோ? விதியின் வலிமையால்தான் நாம் இந்த வேத னையை அடைகிறோம். ஆரிய! உலகினை நீங்கள் பேர்த்து எடுத்துவிடலாம். இவ்வுலகம் எல்லாவற்றிற்கும் ஓரே வேலியை நீங்கள் சமைத்து விடலாம். ஆனால் சீதையை அடைந்து விடலாம் என்றும் இராமனை வென்றுவிடலாம் என்றும் மட்டும் வீண் கனவு காணாதீர்கள்," என்றான்.

கும்பகருணனுடைய சொற்கள் இராவணனுக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. "பேசுவது மானம், இடை பேணு வது காமம்; கூசுவது மானிடரை; நன்று, நன்று நம் கொற்றம்" என்று பலமுறை கும்பகருணன் கூறிய வார்த் தைகள் காம வயப்பட்ட அவனுடைய செவிகளிலே ஏற வில்லை. மகோதரனுடைய கெடுமதியும் இப்பொழுது சேர்ந்து விட்டது. அவனுடைய உள்ளத் தெளிவும் மறையத் தொடங் கியது. அவன் கும்பகருணனைப் பார்த்து "தம்பீ நீ வீரனென்று எண்ணியிருந்தேன்; போர் புரிவதற்கு உள்ள வல்லமையை இழந்துவிட்டாய். மதுவும் மாமிசமும் உண்டு இரவு பகலாய் உறங்கு; போ. கேவலம் மனிதர்கள் இருவர்; அவர்களைக் கும்பிட்டு வாழும் உன்னைக் கண்டாலே பிடிக்க வில்லை. இரத்தத்தாலும், சதைகளாலும் ஏற்பட்ட இந்த உடம்பை ஊன்பிண்டமாகவே கருதும்படி செய்துவிட்டாய். வீர ரத்தம் ஓடாத உனக்கும் உன் தம்பிக்கும்தான் பகை வரை அண்டிப் பிழைக்கின்ற வாழ்வு தேவை; எனக்கு வேண்டியதில்லை. எழுந்துபோ! நானே சென்று போரிலே வெற்றி தோல்வியைப் பார்த்துவிடுகிறேன்" என்று கூறி விட்டுத் தேரையும் ஆயுதங்களையும் கொண்டு வரும்படி கூறி எழுந்தான்.

கும்பகருணன் கோழையுமல்ல, தூங்குமூஞ்சியுமல்ல. துயிலுபவன் பாதியில் எழுந்தபோது தோன்றும் கலக்க நிகழ்ச்சிகள் கும்பகருணனிடம் காணப்படவில்லை. அஞ்சு

வது அஞ்சும் அறிவுடையனாகவே காணப்படுகிறான். அரக்கர் இனம் அழிவதை அவன் உள்ளம் விரும்பாததனால்தான் போரிலே அது பங்குகொள்ள மறுக்கின்றது, வீரமுடைய அவன் நெஞ்சம் இராவணனுடைய சுடு சொற்களைக் கேட்டு வெதும்புகிறது.

இராவணன், தேவர்களுக்கும் பிறருக்கும் சிம்ம சொப்பனமாக இருந்தபோதிலும், அவனுடைய மக்களுக்கும் சுற்றத்தாருக்கும் மிகவும் நல்லவனாகவே காட்சி அளித்தான். தன்னுடைய சுற்றமும் துணையும் தனக்கு விரோதமாக இருக்கிறார்கள் என்று தெரிந்தும் அவர்களைத் துன்புறுத்தாமல், நல்ல முறையிலே அவர்களை நடத்திய செய்கையால் அவர்களுடைய உள்ளங்களிலே சிறந்த இடம் பெற்று விட்டான்.

கும்பகருணன் போருக்குச் சென்றால் வெற்றியுடன் திரும்புவது முடியாத காரியம் என்பதை உணர்ந்தான். என்றாலும், பின்பு, இராவணனுடைய சகோதர வாஞ்சை அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்துவிடுகிறது. தம்பியிருக்க அண்ணன் போர்க்களத்திலே மடிந்துகிடப்பதைக் காண அவன் விரும்பவில்லை. எவ்வளவு கெட்டவனானாலும் அவன் தனக்குச் செய்த உதவிகளை மறந்தால், செய்ந்நன்றி மறந்தவன் என்று ஊரார் பழிப்பர்; சான்றோர் அருவருப்பர் எனக் கும்பகருணன் அஞ்சினான். இந்த எண்ணங்கள் மேலோங்கவே அவன் போருக்குச் சென்று மடிவதே மேல் என்ற முடிவிற்கு வந்தான். தன் அண்ணனிடம் விடை பெற்றுப் போர்க்களத்திற்குச் சென்றான்.

தேர்மேலேறிச் சென்ற கும்பகருணனைக் கண்டவர்கள் யாவரும் அஞ்சினர். மூன்று உலகங்களையும் வெல்லும் ஆற்றல் படைத்த ஒரு குன்று மிகவும் வேகமாக வருவதாகவே கருதிக் கலங்கினர். இராமனும் கும்பகருணனுடைய தேரைக் கண்டான். வருபவன் இராவணன் அல்லவென்பதையும் தெளிந்தான். "இவன் யார்?" என்று வீடணனைக் கேட்டான். அவன் "அண்ணலே, இவன்

இராவணனுடைய தம்பி; எனக்கு முன் பிறந்தவன்; தருமத்தின் திரு உருவம்; சிவபெருமான் அருள் பெற்றவன்; தேவர்களும் அஞ்சும் வலிமை பெற்றவன்; சிறந்த தோள் வலிமையும் உறுதிபடைத்த நெஞ்சமும் உடைய கும்பகருணன். சீதையை இராவணன் அடைய வேண்டுமென்ற எண்ணம் சிறிதுமில்லாதவன் என்பதைத் தெரிந்துகொள்வாயாக. எத்தனையோ முறையில் இராவணனைச் சீதைபால் கொண்ட தீய காமத்தை விட்டுவிடும்படியாக மன்றாடினான். ஒத்துழையா இயக்கமும் நடத்தினான்; ஆனால் இராவணன் செவியிலே அவனுடைய சொற்கள் ஏறவில்லை. நற்பண்புடைய இவனை இராவணன் போருக்கு அனுப்பிவிட்டான். உப்பிட்டவரை உள்ளளவும் நினை என்றபடி செஞ்சோற்றுக் கடன் தீர்க்கவே நம்முன் வந்திருக்கிறான்,'' என்று கூறினான்.

வீடணன் தன் அண்ணன் கும்பகருணன் எப்படிப் பட்டவன் என்பதை இராமனுக்குக் கூறியதோடல்லாமல் சீதையின்பால் அவனுக்குள்ள அனுதாபத்தையும் தெரிவித்துவிடுகிறான்.

சுக்கிரீவன், பரதனைப்போல் சகோதர வாஞ்சையுடையனல்லன்; அவன் உள்ளம் எப்பொழுதுமே தன்னைப் போலவே பிறரும் இராமன் பக்கலில் சேர்வார்கள் என்று எண்ணியது. பரதனைப்போல அன்புள்ளம் படைத்தவனல்லனாதலால் அவன் தன்னைப் பரதனைப் போலுள்ளவன் என்று கூறவும் நாணினான். ஆகையால் இராமனிடத்திலே தன்னைக்குகனுக்கும் சடாயுவுக்கும் ஒப்புக்காட்டினானேயன்றி, பரதனைப்பற்றி ஒரு வார்த்தைகூடக் கூறவில்லை. நாட்டிலே குகனார் செய்ததையும் காட்டிலே கழுவின் வேந்தன் செய்ததையும் போல நான் செய்ய முடியவில்லையே'' என அவன் வருந்தியதை முன்னர்க் கண்டோம்.

இத்தகைய சுக்கிரீவனுடைய மனதிலே வீடணன் கூறியதைக் கேட்டதும் ஓர் எண்ணம் உதித்தது: "ஏன் இவனையும் நம்முடன் சேர்த்துக்கொள்ளக்கூடாது?'' என்று அவன் எண்ணினான். தன் எண்ணத்தையும் இராமனிடம் கூறினான். இராமனுக்கும் இவ்வுரை நலமெனவேபட்டது.

உடனே யார் போய்க் கும்பகருணனிடம் இதைச் சொல்லு வது என்று ஆலோசிக்கலானுன். வீடணன் தானே சென்று கும்பகருணன் கருத்தை அறிந்துவருவதாகக் கூறினுன். இராமனும் உடன்படவே கும்பகருணனுடன் வந்த சேனேக் கடலைக் கடந்து வீடணன் கும்பகருணனேயடைந்து வணங் கினுன். வந்த தம்பியைக் கும்பகருணன் மார்போடு தழுவினுன். வீடணனுடைய சகோதர அன்பு அவன் முகத் திலும் கண்ணிலும் பொங்கி வழிந்தது. தழுவிய கையை நெகிழ்த்துச் சிறிது சிந்திக்கத்தொடங்கினுன். வீடணன் இராமனேக் கைவிட்டுவிட்டுத் தன்னுடன் வந்து சேருவதற் காகத் திட்டமிட்டுவிட்டானே என்ற ஐயமும் அவன் மனதில் தோன்றிற்று. இதுகாறும் அமுதத்தை உண்டுவந்த தன் தம்பி, இராமனே விட்டுவிட்டுத் தன்னுடன் சேர்ந்து விடத்தை உண்டுவிடுவானே என நினேத்தான். உடனே அவனே நோக்கி "தம்பி, பரதாரத்தை இச்சித்ததனுலே, புலத்தியர் என்ற அந்தணர் வழியிலே தோன்றிய நம்முடைய குலம் அழியும் நிலேயை அடைந்துவிட்டது. பிராமணர்கள் என்று கூறப்படும் நாம் அதை இனிக் கூறுவதற்குக்கூட அருகதை அற்றுவிட்டோம். அன்று சாமவேதம் சமைத்துத் தந்தமை யால் சாமவேதி என்ற சாட்சாத்காரம் பெற்ற தசக்கிரீவனது வாய் இன்று காமவேதம் பாடுகிறது. காமத்தால் கருகு கின்ற அந்தணர் குலத்தை நீயாவது வாழ்விப்பாய் என்று நினேத்தேன். நீயும் இராவணனுடன் சேர வந்து விட்டாயா?" என்ருன்.

வீடணன் விம்முற்று நின்ருன். அதைக் கண்டான் கும்பகருணன். தன்னேத் தவருகப்புரிந்துகொண்டதைக் கண்டான் வீடணன். என்ன சொல்வது என்பதையும் மறந்தான். தன் அண்ணன் தன்னிடம் எத்துணே வாஞ்சை உடையவன் என்பதையும் கண்டான். கும்பகருணன் திரும்பவும் அவனே நோக்கி, "தம்பி, நம் குலம் அழிந்து நாங்கள் இறந்தபின் இந்நாட்டை நீதி முறையுடன் ஆள்க. உன்னுல்தான் நமது பிராமண குலம் சிறப்படையவேண்டும். உனக்கு அடைக்கலம் அளித்த அண்ணல் இராமன் சிபி

சிறந்த தமிழ்ப் பெருங்குடியிலே பிறந்தவன். தன்னுயிர் போயினும் தஞ்சம் என்று வந்தோரைக் கைவிடமாட்டான். வந்தவர்க்கு வாரிவாரி வழங்கும் வள்ளல் இராமன்; உனக்கு இலங்கையை வழங்கிவிடுவான்; மைந்த, அவனுடன் சென்று இனிது வாழ்வாயாக,'' என்றான்.

வீடணன் கும்பகருணனை எவ்வாறாயினும் இராமனுடன் சேர்ப்பது என்று முடிவுசெய்து அவனிடம் சில வார்த்தைகள் கூறத்தொடங்கினான்.

"அண்ணலே, இராமன் உயர்ந்த குணப்பண்புகளைக் கூறினீர்கள்; கேட்டு மனம் குளிர்ந்தேன். இந்த இராமன் தமிழர் பண்பிற்கே ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறான். அவன் பகைவனுக்கு அருளும் பண்புடையவன். அவனுடன் நீயும் சேர்ந்துவிட்டால் நம்முடைய பிராமண குலம் அழியாது காக்கப்படும். வள்ளல் இராமன் தந்த இலங்கை அரசை உங்களுக்கே தந்து உங்கள் அடிமை போல வாழ்கிறேன். உடன் பிறந்தார் என்று எண்ணி அவர்களுடைய தீய வாழ்வை ஆதரிப்பது தருமமன்று. பரசுராமன் நம் அந்தணர் குலத்திலே சிறந்தவன் என்பதை நீங்கள் அறிவீர்கள். அரச பரம்பரைக்கே உரிமையான நிலமகளைப் பிராமணர்களும் ஆளுவதற்கு உரியவர்கள் என்ற கருத்தினால், பரசுராமன் என்ற பிராமணருக்கு உலகு (கேரள நாடு) வழங்கப்பட்ட செய்தியை அறிவீர்கள். அந்தப் பிராமணன் தன்னைப்பெற்றவள் என்று பாராது தன் தாயைக்கொன்று தருமத்தை நிலைநிறுத்தவில்லையா? உடலில் ஒரு புண் ஏற்பட்டுக் கட்டியாகி உடலை உறுத்துமானால் அதை அறுத்துச் சிகிச்சை செய்வதுதானே முறை. 'புண் வைத்து மூடார்' ஆகையால் தீமையின் பாற்பட்ட இராவணனை விடுத்து நீங்கள் இராமன்பால் வந்தடையுங்கள்'' என்றான்.

கண்களில் நீர்மல்கியபடி, கும்பகருணன், வீடணனை நோக்கிப் பின்வருமாறு கூறினான்: "மைந்தனே, வாழ்க்கை நிலையானது எனக் கருதிவிட்டாய். தண்ணீரிலே ஏற்படும் குமிழி எப்படி நிலைத்து நிற்காதோ அப்படி நம்முடைய

வாழ்வும் நிலையற்றதாகும். இராவணன் தீயவழியிலே சென்றுவிட்டான். தீயூழின் வழியிலே செல்லுகின்ற அவனைத் தடுத்து நிறுத்த முடியாது போனேன். ஆனால் அவன் என் அண்ணன்; இதுகாறும் நான் இனிது வாழ வாழ்வளித்தவன். அன்னையிலும் பரிவுடன் என்னை வளர்த்து வீரனாக்கிய அவனை நான் கைவிடமுடியுமா? அவன் வளர்த்தது என் உயிர் நிற்கும் இவ்வுடம்பு; இதற்கு இத்துணை வன்மையும் அவன் தந்த உணவால் உண்டானது; இதனை இன்றுகாறும் வளர்த்த அவனிடம் சென்று 'நான் போர் புரியேன்' என்று கூறுதல் தகுமா? ஆகையால் நான் அவனுக்காகவே போரில் இறங்கி என் உயிரை விட முடிவு செய்துவிட்டேன். நீ இராமனிடம் போய்ச் சேர்" என்று கூறினான். இதனைக் கம்பர்,

**" நீர்க்கோல வாழ்வைநச்சி நெடிதுநாள்வளர்த்துப்பின்னைப்**
**போர்க்கோலம்செய்துவிட்டாற்கு உயிர்கொடாதுஅங்குப்போகேன்**
**தார்க்கோல மேனி மைந்த என்துயர் தவிர்த்தியாகில்**
**கார்க்கோல மேனியானைக் கூடுதி கடிதி னேகி,"**

என்று அழகுறக் கூறுகிறார்.

கும்பகருணனிடம், வீடணன் எவ்வளவு மன்றாடியும் முயற்சி பயனற்றுப் போயிற்று; பிராமண குலம் தழைக்கத் தம்பி ஒருவன் போதும் என்ற மன நிறைவுடனேயே கும்பகருணனிருந்தான். தனக்காகக் கவலைப்படவேண்டாமென்று வீடணனுடன் கூறிவிட்டுப் போருக்குச் செல்லலானான்.

இங்கு ஓர் ஒற்றுமையைக் காணலாம்; மகாபாரதப் போரிலே, கன்னன், பாண்டவர்களுடன் தான் ஏன் சேர முடியாது என்பதைத் தெளிவாகக் குந்தியிடம் கூறியிருப்பதைக் கேள்விப்பட்டிருக்கிறோம். கும்பகருணனும் தான் ஏன் இராமனிடம் சேரமுடியாது என்பதைக் கூறுகிறான். இருவரும் தம்மை வளர்த்து ஆளாக்கியவர்களுக்கு நன்றி மறந்தவர்களாக விரும்பவில்லை; செஞ்சோற்றுக் கடன் தீர்ப்பதுதான் தருமமும் கடமையும் ஆகும் என்று இருவருமே கருதினர்.

கும்பகருணனும் கன்னனும் வெற்றியடையமாட்டோம் என்ற நிலை ஏற்பட்ட பின்னரும் பற்றின்றிப் பணியாற்றிய கடமை வீரர்கள். ஆனால், அவர்களுக்கு உரிய உயரிய இடத்தை நம் மக்கள் கொடுக்காதது வியப்பாகவே இருக்கிறது; இன்று வடநாட்டில் கும்பகருணனையும் இராவணனுடன் சேர்த்து எரித்துக்கொண்டாடும் திருவிழா கும்பகருணனுக்குச் செய்யும் அநீதியின் சிகரமாகும். அஞ்சுவதை அஞ்சும் ஆண்மையாளனும் நன்றி மறவாத நாகரிகனுமாகிய கும்பகருணன் பெறும் பரிசு இதுதானா? உணர்ச்சியற்ற பாரதநாடு ஊமையாகவும் இருக்க வேண்டுமா? மகா மேதைகளும் மகரிஷிகளும் தோன்றி அலங்கரித்த பாரத சமுதாயத்தை ஒரு நாரதரின் கற்பனை, விவேகமில்லாத சமுதாயமாகச் செய்துவிட்டது. என்னே நாரதீயம்!

கும்பகருணன், இராமன்பக்கல் சேரமறுத்துவிட்டான். வீடணன், தன் முயற்சி பயன் தராதொழிந்தமையை இராமனிடம் கூறினான். "விதி வலியுடையது; அதை வெல்லுவது முடியாது; இதற்கு நீ வருந்தவேண்டா; உன் எதிரிலே உன் அண்ணனைக் கொல்ல வேண்டியிருக்கிறதே என்று தான் நான் வருந்துகிறேன்; குல நலம் கருதும் கும்பகருணன் குணக்குன்று என்பதில் தடையில்லை; குற்ற மற்ற அவன் நெஞ்சிலே இராவணன் கூறிய மொழிகள் நன்றாகத் தோய்ந்து, அவனைக்கூற்றுவனுடைய வாயிலுக்கே அனுப்பியிருக்கின்றன. இதை நம்மால் மாற்ற இயலாது," என்று கூறி இராமன் அவனைத் தேற்றினான்.

வீடணன் சென்றபின் கும்பகருணன் கண்களில் நீர் மல்கியது. "வீடணனோ அறம் பெரிதெனை நினைத்து, அரக்கர் இனத்தினின்றும் விலகிவிட்டான். ஆனால் நான் அப்படிப்பட்டவனுடன் பிறந்தும் போர் செய்யும்படி அமைந்துவிட்டது விதியின் கொடுமைதான்" என்று மனதில் நினைத்துக் கோண்டு அவன் போருக்குத் தயாரானான்.

வானர சேனையுடன் கும்பகருணன் போர் செய்யத் தொடங்கினான். வானரப் படைகள் கும்பகருணனுடைய

வீரத்தைக் கண்டு அஞ்சின. அனுமனே ஒன்றும் செய்ய வியலாது கைகளைப் பிசைந்துகொண்டு நின்றான் என்றால், மற்றையோர் நின்ற திறத்தை என்னவென்று சொல்லுவது? இலக்குவன் ஒருவனே அவனுடைய வீரத்தின்முன் எதிர்த்து நின்று போராட முடிந்தது. கும்பகருணன் இலக்குவனது வீரத்தைக் கண்டு அஞ்சிச் சுக்கிரீவன்பால் தன் பலத்தைக் காட்டினான். கும்பகருணனும் சுக்கிரீவனும் செய்த போரிலே இரத்த வெள்ளம் ஆறாகப் பெருகிற்று. போரின் முடிவிலே சுக்கிரீவன் உணர்ச்சியிழந்தான். உடனே அவனைத் தூக்கிச் சென்றனர் அரக்க வீரர்கள்; அனுமனும் சுக்கிரீவனுக்கு உதவ அருகில் செல்ல அஞ்சினான்.

இராமனுக்கு இச்செய்தி எட்டியது. உடனே அவன் கும்பகருணனைத் தடுத்து நிறுத்தினான். இராமனுடைய அம்பு ஒன்றுதான் கும்பகருணனைத் தடுத்து நிறுத்தும் ஆற்றலுடையதாக இருந்தது. இராமனை நோக்கி இகழும் சிரிப்புடன், "என்னைத் தடுத்து நிறுத்திவிட்டோம் என்று பெருமை கொள்ளும் நீ, குரங்கரசின் உயிரைக் காக்க வந்திருக்கிறாயோ? நன்று. அஃது உன்னாலாகாத காரியம். போரிலே உன் தம்பியைப் பகைத்துக் கொள்ளவில்லை. அனுமனையும் நான் தீண்டவில்லை. சுக்கிரீவனை நான் ஒரு பொருட்டாகவே கருதவில்லை. உன்னுடைய வலிமையை நான் பலகாலம் கேட்டிருக்கிறேன். சுக்கிரீவனைக் காக்கும் பொருட்டு நீயே என் முன் வந்தது எனக்கு நற்பேறுதான். நான் உன்னுடன் போரிட்டு இராவணனுடைய காம நோயை நீக்குவேன். படைப்பலத்தால் திறன் வாய்ந்தவனே! சுக்கிரீவனை என்னிடமிருந்து நீ மீட்பாயாகில், சீதையின் சிறை வாழ்வும் மீட்டவனாவாய்" என்றான்.

"கும்பகருணா, நான் காமவயப்பட்டவன்; சீதையின் நினைவைத் தவிர வேறு நினைப்பில்லாதவன் என்று என்னைக் கருதிவிட்டாயா? என் இன்னுயிர் நண்பனை நீ தூக்கிச் செல்வதை நான் தடுக்க முடியவில்லையானால் நான் உனக்குத் தோற்றவனாகிவிடுவேன். பின்னர் நான் வில்லை எடுப்ப

தில்லை என்று சபதம்செய்கிறேன்" என்று இராமன் புன்முறுவலுடன் கூறினான். இதனைக் கம்பர்,

> **"என்றலும் முறுவலித் து இராமன் யானுடை**
> **இன்றுணை யொருவனை எடுத்த தோளெனும்**
> **குன்றினை அரிந்துயான் குறைக்கிலேன் எனில்**
> **பின்றினன் உனக்கு விற்பிடிக்கிலேன் என்றான்"**

என்று அழகுறக் கூறுகிறார்.

தன்னை வென்றுவிட்டால், சீதையின் அரும் துயரம் தீர்ந்துவிடுமென்று உண்மையாகவே நம்பினான் கும்பகருணன். ஆனால், இராமன் உள்ளத்திலும் இராவணன் மனதிலும் சீதையைப் பற்றிய எண்ணங்கள் மாறி வருகின்றன என்பதை அவனால் அறிந்துகொள்ள முடியவில்லை. தன்னைக்கொன்றபின், பலராகிய அரக்கருடைய இனத்தை அழித்துவிட்டு, அசோக வனத்திலே சிறைப்பட்டிருக்கும் சீதையை இராமன் கூட்டிக்கொண்டு போய்விடுவான் என்றுதான் அவன் நினைத்தான்; ஆனால் அரக்கர்களுடைய வலி முழுதும் அழியுமுன் இராவணனுடைய இதயச்சிறையிலிருந்து சீதை விடுபடமாட்டாள் என்பதையும், அழிந்த பின் தசக்கிரீவனுடைய காதல் நோய் மாறிச் சீதையைத் தெய்வமாகக் கருதும் வண்ணம் செய்யும் என்பதையும் அவன் அறியவில்லை.

இராமனுக்கும் கும்பகருணனுக்கும் கடும் போர் நிகழ்ந்தது. சுக்கிரீவனை இராமன் மீட்டபின் கும்பகருணன் சலித்துவிட்டான். இவர்கள் இருவரும் செய்யும் போரைக் கண்டு தேவர்கள் அஞ்சி ஓடி ஒளிந்தனர். கும்பகருணனுடைய வீரம், இராமன் முன் நிற்க முடியவில்லை. பலவாறு போரிட்ட கும்பகருணனும் தன்னுடைய ஆயுத வன்மையை இழந்து நின்றான். இராமன் அவனைத் தன்னுடன் வந்து சேரும்படி அறிவுறுத்தினான். ஆனால் வீரமரணம் ஒன்றையே குறிக்கோளாகக்கொண்ட கும்பகருணன் அவனுடைய வார்த்தைகளை ஏலாது மறுத்துப் போர் புரிந்து கடைசியில் இராமன் அம்புக்கு இரையாகி வீழ்ந்தான்.

கும்பகருணன் செய்த் போரின் திறம்கண்ட வானவர் கள் வியந்தார்கள். இராவணன் சீதையைக் கவர்ந்தவுடனே அது தவறு எனக் கும்பகருணன் கூறினன். "தங்களுக்கு முன்பிருந்த செல்வாக்குப் போய்விட்டதே" என்று வெம் பியது அவன் உள்ளம். என்ருலும், அவன் அண்ணனுக் காகத் தன்னுயிரைக் கொடுத்து வீரவாழ்வு பெற்றுவிட்டான்.

# 48. நஞ்சுதோய் அமுதம்

கும்பகருணன் இறந்துவிட்டான். இச்செய்தியை அறியுமுன் இராவணன் என்ன செய்துகொண்டிருந்தான் என்பதை இங்கே சிறிது காண்போம்.

வான்மீகி கூறியதற்கும் கம்பர் கூறுவதற்கும் இங்கு மிக்க வேறுபாடு காணப்படுகிறது. கம்பர் வான்மீகியைப் பின்பற்றிஞரேயாயினும், அவர் காலம் வேறு. இரண்டு காலத்திற்கும் உள்ள பண்பாடுகளும் எண்ணச் சூழல்களும் வேறு. ஆகையால் வேறு வகையில், தன் கதையை அமைத்து விடுகிருர் கம்பர்.

இராவணனுடைய மனநிலை திக்குத் தெரியாத காட்டில் செல்லும் அபலையைப்போலிருந்தது என்பதை முன்பு கண்டோம். மகோதரன் குறுக்கிடாவிட்டால், ஒருவேளை மாலியவானும் இராவணனுடைய தீய பண்பை அகற்றியிருக்கக் கூடுமோ எனவும் ஐயுற்ருேம். ஆனுல், மகோதரன் விரித்த மாயவலையிலே இராவணன் சிக்குண்டான். இதன் விளைவு யாது?

வான்மீகத்திலே, மகோதரன் யோசனையின்படி, இராமனை மாயையால் கொன்றதாகக்கூறி, அவனுடைய தலையைச் சீதைக்குக்காட்டி, அவளை வசப்படுத்த எண்ணினுன் இராவணன். இராமனுடைய மனத்தை வேதனைப் படுத்துவதற்காக, சீதையின் தலையையும், சீதையை வேதனைப் படுத்துவதற்காக இராமனுடைய தலையையும் காட்டியதாக வான்மீகி கூறுகிருர். ஆனுல், இவ்வாறு கூறினுல் சீதையும், இராமனும் உயிர்விடுவதைத் தவிர வேறு செய்கைகள் செய்ய முடியாத நிலை ஏற்படுமாகையால், இக் கருத்துக்களை கம்பர் மேற்கொள்ளவில்லை. மேலும், கம்பர், இராமனை உலக வழிகாட்டிகளில் ஒருவனுகக் கண்டவர். இராமன், மாயைக்காவது இறந்துவிட்டான் என்று கூறவும் அவரது

தூய உள்ளம் இடம்தரவில்லை. ஆகையால், சீதையின் மனம் பேதுறுமாறு மாயாசனகனைக் கற்பித்துக் கூறினர்.

இராவணன் ஆலோசனை மண்டபத்திற்கு வந்து மகோதரனை நோக்கி, "சீதையைப் பெற்ற பின்பே என் மனக்கவலை ஒழியும். அது தீரும் உபாயம் யாது? என் இனிய நண்பரே, கூறும்" என்ருன். மகோதரன் "ஓர் அரக்கனைச் சனகன்போல உருக்கொள்ளச்செய்து, அவனைக் கயிற்ருல் கட்டிச் சீதையின் கண்முன் கொண்டுவந்து நிறுத்தினல், அவனை விடுவிப்பதற்காக அவள் உன்னை மணக்க ஒத்துக்கொள்ளுவாள்" என்ருன்.

இராவணன் மகோதரனைப் பாராட்டி விட்டுச் சீதையிருக்குமிடமாகிய அசோக வனத்திற்குச் சென்ருன்.

சீதையை இராவணன் கண்டான். நாற்பது ஆண்டுகள் கடந்த பேரிளம் பெண்ணுகச் சீதையிருந்தாலும், அவளுடைய அழகு மட்டும் மங்கவில்லை; தமிழன்னையைப் போல் என்றும் இளமையாகவே காட்சி தந்தாள். அவளுடைய பேச்சோ ஏழிசையை ஒத்திருந்தது. வாயிதழ்கள் பவழத்தைப்போல் சிவப்பாக இருந்தன. அழகு என்று சொல்லுவதற்கே ஓர் எடுத்துக்காட்டாக உள்ள சீதையை இராவணன் கண்டான். சீதையும் கலங்கிவிட்டாள்.

இராவணனது இதயத்திலிருந்து எழுந்த சொற்கள் காமவயப்பட்டன. ஆனல், இராமனுடைய எழில் முகத்தைப் பார்த்த பின், அக்காம உள்ளமும் சிறிது திருந்தியிருந்தது. "சீதையின் அழகு பெண்களையும் வசீகரிக்கக்கூடியது. ஆகையால், ஆடவர் கண்டால் அவளை நோக்காது போகார்கள். அப்படிப் போவார்களேயானல், அவர்கள் பேடிகள்" என்று அவனுடைய தீப் பண்பு கூறியது. "திக்குகளையெல்லாம் வென்ற தோள்வலியை உடைய இராவணனே. நீ பேசுவது மானம். இடை பேணுவது காமம். நன்று நன்று நின் கொற்றம்" என்று அவன் மனச்சாட்சி கூறியது. இவைகள் இரண்டிற்கும் இடையிலே அகப்பட்ட இராவணன் பேச்சிலே ஒரு தடுமாற்றத்தை காண்கிருேம்.

சீதையை விரும்புவது தவறு என்ற எண்ணம் அவன் மனதிலே பதிந்து விட்டது. ஆனால், ஆசை அவனை விட வில்லை. இந்நிலையிலே சீதையை நோக்கினன் "நான் உன் அடிமை. எனக்கு நீ இரக்கம் காட்டித்தானகவேண்டும். சூரியனுக்கும், சந்திரனுக்குமுள்ள வேறுபாட்டையும் மறந்தேன். மன்மதன் எய்யும் கணைகட்குத் தோற்று உன் முன் நிற்கின்றேன். நீ இரங்குகிருய் இல்லை. இதுகாறும் உன்னை அமுதமென நினைத்தேன்; ஆனால், நீ ஒரு நஞ்சு தோய்ந்த அமுதம் என்பதை இப்பொழுதுதான் அறிந்து கொண்டேன். உண்மையை நோக்கினல் யான் எனக்கே வஞ்சனை செய்து கொண்டேன்! உன்னை நினைப்பதை விட்டு உயிர் நீங்குவதே தகுதியாகும். ஆனால் அதைச் செய்ய என்னால் முடியவில்லை. திருப்பாற்கடலைக் கடைந்த போது வந்த நீ எனக்கு அடைக்கலம் தருதல் வேண்டும்" என்றான்.

பிற மாதரை விரும்புவது தீமை என்று உணர்ந்த பின்னும், அத் தவற்றைச் செய்ய முற்பட்டானதலால் தன்னை வஞ்சன் என்று கூறிக்கொண்டான் இராவணன். திருப் பாற்கடலைக் கடையும்போது இலக்குமியும், நஞ்சும் உடன் தோன்றியது என்பது புராணிகர் கூறும் செய்தி. இலக்குமி போன்ற பேரழகுள்ள பெண்ணை நாம் அடைவோம் என்று கருதிய இராவணனுக்கு அவள் நஞ்சு தோய்ந்த அமுதமாகக் காட்சியளித்தாள். இதனைக் கம்பர் இரு பாடல்களால் கூறலுற்று,

"என்றுதான் அடியனேனுக்கு
இரங்குவது? இந்து என்பான்
என்றுதான் இரவியோடும்
வேற்றுமை தெரிவது? என்பால்
என்றுதான் அனங்கன் வாளிக்
கிலக்கிலா திருத்தலாவது?
என்று தான் உற்றதெல்லாம்
இயம்புவான் எடுத்துக் கொண்டான்"

வஞ்சனேன் எனக்கு நானே;
மாதரார் வடிவு கொண்ட
நஞ்சுதோய் அமுதம் உண்பான்
நச்சினேன்; நாளும் தேய்ந்த;
நஞ்சு நேரான நும்மை
நினைப்பு விட்டு ஆவிநீக்க
அஞ்சினேன் அடியனேனும்,
அடைக்கலம்; அமுதின் வந்தீர்!

என்று அழகுறக் கூறுகின்றார்.

இராவணன் சாதாரணமானவனல்லன். இவனுடைய பெருமை மூன்று உலகங்களிலும் பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட்டிருக்கின்றன. சிவபெருமானிடத்தில் மாறாத காதல் கொண்டவன். அதுபற்றியே அவன் தேவார திரு வாசகத்திலும் குறிக்கப்படும் சிறப்புப் பெற்றிருக்கிறான் என்று முன்பே கண்டோம். சிவபெருமானிடத்திலே மிகுந்த பக்தி உடையவனாயினும், அச்சிவனே இவன் கொலுவீற் றிருக்கும் மண்டபத்திற்குள் வருவானானால், அவனை எதிர் கொண்டு வணங்கவும் இராவணனது மானம் கூசும். அப்படிப்பட்டவன், சீதையின் ஆசை நோயால் ஏதும் செய்யத் துணிந்துவிடுகிறான். "காதல் மிக்குழிக்கற்றவும் கைகொடா" என்று திருத்தக்க தேவரும் கூறுவர்.

இராவணன் அவளைத் திரும்பவும் நோக்குகிறான். "சந்திரனுடைய கிரணங்கள் என்னைச் சுடுகின்றன. தண் ணென வீசும் தென்றல் காற்று என்னை வியர்க்கச் செய்து விடுகிறது. துன்பமே அறியாத என்னைத் துன்பத்திற்கு ஒரு இருப்பிடமாக்கிவிட்டாய். பெண்கள் என்று பேசும் போது உன்னைத் தவிர வேறு பெண்ணை நினைக்கவும் முடிய வில்லை. உன்னுடைய பெயரைத் தவிர மற்றவர்களுடைய பெயர்களெல்லாம் மறைந்துபோய் விட்டன. காமத்தால் விளையும் நோய்கள் பத்து என்று கூறுவார்கள் மருத்துவர் கள்; ஆனால், அந்த நோய் ஆயிரம் என நான் இப்பொழுது தான் தெரிந்துகொண்டேன்" என்று வாய் வெருவலானான்.

இராவணன் காமவேட்கையினலே கருத்திழந்தான். சீதையை ஒரு பெண் என்றும் பாராமல் நிலத்திலே விழுந்து அவளை வணங்கினன்.

புலிக்கும் மானுக்கும் எல்லா வகையிலும் வேறுபாடுகள் உண்டு. புலி, மாமிசத்தை உண்டு கொடூரமான பார்வையுடன் காட்டிலே திரியும் ஒரு விலங்கு. மானே புல் பூண்டுகளைத் தின்று வாழும் சாதுவான உயிர்வகை. நெடுந்தூரத்தில் ஒரு புலி வந்து மானின் கண்ணில் பட நின்ருலே போதும்; மானின் நடுக்கத்தைக் கூறவும் வேண்டுமோ? புலியொன்று தன் பக்கத்திலே நிற்கக்கண்ட மெல்லிய மானைப் போல் நடுநடுங்கி விம்மி விம்மி அழுதாள் சீதை. உள்ளத்திலே உறுதி உடையவளாதலால், அவள் இராவணனை நோக்காது கீழே கிடந்த ஒரு புல்லை நோக்கித் தன்னுடைய கருத்தைத் தெரிவித்தாள். இதனைக் கம்பர்,

> **வல்லியம் மருங்கு கண்ட**
> **மான் என மறுக்கமுற்று**
> **மெல்லியல் ஆக்கை முற்றும்**
> **நடுங்கினள் விம்முகின்ருள்**
> **கொல்லிய வரினும் உள்ளம்**
> **கூறுவன் தெரிய என்னுப்**
> **புல்லிய கிடந்த தொன்றை**
> **நோக்கியே புகல்வதானுள்**

எனத் திறம்படக் கூறுகிருர்.

இராவணனைப் பார்க்காமலே அலட்சியமாகச் சிலவற்றைக் கூறத் தொடங்கினுள் சீதை:—

"முறையில்லாது பேசுகின்ற முரடனே! எல்லாவுயிர்களுக்கும் உடல் உண்டு; ஆனல் இழிந்த மாக்கள்கூடத் தகுதியில்லாத சொற்களைச் சொல்ல முடியாதவைகளாயிருக்கின்றன. சொல்லுவதற்கு உனக்கு வாயிருக்கிறது, அதனைக் கேட்பதற்கு என் காதுகளிருக்கின்றன. என் கற்பின் பெருமையும் தருமமும், உன்னையும் உன் குலத்தையும் சுட்டெரித்திருக்கவேண்டும். நான் கற்புள்ளவளாக இருந்துதான்

என்ன பயன்? தருமம் உலகில் இருந்துதான் என்ன பயன்? வீரனே, நன்று நன்று உன் தோள் வலிமை! பெண்ணிடத்திலே வந்து உன் வீரத்தைக் கூறுகின்றாயே. நீ இந்திரனை வென்றாய், பிறரையும் வென்றுவிட்டாய். வீரப் பட்டமும் சூட்டிக்கொண்டாய். ஆனால், என்னுடைய ஆசைக் கினிய கணவன் இராமனைப் போரிலே நேரிற்காண அஞ்சி நீ இங்கு வந்திருக்கிறாய். சொல்லத் தகாத வார்த்தைகளை நீ சொல்லக் கேட்ட பின்பும் நான் உயிரைப் பாதுகாத்து வருவது ஏன் என்று நினைக்கிறாயா? இராமன் வெற்றியுடன் என்னைக் காண வருவான் என்ற ஆசையாலேதான். அதனால் நான் உயிர் தாங்கி இருக்கின்றேன்." இதனைக் கம்பர்,

"வாசவன் மலரின் மேலான்
மழுவலான் மைந்தன் மற்றைக்
கேசவன் சிறுவர் என்ற
தன்மையோர் தம்மைக் கேளாய்
பூசலின் எதிர்ந்தேன் என்றாய்
போர்க்களம் புக்கபோது என்
ஆசையின் கனியைக் கண்ணிற்
கண்டிலை போலும் அஞ்சி,"

"ஊணிலா யாக்கை பேணி
உயர்புகழ் சூடாது உன்முன்
நாணிலாதிருந்தே னல்லேன்
நவையறு குணங்களென்னும்
பூணெலாம் பொறுத்த மேனிப்
புண்ணியமூர்த்தி தன்னைக்
காணலாம் இன்னும் என்னும்
காதலால் இருந்தேன் கண்டாய்,"

# 49. மாயா சனகன்

இராவணன், குன்றென உயர்ந்த தோளையுடைய தம்பியாகிய கும்பகருணனைக் கண்டவுடன் தன் பகைவர் ஓடி ஒளிப்பர் என்று எண்ணி மனப்பால் குடித்துக்கொண்டிருந்தான். அந்த எண்ணத்திலே இருந்த அவன், சீதையை நோக்கி நயமாகவும் பயமாகவும் பேசிய சொற்கள் அவளை மாற்ற முடியாமை கண்டு, அவளை நோக்கி, "பெண்ணே, உன் தந்தையாகிய சனகனைக் கட்டிவரும்படி ஆட்களை அனுப்பியிருக்கிறேன். அவர்களும் சிறிது நேரத்தில் வந்துவிடுவார்கள்" என்ருன். இவ்வாறு இராவணன் கூறுகின்ற வேளையிலே, மாயவித்தையில் வல்ல மகோதரன் மாயாசனகனுக்கப்பட்ட மருத்தனைப் பிடித்துக்கொண்டு சீதை முன் வந்தான். மாயாசனகன் அலற அலற அவனைப் பின்னும் இறுகப் பிடித்துக்கொண்டார்கள் அரக்க வீரர்கள்.

இராவணன் ஏளனமாக நகைக்கவும், மற்ற வீரர்கள் ஆரவாரம் செய்யவும் கண்ட சீதை சிறிது தலை நிமிர்ந்து பார்த்தாள்; திடுக்குற்ருள். மாயா சனகன் இராவணனை வணங்குவதையும் கண்டாள். ஞானியான சனகனே அதருமத்தைக் கண்டு வணங்குகிருன் என்று அவள் மனம் வியப்பால் வெதும்பியது. மீன் போன்ற அவளுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருக்கெடுத்து ஓடிற்று. தன் தாய் தீயிலே விழுந்து வெந்து கொண்டிருப்பதைக் கண்டும் காக்கமுடியாத ஒரு பச்சிளங் குழவியைப்போல் தாங்கமுடியாத துக்கத்தை யடைந்தாள். பொய் என்று உணரமுடியாத நிலையிலிருந்ததனுல் அவள் தன் கைகளை நெரித்தாள். தருமம் அழிந்துவிட்டதே என எண்ணி ஏங்கினுள். வஞ்சனையே வெற்றி பெற்று விட்டதாக எண்ணினுள். சனகனை நோக்கினுள்.

'அப்பா! வந்தவர்களுக்கெல்லாம் உணவு தந்து வாழ்ந்தீர்களே; பகைவர்களையெல்லாம் வென்ற புயவலியும்

உங்களிடம் உண்டே; தவங்கள் பல செய்து அரச ஞானி யாக விளங்கினீர்களே; கல்வி கேள்விகளில் சிறந்த நீங்கள் வஞ்சனை வலையில் பிணிப்புண்டு என்முன் நிற்பதைக் காண் கின்றேன். எல்லாம் என்னால்தானே வந்தது' என்று அலறுவாளாய்,

"இட்டுண்டாய்; அறங்கள் செய்தாய்;
எதிர்ந்துளோர் இருக்கை எல்லாம்
சுட்டுண்டாய்; உயர்ந்த வேள்வித்
துறையெலாம் செய்து தீர்ந்தாய்;
மட்டுண்டார் மனிசர்த் தின்ற
வஞ்சரால் வயிரத் தோள்கள்
கட்டுண்டாய்; என்னே! யானும்
காண்கின்றேன் போலும் கண்ணால்"

என்று கூறினாள்.

தன்னை வளர்த்ததனால் சனகன் ஒரு பயனையும் அடைய வில்லை. ஆனால் வஞ்சகருடைய பகையை மட்டும் பெற்று விட்டான். பகைவர்கள் கையினால் போர்க்களத்திலே மாண்டு போயிருந்தால் அவன் வீர வாழ்வைக் காண்பான். ஆனால் மன்னர்க்கு மன்னன் என்று போற்றப்பட்ட அவன் பகைவனை வணங்கிப் பழியைப் பெற்றுவிட்டான் என்றெல் லாம் பலவாறு நினைந்து சீதை பதை பதைத்தாள். பெற்ற வீட்டிற்கும் புகுந்த வீட்டிற்கும் தீராப் பழியைத் தேடித் தந்ததாகவே தன்னை நினைத்தாள் சீதை. தான் பிறந்த வுடனே இறந்து போயிருந்தால் பிறருக்குத் தன்னால் இன் னல்கள் நேர்ந்திரா என மனம் புழுங்கினாள். அவளுடைய பெண்மை மனதில் தங்கைகளின் நினைவும் வந்தது. தாயின் நினைவும் அவளுக்குத் தோன்றியது. இவர்கள் எல்லாம் சனகனைப் பிரிந்து என்ன பாடுபடுகின்றார்களோ என்று எண்ணி ஏங்கினாள். இதனைப் புலமைக் கண்ணிற் கண்ட கம்பர்,

"அன்னையீர், ஐயன்மீர், என்
ஆருயிர்த் தங்கைமீரே,
என்னை ஈன்றெடுத்த
தந்தைக்கு ஏயது யாது மொன்றும்
முன்னம் நீர் உணர்ந்திலீரோ?
உமக்கும் வேறு உற்றது உண்டோ?
துன்னரும் நெறியில் வந்து
தொடர்ந்தனிர் துஞ்சினீரோ"

என்று சீதை புலம்புவதாகக் காட்டுகின்றார்.

மறுபடியும் சனகனைப் பார்த்தாள். 'அப்பா, நான் ஓர் அரக்கி. பிறர் என்னை இங்கே கொண்டுவரவில்லை; நானே இங்கு வந்து சேர்ந்துவிட்டேன். 'கொல்' என்று ஒரு மானைக் காட்டி என் கணவரை வழியனுப்பினேன்; என் மைத்துனனையும் வைது அவர் பின் போகச் செய்தேன். இன்று உங்களுடைய வலிய தோளை அரக்கர்கள் கட்டப் பார்த்திருக்கிறேன். சிறந்து விளங்கிய இரண்டு பெரிய அரச குடும்பங்கட்கும் தீராத பழியைக் கொண்டுவந்து சேர்த்துவிட்டேன்' என்றாள்.

"அனுமனைப் போன்ற புலமிக்க ஒருவன் மிதிலையிலோ அயோத்தியிலோ இல்லை. ஆகையால், பரதனையும் இராவணன் கட்டிக்கொண்டு வந்தாலும் அது வியப்பாகாது. ஒருகால் பரதன் இலங்கை நாட்டிற்குக் கைதியாக வருவானானால் இராமன் அவன் நிலை கண்டு வருந்தி இறந்துபடுவான்; பின்னர் இலக்குவனும் இறந்து விடுவான். அதற்குப் பிறகு என்ன நடக்குமென்று யார் கூறமுடியும்?" என எண்ணினாள்.

சீதை சனகனைத் திரும்பவும் நோக்கினாள். அவள் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருக' "ஐயோ, என்ன செய்வேன். பத்துமாத காலமாக இராமன் வந்து என்னை மீட்டுவிடுவான் என்ற எண்ணத்தாலே வாழ்ந்து வந்தேன். வானர சேனைகள் கடலைக் கடந்துவிட்டன; சமுத்திரத்திற்கும் அணை கட்டிவிட்டன; பகைவர் சேனைகள் வானர

சேனைக்குப் புறமுதுகுகாட்டி ஓடிவிட்டன எனக் கேட்டு இறுமாந்திருந்தேன். இப்போது வஞ்சத்தினுலே என் காதலனை வென்று விட்டார்களே; இனி என் செய்வேன்" என்ருள்.

இந்நிலையில் இராவணன் சீதையைத் தன் வயப்படுத்தி விடலாமென நினைத்து மீண்டும் அவளிடம் சில வார்த்தைகள் கூறத் தொடங்கினுன் :— "அன்னத்தின் நடையைப் பழிக்கும் பெண்ணே, காமப்பித்தால் அறிவை இழந்து விட்டேன். உனக்குப் பெரிய துன்பத்தைத் தந்துவிட்டேன். நான் வீரன். ஆனுல் காமனுடைய கணைக்குத் தோற்று விட்டேன். துன்பத்தைத் தருகின்ற அக்காம நோயைத் தீர்ப்பதற்கு உன்னைத்தவிர வேறு ஒரு மருந்தும் எனக்கு இல்லை. உன் பவள வாயால் ஒரு வார்த்தை சொன்னுல் போதும். இந்திரனையும் வந்து உன்னிடம் வணங்கச் செய்து, தேவமகளிரெல்லாம் உன் அடிவருடச் செய்கிறேன்: இதுமட்டுமல்ல; என் குல முன்ேனாராகிய பிரமனே, சனகனுகிய இவனுக்கு வரங்கள் அருள்வான்" என்ருன்.

இராவணன் தந்தை விச்சிரவசுமுனிவன். அவனுடைய தந்தை புலஸ்திய பிரமம். புலஸ்தியன், இவ்வுலகங்களை எல்லாம் படைத்த பிரமனுக்கு மகன். பிரமன் வழித்தோன்றலாதலால், இராவணன் சிறந்த பிராமணனுகின்ருன் பிராமணனுன இராவணன் செய்யமுடியாத காரியம் யாதுமேயில்லை. ஆகையால், தேவர்கள் முதற்கொண்டு யாவரும் தன் அடிபணிய வேண்டுமென்றே இராவணன் நினைத்தான். தேவர்களுக்கும் தேவனுன திருமாலும் தன்னை வணங்க வேண்டுமென்று கருதினுன். அதனுல் அவன் மனைவி திருமகளையும் தனக்கு ஏவல் மகளாகவே இராவணன் எண்ணினுன். சீதையை மட்டும் நோக்கினுன்: "திருப்பாற் கடலைக் கடைந்தபோது எழுந்த இலக்குமியைப் போலவே இருக்கிருய் நீ; ஆனுல் அந்தத் திருமகள் நீ அல்லவானுல், அந்த இலக்குமியையும் வந்து உனக்குக் குற்றேவேல் செய்யச் சொல்லுகிறேன். சித்திரப்பாவை போன்றவளே! நான் சொல்வதை நீ கேட்டால், இந்தச் சனகனுடைய மகளாகப் பிறந்ததினுல் நீ பெறத்தக்க செல்வத்திற்குப் பழுது ஏற்படா

மல் மூன்று உலகங்களையும் ஆளும் சனகனுக்குச் சிறந்த மகளாகலாம்" என்ருன்.

இராவணனது செய்கை, இதில் ஏதோ சூழ்ச்சியிருக்கிற தெனச் சீதை நினைத்தற்கு இடம் தந்தது. அப்பொழுது சனகன், அவளை நோக்கி "உலகம் இன்னதென அறியாத குழந்தையாக இருக்கிருயே. தாமரைப்பூவிலே வசிக்கின்ற இலக்குமி யாவருக்கும் பொதுச் செல்வமன்ருே? உன்ஞல் நான் கைதியாக்கப்பட்டேன். வாழப்பிறந்த நாம் சாவதால் என்ன பயன்? தேவர்களுக்கெல்லாம் தேவஞன இராவணன் மனைவியாக இருந்தால் என்ன குறை வந்துவிடும்?" என்ற கருத்துப்பட,

**"பூவின்மேல் இருந்த தெய்வத்**
**தையலும் பொதுமை யுற்ருள்**
**பாவியான் பயந்த நங்கை**
**நின்பொருட் டாகப் பட்டேன்**
**ஆவிபோ யழிதல் நன்ருே?**
**அமரர்க்கும் அரச ஞவான்**
**தேவியாயிருத்தல் தீதோ ?**
**சிறையிடைத் தேம்புகின்ருய்"**

என்று கூறுகின்ருன்.

இலக்குமி, திருமாலின் மனைவி. ஆஞல் உலக வழக்கத்திலே, இலக்குமி என்ருல் செல்வம் என்று பொருள்படும். செல்வத்திற்கு அதி தேவதையான இலக்குமியும் செல்வமும் ஒன்ருகும். செல்வம் எல்லோருக்கும் பொது; அஃது யார் யார் விரும்பித் தேடுகிருர்களோ அவர்களிடத்திலே போய்ச் சேர்ந்துவிடும். அதஞல் மாயாசனகன் செல்வத்தை இலக்குமியாக உருவகப்படுத்திப் "பூவின் மேல் இருந்த தெய்வத் தையலும் பொதுமை யுற்ருள்" என்று கூறிவிட்டான்.

சீதைக்கு உண்மை தெரிந்துவிட்டது; சனகன் இவ்வாறு உளறமாட்டான் என்று நினைத்தாள். "இவை மன்னர் மன்னன் கூறும் வார்த்தைகளா? அறத்தை மறந்து கூறும் நீங்கள் யார்? ஒழுக்கம் கெடச் சொல்லும் நீரும் மனிதரா? நீர் சனகர்தாஞ? தம் குலமே நசித்துவிட்டாலும், மார்பிலே

கூரிய வேல் பாய்ந்திட்டாலும், சான்ருேர்களால் புகழப் படுவதற்காக வாழ வேண்டுமேயல்லாது பழியுடன் வாழக் கூடாது. நீங்கள் கெட்டாலும் உலகமே அழிந்தாலும் இராமனுக்கு அடிமையான நான், நாயைப்போன்ற இவனை நோக்கவே மாட்டேன்" என்ருள்.

இராவணனைச் சீதை நாய் எனக் கூறுவதிலும் ஒரு நயத்தைக் காண்கிருேம். நாயோ தான் அன்புடன் பழகியவரிடம் வாலையாட்டிக்கொண்டே கொஞ்சி வரும்; ஆனல், யாரிடம் அன்பை எதிர்பார்க்கிறதோ அவர் அதனை அடித்தாலும் கோபப்பட்டாலும் அவைகளைப் பொருளாகக் கருதாது. இராவணனும், சீதையுடன் அன்புகொள்ள வேண்டுமென்று அவளையே சுற்றித் திரிந்தான்; அவள் கோபித்தாலும் ஏசிஞலும் பேசிஞலும் அவளை விட்டகலாமல் அவளை வணங்கவும் துணிந்திருந்தான். இதனுல் சீதை இராவணனிடம் நாய்க்குணம் அமைந்துவிட்டது என எண்ணிஞள். இக்கருத்தைக் கம்பர்,

> " நீயுநின் கிளையுமற்றிந்
> நெடுநில வரைப்பும் நேரே
> மாயினும் முறைமை குன்ற
> வாழ்வனே? வயிரத் திண்டோள்
> ஆயிர நாமத் தாழி
> அரியினுக் கடிமை செய்வேன்;
> நாயினை நோக்குவேனே
> நாண் துறந்து ஆவி நச்சி"

என்று பாடுகின்ருர்.

சீதை மேலும் பேசலுற்று, "அரக்கனே, போரிலே இராமனைக் கண்டிருப்பாய். அவனை என் கணவன் என்று மட்டும் எண்ணிவிடாதே; அவன் என் கண். ஆடவரும் கண்டு மயங்கும் அழகுடைய சிங்கம் அவன். சிங்கத்துடன் வாழ்ந்த நான் சிறு நாயுடன் வாழ்வேன் என்று எண்ணி விடாதே" என்ருள். இச் சுடு சொற்களைக் கேட்ட இராவணன் சனகனைக் கொல்ல முயன்ருன். சீதை அவனைப் பார்த்து, மாயங்கள் புரியும் மகாபலசாலியே, உன்னை

அறிந்துகொண்டுவிட்டேன். என்னையும் நீ கொல்லமாட்டாய்; என்மீது வைத்திருக்கின்ற தீய காமத்தினால் சனகனையும் கொல்லமாட்டாய்; உன்னையும் கொன்றுகொள்ள மாட்டாய்; உலகத்தைக் கொல்லும் ஆற்றலை இழந்து விட்டாய். என் தலைவன் இராமன் ஒருவன்தான் உன்னைக் கொல்லுவான்" என்றாள். இதனைக் கம்பர்,

"என்னையும் கொல்லாய்; இன்னே
இவனையும் கொல்லாய்; இன்னும்
உன்னையும் கொல்லாய்; மற்று இவ்
உலகையும் கொல்லாய்; யானே
இன்னுயிர் நீங்கி என்றும்
கெடாப் புகழ் எய்துகின்றேன்;
பின்னையும் எங்கோன் அம்பால்
கிளையொடும் பிழையாய்"

என்று உரைப்பதால் காணலாம்.

நிலைமை முற்றிவிட்டதை மந்திரி மகோதரன் கண்டான்; பெருகும் கோபத்தினால் ஒருகால் மருத்தனைச் சனகன் என்று எண்ணி இராவணன் கொன்றுவிடுவானோ என அஞ்சினான். இராவணனை நோக்கி, ஐய, சனகன் உனக்கு மாறாக ஏதும் செய்யவில்லை. நீ இராமனை வென்றபின் சானகி உன் வயப் பட்டால் தன் தந்தையை அவமதித்ததைப் பற்றி நினைந்து வருந்துவாள். ஆகையால் கொலைத் தொழிலை விடுக', என்றான்.

இராவணன் சீதையை எவ்வாறு மயக்கலாம் என்ற எண்ணத்தில் ஈடுபட்டிருக்கும்போது தேவர்களின் ஆரவாரம் அவனுடைய சிந்தனையைக் கலைத்தது.

கும்பகருணன் இறந்தான் என்ற செய்தியைத் தூதுவர்கள் கொண்டுவந்தார்கள். இராவணனும், கும்பகருணனும் பிறந்த நாள் தொடங்கி ஓருயிரும் ஈருடலுமாக வாழ்ந்து வந்தவர்கள். போரிலே தன் பொருட்டாகத் தம்பி கும்பகருணன் இறந்தான் என்று கேட்டவுடன் வேரற்ற மரம்போல் கீழே சாய்ந்தான்; வாய்விட்டுக் கதறி அழுதான்.

## 50. திருந்தாவுள்ளம் திருந்தும் திறம்.

இராவணனுடைய தம்பி கும்பகருணன், பல பெண்கள் அடிவருட, இளம் தென்றல் மெல்லெனவீச, மலர்ப் படுக்கையிலே மன நிறைவுடன் துயில்பவன். இன்பவாழ்விலே சிறந்து நின்றபோதிலும், அவனைக் கண்டு வையகமும் வானகமும் வலியழிந்து கலங்கின. மதயானை தாமரைத் தடாகத்தைச் சேருக்குவதுபோல அவன் தேவலோகத்திற்குச் சென்று இந்திரன் இருந்து காக்கும் தேவர்களின் சிறந்த கூட்டத்தைச் சீரழித்தான்.

மின்னலும் ஒளி மங்கும்படியாக விளங்கும் வேலேந்திய கும்பகருணன் வெற்றியுடன் திரும்பி வருவான் என்று எண்ணினான் இராவணன். ஆனால் அவன் இறந்துவிட்டான் என்று கேட்டவுடனே நெஞ்சம் பதை பதைத்தான். "தம்பி, கேவலம், ஒரு மனிதன் உன்னைக் கொன்றுவிட்டானே! நீ குளிக்கும்போது கால் தேய்த்துக்கொள்ளும் கல்தான் உனக்கு அவன் என்றே நினைத்தேன். இராமனையோ, அவன் தம்பி இலக்குவனையோ நீ கொன்றிருக்கக்கூடாதா? சுக்கிரீவன், அங்கதன், அனுமன், சாம்புவன் எல்லோரும் உயிருடன் இருக்க நீ அவர்களைத் தானும் கொல்லமுடியாமல் இறந்துவிட்டாயே! உன்னைக் கண்டு மும்மூர்த்திகளும் அஞ்சினார்களே! ஆனால் மானிடன் ஒருவன் அம்பால் இறந்துவிட்டாயே! நீ வாழ்கின்றாய் என்ற பெருமிதத்துடன் வாழ்ந்த நான் நீ பிரிந்தபின் என் செய்வேன்! அண்ணனுக்காக நீ இறந்ததைப் பார்த்தபின், தம்பியாகப் பிறப்பதற்கும் உலகம் இனி அஞ்சும் காலம் வந்துவிடுமே!" என்று வாய்விட்டு அழுதான்.

கும்பகருணனைப் பற்றிய நினைவிலே, இராவணன் மேலும் சிந்திக்கத் தொடங்கினான். தன்னுடைய பெயர்க் காரணத்தைப் பற்றியும் சிறிது சிந்தித்தான். "இராவணன்" என்ற வடமொழிப் பதத்திற்கு "கீச்சு கீச்சு என்று

அழுபவன்" என்று பொருள் கூறுவர்.'[1] ஒருகால் இராவணன் தேவர்களை வென்று திரும்புங்காலத்தில் கயிலைமலை இடையூருக உள்ளது என்ற கருத்தால் அதனைத் தரையிலிருந்தே பெயர்த்தெடுத்துவிட முடிவு செய்தான். இறைவன் இடத்தை அசைக்கவே, சிவபெருமானுக்குச் சினம் மூண்டது. தன் கால் விரலால் அம்மலையை அழுத்த அதன் பாரம் தாங்கமாட்டாது இராவணன் கீச்சு கீச்சு என்று அலறினன். பின்னர்ச் சாமகானம் பாடி இறைவனது அருளைப்பெற்று இலங்கைக்கு மீண்டான். அவன் அழுததால், அவனுக்கு இராவணன் என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர். அழுவதற்காகவே பிறந்துவிட்டோமோ என்று எண்ணினன் என்று கூறுகின்றனர்.

பின்னர் இராவணன் சிறிது மனம் தெளிந்து எழுந்தான். இதனைக்கண்ட சீதை தனக்குள்ளே சிரித்துக்கொண்டாள். அவள் உடலெல்லாம் மகிழ்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. கண்ணனைய கணவனைக் காணலாம் என்ற நினைப்பால், அவள் வேறு ஒரு பெண்ணுகவே மாறிவிட்டாள். என்றாலும் இராவணன் சினம் மட்டும் அடங்கவில்லை. தேவர்கள் வந்தாலும், தேவர்களுக்கு மேம்பட்டவர்களான மூவர் வந்தாலும் எதிர்த்துப் போராடி வருவேன் என்று வீர கர்ச்சனை செய்தான். மாயாசனகனை வேறு ஒரு சிறையிலே வைக்கும்படி கூறிவிட்டு மகோதரன் இராவணனைப் பின் தொடர்ந்து அவன் மாளிகைக்குச் சென்றான். சீதையைத் திரிசடை தேற்றினள். அவள் சனகனாக வந்தவன் மருத்தன் என்ற அரக்கன் என்பதையும், மாயா வேடத்தின் மர்மத்தையும் கூறினள். சீதையின் ஐயமும் ஒருவாறு தெளிந்தது.

---

[1] இவ்வாறே கும்பகருணன் என்ற தொடருக்குக் குடம்போன்ற காதுகளையுடையவன் என்று பொருள் கூறுவர். இராவணன் கும்பகருணன் என்ற பெயர்களுக்கு இது பொருளாயின் எந்த அறிவுள்ளவனும் இப்பெயர்களை ஏற்றுக்கொள்ளமாட்டான். இப்பெயரெல்லாம் நாரதரின் படைப்பாக வேண்டும். வான்மீகி அவற்றை அப்படியே மேற்கொண்டிருக்கவேண்டுமே தவிர வேறில்லை.

சீதை பத்து மாதங்கள் சிறையிலிருந்தது முறையா? என்ற கேள்வி இன்று எழுந்துள்ளது. பிறர் மனம் புகாத பெண்மைச் சிறப்புடன் வாழவேண்டிய சீதை இராவணனை ஆடவன் கண்டு மயங்கும்படியாக இலங்கையிலே வாழ்ந்தது சரியல்ல என்பது அவர்களுடைய வாதம். இராவணன் சீதையின் அழகைக் கண்டு மயங்கவில்லை. சூர்ப்பணகை சொன்ன சொல்லோவியத்தையே "இதுதானா நீ கண்ட சீதை" என்று கேட்கிறான். சீதையைக் காணாதபோதே சூர்ப்பணகை படைத்த சொல்லோவியச் சீதையைத்தான் தன் இதயமாஞ்சிறையிலே இராவணன் வைத்தான்.

விருந்தோம்புவதை இல்வாழ்க்கையிலே சிறந்ததாகக் கொண்டிருந்தனர் முன் காலத்தவர். இஃது ஆசியா கண்டம் முழுவதும் பரவியிருக்கும் சிறந்தபண்பாடு. காட்டில் இராவணன் ஒரு விருந்தினனாக வந்துள்ளான் என்று கேட்டவுடன், சீதை அவனை வரவேற்று விருந்திட்டு உப சரித்தாள். அவனை அச்சமயத்தில், இராவணன் தூக்கிக் கொண்டுபோய் இலங்கையிலே சிறை வைத்தான். இது தான் வரலாறு.

சீதையின் மேனி அழகை இராவணன் வருணித்திருக் கிறானே. அது முறையா? இச் சுடுசொற்களைக் கேட்ட பின்னும் சீதை அமுதிட்டது எவ்வகையில் பொருந்தும் என்ற கேள்விகள் கேட்கப்படுகின்றன. இராமாயண ஆசிரி யரான வான்மீகி இராமாயண நிகழ்ச்சிகளை நேரில் அறிந் தவரல்லர் என்பதை முன்னமேயே கண்டோம். நாரத முனிவர் கூறிய வரலாற்றைச் சரியாகப் புரியாத நிலையில் வான்மீகி சிந்தனையில் ஆழ்ந்துவிட்டார். பிரமன் தோன்றி, "உன்கற்பனா சக்தியின் உதவிகொண்டு காவியத்தை எழுது; தானாகவே உனக்கு யாவும் வந்துவிடும்" என்று கூறிச் சென்றான். ஆகையால், வான்மீகி கூறிய யாவையும் அப்படியே கொண்டு ஆராய்வதும் சரியன்று. மேலும் ஒரு காவியத்தில் ஒரு பெண்ணின் மேனியழகு முழுவதும் பாடப்படவேண்டும் என்றும் அந்த நாளில் காவியப் புலவர்கள் கருதினார்கள். அதன்காரணமாகத்தான் வான்

மீகி சீதையின் மேனி அழகை வருணித்திருக்கிருரேயன்றி, வேறு காரணத்தாலல்ல, வான்மீகத்திலுள்ள அநேகம் சிக்கலான பகுதிகளை நோக்கும்போது மேற்கண்ட காரணத்தையே சரியெனக் கொண்டொழிய வேண்டியதாகிறது.

பிறர் மனம் புகாத கற்பு என்ருல் அதற்குப் பிற ஆடவர்கள் கற்புடைய பெண்களின்மேல் காம இச்சை கொள்ளக் கூடாது என்று கூறுவர். அழகென்னும் பொருளில் ஆசை கொள்வது உயிர் இயற்கை. ஆனல், ஒரு பெண் பிறரைத் தன் மனதிலே புகும்படியாகச் செய்யக்கூடாது என்பதுதான் இதற்குக் கருத்து. அதாவது தன் கணவனைத் தவிரப் பிறர் யாருக்கும் தன்னுடைய உள்ளத்திலே இடம் தரக்கூடாது என்பது. வள்ளுவனர் ஒருபடி மேற் செல்லுகிருர். தெய்வங்களையும்கூடத் தன் உள்ளத்தில் புகாதவாறு காத்துக் கணவனையே உள்ளக் கோயிலில் கொண்டுள்ள பெண் மழை பெய் என்று கூறினல் பெய்யும் என்கிருர். ஆடவர் மனதிலே கடவுளின் நினைவும் பெண்களின் மனதிலே கணவன் என்ற கடவுளின் நினைவும்தான் சிறந்தன என்பதைக் கண்டனர் பழந் தமிழர்கள். (He for God only and She for God in him) இராவணன் சீதையை விரும்பிய போதிலும், சீதையின் மனதிலே இராமனைத் தவிரக் கடவுளோ வேறு பொருளுமோ இல்லை. சீதையின் அழகை இராவணன் கண்டதுண்டேயன்றி, அவள் உள்ளத்தைக் கண்டதுமில்லை; கொண்டதுமில்லை. இராவணன் தன்னைச் சிறை செய்துவிட்டானே என்று தான் உயிர் மாய்த்துக் கொண்டிருப்பாளேயானல், அவளைப் பற்றிய நினைவாலேயே, இராவணனும் இராமனும் இறந்துவிடுவார்கள். நம் சமயக் கோட்பாடுகள்படி, இராவணனும் இராமனும் திரும்பவும் பிறந்து தங்களுடைய எண்ணங்களை ஈடேற்ற வகை செய்துகொள்ள நேரிடும்; அப்படி நேருமானல், சீதைக்கு மறுபிறவியிலும் இன்னல்கள் நேர்ந்துகொண்டேயிருக்கும். ஆகையால், சீதை தன் கற்பின் திறத்தால், உள்ளத்தின் உறுதிப்பாட்டால் இராவணனது தீய காமத்தை அவன் மனதினின்று அகற்றவே அமைந்திருந்

தாள். இராமனது மேனியழகும், தோள் வலியும் இராவணன் உள்ளத்திலே ஒரு மாற்றத்தைக் காட்டும் என்று அவள் நினைத்தாள். அவள் கொண்ட கருத்து சரிதானென்ற முடிவிற்கே நாம் வரவேண்டியிருக்கிறது. இ ரா வ ண ன் உள்ளத்திலே முதலில் அறிவு ஒளி சிறிது சிறிதாகத்தோன்றி மறைகிறது. முடிவிலே அறிவொளியே பெருகிக் காமநோய் அவன் உள்ளத்தினின்றும் அறவே மறைந்து விடுகிறது. அமரகவியான கம்பர் இராவணன் உள்ளம் எவ்வாறு தூய்மையடைந்தது என்பதை மிகவும் சிறப்பாகக் கூறு கின்றார். பகைவன் என்று கருதிய இராமனைப் புகழ்ந்து வாயார வாழ்த்துகிறான் இராவணன். இராமனும் இராவண னது திருந்திய மனப்பான்மையைக் கண்டு வியக்கின்ற பகுதிகளை இனிக்காணப் போகின்றோம்.

# 51. அதிகாயன்.

கும்பகருணன் இறந்தபின், இராவணன் தனக்கு அறவுரை கூறப்புகுந்த அரக்கர்மேல் சீறி விழுந்தான். தன் கெடுமதியால் இலங்கைக்கு அழிவைத் தேடித் தந்துவிட்ட இராவணன் சீதையை விடுவதை விட்டு விட்டு, எஞ்சிநின்ற தானைத் தலைவர்களை நோக்கி மண்டியிட்டுத் தலைவணங்கிச் சீதையை இராமனிடம் சேர்ப்பிக்க வேண்டுமென்று கூறு கிறீர்கள். "நன்று; நன்று; சீதையைத் திருப்பிக் கொடுப்ப தென்ற பேச்சே கிடையாது. உங்களை வீரர்களென எண்ணினேன். ஆனால், என் தம்பியைக் காக்க முடியாமல் உங்களுடைய உயிரையே பெரிதெனக் கருதி இருந்து விட்டீர்கள். உங்களால் ஆகுமா, ஆகாதா என்று மட்டும் கூறிவிடுங்கள்; நானே சென்று மானிடரை வென்று வருகிறேன்" என்றான்.

இராவணனுடைய இக் கடுமொழிகளைக் கேட்டதும் அதிகாயன் எழுந்து மானமும் சீற்றமும் பொங்க, "வானத் திலுள்ளவர்கள் அஞ்சுவார்கள்; வையகத்திலுள்ளவர்கள் அஞ்சி ஒதுங்குவார்கள்; திருமாலும், சிவனும் போரைக் கண்டு அஞ்சுவார்கள் என்று நீங்கள் கூறுங்கள். ஆனால், ஒன்று மட்டும் கூறவேண்டா; நான் போருக்கு அஞ்சினேன் என்று கூறினீர்களே, அதுமட்டும் சரியன்று" என்று கூறினான்.

விதிக் கடவுளாகிய பிரமனே வெகுண்டு போருக்கு வந்தாலும் வெல்லமுடியாத வீரனை அதிகாயன் இராவண னுக்குத் தானியமாலினி என்ற மனைவியிடம் பிறந்தவன். "அதிகாயன்" என்றால் பெருந்தோற்றமுள்ள உடல் படைத் தவன் என்று பொருள்படும். பெருந்தோற்றம் மட்டுமே யன்றி அத்தோற்றத்திற்கேற்ற வலிமையுமுடையவனாக இருந்தான் அதிகாயன். அவன் கும்பகருணனைக் கொன்ற இலக்குவனைக் கொன்று இராமனுக்கும், இராவணனுக்கு

ஏற்பட்டது போன்ற துன்பத்தைத் தருவதாகச் சபதம் செய்தான். இராவணனும், "நன்று கூறினாய், நீ இலக்குவனைக் கொன்றுவிடு. நான் இராமனைக் கொன்று விடுகிறேன்" என்றான்.

அதிகாயன் போருக்கு வந்துவிட்டான். அதனைக்கேட்ட வுடனேயே யாவரும் அஞ்சினர். மயிடன் என்ற தூதுவன் அதிகாயனுக்காக இலக்குவனிடம் தூது சென்றான். அவன் இலக்குவனை நோக்கி "அண்ணலே! நீங்கள் கும்ப கருணனைக் கொன்றுவிட்டீர்கள் என்ற செய்தி, எங்களுக்கு ஆறுத்துயர் தந்துவிட்டது. இராவணனுக்கும் பெரும் துயரம் தந்துவிட்டது. அழுகின்ற தாதையின் மனத்துயரை அகற்ற அதிகாயன் உங்களிடம் போர்புரிய வந்திருக்கிறான்," என்றான். இலக்குவன் அவனது உடன்பாட்டைப் பெற்றுக் கொண்டு போரிலே அதிகாயனைச் சந்திப்பதாகக் கூறி மயிடனை அனுப்பினான்.

வீடணன் அரக்கர்களின் வலிமையை நன்கு அறிந் தவன். அதிகாயன் மிகவும் பலம் பொருந்தியவன் என்பதை யும், தனுவேத இரகசியத்தை அறிந்தவனென்பதையும், அவன் அறிவான். தேவர்களுக்கும் தெரியாத பல படை களைத் தன் வலிமையால் பெற்றவன். தருமத்தைத் தவிர வேறு ஒன்றையும் அறியாதவன். வீரமில்லாத பிற தொழில் களைச் செய்ய அவன் நெஞ்சம் கூசும். மாயத் தொழில் புரிபவனாக ஒருவன் இருந்தாலும் அவனை மாயத்தினால் வென்று விடலாம். ஆனால், தறுகண்மையும், வீரமும் ஒருங்கே அமைந்த அதிகாயன் என்ற வீரனை வெல்லுவது சிறிது கடினமே என உரைத்தான் வீடணன். மேலும், அவன் "இலக்குவன் அதிகாயனுடன் போர்புரியட்டும். ஆனால், நாமும் அவனுடன் கூடவே சென்று சமயத்தில் உதவி புரியவேண்டும். இல்லையேல் இலக்குவனுக்குத் துன்பம் நேரினும் நேரும்" என்று இராமனுக்கு இயம்பினான்.

இராமாயணம் முழுதும் பலர் யாகங்களும் தவங்களும் செய்து, பல வரங்களைப் பெற்றதாகப் படித்துள்ளோம். இங்கும் அதிகாயன் நான்கு மறைகளையும் கற்று, அதனால்

தேவர்களும் அறிந்து கொள்ளமுடியாத பல வலிமையுடைய படைகளைப் பெற்றிருந்தான் என்று கூறப்படுகிறது. இதனைக் கம்பர்,

> கற்றுன்மறை நூலோடு கண்ணுதல்பால்
> முற்றுதன தேவர் முரட்படை தாம்
> மற்றுரும் வழங்க வலார்பலவும்
> பெற்றுளொடி தாண்மை பிறந்துடையான்

என்று கூறுகின்றார்.

வேதங்களான நான்மறைகளை நாளும் ஓதுவதாலும், யாகம் தவம் முதலியவைகளைச் செய்வதாலும், அடைவதற்கு முடியாத பெரும் பேருன வீடு பேற்றையே யாவரும் அடைய வேண்டும். ஆனால், வீடுபெற வேண்டுமானால் "நான்" என்ற அகங்காரமும், எனது என்ற ஆசையும் அகல வேண்டும். மற்று, யாகங்களும், தவமும் செய்தவர்களில் பலர் ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்த போதிலும், "தான்" அடங்காப் பேதையர்களாயிருப்பதை நாம் காண்கிறோம். இராவணன் நான்கு வேதங்களையும் நன்கு கற்றவன். அரிய தவங்களும் பல யாகங்களும் செய்தவன். ஆனால், அவன் வீடுபெறுகின்ற வழியை நாடாமல் தீயவழியிலே செல்லத் தலைப்பட்டு விட்டான். இவைகளை நோக்கும்போது, வேதம் கூறுவது கடவுளைப்பற்றிய உண்மைகளை என்றாலும், அஃது ஒரு பகுதியாகவே கருதப்படவேண்டியிருக்கிறது. அதுவே எவராலும் அறியப்படாதவன் கடவுள் என்று கூறும். மேலும், அக்கடவுள் படைத்த உலகத்தைத் துறக்க இன்ப உலகமாகவோ நரகத் துன்பக் குழியாகவோ மாற்றுவதற்கு ஏற்ற வலிமையை மக்களுக்குக் கூறற்பாலது வேதம் என்றால் அது மிகையாகாது.

மேலைநாட்டில் வடமொழிப் படிப்புப் பரந்த பின்புதான், விஞ்ஞான அறிவு மிகுதிப்பட்டதென வடநூலறிஞர் பலரும் கூறுவர். நான்கு வேதங்களையும் ஐயமறக்கற்று யாகங்களையும் தவங்களையும் செய்கின்றவர்கள் விஞ்ஞானிகளாக முடியும் என்பதையும் காண்கிறோம். அருச்சுனன் தவம் செய்து பாசுபதாஸ்திரம் பெற்றான். கன்னன் தவம்செய்து

நாகாஸ்திரம் பெற்ருன். இராவணனும், கும்பகருணனும் தங்களுடைய தவத்தால் பல ஆயுதங்களைப் பெற்ருர்கள் என்று அறிகிருேம். நல்லவர் கெட்டவர் யாவரும் தவம் செய்து பல படைகளைப் பெற்ருர்கள். தெய்வங்களும் வரம் தந்தார்கள் என்று அறியும்போது ஒரு சிக்கல் எழுகின்றது. வீடுபேற்றைத் தரக்கூடிய பெருந் தெய்வங்கள், கேட்டவர் களுக்கெல்லாம் நல்லவர்கள் கெட்டவர்கள் என்று பாகுபாடு காணுமல் தருவது சரியாகத் தோன்றவில்லை. இங்கேதான் புராண இதிகாசங்களை நன்கு ஆராயவேண்டிய அவசியம் உண்டாகிறது.

பஞ்ச பூதங்களின் நுட்பம் கூறும் புத்தம் புதிய கலை களின் திறத்தைப் பலர் தங்களுடைய கல்வியாலும், புத்தி நுட்பத்தாலும், உழைப்பாலும் பெற்ருர்கள். தாங்கள் பெற்ற அறிவைப் பிறரிடம் கூறிஞல் எல்லோரும் அந்த அறிவுப் பலத்தைப் பெற்று விடுவார்களோ என்று அஞ்சி, மக்களிடத் தில் "கடவுள் தந்த செல்வம்" என்று கூறி மறைத்து விட் டார்கள். இதனுல்தான் நம் பாரத நாட்டு விஞ்ஞான உண் மைகள் பல நம் நாட்டில் பரவ வகையில்லாது போய் விட்டன. புராண இதிகாச ஆராய்ச்சியால் தோன்றும் உண்மைகளுள் இதுவும் ஒன்று. நிற்க,

வீடணன் அதிகாயனது தவத்தின் பெருமையையும், வீரத்தையும் கூறியவுடன், இராமன் இலக்குவனது வீரம் அவனைவிடக் குறைந்துவிடாது என்று கூறினுன். வீடணன் இலக்குவனது வீரம் குறைந்தது அல்ல வென்பதை ஒத்துக் கொண்ட போதிலும், அதிகாயன் செய்யும் விற்ருெழிலால் இலக்குவனுக்கு ஊறு ஏற்படுமாஞல், அதனைக் காப்பது இராமன் கடன் என்று கூறிஞன். இராமன் இலக்குவனை நோக்கி "நீ போய் அதிகாயன் சிரத்தை எவ்வளவு இலகு வில் கொய்து தள்ளுவது என்பதைப் பார்த்துவிட்டு வா" என்று விடை கொடுத்து அனுப்பினுன்.

அதிகாயனுக்கும் இலக்குவனுக்கும் கடும் போர் நடந் தது. அதிகாயன் பல வரங்களைப் பெற்றவன் என்பது முன்பே கேள்விப்பட்டது. அவனிடமிருந்த படைகளில்,

எந்தப் படையாலும் பிளக்க முடியாத கவசம் ஒன்று. அதை அவன் பிரமனிடம் பெற்றிருந்தான். இலக்குவன் பல அம்புகளையும், ஆயுதங்களையும் அதிகாயன்மேல் விட்டபோதும், கவசத்தின் சக்தியால் அவைகளை எல்லாம் அவன் தடுத்து நிறுத்திவிட்டான். முடிவில் இலக்குவன் செலுத்திய எல்லாப் படைகளும் அவன் மார்பைப் பிளக்க முடியாமற்போயின. அதனால் இலக்குவன் அவனுடைய மந்திரக்கவசத்தின் உண்மையை அறிய ஆவல் கொண்டான். அனுமன் தந்தையாகிய வாயு அவனிடம் வந்து "குழந்தாய் பிரமனிடம் வரம் பெற்றதால் கிடைத்த பிரம கவசத்தை உடைக்கவேண்டுமானால், பிரமாஸ்திரத்தைத்தான் உபயோகிக்கவேண்டும். ஆகையால் மந்திரத்தை உச்சரித்துப் பிரமாஸ்திரத்தை விடுவாயாக" என்றான். இலக்குவன் பிரமாஸ்திரத்தை உபயோகித்தவுடன், அதிகாயனுடைய கவசம் உடைந்துவிட்டது. அதன் பின்னர், அதிகாயன் யுத்த களத்திலே வீர மரணம் அடைந்தான். அதிகாயன் இலக்குவனால் மடிந்தானென்று கேட்டவுடன் இராவணன் மனம் நடுக்கமுற்றது. அவன் கண்களில் நீர் பெருக ஒன்றும் தோன்றாமல் பித்துப்பிடித்தவன் போலானான்.

ஒரு பெண்ணினாலே தான்பெற்ற துன்பத்தை எண்ணி எண்ணி ஏக்கமுற்றான். பெண் என்ற பெயர் தாங்கிய மக்களினத்தையே உலகில் இல்லாமல் செய்துவிடலாமா என நினைத்தான். புண்ணிலே நெருப்புப் புகுந்ததுபோல மானத்தினால் மனம் புழுங்கி வாடினான்.

அதிகாயன் தாய், தன் மகன் பிரிவாற்றாமையால் மிகவும் வருந்தி, "எதைச் சிந்தித்துக்கொண்டிருக்கிறீர்கள்? எண்ணிறந்த அரக்கர்கள் இறந்துவிட்டதை எண்ணினீர்களா? சீதையின் கற்பினால் நமக்கு என்ன என்ன கேடு வருமோ? அறியேன்; உமது தம்பி கும்பகருணன் கூறிய நல்ல வழியையும் சிந்திக்க மறுத்துவிட்டீர்கள்; கும்பகருணனையும் என் மகன் முதலானவர்களையும் இராமலக்குவர்களுடைய அம்புக்கு இரையாக்கிவிட்டீர்கள். ஐயனே! நல்ல அரசு செலுத்துகின்றீர்கள்" என்றாள்.

புத்திரசோகத்தால் இராவணனும், தானியமாலினியும் வருந்தக்கண்ட இலங்கை மக்கள் யாவரும் என்ன செய்வ தெனத் தெரியாது விம்மி விம்மி அழுதனர். இலங்கையைக் காக்க யாருமில்லையே என்ற கேள்வியையே அரக்கர்கள் கேட்டுக்கொண்டிருந்தனர். அப்பொழுது "நானிருக்கும் போது என்ன பயம்? அரக்கர்களே, என்ன நடந்தது" என்று ஒரு குரல் கேட்டது.

# 52. குரல் கொடுத்த குரிசில்

அதிகாயன் இறந்த பின்பு, இராக்கதர் குலமே அழிந்து விடுவது போலும் நிலைமை தோன்றிற்று. அழிபவர்களைக் காப்பாற்ற யாருமில்லை என்று எண்ணி இராவணன் ஏங்கும் சமயத்தில் "நானிருக்கிறேன்" என்று குரல் எழுந்த தல்லவா? யாருடைய குரலாக இருக்க முடியும்? அது மேக நாதனான இந்திரசித்துவின் இனிய குரல்.

இந்திரசித்துவைப்பற்றி நாம் முன்பே கேள்விப்பட்டிருக்கிறோம். இந்திரனை வென்றதால் இந்திரசித்து என்றும், மேகங்களுக்குள் மறைந்து கர்ச்சித்துப் போர் புரியும் ஆற்றலுடையவனாதலால் மேகநாதன் என்றும் அவன் அழைக்கப் பட்டான். அவன் இராவணனுடைய முதல் மனைவியான மண்டோதரியின் மகன்.

வான்மீகத்தில், கும்பகருணன், அதிகாயன் ஆகியோர் போர் புரிந்து இறக்கு முன்பே, இலக்குவனோடு இந்திரசித்து போர் புரிந்தானென்று கூறப்படுகிறது. நாகபாசத்தைப் பற்றிய செய்திகள், கும்பகருணனும் அதிகாயனும் போர் செய்யுமுன்பே நடந்ததாகக் கூறுகிறார் வான்மீகி. ஆனால் கம்பர், இந்திரசித்துவின் போர்த் திறனைத் தனியாக வரிசையுறக் கூறுகின்றார். இந்திரசித்து மிகவும் வலியவன், அஞ்சுவதை அஞ்சும் அறிவாளன் என்பது கம்பர் கருத்து. இலக்குவனோடு அவன் போர் புரிந்து இறந்தபின், இலங்கையிலே இராவணனைக் காக்கும் திறம் யாருக்குமே இல்லாது போய் விடுவதையும் நாம் பின்னர்ப் பார்ப்போம். சீதையை இராவணன் சிறையிட்டதை விரும்பாத அவன் தன் தந்தையிடம் அவளை விட்டுவிடும்படி பலமுறை வேண்டியும் அவன் கேட்கவில்லை. வலிமைமிக்க விடத்து அறிவு நன்கு வேலை செய்யும். அறிவு இல்லையாயின், வலிமிகுதி சிறப்பு அடையாதன்றோ?

வான்மீகியார் கும்பகருணன் வதத்திற்கு முன்னும் அதிகாயன் வதத்திற்குப் பின்னும் இந்திரசித்து இலக்குவனுடன், இருமுறை போர்செய்தான் என்று கூறுகின்றார். ஆனால் கம்பர்; இந்திரசித்துவை அதிகாயன் இறந்தபின்பே போர்க்களத்திலே நிறுத்தி நமக்கு அறிமுகப்படுத்துகிறார். முதல் நூலாகிய வான்மீகத்திற்கு மாறுபடக் கம்பர் பல விடங்களில் செய்திகளை ஒழுங்குசெய்து கூறுவதை நாம் காணலாம்.

முதற்போரிலே, இராமஇலக்குமணர்களை வெல்ல முடியாமல் இந்திரசித்து திரும்பியதால் இராவணன் கும்ப கருணனையும் அதிகாயனையும் அனுப்பினான் என்று கூறினால் அவனுடைய வீரத்திற்கே இழுக்கு ஏற்படுமோ என அஞ்சியது கம்பருடைய தமிழ் நெஞ்சம். வென்றால் வீடு திரும்புவேன், இன்றேல் சாவேன் என்று மறம் கூறும் நாட்டிலே கம்பர் பிறந்தவராதலால், இந்திரசித்துவின் வீரம் சிறந்தது என்பதை உலகிற்குக் காட்டுவதற்காகத் தனக்கென ஒரு வழியை அமைத்துக்கொண்டார்.

இந்திரசித்து இராவணனிடம் சென்று "அரசே! வலிய சேனைகளையுடைய இராம இலக்குவர்களின் வலிமையை அறிந்தும் என்னை அனுப்பாமல் அதிகாயன் போன்ற சிறுவர்களை அனுப்பிவிட்டீர்கள். அவர்களைக் கொன்றவர் கள் மனிதர்களல்லர். நீங்களே அதற்குக் காரணமாகி விட்டீர்கள். அப்பா! அன்றே அனுமனைக் கொன்றிருந்தால், இராம இலக்குவர்களுக்குச் செய்தியே போய்ச் சேர்ந்திராது. ஒன்று நீங்கள் அவனை அன்றே கொன்றிருக்கவேண்டும். அல்லது சீதையை வீடணன் கூறியபடி விட்டிருக்கவேண் டும். ஆனால் வீடணன் சொல்லிற்குச் செவிசாய்த்து அனுமனை விட்டுவிட்டீர்கள்; அதனால் உட்பகையையும் வளர்த்துக்கொண்டீர்கள்" என்று சொன்னான்.

இராவணன், "மைந்தா, கழிந்து போனவைகளைச் சிந்திப்பதால் என்ன பயன்? நீ சென்று இலக்குவனை நாக பாசத்தால் கட்டி வீழ்த்துவாயானால் இராமனும் சீதையும்

அவன் இறந்துவிட்டான் என்று நினைப்பார்கள். அப்பொழுதுதான் என் மனத்துயர் போகும்" என்றான்.

அரக்கவீரர்களின் பட்டியலிலே பெரு வீரர் அனைவரும் அழிந்துபட்டனர். எஞ்சியுள்ளவர்கள், இராவணனும் இந்திரசித்தும்தான். ஆகையால், போருக்கு இராவணனோ இந்திரசித்தோ வரக்கூடுமென்று இலக்குவன் தன் படைகளுடன் காத்திருந்தான்.

பெருஞ் சேனையுடன் வரும் இந்திரசித்தை இலக்குவன் கண்டான்; யார் என்று தெரியாததால் வீடணனை நோக்கி, "இதோ, நம்மை நோக்கி வருபவன் யார்?" என்று கேட்டான்.

இந்திரசித்துவின் வல்லமையை உணர்ந்தவன் வீடணன். இலக்குவனிடம் அவனுடைய வலிமையையும் பெருமையையும் எடுத்துக் கூறித் துணைவலியுடன் சென்றாலன்றி அவனை வெல்லுதல் அரிது என்று கூறினான். அப்பொழுது அனுமன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் இராமஇலக்குவர்களுக்கு ஒரு தீங்கும் நேராவண்ணம் காக்கும் கடமை தன்னதென நினைப்பவன். இந்திரசித்து போருக்குப் புறப்பட்டான் என்று கேட்டவுடனேயே அவர்களைப் பாதுகாப்பதற்காகத் தயாராக வந்துவிட்டான் அனுமன்.

இலக்குவன், சுக்கிரீவன் முதலியோருடைய துணைவலியுடனும் மிகுந்த சேனையுடனும், இந்திரசித்தைப் போரிலே எதிரேற்றுச் சென்றான்.

இருபெரும் சேனைகளும் போர் தொடங்கின; பலர் மாண்டனர். அனுமனும் சுக்கிரீவனும் இந்திரசித்தின் வலிமை தாங்கமாட்டாது வருந்தினர். இதனைக் கண்ட இலக்குவன், வீடணனை நோக்கி "நாம் செய்த காரியம் மிகவும் தவறு; நாமே போருக்குச் செல்லாமல் சேனைகளை ஏவியது குற்றமாகும். நானே சென்று இவன் உயிரை வாங்கியிருக்கவேண்டும்; தவறிவிட்டேன்" என்று கூறினான்.

வீடணன் "நன்று கூறினீர்கள். தங்களைத் தவிர வேறு யாரும் இவனை வெல்லமுடியாது. ஆகையால், நீங்களே போர்க்குச் சென்று, இவனைக் கொன்றாலன்றி இவ்வுலகத் திலுள்ளவர்களெல்லாம் உயிரோடு பிழைக்க வழியில்லை" என்றான்.

நாட்டைவிட்டுக் காட்டிற்கு வந்து ஏறத்தாழப் பதினான்கு ஆண்டுகள் சென்றபின்னும் இராமஇலக்குவர் களின் பெருமை உலக முழுவதும் பரவவில்லை என்று கம்பர் கருதுகின்றார். பரதனுடைய பெயர் கோசல நாட்டில் மட்டு மின்றிக் காட்டிலும் பரவியிருந்தது என்பதை நாம் வாலி யின் மூலம் அறிந்தோம். "பரதன் முன் தோன்றினாயே" என்று வாலி கூறி அவனுடைய புகழையே தான் அறிந்திருந் ததைத் தெரிவித்தான். இப்பொழுதோ, இந்திரனை வென்ற இந்திரசித்து, இலக்குவனைக் கண்டவுடன் பரதனையே தன் நினைவிலே கொண்டுவருவதைக் காண்கிறோம்.

போர்க்களத்திலே இலக்குவனைக்கண்ட இந்திரசித்து ஒற்றனை நோக்கிப் "பரதனுடைய தமையனான இராமனுக்குத் தம்பி இலக்குவன் இவன்தானோ?" என்று கேட்கிறான். இராமனைப் பரதனுடைய அண்ணன் என்றுதான் இந்திரசித்து அறிந்திருந்தானே யன்றி, அவன் இரகுகுல திலகன் என்பதை அறியவில்லை. "உயர்ந்தவன்" என்ற சொல்லிற்கே பொருளாக உள்ள "ராமா" என்ற திருநாமம், பிற்காலத்தில் உலக முழுவதும் பரந்திருக்கப்போகிறதென் பதையும் அறியாது, அவன் "பரதனுக்கு அண்ணன் இராமன்" என்று கூறுகிறான். அன்று உலக முழுவதும் பெயர் பரந்த பரதனது புகழ் இன்றும் சிறந்தே உளது. இதனைக் கம்பர் இராமன் தம்பி பரதன் என்று ஆகிவிட்டது" என்பாராய்,

"என்பது சொல்லக் கேட்ட
 இந்திர வில்லி னோடும்
பொன்பொரு மேகம் ஒன்று
 வருவ போல் பொரு கின்றானை

முன்பனை முன்பு நோக்கி
இவன் கொலாம் பரதன் முன்னேன்
தன் பெருந் தம்பி என்றான்
ஆம் எனச் சாரன் சொன்னான்''

என்று பாடுகின்றார்.

பரதனுக்கு அண்ணன் இராமன். அவனுக்குத் தம்பி இலக்குவன். இந்திரசித்து அறிந்தது இதுதான். இரகு குலத்திற்கே திலகமாக விளங்குவான் என்ற எண்ணத்திலே தசரதனும் கைகேயியும் இராமனுக்கே முடிசூட்ட நினைத் தனர். ஆனால் அம்முடிசூட்டு நடைபெறுமலே போயிற்று. பாராளப் பரதன் உளன் என்று கூனி சொன்னாள். "கன்யா சுல்கம்'' அவளுக்குத் துணை செய்தது. இராமன் காட்டிற்கு வரவேண்டியதாயிற்று; இப்போது கடும்போரில் வெற்றி தோல்வியைக் காணும் நிலையில் அவன் இருக்கிறான்.

நாம் பாலகாண்டம் முதல் யுத்தகாண்டம் வரையில் இராமயணத்தைப் படிக்கும்போது இராமனை ஒத்த மரியாதையையும் சிறப்பையும் பரதன் பெறுவதைப் பார்க் கிறோம். இஃது ஏன் எனவும் ஐயுற்றிருக்கிறோம். இலக்கு வனும், பரதனும், சத்துருக்கனனும், இராமனுக்குத் தம்பியர் களாவார்கள். இவருள் இலக்குவனும், சத்துருக்கனனும் ஒரு தாய் வயிற்று உடன் பிறந்த தம்பியர். இப்படி இருப் பினும், சுமத்திரை பெற்ற இரு மக்களுள், ஒருவன் இராம னுக்குப் பணிவிடை செய்யவும் ஒருவன் பரதனுக்குப் பணி புரியவும் எவ்வாறு நேர்ந்தது என்று ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

பரதன் என்ற பெயருக்குப் பாரை ஆள்பவன் என்று பெயர். சகுந்தலையின் மகனுக்கு இப்பெயரைச் சூட்டி அவன் பார் முழுவதும் ஆள்வான் எனக் கூறினர். பரதன் ஆண்ட பூமியாதலால் பரதகண்டம் என்று நம் நாட்டிற்குப் பெயர் வந்தது என்பர்.

மூத்த மகனாக இல்லாவிட்டாலும், கன்யா சுல்கத்தின்படி, பரதனே பேரரசனாகத் தக்கவனாகின்றான். ஆனால் கைகேயி

மயில்முறைக் குலத்திலே பிறந்தவளாதலால் இராமனுக்கு முடிசூட்ட வேண்டுமென்ற எண்ணத்தால் பரதனைத் தன் அண்ணன் வீட்டிற்கு அனுப்பிவிடுகிறாள். ஏறத்தாழப் பதின்மூன்று ஆண்டுகள் பரதன் பல நாடுகளுக்குச் சென்று தன் வள்ளன்மையையும் வீரத்தையும் உலகறியச் செய்து விடுகிறான். ஆனால் இராமன் அயோத்தி நாட்டைவிட்டு வெளிச் செல்லாததால், யாரும் அறியாத வகையிலே வாழ்ந்து வந்து விடுகிறான். இக்காரணம் கொண்டுதான், வாலி, இந்திரசித்து முதலானோர்கள் பரதனை அறிந்திருந்தாற்போல இராமனையும் இலக்குவனையும் அறியாது போனார்கள்.

## 53. நாகபாசம்

இலக்குவனுக்கும் இந்திரசித்துவுக்கும் கடும்போர் நடந்தது. நெடுங்காலம் வெற்றி தோல்வி காணாத இப் போராட்டத்தைக் கண்டு தேவர்களும் அஞ்சினர். இலக்குவனது திறம் மிகவும் உயர்ந்திருந்ததனால் இந்திரசித்துத் திகைத்தான். பின்னர் ஆகாயத்திலே மறைந்து நாகபாசத்தை விடுவது என்று முடிவு செய்தான். அவன் மேகத்திடையே மறைந்ததைக் கண்ட இலக்குவனும் வானரப்படைகளும், அவன் புறமுதுகுகாட்டிச் சென்று விட்டான் என்றே நினைத்தனர். அவன் மேகங்களில் மறைந்துகொண்டு தான் தவ வலியால் பெற்றிருந்த நாக பாசத்தை இலக்குவன்மேல் செலுத்தினான். இந்திரசித்து வின் கவசத்தைப் பிளந்துவிட்டதால்தான் அவன் ஓடி ஒளிந்தான் என்று எண்ணிய இலக்குவனுடைய வயிரத் தோள்களைத் திடீர் என்று நாகபாசப் படை சுற்றிக்கொண் டது. அவனும் அயர்ந்துவிழுந்தான். இதனைக் கம்பர்,

> "விட்டனன் அரக்கன், வெய்ய
> படையினை விடுத்த லோடும்,
> எட்டினோ டிரண்டு திக்கும்
> இருள் திரிந் திரிய ஓடிக்
> கட்டினது என்ப மன்னோ
> காகுத்தற் கிளைய காளை
> வட்டவான் வயிரத் திண் தோள்
> மலைகளை உளைய வாங்கி"

என்று பாடுகிறார்.

ஒரு காலத்தில், இராவணன் வாலியை வெல்லவேண்டு மென்று கிட்கிந்தைக்குச்சென்றான். கடலிலே நீராடிக்கொண் டிருந்த வாலியைப் பின்புறமாகச் சென்று கட்டுவதற்குச் சென்றான் இராவணன். இதனைக் கடைக்கண்ணால் கண்ட

வாலி, தன்னுடைய வாலினால் தசக்கிரீவனுடைய தோள்களைக் கட்டினான். பின்னர் இராவணன், அவனிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ள, வாலியும் இராவணனும் நண்பர்களானார்கள். அதுபோல, அனுமனும் நாகபாசத்தால் கட்டுப்பட்டான். ஆனால், அனுமன், நாகபாசத்தையும் வென்றுவிடலாம் என்ற எண்ணத்தாலே குதித்து ஆகாயத்திலே எழுந்தான். ஆயினும் அவனை நாகபாசம் கட்டியது. வாலியின் வால் எப்படித் தசக்கிரீவனது உடலை வளைத்துக் கட்டியதோ, அதுபோல இந்திரசித்துவின் நாகபாசம் அனுமனையும் கட்டியது என்ற இதனை,

"காலுடைச் சிறுவன் மாயக்
கள்வனைக் கணத்தின் காலை
மேல்விசைத் தெழுந்து நாடிப்
பிடிப்பன் என்று உறுக்கும்வேலை
ஏல்புடைப் பாசம் வன்றோள்
இராவணன் புயத்தை வாலி
வால்பிணித் தென்னச் சுற்றிப்
பிணித்தது வயிரத் தோளை"

என்று கம்பர் குறிக்கின்றார்.

அதுகண்ட வானர சேனைகள் யாவும், தங்கள் நிலை அறியாது சோர்வுற்றுத் திணறின. அனுமன் ஒருவனே அந் நாகபாசப் பிடியினின்று தப்பினான். என்றாலும், இலக்குவன் உயிரற்றவன்போலக் காணப்படுவதைக் கண்டதும் அனுமன் மிகவும் அஞ்சினான். பிரமசாரியும் பெருஞானியுமாகிய அனுமனது ஆன்ம பலத்துக்கு உடைந்து அவன் தோளைப் பிணித்த நாகபாசம் அறுந்து வீழ்ந்தது. அது கண்டதும் கம்பரது புலமையுள்ளம் சத்துவகுண விளக்கத்திற் புகுந்து ஞானநெறியில் உலவத்தொடங்கிற்று.

உவமை கூறமுடியாத இலக்குவன் நாகபாசத்தால் கட்டுப்பட்டுச் சோர்வுற்ற நிலையில் தனக்கு வல்லமையிருந்தும் அதை அறியாதவனாய் நின்றான். "சம்சார பந்தம் என்ற கட்டுக்களை நீக்கவல்ல திறமையுடைய ஆன்மாக்கள்

எவ்வாறு அஞ்ஞானத்தால் கட்டுண்டிருக்கின்றனவோ அது போல அவனும் இருந்தான்" என்பாராய்க் கம்பர்,

"வெப்பாகும் பாசம் வீக்கி
வெங்கணை வளைக்கு மெய்யன்,
ஒப்பாரு மில்லான் தம்பி
உணர்ந்திருந் தின்ன லுய்ப்பான்
இப்பாச மாய்க்கும் மாயம்
யான்வல்லன் என்ப தோர்ந்தும்
அப்பாசம் வீட ஆற்ருது
அழிந்த நல்லறிவு போன்ருன்"

என்கிருர்.

இராவணனுக்குச் செய்தி தெரிவித்துவிட்டு இந்திரசித்துத் தன் அரண்மனைக்குச் சென்றுவிட்டான். தந்தையின் துன்பம் தீர்ந்துவிட்டது என்ற எண்ணத்திலே இந்திரசித்து, தன் மனத்திலுண்டாகியிருந்த அயர்ச்சியைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு, தன் இருப்பிடத்திற்குச் சென்று களைப்பாறினன். ஆனல், அவன் இராமனுக்கும் மற்றவர்களுக்கும் ஆருத துன்பத்தைத் தந்துவிட்டான். சீதையை இழந்த துன்பத்தைப் பொறுக்கமாட்டாது நிற்கும் இராமனுக்கு இலக்குவன் பிழைக்கமாட்டான் என்ற செய்தி எத்துணைத் துயரைத் தந்திருக்கக்கூடும்! வீடணனே மனம் உடைந்த நிலையிலே இருந்தானென்ருல், இராமன் இச் செய்தியைக் கேட்டபின் என்ன பாடுபட்டிருப்பான்!

அனலன் என்ற அரக்கன் வீடணனுடன் இலங்கையிலிருந்து வந்தவர்களில் ஒருவன். அவன் வீடணனைத் தேற்றிவிட்டு இராமனிடம் இலக்குவனுக்கு நேர்ந்த ஆபத்தைக் கூறச் சென்ருன். இராமன் துயரக் கடலிலே மூழ்கினன்.

இராமன் பலவாறு புலம்பிக்கொண்டிருக்கையில், இருள் சூழ்ந்து கொண்டது. இராமனது புலம்பலைக் கேட்டு இருள் வந்ததோ, சோக நிகழ்ச்சிகளைக் காணமுடியாது பகற் போது கழிந்ததோ என்று ஐயுறும் வண்ணம் அந்த நாள் முடிந்தது.

இராமன் இருளைப் போக்கும் பொருட்டு ஆக்கினேய பாணத்தைச் செலுத்தினன். ஆக்கினேய பாணம் என்பது அக்கினியைக் கக்கும் பாணம். இதனைக் கம்பர்,

"ஆரிருள் அன்னதாக
ஆயிர நாமத் தண்ணல்
சீரிய அனலித் தெய்வப் படைக்கலம்
தெரிந்து வாங்கிப்
பாரிய விடுத்தலோடும்
பகையிருள் இரிந்து மாறச்
சூரியன் உச்சி யுற்ற
லொத்தது அவ்வுலகின் சூழல்"

என்கிருர்.

இராமன் தன் படையின் மூலம் சூரிய வெளிச்சத்தை ஒத்த பிரகாசத்தை உண்டாக்கி இருளைப் போக்கினன் என்று கம்பர் முன்பே ஒரு முறை கூறியிருக்கிருர். ஆரணிய காண்டத்திலே இலக்குவனை அயோமுகி தூக்கிச் சென்ற போது இராமன் ஒரு படையை விட வெளிச்சம் வந்ததாகவும் அதன் துணைகொண்டு தன் தம்பியைத் தேடியதாகவும் கண்டோம். இதனுல் இருளைப் போக்க ஒளியும், ஒளியை மறைக்க இருளும், நீரைப் போக்க நெருப்பும், நெருப்பைப் போக்க நீரும் பண்டையோர் பாணங்களால் வருவிக்கப்பட்ட திறம் தெரிகிறது. மின்சாரக் கை விளக்கைத் (பாட்டரி லைட்) திருப்புவதுபோல் அவன் படைகளை உபயோகிப்பது நமக்கு வியப்பைத் தருகிறது.

இராமன் போர்க்களம் சென்று உயிரற்றவன் போலச் சாய்ந்து கிடந்த இலக்குவனைக் கண்டான்; ஆராத்துயர மடைந்தான்; உடனே தன் விதியை நொந்துகொண்டான். வீடணன் தன்னை வஞ்சித்து விட்டானே என்று அவன் நினைத்தான் போலும். இந்த எண்ணம் மேலிட வீடணனை நோக்கி "என்னை நீ கெடுத்து விட்டாய், இலக்குவனுக்கும் இந்திரசித்துக்கும் பெரும் போர் நேரிடவும், அதனை எனக்கு வந்து கூருது விட்டுவிட்டாய். தெரிவித்திருந்தால், இந்த

நாகபாசத்தையும், இதனை விடுத்தவன் கையொடு தலையையும் அழித்தொழித்திருப்பேன். என் தம்பியின் கதி இது தானு?" என்று அலறினன். பின்னர், "இந்த நாகபாசம், எவ்வாறு இந்திரசித்துக்குக் கிடைத்தது கூறுக" என்று கேட்டான். அப்போது, தேவலோக மக்கள் விண்ணுலகத்திலிருந்து இராமனது துயரத்தைக் கண்டு வியந்தனர்; வியப்போடு மட்டுமல்லாமல் நடுங்கவும் செய்தனர். வீடணன் என்ன பதில் கூறப்போகிருன் என்று அவர்கள் கருத்தாகக் கவனித்தனர். வீடணன், "அண்ணலே, இந்த வலிய படை பிரமனுல் அவன் செய்த யாகத்தில் தோற்றுவிக்கப்பட்டதாகும். சிவபெருமான் இதனைப் பிரமனிடம் வாங்கிக்கொண்டான். இந்திரசித்து இதனைப் பல யாகங்கள் செய்து சிவனிடமிருந்து பெற்றுக்கொண்டான். இதன் உதவியால் இந்திரன், அனுமன், இலக்குவன் முதலானவர்களைக் கட்டிவிட்டான். இந்தப் படை ஊழிக் காலத்தில் ஏற்படும் இடிபோன்ற தன்மையுடையது" என்ருன். இதனைக் கம்பர்,

"ஆழியம் செல்வ பண்டு இவ்
    வகலிடம் அளித்த அண்ணல்
வேள்வியிற் படைத்தது, ஈசன்
    வேண்டினன் பெற்று வெற்றி
தாழ்வறு சிந்தையோர்க்குத்
    தவத்தினுல் அளித்து ஆணை
ஊழியின் நிமிர்ந்த காலத்து
    உருமினது ஊற்றம் ஈதால்"

என்று குறிக்கின்ருர்.

இராமன் வீடணனை நோக்கி "நான் இப்பொழுது யார் மேல் படை எடுத்துச் செல்வது? இப்படையைக் கொடுத்த பிரமன் முதலிய தேவர்களிடம் போர் புரியச் செல்வதா? அவ்வாறு செய்யின் உலகமே அழிந்துவிடும். மூன்று உலகங்களையும் சிவபெருமான்போல் யான் சுட்டு நீருக்கி விடுவேன்" என்று பலவாறு கூறலானுன். இதனைக் கம்பர்,

"வரம் கொடுத்து இனைய பாசம்
வழங்கினுன் தானே நேர்வந்து

இரங்கிடத் தக்க துண்டேல்
இகழ்கிலன் நின்னை யென்னின்

உரங் கெடுத்து உலக மூன்றும்
ஒருவன் ஓர் அம்பிற் சுட்ட

புரங்களின் தீய்த்துக் காண்பான்
பொடியொடு கடிகைப் போழ்தில்"

என்று கூறுகிருர்.

தான் உலகை அழிக்கக்கூடிய வல்லமை பெற்றிருந்தும், தன் தம்பி ஒருவனுக்காக உலகமே அழியக்கூடாது என எண்ணினுன். "ஏகः பாபா நிகிருதே பலம் புங்கதே மகாஜநः" (ஒருவன் செய்த பாவத்தின் பயனுக, மற்றவர் களும் துன்பங்களை அனுபவிக்கின்றனர்) சோக நாடகங் களை நாம் முறையாக நோக்கும்போது, தலைவன் தவறு செய்த காலத்தே, அஃது அவனை அழிப்பதோடு மட்டுமல் லாமல், அவனுடைய குலத்தையும் அவனுடைய எதிரிகளை யும் அழித்துவிடுகிறது. எடுத்துக்காட்டாக லியர் மன்னன் முன்கோபத்தினுல், கார்டிலியாவை அரண்மனையினின்றும் துரத்திவிட்டான். அவன் செய்த இப்பிழையினுல் முடிவில் அவன் மட்டுமன்றிக் கார்டிலியாவும் மடிய நேர்ந்தது. அவனைத் துன்புறுத்திய கானரலும், ரீகனும் கூடவே அழிந் தனர். அதுபோலத் தசரதனும் இராவணனும் செய்த பிழை களால் இரு குலமுமே அழியும் நிலையிலே இருப்பதை இப் பொழுது காண்கிருேம். இராவணன் காமத்தின் வயப்பட்ட தால் தன் குலத்தை அழித்துக்கொள்ள ஏதுவானுன். தசரதன் ஆராயாமல் இராமனுக்கு முடிசூட்ட எண்ணிய தால் தான் உயிர்நீத்தது மட்டுமல்லாமல் இராமனுக்கும் இலக்குவனுக்கும் பல இன்னல்கள் எய்தும்படி செய்து விட்டான். இந்த அவல நாடகத்தின் பிடியினின்று விடு பட்டவன் பரதன் ஒருவன்தான். இதனுல் தான் "எத்தாயின் வயிற்றில் பின் பிறந்தார் ஒத்தால் பரதன் பெரிதும் உத்த

மன் ஆவதுண்டோ" என்று பலமுறை வியப்படைகிறான் இராமன்.

இங்கு, இராமன், இந்திரசித்து விடுத்த படையினால் இலக்குவன் மாண்டதாகவே கருதினான். அவன் இறந்து பட்டதற்காக உலகை அழிப்பது தவறு என்ற எண்ணமும் கொண்டான். வீடணனிடம், "இப்பொழுது இந்திரசித்து என்பான் துன்பத்தை உண்டாக்க நான் அதற்காக அருமை யான உலகத்தை வென்று அழித்தல் முறையன்று" என்று கூறினான். இதனைக் கம்பர்,

> "என்றுகொண்டு இயம்பி ஈண்டு இன்று
> ஒருவன் இங்கு இடுக்கண்செய்ய
> வென்று அரும் உலகை மாய்த்தல்
> விதியன்றால் என்று விம்மி
> நின்று நின்று உன்னி யுன்னி
> நெடிதுயிர்த்து அலக்கணுற்றான்
> தன்துணைத் தம்பி தன்மேல்
> துணைவர் மேல் தாழ்ந்த அன்பால்"

என்று கூறுகின்றார். இத்தகைய நினைவும் செயலும்தான் இராமனை உயர்ந்தோனாக்குகின்றன.

நாகபாசத்தால் தம்பி இறந்துவிடுவானேயானால் தானும் மடிவதாகக் கூறி அழுதான். இதைக் கண்ட விண்ணுலகத்தவர்கள், மதி கலங்கி யாது செய்வது என்று எண்ணி எண்ணி விம்முறுகின்றனர். அவர்கள் அருகி லிருந்த கருடன், எதற்கும் அஞ்சாத இராமன் மனம் கலங்கி யதைக் கண்டு வருந்திக் கோடி காதமளவும் பார்வை செல்லவல்ல தன் கண்கள் நீர் பொழிய இரகுகுல திலகனது துன்பம் தீரவேண்டுமென்று எண்ணினான். இந்த எண்ணம் மேலோங்கவே அவன் தன் ஒளியினால் உலக மெல்லாம் மூடியிருந்த இருள் அகலத் திசையானைகளும் கண்கள் கூசி மூட, சிறகுகளின் அடிப்பால் ஏற்பட்ட காற்றி னால் மேருமலையும் நாகபாசமும் நிலைகுலையச் செம்மேனியும்

வெண்கழுத்தும் ஏக காலத்தில் சிவந்த வெயிலையும் வெண்ணிலாவையும் எங்கும் பரப்ப இராமனிடம் ஓடிவந்து, "பிரமாதி தேவர்களைப் படைத்த பெருந்தேவனே! எல்லோருடைய துன்பங்களையும் தீர்க்கும் நீ துன்புறுதல் என்ன செயலோ! எம்பெருமான் வருந்தாதே; எல்லாம் உடையாய் வருந்தாதே!" என்று கூறினன். கருடன் வந்த பின் நாக பாசம் இலக்குவனை விட்டு அகன்றது. இராமனும் மகிழ்வுற்றான். கருடன் இராமனிடம் விடைபெற்றுச் சென்றபின் வானரர் ஆரவாரித்தனர். இந்த ஆரவாரத்தை இராவணன் கேட்டான்.

## 54. மகரக் கண்ணன்.

நாகபாசம் பற்றிய செய்திகளைக் கும்பகருணன், அதிகாயன் ஆகியோர் வதத்திற்கு முன்பு நடந்ததாக வான்மீகி கூறினரென்பதை முன்பே காட்டியுள்ளோம். நாகபாசத்தால் இலக்குவன் கட்டுண்டு மூர்ச்சித்திருக்கையில் சீதையை விமானத்திலேற்றி இவ் அவல நிலையைக் காணச் செய்தனர் அரக்கர் தலைவர். இராமன் நாகபாசத்தின் கட்டில் விழவில்லையென்று கம்பர் கூறுகின்றார். ஆனால் வான்மீகியோ, இராமனும் நாகபாசத்தால் கட்டுண்டான் என்றும், பின்னர், மூர்ச்சை தெளிந்து எழுந்தான் என்றும் கூறுகின்றார். இராமனை மனிதனுகக் கண்டவர் வான்மீகி. ஆனால், இராமன் திருமாலின் கூறு என்று நினைப்பவர் கம்பர். ஆகையால்தான் இந்த வேறுபாடு

இந்திரசித்து அரிய தவம் செய்து நாகபாசத்தைச் சிவனிடமிருந்து பெற்றுக்கொண்டான். அதையே அவன் இராமஇலக்குவர் மேல் ஏவினன். திருமாலின் கூருன இராமனே நாகபாசத்தை வெல்ல முடியவில்லை என்பது வியப்பினும் வியப்பாக இருக்கின்றதல்லவா? மும்மூர்த்திகளும் படைக்கமுடியாத படையை யார் படைத்தார்கள். இதுவும் ஒரு விளங்காத புதிர்தான். நிற்க.

மும்மூர்த்திகளும் படைக்கமுடியாத படையை இந்திரசித்துப் பெற்றிருந்தான் என்ற பெருமிதத்துடன் இராவணன் கொலுவீற்றிருக்கையில், வானரர்களின் ஆரவாரம் அந்த மனக்கோட்டைகளைத் தகர்த்து எறியத் தொடங்கியது. உடனே அவன் இந்திரசித்துவின் மாளிகைக்குச் சென்றுன்.

இந்திரசித்து மிகவும் சோர்ந்த நிலையிலே படுத்திருந்தான். இலக்குவனுடைய அம்புகளினல் துளைக்கப்பட்ட புண்களினின்றும் இரத்தம் நீர்க்குமிழ்கள்போல வடிந்து

கொண்டிருந்தது. அந்த வேதனையைப் பொறுக்கமாட்டாதவனாய் ஓர் ஆண் சிங்கத்தின் பல்லாலும் நகத்தாலும் முறியடிக்கப்பட்ட ஆண் யானையைப் போல் வலி இழந்தவனாக இந்திரசித்து வீழ்ந்து கிடந்தான்.

இராவணன் தன் மகனை நோக்கி "மைந்த வலியிழந்து வாடியிருக்கும் உன் வடிவம் வற்றாத கண்ணீரை வடிக்கச் செய்கிறது, என்ன நேர்ந்தது? கூறுக" என்றான்.

இந்திரசித்து: ஐயனே, இலக்குவனது படைவலி அளவிட முடியாதது. அவனுடைய அம்புகள் என் மார்பைத் துளைத்துவிட்டன. என் உடம்பில் அணிந்த கவசங்களையும் பிளந்து அழிவில்லாத என் குருதியைக் குடித்துவிட்டன. மிகவும் தளர்ந்துவிட்டேன். கண்களும் மங்கிவிட்டன. மாயையினால் தப்பி மறைந்தேன். இல்லையானால் இறந்திருப்பேன். பின்னர் நாகபாசத்தைவிட்டு இலக்குவனைக் கட்டிவிட்டு இங்கு வந்துள்ளேன்.

இராவணன்: மைந்த, இலக்குவன் இன்னும் நாகபாசத்தால் கட்டுப்படவில்லை; விடுபட்டுவிட்டான். பகைவர் செய்த ஆரவாரத்தைக் கேட்டிலைபோலும்.

இந்திரசித்து: ஐயனே, மும்மூர்த்திகளாலும் படைக்க முடியாத நாகபாசத்தினின்றும் இலக்குவன் விடுபட்டுவிட்டான் என்று சொல்லுவது அந்தப் படைக்கே இழுக்குத் தரும் ஒரு சொல்லன்றோ? இஃது உண்மையானால் இந்தப் படையை எனக்குத் தந்த சிவனும் அவனுக்கு இப்படையைத் தந்த பிரமனும் சிறுமையடைவார்களே! என்றான்.

போர்க்களத்திலிருந்து வந்த தூதுவர்கள் கருடன் வரலாற்றைக் கூறி இலக்குவன் துயிலினின்று எழுந்தவன் போல் எழுந்துவிட்டான் என்று கூறினார்கள்.

இராவணன், கருடனைப் பழித்துவிட்டு இந்திரசித்துவைத் திரும்பவும் போர் புரியும்படி வேண்டினான். அது கேட்ட இந்திரசித்து, " தந்தையே, நான் மிகவும் சோர்ந்து போயிருக்கிறேன். இன்று ஒரு பொழுதுமட்டும் பொறுத்துக்கொள்ளுங்கள். நாளைப் போர்க்களத்திற்குச் சென்று

தெய்வத் தன்மையுள்ள பிரம பாணத்தினுல் உங்கள் மனத் துன்பத்தை ஒழிப்பேன்" என்ருன்.

"அவ்வாறே செய்" என்று கூறிவிட்டு, இராவணனும் தன் மாளிகைக்குச் சென்ருன். இதனைக் கம்பர்,

" இன்று ஒரு பொழுது தாழ்த்து என்
இகற் பெருஞ்சிரமம் நீங்கிச்
சென்று ஒரு கணத்தில் நாளை
நான்முகன் படைத்த தெய்வ
வென்றிசெய் படையினுல் உன்
மனத்துயர் மீட்பன் என்ருன்;
நன்றென அரக்கன் போய்த்தன்
நளிமலர்க் கோயில் புக்கான் "

என்று கூறுகின்ருர்.

இந்திரசித்துத் திரும்பவும் போருக்குச் செல்லுமுன், படைத்தலைவர்கள் பலர் இராமஇலக்குவர்களுடன் போரிட்டு மடிந்தனர். மகரக்கண்ணன் என்பவன், அரக்கர் படைகளில் மிகச் சிறந்தவனுகக் கருதப்பட்டவன். இவன் கரனுடைய புதல்வன். இந்தக் கரனைத்தான் இராமன் காட்டிற்கு வந்த வுடன் கொன்ருன். பழைய பகைமையைத் தீர்த்துக் கொள்ள எண்ணி மகரக்கண்ணன் இராவணனிடம் விடை பெற்றுக்கொள்ளச் சென்ருன். இராவணன் அவனை நோக்கி "நன்று கூறினுய்; படுகளம் சென்று பழம் பகை தீர்ப்பாயாக" என வாழ்த்தி அனுப்பினுன்.

மகரக்கண்ணன், இராமன் இருக்குமிடத்திற்குத் தேரைச் செலுத்திக்கொண்டு போவதைக்கண்ட வானரர்கள் அவன் இந்திரசித்தோ என எண்ணி நடுநடுங்கி நிலை குலைந்து வருந்தினர். மகரக்கண்ணன் வானரர்களை அலட்சியமாகப் பார்த்துவிட்டு இராமனிடம் நேரிலே சென்ருன். இரகுகுல திலகனை நோக்கி "நான் திருமூர்த்தி களையும் எரிக்கவல்லவன் என்ருலும் நான் அவர்களை விடுத்து ஏன் உன்னிடம் வந்தேனென்ருல், நீ என் தந்தை யைக் கொன்றவன் என்ற காரணத்தால்; தொன்று தொட்ட பகை நம் இருவரிடையே உளது" என்ருன். இராமன்,

"ஓ, நீ கரனுக்கு மகனு? நாட்பட்ட பகையைத் தீர்த்தற்கு வந்திருக்கிருய், முறைதான். வீரராய்ப் பிறந்தார்க்கு ஏற்ற முறையிலே உள்ளது உன் செய்கை" என்ருன்.

மகரக்கண்ணனுக்கும் இராமன் படைக்கும் பெரும் போர் மூண்டது. இராமனுடைய படை வலிமையைத் தாங்கமாட்டாமல் மகரக்கண்ணன் மாயையினுல் வெல்வது என்று முடிவு செய்தான். தன் தவ வலிமையால், பேரிடி காற்று முதலியவற்றை உண்டாக்கினுன். தவத்தின் வலிமை யினுல் பலகோடி இடிகள் விழுந்தன. சண்டமாருதம் வீசியது. மேகங்கள் கல்மாரி பொழிந்தன. வானர சேனைகள் நிலைகுலைந்து பல திக்குகளிலும் ஓடி ஒளித்தன. போன திசையெல்லாம் புகையும் நெருப்பும் கவிந்து கொள்ளவே பல்லாயிர வானரங்கள் மடிந்தன. இராமன் வீடணனை நோக்கி, "இவ்வாறு நிகழ்ந்ததற்குக் காரணம் தவ வலிமையா, மாய வித்தையா" என்று கேட்க, அவன், "இவன் செய்த பெரும் தவத்தைக் கண்டு வாயு தேவனும் வருண தேவனும் அளித்த வர பலத்தினுல் நேர்ந்தன," என்று கூறினுன். இராமன் மாற்றுக் கண்டுள்ளேன் எனக் கூறி வருணுத்திரத்தையும் வாயுவாத்திரத்தையும் செலுத்தி னுகை மாயையால் மகரக்கண்ணன் விடுத்த மழையும் காற்றும் நின்றன. நின்றுவிடவே மகரக்கண்ணன் மாயைக்குள் மறைந்து போரிடத் தொடங்கித் தன் மாயத் தினுல் வரம்பில்லாத ஓர் உருவத்தை வகுத்துக்கொண்டு தான் எவ்விடத்தில் உள்ளான் என்பதைப் பிறர் அறியா வண்ணம் செய்து கொண்டான். இதனைக் கம்பர்,

"மாயத்தால் வகுத்தான் யாண்டும்
வரம்பிலா வுருவத்தான், எத்
தேயத்தான் எனரு வண்ணம்
கரந்தனன் தெரிந்திலாதான்;
காயத்தால் இனையன் என்று
நினையலாங் கருத்தனல்லன்
தீயொத்தான் திறத்தின் என்னை
செய்கென சிந்தை நொந்தான்"

என்று கூறுகின்ருர்.

இராமன் மகரக் கண்ணனுடைய உண்மை வடிவை ஆராய்ந்து கணையை விட்டான். அதன் பயனாக அவன் அழிந்து விடவே மாயையும் அகன்று நீங்கிற்று.

மகரக்கண்ணன் முதலான அரக்கர்கள் அழிக்கப்பட்ட பின் இந்திரசித்துத் திரும்பவும் போர்க்களத்திற்குள் புகுந்தான்.

# 55. மறக்களத்தில் மதலை.

இராவணன் பக்கல் எஞ்சிய வீரன் இந்திரசித்தன் ஒருவன்தான். தோல்வி மேல் தோல்வி கண்ட பின்னும் நெஞ்சுறுதி மட்டும் இராவணனிடமிருந்து நீங்கவேயில்லை என்பது நாம் நன்கு அறியக் கிடக்கிறது.

மகரக்கண்ணன் முதலானோர் இறந்த பின் ஒரே மகன் என்றும் பாராது இந்திரசித்துவைப் போருக்கு அனுப்பினான் இராவணன். இந்திரசித்துவும் ஒன்று வெற்றி; இன்றேல் வீரமரணம் என்ற மறவெறி கொண்டு போர்க்களத்திற்குச் சென்றான். எனினும், அவனுடைய உறுதிப்பாடு இராவணனுடைய மனத் திட்பத்திற்கு ஈடாகாதென்பதைப் பின்னர்க் காணப்போகிறோம். இந்திரசித்தன் போர்முனையிலே திரும்பவும் இராம இலக்குவர்களைக் காண்கிறான். இராமன் ஒருவன்தான் தன்னுடைய தெய்வப் படைகளைத் தாக்கும் ஆற்றலுடையவன் என்று அவன் எண்ணினான். ஆகையால் அவன் வானரப்படைகளை நோக்கி, "மேகநாதனுடைய படைகள் தெய்வத் தன்மை பொருந்தியுள்ளன; அவைகளை நீங்கள் தாங்கும் ஆற்றல் உள்ளவர்கள் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை; சற்று விலகி நின்று என்னுடைய போரைக் காண்பீர்களாக" என்று கூறினான்.

இராம இலக்குவர்கள் இந்திரசித்துவினுடைய வீரர்கள் பலரைக் கொன்று குவித்தனர் எத்துணை அரக்கர் சேனைகள் அழியினும், இந்திரசித்துவின்பால் வானரர் கொண்ட அச்சம் மட்டும் குறையவில்லை. பெரும் போருக்குப் பின், இந்திரசித்துத் தன் துணைவரையெல்லாம் இழந்து தனித்து நின்றான். அவ்வேளையில், இராமனை நோக்கினான் இந்திரசித்து. இராவணனை "இன்று போய் நாளை வா" என்று கூறிய கருணாகரனை இராமன், துணை இழந்து நின்ற தனக்கும் பரிவு காட்டுவான் என நம்பி, "நீங்கள் இருவரும் கூடி நின்று என்னுடன் போர் புரிவீர்களா?

தனித் தனியே ஒருவர் ஒருவராய் வந்து போர் செய்வீர்களா? அன்றி, உங்கள் சேனையுடன் வந்து போர் புரிவீர்களா? என்ருன். இதனைக் கம்பர்

"இருவீர் என்னெடு பொருதிரோ?
அன்று எனின் ஏற்ற
ஒருவிர் வந்து அமர் தருதிரோ?
அன்றியும் படையோடும்
பொருது பொன்றுதல் புரிதிரோ?
உறுவது புகலும்;
தருவன் இன்று உமக்கு ஏற்று உள
தொன்று எனச் சலித்தான்"

என்று இயம்புகின்ருர்.

இலக்குவன், இந்திரசித்தைக் கொல்லுவேன் என்று சபதம் செய்திருந்தான். மேகநாதனுல் கட்டுண்டவனுதலால், அவனுடைய வீர நெஞ்சம் தோல்வியை ஏற்கத் துணியவில்லை. இந்திரசித்துத் தன் கையால் இறந்தால்தான் தன்னை வீரனென்று உலகம் நினைக்கும் என்று இலக்குவன் எண்ணினன். காட்டிற்குள் வந்தவுடனேயே சுமந்திரனை நோக்கி, பரதனிடம் "தன்னுடன் பிறந்த நான் வலியன் என்று" கூறும்படி கூறியதைக் கண்டோமல்லவா? இராமனைப் போலவே தானும் வலிமை பெற்றவன் என்ற எண்ணத்துடன் வாழ்ந்துவந்த இலக்குவனுடைய உள்ளம் வெற்றி காணுத வரையிலும் அமைதியைக் காணுது.

இலக்குவன் இந்திரசித்துவை நோக்கி "வீரனே வாள் கொண்டு போர் புரியினும், வில்லேந்திப் பொருவதாயினும், அதற்கு ஏற்ப நானே உன்னுடன் போர் புரிகிறேன்" என்ருன்.

கடும் போர் நடந்தது. இந்திரசித்து இலக்குவனது வீரத்தை வியந்தான். போர்க் கடுமையில் இந்திரசித்துவினுடைய கவசங்கள் உடைந்து உதிர்ந்தன; ஆகவே அவன் ஆகாயத்தில் மறைந்தான்.

இலக்குவன் பிரமாத்திரத்தை விடுவதே நலமெனக் கருதி அதை விடுவதற்கு இராமனிடம் அனுமதி கேட்டான். ஆனால், இராமன் "வேண்டா"மென்று கூறிவிடவே, இலக்குவன் அதனை விடானாயினன், ஆனால், இந்திர சித்துவோ இலக்குவனுடைய எண்ணத்தை அறிந்து கொண்டான்.

அவனுடைய உட்கருத்தை உணராத இராம இலக்குவர் கள் ஆரவாரித்தனர். தேவர்களும் பூமாரி பொழிந்தனர்.

இந்திரசித்து இராவணனிடம் சென்று, போர்க்களத் திலே நடந்தவற்றை மிகத் தெளிவாகக் கூறி, இனி மறைந் திருந்து பிரமாத்திரத்தை விடுவதையன்றி வேறுவழியில்லை என்று கூறினன்.

அரக்கர்களுக்கும் வானரர்களுக்கும் மீண்டும் கடும் போர் ஏற்பட்டது. அரக்கர்கள் இருளைப் பரப்பும் மாய வித்தைகளைச் செய்தனர். இலக்குவன் சிவபெருமானுடைய பாசுபதாத்திரத்தை விட்டு அரக்கர்களைக் கொன்றுவிட்டு ஒளியைக் கொண்டுவந்தான். இருளும் அகன்றது.

இந்திரசித்து மேகத்திலே மறைந்துகொண்டு இலக்குவன் மீது பிரமாத்திரத்தை விடுத்தான். பிரமாத்திரப் படையின் வலிமையால் இலக்குவன் அறிவு ஒடுங்கி அயர்ந்தான்.

அந்தப் பிரமாத்திரம் இலக்குவனை மட்டும் உயிர் ஒடுங்கச் செய்யவில்லை. மற்றையோரையும் பிணித்துக் கட்டியது. வானரர் யாவருமே உயிரொழிந்து பூமியில் கிடந்தனர். பிரமாத்திரப் படையினல் தாக்கப்படாதவன் இராமன் ஒருவன்தான்.

மேகநாதன், இந்திரனை வென்றபோது பெற்ற பெருமிதத்தைக் காட்டிலும் இப்போது மிக்க பெருமிதம் அடைந்தான். இந்திரனை வென்றதால் இந்திரசித்து என்று பெயர் பெற்றிருந்தும், இலக்குவனை முறியடிக்க முடிய வில்லையே என்று கலங்கிய அவனது உள்ளத்திலே ஒளி

திரும்பவும் வந்தது. தந்தையிடம் சென்று நடந்ததைக் கூறினன். இராவணன் அவனை நோக்கி "மைந்த இராமனும் இன்னும் இறக்கவில்லையா?" என்று கேட்டான். "தந்தையே தன் தம்பி மடியவும், நண்பர்கள் சாகவும் இராமன் அச்சத்தால் எங்கோ சென்றுவிட்டான். இல்லா விட்டால் திறமையை மறந்து எதிர்த்துப் போர் புரியாது இருப்பானோ? அவனுக்குத் தேறுதல் கூறுவாருமில்லை. தன்னந் தனியனான அவனைத் துயர்தீர்ப்பவர் யாருளர்?" என்றான். இதனைக் கம்பர்,

> "இறந்திலன் கொல் அவ்விராமன் என்று
> இராவணன் இசைத்தான்;
> துறந்து நீங்கின னல்லனேல்
> தம்பியைத் தொலைத்துச்
> சிறந்த நண்பரைக் கொன்று
> தன் சேனையைச் சிதைக்க
> மறந்து நிற்குமோ? மற்றவன்
> திறன் என்றான் மதலை"

என்று அழகுறக் கூறுகின்றார்.

இராவணனும் மைந்தனுடைய வார்த்தைகளைக்கேட்டுச் சமாதானம் அடைந்தான்.

இராமன் ஒரு கோழை; இலக்குவன் இறந்து விட்டா னென்று தெரிந்தவுடன், அயோத்திக்கே அவன் சென்று விட்டான் என்று இந்திரசித்து எடுத்துக் கூறினன். ஆனால், இராமனோ யாதொன்றும் அறியாதவனாய்ப் போர்க்களம் புகுந்தான். தன் துணைவர்களான வானர வீரர்கள் எல்லோரும் பேச்சு மூச்சின்றிக் கிடந்த அவல நிலையைக் கண்டான். அனுமனைக் கண்டதும் அவனுக்கு ஆறாத்துயர மூண்டாயிற்று. தனக்கு உரியதல்லாத கோசல நாட்டை, அதற்குரிய பரதன் அயல் நாட்டிலிருக்கும்போது தந்தைக் காக ஏற்றுக்கொண்ட பழி தன்னை விடவில்லையோ என அஞ்சினன். இந்த எண்ணம் மேலிட "புகழோனே, என்னுடைய துணைவனான நீ மிகவும் துன்பப்பட்டு

விட்டாய்; நான் இழிவான தொழிலைச் செய்து இழுக்குத் தரும் அரசினை விரும்பி அதனை மேற்கொண்டேன்; அதனால் என் தந்தையைக் கொன்றொழித்தேன்; நான் சூர்ப்பணகையிடம் கேலியாகப் பேசியதால், அவள் என்னைத் தவறாக நினைத்தாள். அதன் காரணமாக என் தந்தை முறையினனான சடாயுவையும் கொன்று விட்டேன். என்பொருட்டு இன்று எத்துணை உயிர்கள் அழிந்து பட்டன; என் வன்கண்மை மிக்க தொழிற்கு ஒரு வரம்பும் உண்டோ?" என்று சொல்லிப் புலம்பினான்.

தான் சுயநலக்காரனாக மாறிவிட்டதாகவே இராமன் தன்னைக் கருதினான். சீதையை மீட்பதற்கே சுக்கிரீவனுக்கு முடி தந்தானாதலால், அவனுக்குத் தான் செய்தது தவறோ என்று நினைத்தான். "தமையனைக் கொன்று தம்பிக்குப் பட்டம் கட்டிய நான் ஏதோ ஒரு நன்மையைச் செய்தேன் என்று அப்போது நினைத்தேன். ஆனால், நான் எல்லா வற்றையும் அழிப்பதற்கே பிறந்திருக்கிறேன். வானரர் களாகிய உங்களை எல்லாம் இன்னல்களுக்கு உள்ளாக்கி இம்மண்ணிற்குப் பாரமாக என் உடல் இருக்கிறது" என்று கூறினான். இதனைக் கம்பர் இரு பாடல்களில்,

"புன்றொழில் புலையரசினை
வெஃகினேன் பூண்டேன்
கொன்றொருக்கினேன் எந்தையை;
சடாயுவைக் குறைத்தேன்;
இன்று ஒருக்கினேன்; இத்தனை
வீரரை இறுத்தேன்;
வன்றொழிற்கு ஒருவரம்பும்
உண்டாய் வரவற்றோ

தமையனைக் கொன்று தம்பிக்கு
வானரத் தலைமை
அமைய நல்கினன் அடங்கலும்
அவிப்பதற்கு அமைந்தேன்;

கமை பிடித்து நின்ற உங்களை
இத்துணை கண்டேன்
சுமையுடற் பொறை சுமக்க
வந்தனென் " எனச் சொன்னான்

என்று கூறுகின்றார்.

இவ்வாறு அழுதுகொண்டிருந்த இராமன், இலக்குவன் ஒருபால் சோர்ந்து விழுந்துகிடப்பதைக் கண்டான். உயிரொன்றும் உடலிரண்டுமாயிருந்தவர்கள் இராம இலக்குமணர்கள்; இராமனோ தன்னை விட்டுவிட்டுத் தம்பி திரும்பவும் பிரியும்படியான நிலை ஏற்படுமோ என்று எண்ணியெண்ணி ஏங்கினான். முன்பாவது தக்க துணைவர்களைக் கண்டான். இன்றோ அவர்களும் செயலற்றுத் தரையில் கிடப்பதைக் கண்டான். சோகம் மேலிடவும் இராமன் தரையில் விழுந்தான். தம்பியைத் தழுவிக்கொண்டிருக்கிற அந்த நீண்ட பெருங்கைகளை எடுப்பார் யாருமேயில்லை. வாயினாலே தேறுதல் கூறுவாருமில்லை. தன்னந்தனியனான அவனைத் துயர் தீர்ப்பவர் யாருளர்? இதனைக் கம்பர்,

" தாங்குவாரில்லைத் தம்பியைத்
தழீஇக் கொண்ட தடக்கை
வாங்குவாரில்லை வாக்கினால்;
தெருட்டுவாரில்லை;
பாங்கராய் உள்ளோர் யாவரும்
பட்டனர்; பட்ட
தீங்குதான் இது; தமியனை
யார் துயர் தீர்ப்பார்? "

என்று குறிக்கின்றார்.

தந்தை இறந்த பொழுதுகூட இத்துணைக் கலக்கம் கொள்ளாத இராமன், இலக்குவன் அயர்ந்ததைக் கண்டதும் தன்னம்பிக்கையையும் இழந்துவிட்டான். இராமனுக்குத் தந்தை தாய் சேய் எல்லாம் இலக்குவன்தான். ஆகையால் அவன், தான் உயிருடனிருப்பதே தவறு என்று எண்ணினான். இதனைக் கம்பர்,

" தாயோ நீயே, தந்தையும்
நீயே, தவம் நீயே,
சேயோ நீயே, தம்பியும்
நீயே, திருநீயே
போயோ நின்றாய்; என்னை
இகழ்ந்தாய் புகழ்பாராய்;
நீயோ யானோ நின்னினும்
நெஞ்சம் வலியேனால் "

என்று விளக்குகின்றார்.

இராமன் விதியை நொந்துகொண்டான். வெகுளி பொங்கவே மனைவியையும் நொந்துகொண்டான். " சனக ராசன் புரிந்த வேள்விக்குச் சென்று சிவனுடைய வில்லை வளைத்து என்னை வாழ்விக்கும் என்று எண்ணி ஒரு நஞ்சை வருவித்துக் கொண்டேன். சீதையை அமுதமென்று நினைத் தேன். ஆனால், அவள் ஆலகால நஞ்சைப் போல் நம்மை யெல்லாம் துன்புறுத்துவதற்கே காரணமாகி விட்டாள். அவள் பொருட்டு இத்தனை தீங்கையும் உண்டாக்கிக் கொண்ட நான் சிறிதேனும் பின்வாங்கினேனோ?" என்று புலம்பினான்.

பழி ஓர் இடம் பாவம் ஓர் இடம் என்பார்கள். அது போல, பழி எங்கேயோ இருக்க, பாவம் கைகேயியின்பால் அடைந்து விட்டது. இதற்குக் காரணமும் தானே தான் என்று இராமன் நினைத்தான். இந்த எண்ணம் மிகவும் " பெற்ற அன்னையினும் பெரும் பரிவுடன் வளர்த்த அன்னையே, கேகயன் குலக்கொழுந்தே, நான் என்ன பாதகம் செய்துவிட்டேன்! அன்று மண்மேல் வைத்த பெருங் காதலினாலே, தங்களுக்குப் புண்மேல் வைத்த தீக்கு நிகரான துன்பத்தைத் தந்துவிட்டேன். இன்றோ ஒரு பெண்மேல் வைத்த காதலினாலே, எல்லாருக்கும் துன்பத்தைத் தந்து கொண்டிருக்கிறேன். எல்லோராலும் மதிக்கத்தக்க என் னுடைய புகழ் "அழிந்து கொண்டிருக்கிறது" என்றான். இதனைக்கம்பர்,

"மண்மேல் வைத்த காதலின்
மாதா முதலோர்க்குப்
புண்மேல் வைத்த தீநிகர் துன்பம்
புகுவித்தேன் ;
பெண்மேல் வைத்த காதலின் இப்
பேறுகள் பெற்றேன் ;
எண்மேல் வைத்த என் புகழ்
நன்ருல்! எளியேனே"

என்று குறிக்கின்ருர்.

# 56. நிகும்பலை நிகழ்ச்சி

இரவிகுலத்திற்கு முடிமணியாக விளங்குவான் என்றே வசிட்டர் தசரதனுடைய முதல் மகனுக்கு இராமன் என்று பெயரிட்டார். இராமராஜ்யத்தைக் காண வேண்டுமென்று தசரதனும் நினைத்தான். நற்பண்புகளுக்கு உறைவிடமான இராமனுக்கு, நாட்டின் மேலும் பெண்ணின் மேலும் கொண்ட தன் காதல் தீது தரும் என்று அவனது உள்ளுணர்வு கூறிய போதிலும், நாட்டை ஏற்றுக் கொள்ளவும் வாலியைக் கொல்லவும் அவன் சம்மதித்தான். இதனாலே அயோத்தியிலும் இலங்கையிலும் மக்கள் இன்னல் அடைகின்றனர் எனவும் நினைத்தான்.

இலக்குவன் பிரமாத்திரத்தை உபயோகிக்கவேண்டும் என்ற போது, இராமன் "வேண்டா" என்று கூறித் தடுத்து விட்டானல்லவா? போர்க்களத்திலே நின்று உயிருக்கு மன்றாடிக்கொண்டிருக்கும் வீரர்களுக்கு உற்றதுணையாக நின்று பலம் பொருந்திய ஆயுதங்களை விடுவதுதான் மறவர் போர் நெறி. ஆனால், இராமன் ஏன் பிரமாத்திரத்தை விட வேண்டா என்று கூறினான் என்பது எவருக்கும் புதிராகத்தான் இருக்கிறது. இங்கே இராமனுடைய மனவுணர்வைச் சிறிது ஆராய்தல் வேண்டும்.

இராமன், தன் மனைவி சீதைதான் தனக்கு உடல் பொருள் ஆவி என்று எண்ணி வாழ்ந்து வந்தவன். அவள் பிரிந்தவுடன் அவன் மனம் பேதுற்றுவிட்டது. தன்னை இராமன் கொன்றதற்கு யாது காரணம் என்று சிந்தித்த வாலி, "ஏ, இராமனே! நீ மனைவியைப் பிரிந்த துக்கம் பொறுக்காமல் பைத்தியக்காரனாகிவிட்டாய்" என்கிறான். பத்து மாதங்களுக்கு முன் பெண்ணின் மேல் வைத்த தீராக் காதலினால்தான் பிறருக்குத் துன்பம் தந்துவிட்டதாக இராமன் எண்ணவில்லை. ஆனால், இலக்குவன் அறிவு ஒடுங்கிய சமயத்தில்தான், இராமன், நிதானமாகத் தான் செய்த காரி

யங்களையெல்லாம் சீர்தூக்கிப் பார்க்கிறான். தீராக் காதலி னால் விளைந்த தீமைகளை ஒவ்வொன்றாக எண்ணி யெண்ணி வருந்துகிறான். சீதைபால் கொண்ட மிக்க காமம் அழி வுறுமோ என்று எண்ணும் வகையிலே அவனுடைய சிந்தனை செல்லத் தொடங்கியது.

"நான் இறக்கவில்லையே" என்று மீண்டும் மீண்டும் புலம்பிய இராமன் சிறிது தெளிவடைந்து வீரவுணர்வு பெற்றான். நல்லறமும் இராவணன்பால் சிறைப்பட்டு விட்டதோ என்றுகூட அவன் நினைத்தான். "தக்கோன் ஒருவன் மனைவியை வலிமை மிக்க ஓர் அரக்கன் கொண்டு சென்று சிறையிலே வைத்துவிட்டான்; முறைகேடான செயலைப் புரிந்த அரக்கனை அறக்கடவுள் முன்னின்று அழிக் காமையால், அவன் வாழ்ந்திருப்பானாயின், நானே இந்த மூன்று உலகங்களையும் எரித்துச் சாம்பாராக்கிவிடுவேன்" என்று கூறினான்.

வீரவுணர்வு தோன்றினும் தம்பியின்மேல் உள்ள அன் பினால் அது மழுங்கியது. இராமன் திரும்பவும் மனச்சோர் வுற்றான். வீடணனுக்கு மணிமகுடம் புனைவதாக அவன் முன்னரே கூறிவந்துள்ளான். ஆனால், இன்றோ அதைச் செய்ய முடியாமல் வருந்தி வாடுகின்றான். தம்பி இறந்தபின் தான் வாழ்வது தகுதியன்று என்று மேன்மேலும் நினைந்து அழுதான். பலவாறு புலம்பிய இராமன் அறிவு சோர்ந்து உறங்கிவிட்டான்.

இலக்குவன் உயிரற்ற நிலையிலே இருப்பதையும் இரா மன் சோகமே உருவாகப் பேச்சு மூச்சற்று அவன் பக்கலில் வீழ்ந்துகிடப்பதையும் தூதர்கள் இராவணனிடம் தெரிவித் தனர். அரக்கர் தலைவனுக்கு அருமையான ஒரு யோசனை தோன்றியது. சீதை அவர்கள் இருவரையும் அச் சோக நிலையில் கண்டால் ஒருகால் அவள் தன் வயப்படுவாள் என்ற எண்ணம் அவனுக்குத் தோன்றியது.

இராவணன் கட்டளைப்படி சீதையை ஒரு விமானத்தி லேற்றிப் போர்க்களத்திற்குக் கொண்டுபோனார்கள். சீதை யின் நாயகனான இராமன் நிலையைக் கண்டால் யார்தான்

கண்ணீர் விடாது இருப்பர்? அப்படியிருக்கும்போது ஜானகியின் துயரைக் கூறவும் வேண்டுமோ? அவள் (சோகம் பொறுக்கமாட்டாமல்) விமானத்திலிருந்து விழ முயற்சிக்கும்போது, திரிசடை அவளைத் தடுத்து, "இராமன் அரக்கர்களால் கொல்லப்படமாட்டான்; நல்ல கனவுகளைக் கண்டிருக்கிறேன்; உன் கணவன் வெற்றியே பெறுவான்" என்று கூறினாள்.

சீதையும், தான் உயிர்விடுவதால் இராமனுக்கு இன்னும் சோகமே மிகும் என்ற கருத்தினால், "நான் உயிரை விடாது பாதுகாத்துக் கொள்கிறேன்" என்று திரிசடைக்கு உறுதி அளித்தாள்.

இவ் அவலக் காட்சியைக் கண்டபின் சீதை திரும்பவும் அசோக வனத்திற்கே கொண்டுசெல்லப் பட்டாள்.

பின்பு, வீடணன் போர்க்களத்திற்குள் வந்து, இராம இலக்குமணர்களின் நிலையைக் காண்கிறான். அவன் முதலில் அனுமனது உடலிலுள்ள அம்புகளை நீக்கி அவனை எழுப்புகிறான். அவனும் களைப்பு நீங்கி எழுந்து இராமனைப்பற்றி வினவுகிறான். வீடணன், இராம இலக்குவர்களுக்கு நேர்ந்த துயரத்தைக் கூறுகின்றான். அப்பொழுது அங்கு வந்த சாம்புவான், "மருந்து மலையிலுள்ள சஞ்சீவியைக் கொண்டு வந்தால், இலக்குவன் பிழைப்பான்" என்று கூறினான்.

அனுமனும் அம்மருந்தைக் கொண்டுவருவதாகக் கூறி விடைபெற்றுச் செல்லுகிறான். சஞ்சீவி மருந்து இன்னதென்று அறியாதவனாகி, அம்மருந்து மலையையே அவன் வேரோடு பிடுங்கிக்கொண்டு வந்துவிடுகிறான். மருந்து மலையின் வாசனை பட்டவுடனே பிரமாத்திரத்தின் வலிமை அழிகின்றது. இலக்குவன் மூர்ச்சை தெளிந்து எழுகின்றான்.

இராம இலக்குமணர்களை வென்றதால் வெற்றி கொண்டாடிக் களியாட்டத்துடனிருந்த அரக்கர்களிடம் மாலியவான், "மருத்துமலை கொண்டு வந்ததினால் பிரமாத்திரம் தோற்றுவிட்டது" என்று கூறினான். அது கேட்டதும் இராவணன் வெகுண்டெழுந்து போர் புரியப் புறப்படவும்,

இந்திரசித்து, நிகும்பலை யாகம்செய்து பெரும் படைகளைப் பெற்று இராம இலக்குமணர்களை வென்று வருகிறேன்" என்று கூறிப் போர்க்களத்திற்குச் சென்றான்.

தான் நிகும்பலை யாகம் செய்வதை வீடணன் அறிந்தால் இராமனுக்கு அவன் அதனைக் தெரிவித்துத் தன்னுடைய திட்டம் செயற்படாத வகையிலே சூழ்ச்சி செய்து கெடுத்து விடுவான் என்று அஞ்சினான் இந்திரசித்து. மாயவடிவிலே சீதைபோல ஓர் உருவாக்கி, அதனை அனுமன் காண வெட்டி வீழ்த்தினான். பின்னர் அனுமன் கேட்குமாறு, "நான் சீதை யைக் கொன்றுவிட்டேன். இனி அயோத்திக்குச் சென்று பரதனையும் ஏனையவர்களையும் கொன்றுவிட்டுத்தான் திரும்பு வேன்" என்று சூளுரை செய்துவிட்டு, விமானத்திலேறிச் சென்றான். இந்தச் செய்தியை அனுமன் இராமனிடம் கூறினான்.

இராமன் மிகவும் சோர்ந்துவிட்டான். இலக்குவன் எவ்வளவோ தேற்றியும் அவன் புலம்புவதை விடவில்லை. "பரதனை வெல்ல ஒருகாலும் இந்திரசித்துவால் முடியாது. கவலை விட்டொழியுங்கள்" என்று இலக்குவன் கூறித் தேற் றினான். உண்மையை அறிந்து வருகிறேன் என்று கூறி வீடணன் சென்றான். பின்னர் அவன் சிறிது நேரத்தில் சீதை உயிருடன் இருப்பதையும், இந்திரசித்து நிகும்பலை யாகம் செய்வதையும் அறிந்து வந்து சேர்ந்தான்.

இராமனிடம் இந்திரசித்துவினுடைய சூழ்ச்சியைத் தெரி வித்து நிகும்பலை யாகத்தைத் தடுக்க வழி சொல்லித் தந்தான். பின்னர் இராமலக்குமணர்கள் இந்திரசித்துவி னுடன் போர் புரிந்து நிகும்பலை யாகம் நடவாவண்ணம் செய்துவிட்டனர். இந்திரசித்துவோ, படையிழந்து தன்னந் தனியனாய் மேகத்திலே மறைந்து சென்று இராவணனை அடைந்தான்.

இராவணனிடம், இந்திரசித்து இராம இலக்குமணர் களின் வலிமையை எடுத்து உரைத்தான். ஆனால், அரக்கர் தலைவனோ தன் மகனைக் கோழை என்று நினைத்து வெறுக்க லானான்.

இந்திரசித்து இராவணனை நோக்கி, "தந்தையே! இவ்வாறெல்லாம் நடந்ததனுல்தான் நான் அஞ்சுகிறேன். சீதையின்பால் நீங்கள் கொண்ட தீய காதலை விடுவீர்களாயின் அவர்களுடைய சினமும் தணியும். போர் செய்து நம்மைக் கொல்லாமல் அயோத்திக்கே மீண்டு சென்று விடுவர். நீங்கள் செய்த குற்றத்தையும் மறந்து மன்னித்து விடுவார்கள். உங்கள்மேல் எனக்குள்ள அன்பினலே இதனைக் கூறுகிறேன்" என்ருன்.

"நன்று கூறினுய், மைந்த! நீ போருக்குச் செல்லாமல் நீங்கின் நான் மயங்கிவிடமாட்டேன்; மனிதனைப் பார்த்து மயங்கிவிட்டாய்; அஞ்சி வருந்தாதே, மகனே! நானே சென்று வெற்றியுடன் திரும்பி வருகிறேன். நான் சீதையைக் கவர்ந்து பகைதேடிக் கொண்டது என் பலத்தை நம்பியே யன்றிப் பிறர் துணையை எண்ணியல்ல என்பதை நன்ருக உணர்ந்துகொள்" என்று இராவணன் கூறினுன்.

இராவணன் சீதையைத் தூக்கி வந்தபின் அரக்கர்கள் பலர் அழிந்துவிட்டனர். தம்பியரும் மக்களும் இறந்து பட்டனர். எஞ்சியவன் இந்திரசித்துத்தான். தன்னுடைய வீரத்தை நம்பித்தான் இராவணன் வாழ்வதாக அவன் நினைத்துவிட்டானே என்று எண்ணினுன். இந்த எண்ணம் ஏற்படவும் இராவணன் தன் மகனை நோக்கி, "குழந்தாய்! போரிலே பலர் மடிந்துவிட்டார்களே. அவர்களையெல்லாம் நம்பி நான் ஒரு பெரிய பகையைத் தேடினேன் என்று நினைக்கின்ருயா? அல்லது நீ போய் வென்று என் துன்பத்தைத் தீர்ப்பாய் என்று நான் சீதையைச் சிறை செய்தேனு? இல்லை, இல்லை. என்னையே நம்பித்தான் இப்பகையைத் தேடிக்கொண்டேன்," என்ருன். இதனைக் கம்பர்,

"முன்னையோர் இறந்தோரெல்லாம்
இப்பகை முடிப்பர் என்றும்
பின்னையோர் நின்ருேரெல்லாம்
வென்றவர் பெயர்வர் என்றும்
உன்னை நீயவரை வென்று
தருதியென்று உணர்ந்தும் அன்ருல்

**என்னையே நோக்கி யான் இந்**
**நெடும்பகை தேடிக் கொண்டேன் "**

என்பதாக உரைக்கின்றார்.

இந்திரசித்து இளையோனுதலால் நல்லது கெட்டது அறியாதவனென எண்ணினான் இராவணன். ஆகையால் அவன் தன் மகனை நோக்கி, "அறிவுக்குப் புறம்பானவை களைக் கூறிவிட்டாய், மைந்தனே! நீ கூறுவதெல்லாம் பேதைமை. நான் மூன்று உலகங்களிலும் பேர் பெற்றவன். இனி எனக்கு வெற்றி கிடைக்காது என்று கூறுகிறாய். அதனால் என்ன? அமரர்களெல்லாம் வியக்கும்படியாகப் போரிலே சமர் செய்து உயிர் விடுவதுதான் மேலேயன்றி, நீர்க்குமிழியைப் போன்ற வாழ்க்கையை நம்பிப் பகைவர்க்கு அடி பணிதல் சரியன்று; நெஞ்சிலே உறுதியும் தோளிலே வலிமையும் இருக்கும்போது, ஏன் அஞ்சுதல் வேண்டும்? மகனே! உயிர் போயினும், சீதையை விடுவதென்பது முடியாத காரியம்," என்றான். இதனைக் கம்பர்,

**"பேதைமை உரைத்தாய், பிள்ளாய்,**
**உலகெலாம் பெயராப் பேராக்**
**காதையென் புகழி னோடு**
**நிலைபெற அமரர் காண,**
**மீதெழு மொக்கு ளன்ன**
**யாக்கையை விடுவ தல்லால்**
**சீதையை விடுவ துண்டோ**
**இருபது தோளுண் டாக"**

என்று இசைக்கின்றார்.

இப்பொழுது இராவணன் மனம் காமக் களிப்பிலிருந்து விடுபட்டுவிட்டது; தான் கொணர்ந்து சிறை வைத்துள்ள சீதையை விடுவதா இராமனை வெல்வதா என்ற எண்ணத்தில் ஊன்றி நின்றது. மக்களையிழந்தும் உடன் பிறந்தாரை இழந்தும் ஏனை நெருங்கிய உறவினரை இழந்தும் மானமொன்றையே இழவாமல் இருக்கிறான் இராவணன். இராமனை எவ்வகையிலும் வென்றே தீருவது என்ற குறிக்கோளே அவன் நெஞ்சில் நிற்பதாயிற்று. "இறப்பவருவழி

இளிவந்தன செய்தாயினும் உயிர் உய்க" என்ற தங்கள் இனத்துக்கே சிறந்த வட நூன்முறையைக் கைவிட்டான்; உயிரினும் மானமே சிறந்தது என்ற செந்தமிழ் நல்லறக் கொள்கையை மேற்கொண்டான். இந்நிலையில் இராம இராவணப் போர் இருவர் மானங்கட்கு இடையே நடந்த கடும்போராக மாறுகிறது. இராவணன் காமப்படு குழியினின்றும் கரையேறி மனமாசு நீங்குகின்றான்.

இனிமேல் சீதையின் மனத்தைத் தான் பெறமுடியாது என்பதை இராவணன் நன்கு அறிந்துகொண்டான்.

ஆண்களும் அகநெகிழும் அழகுபெற்ற இராமனைக் கண்டபின், எந்தப் பெண்ணும் பிறரை விரும்பமாட்டாள் என்று அவனுடைய உள்ளுணர்வு கூறிற்று. இராமன் பேரி லும் அவனுக்குக் காரணம் தெரியாமலே அன்பு பிறக்கத் தொடங்கியது. தன்னை நம்பியே பெரும்பகை தேடிக் கொண்டதாக அவன் கூறியபோதிலும், தான் இனி வெற்றி காண்பது முடியாத காரியம் என்பதையும் நன்கு அறிந்து கொண்டான். இந்த நிலையில், அறிவுள்ள எவனும் தன் உயிரைக் காத்துக்கொள்ளவே எண்ணுவான். இந்திர சித்து இராவணனுடன் கருத்து வேறுபாடு கொண்டதும் இது காரணமாகத்தான்.

சீதைபால் தான் கொண்ட காமநோய் தன்னைவிட்டு அகன்று வருவதைக்கண்ட பின்னும் இராவணன் சீதையை விட மறுத்துவிடுகிறான். திருவள்ளுவப் பெருந்தகை, "நீ சிந்தித்துச் செயலில் இறங்கு; ஆனால் செயலில் இறங்கிய பின் சிந்தனை செய்வாயானால், அஃது உனக்குப் பெருமை தராது" என்று அறிவுறுத்துவர். இராவணன் சிந்திக்கா மலே சீதையைக் கொணர்ந்து சிறையிட்டான். ஆனால் பத்து மாதங்களுக்குப் பின், இராவணன் கழிவிரக்கம் கொண்டு சீதையைத் திரும்பத் தருவதால் அவனுக்குப் பெருமை ஏற்படாது. சால்பும் இயல்பும் ஆகிய குணப் பண்புகள் ஒருவருக்குக் குறைந்துவிடுமானால் அவற்றைத் திரும்பவும் பெறுவது முடியாத காரியமாகும் என்பது சங்க நூற் கருத்து.

இராவணனுக்கு வெற்றி கிடைக்காது என்று இந்திர சித்துவே கூறினன். இராவணனும் இதனை ஒத்துக்கொண்டான். ஆனல், தன் மகனை நோக்கிக் கூறுவானுய், "மைந்தனே! நான் வெற்றிபெற மாட்டேன் என்ருலும், மறைகள் கூறும் உண்மைகள் இருக்கும் வரையிலும் என் பெயர் நிற்கும். இராமனுடைய பெயர் உலகத்திலே உயர்ந்து நிற்கப்போகிறது, ஒத்துக்கொள்கிறேன். அவன் பெயர் உலகத்திலே உயர்ந்த நிலையிலே நிற்குமாயின் என்னுடைய பெயர் மறையவே முடியாது. சாவு என்பது தொன்று தொட்டது. அதற்கு ஏன் நீ அஞ்சுகிருய்? இன்று உள்ளவர்கள் நாளை இருப்பர் என்று கூறுவதோ முடியாத காரியம். புகழ் ஒன்றிற்குத்தான் இறுதி கிடையாது." என்ருன். இதனைக் கம்பர்,

> "வென்றிலன் என்றபோதும்
> வேதம் உள்ளளவும் யானும்
> நின்றுளன், ஒன்ருே மற்றவ்
> இராமன் பேர் நிற்குமாயின்,
> பொன்றுள ஒரு காலத்துத்
> தவிருமோ, பொதுமைத் தன்ருே?
> இன்றுளார் நாளை மாள்வர்,
> புகழுக்கும் இறுதியுண்டோ?"

என்று குறிக்கின்ருர்.

இனிச் சீதையைத் திருப்பித் தந்தாலும் சிக்கல் ஒழியாது என்பது இராவணன் கருத்து. அவன் தேவர்களையெல்லாம் வென்றவன். இன்ருே இராமனுடைய வில்லின் திறத்திற்கு முன் நிற்க அஞ்சும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. இந்த நிலையிலே, சீதையை இராமனிடம் திரும்பத் தந்துவிட்டால் தன்னைக் கோழை என்றே உலகம் கருதும் என்று இராவணன் கருதி அஞ்சுகிருன். இராமன் தன்னை மன்னித்து அயோத்திக்குச் சென்றுவிட்டாலும் தேவேந்திரன் முதலான பகைவர்கள் அவன்மேல் போர் தொடுத்து வெற்றிகாண முயல்வார்கள். சீதையை இராமன்பால் விடுத்தபோதிலும் உலகம் அவனைக் குற்றவாளியாகக்

கருதுமேயன்றி அவன் விரும்பி வாழும் புகழை அவனுக்கு நல்காது.

தன் நெஞ்சம் கூறும் அறநெறி கொண்டு சீதையை இராமனிடம் விட எண்ணியபோது தன்மானம் அவனைத் தடுத்தது. மனப்போராட்டத்தின் முடிவிலே, வீர மரணமே சிறந்தது என்று எண்ணினான். ஒரு நல்ல வீரன் கையாலே மாண்டுபோவதுதான் சிறந்தது என்றொரு கருத்து அவனுக்கு இப்போது உண்டாகிறது. அவனுடைய மனதிலிருந்து சீதையின் உருவம் சிறிது சிறிதாக மறையத் தொடங்குகிறது. ஆயினும் அதை யாரிடமும் அவன் கூற விரும்பவில்லை. இந்திரசித்துவும் இந்த மன மாறுதலை அறிந்துகொள்ள முடியவில்லை. இராவணன் தன் மகனை நோக்குகிறான். "இளையோனே! நான் இந்த இலங்கைப் பேரரசை உருவாக்க என்ன பாடுபட்டேன் தெரியுமா? எட்டுத்திசைகளையும் வென்றேன். பழுதுபடாத ஒரு பேரரசை உண்டாக்கினேன். மக்கள் மனம் மகிழ ஆட்சி செய்தேன். ஆனால் இன்று சாகத்தான் போகிறேன்; என்றாலும் அது வீர மரணமாகவே இருக்கும்" என்றான். இதனைக் கம்பர்,

> **"விட்டனன் சீதை தன்னை**
> **என்றலும் விண்ணோர் நண்ணிக்**
> **கட்டுவதெல்லாம் என்னை**
> **யானெனக் கருதுவாரோ?**
> **பட்டனன் என்ற போதும்**
> **எளிமையிற் படுகிலேன் யான்**
> **எட்டினோ டிரண்டு மான**
> **திசைகளை எறிந்து வென்றேன்"**

என்று நயம்படக் கூறுகின்றார்.

இராவணனுடைய சுடுசொற்களைக் கேட்டபின், இந்திரசித்து போருக்குச் செல்லுவதாகத் தந்தையிடம் கூறி விடைபெற்றுச் சென்றுவிடுகிறான்.

இலக்குவனுக்கும் இந்திரசித்துவுக்கும் நடந்த பெரும் போரிலே சென்ற அம்புகளைக் கண்டவர்கள் யுகாந்த காலத்

திலே ஊழிக்காற்றே வந்து பூமியைத் தாக்குகின்றதோ என ஐயுற்றனர். போரும் மிகவும் கோரமாக இருந்தது. ஆனால் கடைசியில் இந்திரசித்து வீர மரணத்தையே கண்டான்.

திருவுடை மன்னர்களெல்லாம் திருமாலின் கூறு என்பர். அவர்களை வேதியர்களெல்லாம் போற்ற வேண்டுமென்று எண்ணினர் முன்னோர். இராமன் திருவுடை மன்னர்களிலே சிறந்தவன். அவனைப் பிரமவித்துக்களான பிராமணோத்தமர்கள் தலைவணங்க வேண்டும். மக்களைப் பண்புடன் காத்துவரும் அரசன்தான் இறைவன் என்று தமிழ் மறையான திருக்குறளும் கூறுகின்றது. பிரமவித்துவான இராவணனும் இந்திரசித்துவும் தம்மைக்கண்டு போற்ற வேண்டுமென இராம இலக்குமணர்கள் பலமுறை எண்ணியதுண்டு. ஆனால், இராவணன் சாதாரண பிராமணனாக இல்லாமல் மன்னனாகவும் மாறிவிட்டான். இந்த எண்ணம் இலக்குவனுக்கும் ஏற்பட்டது. உடனே அவன் பிறைவாய் வாளியைவிட்டு இந்திரசித்துவின் தலையைத் துண்டிக்கிறபோது "வேதங்களை ஆராய்ந்தறிந்த தக்கனும் பிராமணர்கள் வணங்குவதற்கு உரிய முதல்வனும் ஆனவன் என் தமையன் இராமன்; இது முக்காலும் உண்மை ஆகையால் அவனை வணங்க மறுக்கும் இந்திரசித்துவின் தலையைக் கொய்துகொண்டு வருவாயாக" எனக் கூறினான். இதனைக் கம்பர்,

"மறைகளே தேறத் தக்க
  வேதியர் வணங்கற் பால
இறையவன் இராமன் என்னும்
  நல்லற மூர்த்தி யென்னில்
பிறையெயிற்று இவனைக் கோறி
  என்றொரு பிறைவாய் வாளி
நிறைவுற வாங்கிவிட்டான்
  உலகெலாம் நிறுத்தி நின்றான்"

என்று கூறுகின்றார்.

இராமன் இந்திரசித்து இறந்துபட்டான் என்று கேட்ட வுடனே மிகவும் மனம் மகிழ்ந்தான். தம்பி ஒருவன் இருந் தால் வேறு ஒரு பகைவர்களைப் பற்றியும் கவலை கொள்ள வேண்டாம் என்று கூறி இலக்குவனை வாயாரப் புகழ்ந்தான்.

மேலும் அவனுக்குத் தன் மனைவி சானகி விரைவில் தன்னிடம் வந்துவிடுவாள் என்ற நம்பிக்கை பிறந்தது. இலக்குவனை நோக்கி, "இலக்குவா, நீ இந்திரசித்துவைச் சயித்ததினால் இராவணன் வெல்லப்படுவது திண்ணம். பிரமன் படைத்த பேருலகத்திலே தம்பியுடையான் பகைக்கு அஞ்சான் என்ற ஆன்றோர் வாக்கை உன் செயலால் மெய் யாக்கிவிட்டாய்" என்றான்.

இராமன் சிறிது சிந்தனையில் ஆழ்ந்தான். வீடணன் அரக்கர்களின் இரகசியத்தையும் நிகும்பலையில் நடந்த யாகத்தைப் பற்றியும் கூறியிருக்காவிட்டால் அனு மன்முன் வதைக்கப்பட்ட சீதை மெய்ச் சீதையன்று, பொய்ச் சீதை என்பதை அவர்கள் அறிந்துகொண்டிருக்கமாட்டார் கள். இந்த உண்மை தெரியாதிருந்தால் இலக்குவனது வில்வித்தையின் திறமையும் அனுமனது மிகுந்த தேகபல மும் பயனற்றவையாகவே போயிருக்கும். ஆகையால் இந் திரசித்துவை வென்றவன் இலக்குமணன் அல்லன் வீட ணன்தான் என்று எண்ணி இருவரையும் பாராட்டினான். இதனைக் கம்பர் இருகவிகளினாலே கூறுவாராய்,

"கம்ப மதத்துக் களியானைக்
  காவற் சனகன் பெற்றெடுத்த
கொம்பும் என்பால் இனிவந்து
  குறுகினாள் என்று அகம் குளிர்ந்தேன்;
வம்பு செறிந்த மலர்க்கோயில்
  மறையோன் படைத்த மாநிலத்தில்
தம்பியுடையான் பகையஞ்சான்
  என்ற மாற்றம் தந்தனையால்"

"ஆடவர் திலகம் நின்ருல்
அன்று, இகல் அனுமன் என்னும்
சேடருல் அன்று, வேருேர்
தெய்வத்தின் சிறப்பும் அன்று,
வீடணன் தந்த வெற்றி
ஈது என விளம்பி மெய்ம்மை
ஏடவிழ் அலங்கல் மார்பன்
இருந்தனன் இனிதின் இப்பால்"

என்று பாடுகிருர்.

இந்திரசித்து இறந்த செய்தி கேட்டு இலங்கையே கலங்கி நின்றது. இராவணனுடைய துக்கமும் எல்லை கடந்து போயிற்று.

இராவணனுக்குச் சோகமேற்பட்டபோதிலும், அவன் மனம் சலித்துவிடவில்லை. இலங்கையிலே இன்னல் வருகின்ற காலத்திலே காக்கும் பொருட்டு மூலப்படை என்ற படை ஒன்று இருந்தது. அதனை உபயோகித்து வெற்றி காணலாமென்ற எண்ணம் இராவணனுக்கு ஏற்பட்டது. உடனே மூலப்படையை இராமனிடம் சென்று போர் புரியுமாறு அனுப்பினுன்.

மூலப்படையைக் கண்டவுடனேயே வானரர்கள் அஞ்சி ஓடத்தொடங்கினர். வீடணன் அந்தச் சேனையின் இரகசியங்களை அறிந்த பின்னர், இராமன், அங்கதனைக் கூப்பிட்டு, ஓடிய சேனையைத் திரும்பக் கூட்டிவருமாறு பணித்தான். வானரர்கள், இந்திரசித்துவின் போர்ச் செயலைக் கண்டபின் அரக்கர் இனமென்ருலே அஞ்சத் தொடங்கினர். அங்கதனுக்கு அவர்களைச் சமாதானப்படுத்தி அழைத்துவருவது பெரும்பாடாகவே போய்விட்டது.

மூலப்படை செய்த போரும் கடுமையாகவே இருந்தது. அரக்கர்களெல்லாம் அதிசயிக்க வீரப்போர் செய்து அவர்களை எல்லாம் கொன்று வெற்றிகண்டான் இராமன். தேவர்கள் மகிழ்ச்சியடைந்தனர்.

இராவணனுடைய தம்பி, மக்கள், சுற்றம், மூலப்படையோர் யாவரும் அழிந்தபின்னும் அவன் மனம் சலிக்க

வில்லை. வெற்றி அல்லது வீர மரணம் என்ற ஒரே கொள்கையுடையவனாய் இராமனோடு போர்புரியத் தயாரானான் இராவணன்.

இராவணன் அரக்கனேயாயினும், அவனுடைய நெஞ்சுறுதியை நாம் பாராட்டாமலிருக்க முடியவில்லை. பிராமணர் குலத்திலே பிறந்து தன் புயவலிமையால் இலங்கையை வென்று அதைச் செல்வத்திருநாடாக்கினான். மறக்குடியிலே பிறந்த இராமனே அவனுடைய வீரத்தைப் பாராட்டினான் என்றால், அவனை மற்றவர்கள் பாராட்டுவதில் வியப்பொன்றுமில்லை. இராமராவணப் போரில்தான் நாம், இவ்விருபெரும் வீரர்களின் குண நலன்களைக் கண்டு பாராட்டப்போகிறோம்.

# 57. இராவணன் யார்?

வான்மீகருக்கும் கம்பருக்கும் பல இடங்களில் வேறு பாடுகள் இருப்பதைக் கண்டோம். வான்மீகத்தில் இந்திர சித்து போரின் தொடக்கம் முதல் முடிவு வரையிலும் தன் வன்மையைக் காட்டிக்கொண்டே வருகிறான். ஆனால் கம்பரோ அவனைப்பற்றித் தொடக்கத்தில் யாதும் கூறாமல், கும்பகருணன், அதிகாயன் முதலியோர் வதத்திற்குப் பின்னரே அவன் போர்க்களத்திற்கு வந்ததாகக் கூறு கின்றார்.

இந்திரசித்து, தன் தந்தை செய்த காரியத்தில் பங்கு கொண்டால் அஃது அவனுடைய சீரிய குணங்களுக்கு இழுக்குத் தரும் என்ற கருத்தால் கம்பர் இவ்வாறு கூறினாரோ என நாம் நினைக்க வேண்டியிருக்கிறது.

தன் தந்தை சொற்களைக் கேட்பதே தன் கடமை என்று கருதுபவன் இராமன்; அதுபோலவே இந்திர சித்துவும் தன்னுடைய தந்தை இராவணன் கூறியவற்றைக் கேட்பதே தன் கடமை என்று கருதினான். மேலும் இராவணனே அவனுக்குத் தந்தையாவதேயன்றி இலங்கை வாழ் மகனான இந்திரசித்துவுக்கு மன்னனுமாவான். மன்னன் கட்டளையை மறுப்பது குற்றமாகும். போர்வீரனாக விளங்கும் ஒருவன் தன் தலைவன் ஏவலைச் சிரமேற்கொள்ள வேண்டும். "ஏன் என்று கேட்பது நம் வேலையில்லை. செய் அல்லது செத்துமடி" என்பதுதான் போர் மறவர்க்கு மந்திரம்.[1] அதனை நன்குணர்ந்தவன் இந்திரசித்து.

இந்திரசித்து அறிவது அறிந்து அஞ்சுவது அஞ்சும் அறிவாளன்; ஆயினும் அவன் முடிவு வரையில் கடமை யையே செய்து அக்கடமைக்கே உயிர்கொடுத்து இறந்தான். ஆண்மையும் படைவன்மையுமிருந்த போதிலும் உட்பகை யுண்டாயின் அதனை எளிதில் வெல்லமுடியாது என்று

---

1 Ours not to question why; ours but to do or die.

கண்டான் மேகநாதன். தந்தைக்கு உடன் பிறந்தான் தனக்குச் சுற்றத்தான் என்றுகூடக் கருதாமல் தன் சிற்றப்பன் வீடணன் தன்னைக் கொல்லப் பகைவர்க்கு வழி வகுத்துக் கொடுத்தானே என்று எண்ணி எண்ணி மனம் புழுங்கினன்; இறக்கும்போது அவன் மனத்தில் இந்தப் புழுக்கமே இருந்திருக்கிறது.

இது நிற்க, இந்திரசித்துவும் மூலப்படையும் அழிந்த பின்னும் இராவணன் மனம் தளரவில்லை என்பதைக் கண்டோம். எதற்கும் அஞ்சாத இந்த இராவணன் யார்? வடநாட்டு வரலாற்று அறிஞருள் சிலர் பின் விளைவு அறியாத பேதைமையால் இராமாயணம் வடநாட்டாருக்கும் தென்னாட்டாருக்கும் நடந்த போர் என்று கருதி எழுதி விட்டனர். பள்ளிக்கூடங்களில் பயிலும் சிறுவர்க்கான இந்து தேச சரித்திரப் புத்தகங்களிலும் இக்கருத்தே தோன்ற இராமாயணக் கதையைப் பலரும் புகுத்தினர். இராமலீலை என்ற பெயரால் இராவணன், கும்பகருணன், இந்திரசித்து முதலியோரின் உருவங்களை அமைத்து எரிக்கும் குருட்டு வழக்கம் ஒன்று தோன்றி இந்திய அரசியல் தலைவர்களாலும் பிறராலும் இன்றும் கொண்டாடப்படு கிறது. அதனை உடனிருந்து காணும் அந்நிய நாட்டவர்க்கு இந்தப் பொய்க் கருத்தே உரைக்கப்படுகிறதாம். இதனல் இராவணன் வடநாட்டானு, தென்னாட்டானு என்ற கேள்விகள் தமிழகத்தில் கடந்த நாற்பது ஆண்டுகளாக எழுந்து நிலவி வருகின்றன. இவ்வாறு தத்தம் மனம் போனவாறு சொல்லி மக்களிடையே பொருளற்ற வேற்று மைகளும் வெறுப்புக்களும் தோன்றுவதற்குச் சிலர் விதை யூன்றினர். இக்கால அரசியல் பொருளாதாரத் துறை களிலும் இந்த நச்சு விதைகள் விழுந்து அல்லல் விளைத்து வந்துள்ளன.

இராவணன் வடநாட்டானுமல்ல, தென்னாட்டானும் அல்ல. அவன் ஓர் அன்னியன். முன்னாளில் பண்புற்றிருந்த பாரத நாட்டிற்குள் படையெடுத்தனர் பல வெளிநாட்டார். அவர்கள் நம் நாட்டில் குடி புகுந்ததே அல்லாமல் இங்கு

மண வினைகளால் தொடர்பும் செய்து கொண்டார்கள். தேனும் நெய்யாறும் பாலாறும் ஓடும் பாரத நாட்டை அடிமைத் தளையில் அகப்படுத்தவும் நினைத்தனர். ஆனால் அன்று பாரத சமுதாயம், ஒரே மொழி ஒரே பண்பாடு என்ற முறையிலே சீரும் சிறப்பும் பெற்று வளர்ந்தோங்கி யிருந்தது. இமயம் முதல் குமரி வரை நம் தமிழ்ப் பெருங்குடி மக்கள் வாழ்ந்துவந்தனர். ஆனால் வேற்றவர் படையெடுப்பால் பலவேறு மொழிகள் வடநாட்டிலே தோன்றத் தொடங்கின. அப்போதுதான் பாரதநாடு வடபகுதி தாழ்ந்தும் தென்பகுதி உயர்ந்தும் காட்சி தந்தது. இதனைத் தடுக்கப் பலர் முயன்றும் முடியாத காரியம் என்று பின்னர்க் கண்டனர்.

இராவணன் அரக்கர்களில் ஒருவன். அரக்கர்கள் என்றால் பண்பாடு அற்றவர்கள் என்று பொருள். வெளி நாட்டவர்களை எந்த நாட்டாரும் புகழ்ந்து பேசுவது கிடையாது. வெளிநாடுகளிலிருந்து வருபவர்களைப் 'பரதேசி' என்று அழைப்பது வழக்கம். பரதேசத்தவர் செல்வமும் வளமும் பெற்ற ஒரு நாட்டிலே புகும்போது கையில் ஒன்றுமில்லாமல் பிச்சைக்காரராய் வந்ததனால் அவர்களைப் 'பரதேசி' 'பிச்சைக்காரன்' என்று கூறுவது வழக்கமாயிற்று. புகுந்த நாட்டிலே உட்பகையை உண்டாக் கியதால் அவர்களை அரக்கர்கள் என்றும் கூறினார்கள். "கற்றவர்களும் நாட்டுக்கும் மொழிக்கும் அரசுக்கும் விபரீத மாக நடந்துகொள்ளும்போது அரக்கர் ஆகின்றார்கள்," என்று வடநூல்* கூறியிருப்பதை முன்பே காட்டியிருக் கிறோம்.

வெளிநாட்டிலிருந்து வந்த ஒரு விபரீத இனம் பாரத நாட்டை ஆள எண்ணியது. அந்த அரக்கர் இனத்திலே புயவலியிலும் புத்திக் கூர்மையிலும் சிறந்தவன் இராவணன். அவன் உலக முழுதும் தன் வயப்பட வேண்டுமென்று கருதினான். அதனால் வரலாற்று ஏடுகளிலே, அலெக்சாந்தர், சீசர், நெப்போலியன் போன்றவர்கள் எண்ணியதற்கு

---

* சாக்ஷ ராக்ஷஸ விபரீதா '! சேத் இராக்ஷஸா ஏக கேவலம் "

முன்பு இராவணனும் ஒரு பேரரசைப் படைக்கத் திட்ட மிட்டான். பாரத நாட்டிற்கு வடகிழக்கில் அண்மையிலே ஒருபேரரசு இருந்தது. அதுதான் சீன நாடு. அந்த நாளிலே, சீரும் சிறப்பும் பெற்றிருந்தமையால், அதனைத் தேவலோகம் என்றும், சீனர்கள் தங்களைத் தேவர்கள் (Celestials) என்றும் கூறினர். அந்த நாட்டினுடைய மன்னன் இந்திரன் என்று அழைக்கப்பட்டான். அந்த நாடும் பாரத நாடும் நட்புரிமை கொண்டு வாழ்ந்து வந்தன என்பதையும் அறிகிறோம். தேவலோகத்திற்கு இன்னல் வந்துற்ற போதெல்லாம், பாரத மன்னர்கள் படையுடன் சென்று அவர்களைப் பண்புடன் காத்தனர். ஒரொருகால் தேவலோகத்திற்குச் சென்று இந்திரனை வென்றபோதிலும் அரக்கர்கள் ஒரு நிலையான பேரரசை ஏற்படுத்த முடியாதவாறு பாரதநாடு எதிர்த்த காரணத்தால், அரக்கர்களில் மிகச் சிறந்தவனை இராவணன் தெற்கு நோக்கித் தன் படைகளைச் செலுத் தினன். ஆனால், அவன் அங்கும் தோல்வியே கண்டான். சங்க காலத்தை அடுத்துவந்த நாடோடிகளான களப்பிரரும் இந்த அரக்கர் இனத்தவராவர். இவர்களும் நம் தென் னுட்டில் அரசு நிலையிட முயன்று முடிவில் பூண்டோடு அழிந்து போனது வரலாறு கூறும் உண்மை.

இராவணன் காலத்தில் கிட்கிந்தையில் வானரர்கள் ஆட்சிபுரிந்து வந்தனர். வாலியின் வன்மை இராவணனைக் கட்டியது. அதனால் அவன் அஞ்சி ஓடிப் பின்னர் வாலி யுடன் சமாதானம் செய்துகொண்டு நட்புரிமையுடன் வாழ் வதாகக் கூறிச் சென்றான். அதன்பின், அவன் மூவேந்தர் நாட்டிற்குச் செல்லலாமென நினைத்தான். "எங்கே செல் கிறாய்? நில்" என்று அகத்தியன் அவனைத் தடுத்து நிறுத்தி மூவேந்தர்களின் எல்லைக்குள் கால்வைக்கக் கூடாது என்று ஆணையிட்டான். அதனால் இராவணன் தெற்கு நோக்கி ஓடினன்; ஓடினவன் குமரிக் கண்டத்தின் முடிவுவரையில் ஓடினன். அதன் தென்கிழக்கிலிருந்த கடலைக் கடந்தான்; அங்கே ஓர் இலங்கையைக் கண்டான். இலங்கை என்றால் தீவு என்பது பொருள். யாருமே குடியேறாத அந்த

இலங்கையிலே தன்னுடைய மக்களைக் குடியேற்றினன். அங்கு ஒருபால் நாடு நிறுவி நன்கு ஆண்டுவந்த குபேரனை வென்று அவனையும் அவனைச் சார்ந்தவர்களையும் வெளியேற்றினன்.

இராவணன் இலங்கை அரசைத் தேவலோகத்திற்குச் சமமாகச் செய்தான். தேவலோகத்திற்கும் தன்னுடைய படைகளை அனுப்பி அவர்களில் பலரை அடிமையாக்கிக் கொண்டான். இராவணன் என்ற பெயரைச் சொன்னவுடனேயே தேவர்களும் கின்னரர்களும் நடுநடுங்கினர். இராவணனால் ஆங்காங்கே நிறுத்தப்பட்டுச் சென்ற அரக்கர்கள், பாரத நாட்டிற்கும், தேவர்களுக்கும் பல இன்னல்களைத் தந்துகொண்டிருந்தனர். தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கவும், முனிவர்களின் விருப்பத்திற்கிணங்கவும், பாரத மன்னர்கள் காட்டிலே வாழ்ந்து வந்த அரக்கர் இனத்தை அழிக்க முற்பட்டனர். அரக்கர் தலைவர்களும், எப்பொழுதாவது பாரத மன்னர்களிடையே பிளவு ஏற்படாதா, அதைக் கொண்டு அந்த நாட்டை நாம் ஆள முற்படலாமே என்று சமயம் பார்த்துவந்தனர்.

இராமனும் சீதையும் இலக்குவனும் காட்டிற்கு வந்தபின், சூர்ப்பணகையை அவர்கள் சந்திக்க நேர்ந்தது. இராமனுடைய பேரழகிலே மயக்கம் கொண்ட அச் சூர்ப்பணகை தன்னை ஏற்றுக்கொள்ளுமாறு இராமனை வேண்டினள். அவன் மறுத்தவுடன் இராவணனிடம் சீதையின் பேரழகை எடுத்துப் பேசினள்.

இராவணன் சீதையின் பேரழகைக் கேட்டவுடனேயே சீதையைக் கவர்ந்து வரவேண்டுமென்ற எண்ணமுடையவனுனன். ஆனல் பாரத நாட்டிற்குச் செல்லவேண்டுமென்று நினைக்கவே அவன் நெஞ்சம் அஞ்சியது. இராமஇலக்குவரிடம் நேரிலே போர் செய்து சீதையைக் கொண்டுவர முற்பட்டால், அங்கு நிகழ்த்தவேண்டிய போர் மிகவும் கடுமையாக இருக்கும் என்பதை அவன் எண்ணினன். ஆகையால், யாருக்கும் தெரியாமலே சீதையைக் கொண்டு வந்துவிட்டான். அப்போது, விமான

மூலம் தான் கொண்டுவந்த சீதையை இராமஇலக்குவர்கள் தேடி வருவார்கள் என்று அவன் நினைக்கவில்லை.

பாரத நாட்டைப் பகைத்துக்கொண்ட அன்னியன் தான் இராவணன். அவனும், அவனுடைய இனமும் நம் நாட்டிலே குடியேறியும், அவர்கள் நாட்டிற்கும் மன்ன னுக்கும் எதிர்ப்பாகப் போர் செய்து பேரரசை நிலைநாட்ட எண்ணியதால் அழிவுற்றனர்.

அரக்கர்களேயன்றித் தேவர்களும் நம் நாட்டை அடிமைப்படுத்த நினைத்ததுண்டு. ஆயினும் அதனைப் பாரத நாட்டார் பார்த்துக் கொண்டிருக்கவில்லை. மகா பாரதத்தில், கோபாலன்மீது போர் தொடுத்த இந்திரனை அவன் வென்றதை நாம் காண்கிறோம். வைதவர்க்கும் வாழ்வளிக்கும் நம் பாரத சமுதாயம் இந்திரனுக்கும் பின்னர் வாழ்வளித்து அரக்கரது கொடுமையினின்றும் அவனைக் காத்தது. முசுகுந்தன், தசரதன் முதலியோர் அத்துறையில் முன்னணியில் நிற்கின்றனர்.

பாரத நாட்டை அடிமைப்படுத்த எண்ணியதோடு மட்டுமல்லாமல் தன் மனைவியையும் தூக்கிச் சென்றுனுதலால், இராவணனைக் கொல்ல வேண்டியவனுனுன் இராமன். இவ்வகையில் நாம் அறிவது இராவணன் ஒரு வெளி நாட்டான் என்பதுதான்.

இராவணன் சிறந்த பண்பாடுகள் சில உடையவன். வலிமிகுந்தவன். பழுதுபடாத ஒரு பேரரசை நிறுவித் தன் மக்களுக்கு நல்ல அரசை நல்கினுன்; அதனை எவரும் மறுக்கமுடியாது. பகைவன் என்ற காரணத்தால், பாரத நாடு அவனுக்குப் பரிவுகாட்ட மறுத்தது. இதில் என்ன குற்றம் உளது?

இராவணன் பிராமணன்; அரக்கர் இனத்தைச் சேர்ந்தவன் என்று கூறியவுடனே, பிராமணர்களெல்லாம் அரக்கர்களா என்று வாதாடுவதற்குப் பலர் முன் வரு வார்கள். மிருகத்திற்கு நாலு கால் என்ருல், நாலு கால் உடையவைகளெல்லாம் மிருகங்களாகா அல்லவா?

இராவணன் பிராமணன் என்றதால், அரக்கர்களெல்லாம் பிராமணர்களாகிவிடமாட்டார்கள். நம்நாட்டில் சிறந்த ஒழுக்கத்தை உடைய பிராமணர்கள் வாழ்ந்து வந்தார்கள். வசிட்டர், விசுவாமித்திரர் முதலானவர்களும் பிராமணர்களே. பிராமணர் என்பது சாதிப் பெயர் அல்ல; பிரமஞானம் உடையவர்கள் பிராமணர்கள். பிராமணர்கள் என்பதற்குப் பொருள்காண இன்றுள்ள அகராதியைக் கொண்டு ஆராய்வது சரியல்ல.

பிராமணர், மன்னனுக்கும் நாட்டிற்கும் மாருகச் செல்லாமல் மன்னர்களுக்கு அரச குருவாக இருக்கவேண்டுமென்று நினைத்தனர். இந்தக் கருத்திற்கு வெளிநாட்டிலிருந்து வந்த பிராமணர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. ஆகையால் நாட்டிலே உட்பகை மலியத் தொடங்கியது. அதை உண்டுபண்ணியவர்களை அரக்கர் என்றனர். இவ்வுட்பகையை அழிக்க வேண்டியது மன்னர்கட்கு முறைமை. அரக்கர்களை அழிப்பதுதான் தங்கள் கடமை என்று பாரத மன்னர்கள் நினைத்து அவர்களைப் போருக்கு அழைத்து வெற்றியும் கண்டனர்.

சில சமயங்களில் உள்நாட்டுப் பிராமணர்களும் அரச பதவியை அடைய ஆவல் கொண்டனர். இதற்கு எடுத்துக்காட்டாகப் பரசுராமனைக் கூறலாம். பிரம வித்துக்களான பிராமணர்கள் மன்னர்களாக வேண்டுமென்று திட்டமிட்ட போதெல்லாம் தற்காப்புக்காக மன்னர்கள் அவர்களைப் போரில் வென்றார்கள்.

விருப்பு வெறுப்பற்ற நிலையிலே நோக்கும்போது, இராமாயணம், இராவணன் பரசுராமன் முதலிய பிராமணர்களைப் பாரத மன்னர் வென்ற வெற்றியைக் கூறுகிறதேயன்றி வடநாட்டிற்கும் தென்னாட்டிற்கும் ஏற்பட்ட போரைக் கூறுகிறதென்பதற்குச் சான்றுகளேயில்லை.

பிரமன் என்பவன் படைக்கும் தொழிலுக்குத் தலைவன். பொதுவாகக் கூறுமிடத்து பிரமன் உலக மக்களை எல்லாம் படைக்கிறான் என்று கூறுவர். பகவத் கீதை "உள்ளது போகாது இல்லது தோன்றாது" என்று சற்காரியவாதம்

கூறுகிறது. மன்னுயிர்களை யாருமே படைக்க நியாயமில்லை. விதி வழியே செல்லும் உயிர்களை உண்டாக்குவது என்பது யாராலும் முடியாது. "என்று நீ அன்று நான்" என்றபடி தொன்று தொட்டு ஆன்மாக்களும் கடவுளும் உள்ளனர். ஆனால், பிரமன் எதைப் படைக்க முடியும் என்ற கேள்வி எழலாம். பண்பாடுடைய சமுதாயத்தைப் படைப்பதே பிரமன் தொழில்.

பிராமணர் பிரமத்தை அறிந்தவர்கள் என்றால், பஞ்ச பூதங்களின் நுட்பத்தை அறிந்து அவைகளை உலகிற்குப் பயன் தரும்படி செய்பவர்கள் என்பது கருத்து. வெளிப் படையாகக் கூறினால் அவர்கள் விஞ்ஞான உண்மைகளை ஆராயும் ஆய்வுக்கூடங்களைச் சமைத்து எண்ணியதை எண்ணியாங்குச் செய்யவும் வேண்டியவற்றை வேண்டிய வாறு பெறவும் முயல்பவர்களாவர்.

விஞ்ஞான உண்மைகளை அறிந்தவர்கள், தாங்கள் கண்ட உண்மைகளைச் சுயநலத்திற்காகப் பயன்படுத்து வார்களேயானால் நாடு நாசமடையும். ஆகையால்தான் வள்ளுவப் பெருந்தகை, அந்தணர்கள் அறவோர்களாகவும், மற்ற உயிர்களுக்கெல்லாம் அன்பு செய்கிறவர்களாகவும், சுயநலமற்றவர்களாகவும் இருக்க வேண்டுமென்று கூறுகின்றார்.

அந்தணர்களின் விஞ்ஞானம் உலக நலமும் அரசு நலமும் கருதியது; நாட்டிற்கும் அரசுக்கும் நல்ல அரண் செய்வது. வேந்தனது அரசு அந்தணர் நூல்கட்கு ஆதரவாக இருக்க வேண்டும் என்பதற்காகவே திருவள்ளுவர், "அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதி யாய், நின்றது மன்னவன் கோல்" என்று கூறினார்,

அந்தணர்கள் இவ்வுண்மைகளை மறந்து அரசராதற்குத் தங்களுடைய தவத்தையும் வலிமையையும் உபயோகிக்க எண்ணியபோதுதான் அவர்கள் அரக்கர் ஆனார்கள்.

இனி இராவணன் தென்னாட்டான் என்று கூறுவதற்கு ஒரு சான்றும் கிடைக்கவில்லை. இலங்கை நாட்டுக் குடி

மகனுமல்ல இராவணன். இன்றைய இலங்கையை இலங்கை என்று கூறுவது பிற்கால வழக்கு. பழந்தமிழ் நூல்கள் அதை ஈழநாடு என்றுதான் பெயர் குறிக்கும். அது குமரிக்குத் தெற்கிலிருந்து மறைந்து போன ஏழேழு நாட்டின் (குமரிக் கண்டத்தின்) மிகவுயர்ந்த பகுதிகளில் ஒன்று.

இராவணன் இளம் வயதில் செய்த வீரதீரச் செயல்க ளெல்லாம் இமயமலே அடிவாரத்தில்தான். ஆகையால் அவனேத் தென்னுட்டவன் என்று கூறுவதில் ஒரு சிறிதும் உண்மையில்லே. இராமன் காலத்தில் தமிழ்மொழி, இமயத்தை வடக்கெல்லேயாகவும் குமரி நாட்டைத் தெற்கெல்லேயாகவும் கொண்டிருந்தது. இந்த உண்மையைக் கொண்டுதான் ஆசிரியர் திரு. சுந்தரம் பிள்ளேயவர்களும், "சதுர்மறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினது" என்று, தமிழை நோக்கிக் கூறினர்.

நம் பாரதநாடு பண்புடன் திகழவேண்டுமானல், நம் நாட்டில் ஒற்றுமை நிலவவேண்டும். இராவணனேத் தென் னுட்டான் என்றும், இராமனே வடநாட்டான் என்றும் கூறி னல், பல சிக்கல்கள் ஏற்பட்டுவிடும். அந்தணர்கள் அற வோர்களாக வாழ வழிசெய்ய வேண்டும், அவ்வாறு அவர் கள் வாழாது, மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசையுடன் வாழ்ந்தால் அழிவுதான் ஏற்படும் என்பதைத்தான் இராமா யணம் நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

பெண்ணின் பெருமை பேசுவது நம் நாடு. அந்தப் பெண்ணினத்திற்குக் களங்கம் கற்பிக்கும் எவரையும் தண்டிப்பதுதான் மன்னர்களுடைய கடமை. ஆனல், மன்னனே அக்கொடுமையைச் செய்தானுயின் மாற்று ஒன்று மில்லே. "அரசவேலியல்லது யாவதும் புரைதீர்வேலி இல்" என்று இளங்கோவடிகள் கூறுவர். பெண்ணினத்திற்கு மாசு கற்பிக்கும் எவரும் வாழமுடியாது என்பதைத்தான் இராவணனுடைய மாட்சியும் வீழ்ச்சியும் காட்டுகின்றன.

## 58. வேலற்ற வீரன்.

"ஒன்ரு உலகத்(து) உயர்ந்த புகழல்லால்
பொன்ருது நிற்பதொன்று இல்"

புகழ் ஒன்றைத் தவிர மற்றவைகளெல்லாம் கால வெள்ளத்திலே மறைந்து போகும் என்று வள்ளுவப் பெருந்தகை கூறுகின்ருர். ,, இறப்ப வந்துழி இளி வந்தன செய்தாயினும் உய்க" என்பதனை மறுத்துத் தன் பெருமையை நிலை நாட்டியவன் இராவணன். இந்திரசித்து, இராவணனிடம் சென்று, "இனி வெற்றி கிட்டாது, சரணடைவதே மேல்" என்று கூறினன். ஆனல், இராவணன் அரிதில் பெற்ற சீதையை எளிதில் கொடுத்துவிட்டால் தான் ஓர் இழிந்த செயலைச் செய்ததாகவே கருதினன்.

"மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே ஏமம் படைக்கு" என்று கூறுகின்ருர் வள்ளுவர். படைத்தலைவனுகவேண்டுமானல் புயவலி மட்டுமேயிருந்தால் போதாது; தன்மானமும் தேவைப்படுகிறது. ஆகையால் இராவணன், உயிர் போயினும் தன்மானத்தை விடாது காப்பாற்ற எண்ணினன். நிகரற்ற உடல் வலியும், அளவிடுதற்கு முடியாத கல்வியறிவும், நிறைந்த கலையறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற பெருவேந்தனுக விளங்கியவன் இராவணன். மலை கலங்குமானுலும் நிலை கலங்காத மன உறுதியுடன் அவன் நின்ருன். தளராத தன்னம்பிக்கையுடையவனுதலால் தன் நாட்டு மக்களிடையே புகழுடன் வாழ்ந்தான்; சிறிதும் மனம் தளருவானுனல் அவனது வீரத்திற்கு மாசு ஏற்பட்டுவிடும்.

இராவணன், தானே போர்க்குச் செல்வதென்ற முடிவிற்கு வந்துவிட்டான். இலக்குவனிடம் முதலில் போர் புரிந்தான். வானர சேனைகள் இராவணன் முன் நிற்க அஞ்சி ஓடத்தொடங்கின. ஆனல் இலக்குவன், அவர்களை

"அஞ்சாது நில்லுங்கள்; நானே போர் செய்கிறேன்" என்று கூறி இராவணனுடன் பொருதான். அரக்கர் தலைவன் மோகனாத்திரத்தைச் செலுத்தினான். இலக்குவன், வீடணன் சொற்படி திருமாலின் படையைக் கொண்டு தடுத்து நிறுத்திவிட்டான். அது கண்டதும் இராவணன் ஒரு முடிவிற்கு வந்தான். கும்பகருணன் இந்திரசித்து முதலானவர்கள் வீடணனைக் கொல்ல வேண்டுமென்ற எண்ணமுடையவர்களாகவேயில்லை. ஆனால், அவன்தான் அரக்கர்களின் அழிவிற்கே காரணமென்று உணர்ந்தான் இராவணன்; அவனைக் கொன்று ஒழித்தாலொழிய வெற்றி காணமுடியாது என்பதை நன்கு கண்டான். தனக்கு மயன் தந்த வேற்படையை அவன் வீடணன் மேல் எறிந்தான். இலக்குவனே வீரர்களுள் வீரன். தங்களுக்காக அல்லும் பகலும் உழைத்த வீடணன் இறப்பதை அவன் விரும்பவில்லை. உடனே முந்திச் சென்று அந்த வேலைத் தானே ஏற்றுக்கொண்டான். அஞ்சல் என்று வந்தவரைக் காக்கும் பெருங்குடியிலே, சிபியின் வழியிலே வந்தவனாதலால் இலக்குவன் தனக்கென வாழாப் பெரும் பணியைச் செய்து தியாகத்தின் சின்னமாகவே காட்சி தந்தான். வீடணன் மனம் உடைந்தவனானான். "இலக்குமணன் இறக்கவும் நான் வாழவும் நேர்ந்ததே, அந்தோ!" என்று கதறித் தற்கொலை செய்துகொள்ளவும் வீடணன் துணிந்தான். இதனைக் கண்ட சாம்பவான், இலக்குமணனை உயிர்ப்பிக்க வழி உளது என்று கூறி அனுமனைக் கூப்பிட்டான். அனுமனும் உடனே அங்கே வர, "ஔஷதி கொணர்க, இலக்குவன் எழுவான்" என்று கூறினான். இராவணனே தன் வேலை முடிந்துவிட்டது என்று அரண்மனை சென்றுவிட்டான். வானரர்கள் கலங்கி நின்றனர். ஆனால் அனுமன் மருந்து கொண்டுவந்து இலக்குவனைக் காப்பாற்றிப் பிழைக்க வைத்துவிட்டான். பின்னர் இராமனிடம் சென்று நிகழ்ந்தவற்றைக் கூறினார்கள். இராமனும் அகமகிழ்ந்தான்.

## 59. முறை துறந்தான் முடிவு.

இராமன் பெரிய வீரன். எனினும், அவன் தன்பால் உற்ற துணைவர்களுக்கு இன்னல் வரும்போதெல்லாம், மனத்தளர்ச்சியுற்றுச் சோர்ந்து விடுவான். வான்மீகி இராமனுடைய நிலையை மிகவும் அழகாகச் சித்திரிக்கிறார்: போர் நிகழ்ச்சிகளில் இலக்குவன் மெய்சோர்ந்து தளர்ச்சி எய்திய ஒரு சமயத்தில் இராமன் இலக்குவனை நோக்கிக் கூற லுற்றவன், "வீணையும் நாதமும்போல் இணை பிரியாத நாம் பிரிந்து போகக்கூடாது; என் உள்ளத்தில் எழும் எண் ணங்களைக் காவியமாக்கும் மாசற்ற வீணை போன்றவன் நீ; நீ மரணம் அடைவாயானால் நாதம் இழந்த வீணைமுன் சோக கீதம் பாடி என் உயிரைத் துறப்பேன்; நீ இறந்தால் யான் ஒளியற்ற கண்களைப் போலவும் மதியிழந்த வானம் போலவும் பொலிவழிந்து போவேன்; அதன்பின் நான் வாழ்ந்துதான் என்ன பயன்? போர்தான் எதற்கு? சீதை இனி வந்துதான் என்ன பயன்?" என்று கூறினான். அது கேட்டுத் திடுக்கிட்ட இலக்குவன், "அண்ணலே வீடண னுக்குக் கொடுத்த வாக்கை மறந்துவிட்டாயா? வலியற்ற வன் போல் நீ பேசுவது நம் மற மாண்புக்குத் தகுமா? நாளை, போர்க்களத்திலே இராவணனை நீர் கொல்வதை யான் பார்க்க விரும்புகிறேன்," என்றான். அதன்பின் இராமனுக்குச் சிறிது தெளிவு பிறந்தது; போருக்குப் புறப்படத் தயாரானான்.

இலக்குவன் பிறருக்குத் துன்பம் ஏற்பட்டபோது, தன் உயிரைத் திரணமாக மதித்து உயிர்விடவும் துணிந்தான். தனக்கென வாழாத பெருங்குணமுடையவன் இலக்குவன் என்றால் அது மிகையாகாது. இலக்குவன் காண இராமன் போரில் இறங்கினான்.

இராவணனும் இராமனும் கடும்போரில் ஈடுபட்டனர். அப்போரும் மிக்க கடுமையாகவும் உக்கிரமாகவும் இருந்

தது. இராவணனுக்கு விமானம் உண்டு. இராமனுக்கோ அஃது இல்லை. இந்திரன் இராமனுக்குத் தேர் அனுப்புவ தாக மேற்கொண்டு போர்க்களத்திற்கு ஒரு தேரை அனுப்பி வைத்தான். அதுகண்டதும் இராமன் முதலில் அஃது அரக்கர்களின் மாயையோ என ஐயுற்ருன். ஆயினும் பின்னர்த் தெளிந்து அந்த விமானத்தை ஏற்றுக்கொண் டான். இதனைக் கம்பர்,

> " மாருதியை நோக்கி இள வாளரியை நோக்கி,
> நீர் கருதுகின்றதை நிகழ்த்துமென நின்ருன்
> ஆரியன் வணங்கியவர் ஐயமிலை ஐயா,
> தேர்இது புரந்தரன(து) என்றனர் தெளிந்தார் "

என்று கூறுகின்ருர்.

இந்திரன் இராவணனுடைய வீரத்தையும், அவன் படைகளையும் கண்டு அஞ்சியவன். இராமனுக்குத்தான் வெற்றி என்று உறுதியாகத் தெரியும் வரையிலும் அவனுக்கு உதவி செய்யத் தயங்கினுன். ஆனுல், இராமனுக்குத்தான் வெற்றி என்று கண்டபின்புதான் அவன் தன்னுடைய விமானத்தை அனுப்பினுன். வாழ்ந்தவர்களைத்தான் போற் றும் உலகம். அதுபோல இந்திரனும், இராவணனுடைய கோட்டையிலே பறந்த கொடி சிறிது இறங்கத் தலைப்பட்ட பின்பே இராமனுக்கு உதவிசெய்யத் துணிந்து முன்வந் தான். விண்ணுட்டு மக்களின் விமானமோட்டி மாதலி. அவன் இராமனை நோக்கி, " அண்ணலே, நீ பகைவர்களை அழிக்கும் வல்லமை உள்ளவன் என்பதைக் கண்டோம்! உனக்கு வெற்றி ஏற்படவேண்டுமென்ற பேரவாவினுல் இந் திரன் இத்தேரை உனக்கு அனுப்பியுள்ளான். பெரும் பெரும் படைக் கலங்களையும் தந்துள்ளான். நீ பெற்றுக்கொண்டு விமானத்திலேறி, வில் தொழில் புரிக" என்று நயமாக மொழிந்தான். மாதலியின் வேண்டுகோட்கு இணங்கி, இராமனும் விமானத்திலேறிப் போருக்குப் புறப்பட்டான்.

இ ர ா ம ர ா வ ண ப் போர் தொடங்கிவிட்டது. இப் போரிலே, இராவணன் சீதையைத் தரமுடியாது என்று கூறினும், அவள்பாலுள்ள ஆசை அவனுக்குச் சிறிது சிறி

தாகக் குறைந்து வந்ததை நாம் காணுகின்றோம். தன் மானத்தையும் புகழையும் காக்கவே அவன் போர்புரிந்தான் என்பதையும் அறிகின்றோம். அதுபோலவே இராமனிடத்திலும் ஒரு மனமாற்றம் உண்டாவது நமக்குத் தெரியாமலில்லை. சீதைபால் அவனுக்கிருந்த தீராக் காதலும் தீர்ந்துவிட்டதோ என்றோர் ஐயம் நம் உள்ளத்தில் எழுவதை நாமே உணர்கிறோம். சீதையைத் திரும்பப் பெற்றாலும் அது தனக்கு இழுக்குத் தருவதாகுமோ என இராமன் தனக்குள் ஐயுறுவதையும் காண்கிறோம். இந்த எண்ணங்களின் காரணமாகத்தான் இராமன் அயோத்திக்கே திரும்பிச் சென்றுவிடுவது நலமோ என்றுகூடக் கருதும் நிலைமை அடைகின்றான்.

இராவணன் இராமனோடு போரிடவும் மகோதரன் இலக்குவனுடன் போரிடவும் மீண்டும் தொடங்கியது வெம்போர். முதற்போரிலே இராமனுக்கு விமானமில்லை. ஆனால் இப்பொழுதோ விமானமும் இராமன்பால் வந்தடைந்தது. ஆகையால் இரண்டாம் போர் விண்ணிலும் மண்ணிலும் நடப்பதாயிற்று.

மகோதரனுக்கும் இலக்குவனுக்கும் நடந்த போரின் முடிவில் இலக்குவனது படைகளின் வலிமை தாங்கமாட்டாமல் மகோதரன் இறந்துவிடுகிறான்.

இராவணனுக்கும் இராமனுக்கும் கடும்போர் நடக்கின்றது. பலவகையான படைகளை இரு சாரரும் அள்ளி வீசினர். வெற்றி தோல்வி காணாது வீரர் படைகள் மோதின. இராமன் இராவணன்மேல் எறிந்த படை வலிமையால் அவன் ஆற்றாது மூர்ச்சையடைந்தான். அந்நிலையில் அவன்மீது அம்புவிடுதல் அறம் அன்று என்று மாதலியிடம் கூறித் தேரை நிறுத்துமாறு இராமன் கூறினான். வாலியின்பால் காட்டாத பரிவை இராமன் இராவணனிடம் காட்டுகிறான்; எப்படியோ இராவணன்பால் இராமனது உள்ளம் ஈர்க்கப்படுகிறது; இராமன் மனம் நெகிழ்கின்றான். உண்மையும் தூய்மையும் உறையும் உள்ளத்தை நாடும் இராமனது உள்ளம் இராவணனிடம் பரிவது ஏன்?

ஆராய்ச்சிக்குரியதாகிறது இவ்விடம். நிற்க, இன்னும் பார்ப்போம்.

இராமன் இறுதியாக விட்ட பிரமாத்திரத்தால் இராவணன் விமானத்திலிருந்து தலைகுப்புற நிலத்தில் வீழ்ந்தான். கடைசியில் நடந்த போர் ஆகாயத்திலாதலால் அவன் விழுந்ததைக் கண்ட இராமன் அவனைக் காண விமானத்திலிருந்து இறங்குகிறான். அவன் இராவணனை நெருங்கி அவன் இறந்துவிட்டதைக் கண்ணுரப் பார்க்கின்றான். அதனைக் கம்பர் கூறுவதன் சிறப்பைப் பாருங்கள். மகாவீரனாதலால் இராவணன் முகம் மிகவும் சுடர்விட்டுப் பிரகாசித்தது. அவனுடைய முகங்களிலே கடுகடுப்பு இல்லை, வஞ்சனை மாசு இல்லை; தேவர்களையும் முனிவர்களையும் ஆட்டிப்படைத்தபோது இல்லாத பொலிவு அவன் இறந்தபோது அவனுடைய முகத்தில் விளங்குகிறது.

> **" வெம்மடங்கல் வெகுண்டனைய சினமடங்க**
> **மனமடங்க வினையம் வீய**
> **தெம்மடங்கல் பொருதடக்கைச் செயலடங்க**
> **மயலடங்க ஆற்றல் தேய**
> **தம்மடங்கு முனிவரையும் தலையடங்க**
> **நிலையடங்கச் சாய்த்த நாளின்**
> **மும்மடங்கு பொலிந்தனஅம் முறைதுறந்தான்**
> **உயிர்துறந்த முகங்கள் அம்மா "**

என்று கம்பர் கூறுகிறார்.

இராவணன் இறந்துவிட்டான். அவனுடைய உள்ளம் பண்பட்டுவிட்டது. போரில் போர் மறமாகிய தீ கனன்று எழ எழ அவன் உள்ளத்தில் படிந்திருந்த காமம் கோபம் முதலான கெட்ட குணங்கள் வெந்து சாம்பராய்விட்டன. வீரவுணர்ச்சி ஒன்றே நிலவ அவன் இறந்ததால் அவனுடைய முகம் பொலிவுடன் விளங்கியது. சீதையை இராமனிடம் திருப்பித் தந்துவிட வேண்டுமென்ற எண்ணம் அவன் மனத்தில் ஏற்படாமல் இல்லை; ஏற்பட்டபோதிலும் தன்மானம் அவனைத் தடுத்து நிறுத்திற்று. போர்

நடுவிலே இராமனது வலிமையையும், அழகையும் கண்டு தன்மானத்தைப் பறிகொடுத்தான். சுருங்கச் சொன்னல் சீதைக்காக ஏற்பட்ட போரிலே சீதையின் நினைவின்றி இராவணன் இறந்துவிட்டான் என்றுதான் சொல்ல வேண்டும். இராமனே சீதையின் நினைவை மறந்து, தனக்குப் பரம விரோதி என்பதையும் கருதாமல் இராவணனது வீரத்தைக் காண அவனருகிலே வந்தான். அதுதான் மறவர்க்கு மாண்பு தரும் அறம். அறத்தை வளர்க்கின்ற கருணைக் கடலான இராமன், இரத்த வெள்ளத் திலே மிதந்து கிடக்கும் இராவணனைத் தன் இரு கண் களாலும் கண்டான். அவனது பெரிய உருவம் தன் மனத் திற்கேற்றவனுகக் காட்சி தருவதை உணர்ந்தான். "இராவணனது உள்ளேயிருந்த காதலும், செந்நிறமுள்ள குறுதியும் வெளிப்பட்டு வழிந்ததோ" என்று காண்போர் கருதுமாறு இருந்தது. போரிலே ஒருவருக்கும் புறங் கொடாத இராவணன் தனக்குத் தோற்று இரத்த வெள்ளத் திலே மிதப்பதை இராமன் நன்கு கண்டான்.

இராவணன் சாதாரணமான வீரனல்லன். போர், போர் என்று கூறி எட்டுத் திக்குகளிலும் சென்று எண்ணற்ற விழுப்புண்களைப் பெற்றவன். இராவணன் என்ற பெயர் 'அண்டங்கள் அதிரும்படி அழுதவன்' என்று பொருள்படும் என்பர்; என்ருலும் அதற்குத் 'தன் பகைவரை அழச் செய் பவன்' என்று பொருள் கொள்ளுதல் பொருந்தும். அதற் கேற்பவே அவன் இராமன் முதலிய பலரை அழவைத்து விட்டுப் புன் சிரிப்புடன் வீர மரணமடைந்தான். இந்த வீரனது புன்னகை தவழும் முகத்தை இராமன் ஆர்வத்தோடு பார்த்தான். பார்த்தவன் உள்ளத்தில் உவகை பிறக்க வில்லை. பல வகையாலும் இன்னலுற்று, மூன்று உலகங் களையும் வென்ற இராவணனை வெற்றி கண்டபின் அவ் வெற்றியை இராமன் பெரிதாகக் கருதவில்லை. ஏன்?

இராமன் சிறிது சிந்திக்கத் தொடங்கினுன். இராவண னுடைய உடம்பு முழுவதும் விழுப் புண்கள் உள்ளன. கார்த்தவீரியன் என்பவனும், வாலியும் இராவணனை

வென்று அவனைப் பிணித்துவிட்டார்கள். ஆகையால் இராமனுடைய வெற்றி, அந்த வெற்றிகளை நோக்கும்போது மகத்தானது என்று கூறமுடியாது. கார்த்தவீரியன் முதலியோர்போலாது இராமன் அவனைக் கொன்றுதானே அரக்கர் கூட்டத்தை வெற்றி கண்டான். 'எக்கோடி யாராலும் வெல்லப்படாய்' என்று, அன்று தேவர்கள் கொடுத்த வரம் ஒரு வகையில் நன் மதிப்புடையதாகி விட்டது.

இராமனை ஒரு குற்றவாளி என்று பொதுவாக இன்று ஏடுகளும் மேடைகளும் பேசுகின்றன. உலகமெல்லாம் பரந்து கிடக்கவேண்டிய அவனது புகழ் இன்று தமிழ் நாட்டில் மங்கிவருகின்றது. தன்னுடைய புகழ் ஒரு காலத்தில் மங்கிவிடுமோ என்ற அச்சம் இராமனுக்கும் தோன்றியது. இதனை அவன் வீடணனிடத்தில் கூறினான். "ஆபரணங்களைப் பூண்ட அகன்ற மார்புடையவனே, நான் என்றும் நிலையாய் உள்ள புகழை விரும்பிப் பெறாமல், பூமிக்குப் பாரமாக நிற்கின்றேன். ஆண்மையுடையோர் பழியெனில் உலகம் தரினும் கொள்ளார்; புகழ் எனின் உயிரையும் கொடுத்து வாங்கிக்கொள்வர். ஆனால் நான் வெறிதே உண்டு உறங்குகின்ற தொழிலிலே விருப்புடையவனாய், மானவுணர்ச்சியின்றி இறக்காமல் இருக்கின்றேன் என என் பகைவர்கள் என் புகழை அழித்துவிடுவார்கள். போரிலே புற முதுகு காட்டியவன்போல, நான் பெற்ற வெற்றிகளும் அவத்தமே" என்றான். இதனைக் கம்பர்,

"மாண்டொழிந்து உலகில் நிற்கும்
வயங்கிசை முயங்கமாட்டாது
ஊண்தொழில் உகந்து தெவ்வர்
முறுவல் என் புகழை உண்ணப்
பூண்தொழி லுடைய மார்பா!
போர்ப்புறங் கண்டோர் போன்ற
ஆண்டொழி லோரின் பெற்ற
வெற்றியும் அவத்தம் என்றான்"

என்று கூறுகின்றார்.

மூன்று உலகங்களையும் வென்றவனை இராவணனைத் தோல்வி கண்ட இராமன் பெருமிதத்துடன் "சீதைஎங்கே?" என்று கேட்டு அவளைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு போவான் என்றுதான் நினைப்போம். ஆனால், நாம் இங்குக் காண்பதென்ன? வெற்றி பெற்ற வீரன் தோல்வி எய்தியவன்போல் அழுகிறான். இதற்குக் காரணம் என்ன என்று கேட்கும்போதுதான் இராமனுடைய குண நலன் களை நாம் காணமுடிகிறது.

இராமன், சீதையின்பால் மிகவும் காதல் கொண்டவன். அவளைத் திரும்பப் பெறுவதற்காகவே இலங்கைமேல் படையெடுத்துச் சென்று இராவணனைக் கொன்று வீழ்த்தினான். வீழ்ந்த வீரனது முகப் பொலிவைக் கண்டு இராமன் திடுக்கிட்டுவிட்டான். அவன் உடம்பு முழுவதும் விழுப் புண்கள் நிறைந்து இருக்கக் கண்டான். எட்டுத் திக்குகளையும் வென்ற இராவணனுடைய முதுகிலே யானையின் தந்தங்கள் களங்கமில்லாத பிறைச் சந்திரனைப்போல விளங்கின. இதனைக் கம்பர்,

"தோடுழுத நறுந்தொடையல் தொகையுழுத
    கிளைவண்டின் சுழியற் றருங்கல்
பாடுழுத படர்வெறிநின் பணியுழுத
    அணிநிகர்ப் பணைக்கை யானைக்
கோடுழுத நெடுந்தழும்பின் குவைதழுவி
    யெழுமேகக் குழுவின் கோவைக்
காடுழுத கொழும்பிறையிற் கறைகழன்று
    கிடந்தனபோற் கிடக்கக் கண்டான்"

என்று கூறுகிறார்.

வீடணன் இராமன் ஏன் அழுதான் என்பதைப்பற்றிச் சிறிது சிந்தித்தான்; தன் அண்ணனுடைய முதுகிலேபட்ட காயத்தைக் கண்டே இராமன் வருந்துகின்றான் என்று நினைத்தான். தன் அண்ணன் எத்துணைக் கொடியவன் என்றாலும், இரத்தபாசம் வீடணன் உள்ளத்தை உருக்கவே இராமனை நோக்கி, "அண்ணலே நீங்கள் என்

அண்ணனைப்பற்றித் தவருக எண்ணி விட்டீர்கள். வீழ்ந்த வன் என்ருலும் இராவணன் புறமுதுகு காட்டி ஓடியவ னல்லன். ஈசனுரின் மலையைத் தூக்கும்போதுதான் இறைவ னுடைய வலிமை தாங்க மாட்டாது அழுதானேயன்றி மற்ற வர்களிடத்தில் அவன் வீரனுகவே போர் செய்தான். வாலி யும் கார்த்தவீரியனும் தன்னை வென்றபோதும் அவன் அழுதது கிடையாது. இப்பொழுதும் அவனை வெல்லுவ தென்பது யாவராலும் முடியாத காரியமாகும். இவன் முதுகில் பட்ட காயங்கள் பகைவரால் ஏற்பட்டவை அல்ல" என்ருன். இதனைக் கம்பர்,

> "நாடுள தனையு மோடி
> நண்ணலார் காண்கி லாமல்
> பீடுள குன்றம் போலும்
> பெருந்திசை யெல்லை யானைக்
> கோடுள தனையும் புக்குக்
> கொடும்புறத் தழுந்து புண்ணின்
> பாடுள தன்றித் தெவ்வர்
> படைக்கலம் பட்டு என்செய்யும் ?"

என்கிருர்.

புறமுதுகு காட்டி ஓடிய ஒருவனை வென்ருேம் என நினைந்து இராமன் வருந்திஞன் என்று வீடணன் நினைத் தான். ஆனுல் இராமனே, வாலியை மறைந்து நின்று கொன்றவன். அவன் முதலிலே வருந்தி அழவேண்டு மானுல், தான் மறைந்து நின்று கொன்றதை எண்ணித் துக்கப்பட்டிருக்கவேண்டும். கம்பர் எப்பொழுதுமே அழகாகச் சொற்களைப் பெய்பவர். இராமன் இராவணனைக் கண்டதைக் கூறும்போது, "அறம் வளர்க்கும் கண்ணுளன் தெரியக்கண்டான்" என்று கூறுகிருர். கண்ணிலிருந்து கருணை பிறக்கும் என்பது ஆன்ருேர் வாக்கு. கண்ணே கருணையின் வடிவமென்ருல், அறம் வளர்க்கின்றவனுடைய கண்களின் கருணையை என்ன வென்று கூற முடியும். அன்பின் பிறப்பிடமாய், அறநெறியின் உறையுளாய் விளங்க வேண்டியவன் இராமன். ஆனுல், அவ்விராமன் இராவண

னைக் கொன்று விட்டான் ; கொடியவனைக் கொல்லுதல் குற்றமும் அன்று ; அவ்வாறு இருக்க இராமன் ஏன் வருந்த வேண்டும் ?

இராவணன் இறக்கும்போது தூயவனுகி விடுகிறுன். தூயவனுக மாறிய ஒருவனை, தன்மானம் காத்த தனிப் பெருந் தலைவனைத் தான் கொன்றது சரியா என்ற எண்ணம் இராமன் மனத்தை அலைக்கிறது. ஆவியும் சனகன் பெற்ற அன்னமுமாகிய சீதையைப் பிரிந்ததனுல் பேதுற்றிருந்த இராமன் உள்ளம் சிறிது சிறிதாகத் திருந்தியது. தான் இறக்காமல், இராவணனைக் கொன்றது தவறு என்று எண்ணுகிருன். பகைவர் தனக்கு நஞ்சைத் தந்தாலும், அதனை இனிது உண்டு வாழும் திறம் படைத்தவர்களே நயத்தக்க நாகரிகர் என்று வள்ளுவப் பெருந்தகை வற்புறுத்துகின்ருர்.

> " பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர் "

என்பது காண்க.

சீதையை இராவணன் கொண்டு சென்றபின், இராமன் இலங்கைக்கு வந்து போர் செய்தானுயினும், முடிவிலே இருவரும் சீதையை மறந்தனர். இராமனும் இராவண னுடைய உள்ளத்திலே அறிவொளி விளங்குவதைக் கண்டான். அப்பொழுது அவன், " இன்று போய்ப் பொருதற்கு நாளை வா " என்று கூறியதுடன் நில்லாமல் இராவணனை நோக்கி " உன் உள்ளப் பண்பாட்டை அறிந்துகொண்டேன். கொடிய எண்ணங்கள் உன் அகத்தி லிருந்து அகலத் தொடங்கியுள்ளன. தன்மானம் உன்னைத் தடுப்பதால், நான் மேலும் போர் புரிந்து, உன்னுடைய நாட்டையும் நண்பர்களையும் அழிக்க விரும்பவில்லை" என்று கூறுகிருன். அப்பொழுதும் இராவணன் சீதையை விடு தற்கு உடன்படவில்லை. இதைக்கண்டபின் அறம் வளர்க் கும் கண்ணுளனுன இராமன் அறத்துக்காகத் தன்னுயிரைக் கொடுத்திருக்க வேண்டும். வெற்றி வீரனுக நிற்கும் இராமன், இராவணனது ஆசையின் புன்மையை எடுத்துக்

காட்டி, முனிபுங்கவர்களோடு உறவாடப்பெற்ற உண்மை யறிவு கொண்டு யாதும் செய்யாது விடுத்து அயோத்திக்குச் சென்றிருந்தானேயானால், உலகம் அவனைப் போற்றிப் புகழ்ந்திருக்கும். பகைவர்களெல்லாம் இராமனுடைய புகழைப் பாடியிருப்பார்கள். ஆனால், இராமனே இராவண னிடத்தில் ஏற்பட்ட மனமாற்றத்தைப் பயன் படுத்திக் கொண்டு அவனைத் தூயனாக்கி அரச பதவியைக்கொடுத்து அவன் உள்ளம் நாண நன்னயம் செய்து விடாது கொன்று விட்டான். ஆகையால் இந்த வெற்றி இராமனுக்குப் பெரிய வெற்றியானாலும் அவனுடைய குண நலங்களைச் சீர்தூக்கிப் பார்க்கும்போது அது புண்பட்ட ஒரு வீரனை வென்ற புரை பட்ட செயலே என்று நேர்மை நினைக்கிறது.

சீதையின் நினைவை அறவே மறந்துவிட்டான் இராவணன் என்று சொன்னோம். தூய்மையான உள் ளத்தைப் பெற்றபின் அவன் உயிரோடிருந்திருப்பானே யானால், அவனுடைய மனவுணர்வே அவனைக் கொன் றிருக்கும் என்று விமரிசன விவேகம் விளம்புகிறது. ஆனால் இராமன் அரக்கர் குலத்தை அழிக்கவேண்டுமென்ற எண்ணம் கொண்டவனேயன்றி அவர்களைத் திருத்தும் எண்ணத்தைக் கொள்ளவில்லை என்பதை இங்கே நினைவு கூறவேண்டும்.

இராவணன் மனம் திருந்தித் தூயனாக மாறியதை நோக்கும்போது, திருத்தினால் ஒருகாலும் திருந்தாத முரட்டுப் பண்புடையவன் அல்ல அவன் என்பது மாத்திரம் தெளிவாகத் தெரிகிறதன்றோ !

இராமன் இராவணனைக் கொன்றபின் தன் வாழ்க்கை ஏட்டிலே நடந்த பல நிகழ்ச்சிகளைத் திரும்பிப் பார்த்தான். சீதையைப் பெறுவதற்காக வாலியை மறைந்து நின்று கொன்றதை உலகம் எவ்வாறு மதிக்கும் என்று சிந்தித்தான். இராமனை உண்மையின் உருவம், கருணைக் கடல், திருமாலின் கூறு என்று சொல்வார்கள். "தன் பெயரைக் கேட்பவர் தன் வீரம் இவ்வளவுதானா? வாலியாலும் கார்த்தவீரியன் முதலியோராலும் வெருட்டியோட்டப்பெற்ற

ஒருவனைக் கண்ணின்று கண்ணறக் கொன்றுதானே இராமன் வெற்றி கண்டான்; அவ்வரக்கனைச் சிறை செய்ய மாட்டாத வீரம் என்ன வீரம் என்று கூறி எள்ளி நகையாடித் தன் புகழை விழுங்கி ஏப்பமிடுவார்கள் என நினைந்து இராமன் அஞ்சினான்.

இராமன் கருத்தையறிந்தான் வீடணன். அவன் இராமனிடம் தன் அண்ணன் முகத்தில் புண்கள் ஏற்பட்டிருப்பினும் அவை விழுப் புண்களே என்பதை விளக்கிக் கூறினான். இராமன் தான் பெற்ற வெற்றி பயனற்றது என்று கூறினானேயன்றி, இராவணன் புற முதுகு காட்டி ஓடியவன் என்று வாயாற் கூறவில்லை என்றாலும், வீடணன், தன் குலப் பெருமையைக் காக்கவேண்டி விழுப் புண் வந்த வரலாற்றைத் தெளிவாகக் கூறினான். இதனைக் கம்பர்,

> " அவ்வடுவன்றி இந்த
> அண்டத்தும் புறத்தும் ஆன்ற
> தெவ்வடு பகைகள் அஞ்சாது
> இவன் வயிற் செல்லின் தேவர்
> வெவ்விடம் ஈசன் தன்னை
> விழுங்கினும் பறவை வேந்தை
> அவ்விட நாக மெல்லாம்
> அணுகினும் அணுகலாற்றா "

என்று இசைக்கின்றார்.

இதன் பின்னர் இராமன் வீடணனை நோக்கி, " இராவணனிடத்தில் நீ கொண்ட பகையை விட்டுவிட்டு, ஈமக் கிரியைகளைச் செய்வாயாக " என்றான்.

வீடணன் இராவணன்மேல் புரண்டு அழத் தொடங்கி, " அண்ணா! உயர் குடியிலே பிறந்த ஒரு பெண்ணிடத்திலே, நீ மாறாத காதல் கொண்டாய். இஃது உனக்குத் தீங்கு தருமென்று கூறினேன். ஆனால் கேட்காது மாண்டு விட்டாயே " என்று சொல்லிப் புலம்பினான்.

இராவணன் சாதாரணமானவனல்லன். வெற்றித் திருமகளையும், கலைமகளையும், கீர்த்தி மகளையும் தழுவிய

அவனது உடல் இன்று மண்மகளைத் தழுவுகின்றது. இந்த அவல நிலையைக் காணப் பொருது கண்ணீர் மல்கிய வீடணனைச் சாம்புவான் தேற்றினன்.

இராவணன் இறந்துவிட்டான் என்று கேட்ட மண்டோதரி, பல மாதருடன் இராவணன் இறந்து கிடக்குமிடத்திற்கு வந்தாள். அவள் தன் கணவன் மன நலன்களை நன்கு அறிந்தவள். சீதைபால் இராவணன் கொண்ட தீய காமத்தின் இயல்பை உணர்ந்தவள். ஆனல் இராவணன் தூயவனுகிவிட்டான் என்பதைச் சிறிது சிறிதாக உணரவும் தலைப்பட்டாள். அவள் தன் கணவன் சீதையைத் தன் மனச் சிறையிலே அடைத்துவைத்திருந்தபோதிலும், சீதை இவனுடைய இதயச் சிறையினின்று தப்பி ஓடி விட்டதையும் உணர்ந்தவள். இதனை மிகவும் அழகாகக் கூறுகின்றுள் :- " அன்பே, உன் வீரம்தான் என்னே ! உன்னுடைய உடலின் பெருமை என்னே ! வெள்ளெருக்கு மலர்களைச் சூடிய இறைவனது கயிலாய மலையையே தூக்கி எறியும் திறம் படைத்த உன் மெய்ந்நல நிலையைக் காண என் கண் கூசுகின்றதே. எள் நிற்கக்கூட இடமில்லாதபடி இராம பாணம் உன்னுடைய உடலைச் சல்லடைக் கண்கள் போலத் துளைத்துவிட்டதே. "கற்புடைய மகளிர் பிறர் மனத்தில் தங்குதல் செய்யார்" என்று கூறுவார்களே ; அதனல் உன் மனதிலே சீதைபாலுற்ற எண்ணங்கள் எங்கு உள்ளன என்று அவன் அம்பு உடற்குள் புகுந்து தேடியது போலும். ஆனல், பாவம் ! அப்படைகளுக்கு உனது தூய உள்ளத்தை அறியமுடியவில்லை. தேடித் தேடிப் பார்த்து விட்டு எங்கும் கிடைக்காததால், உடல்முழுதும் கூறுபோட்டு விட்டனபோலும். இராமனுடைய அம்புகளெல்லாம், உன் மனச் சிறையில் சீதைபால் நீ வைத்த காதல் எங்கே உளது எனக் கருதித் தடவித் தடவிப் பார்த்துக் கிடைக்காததால் அவைகள் தாம் கருதியது தவறு என எண்ணுமல் திரும்பவும் திரும்பவும் தேடி, உன் உடலைச் சல்லடையாக்கிவிட்டன " என்று புலம்பினுள்.

இதனைக் கம்பர்,

> " வெள்ளெருக்கஞ் சடைமுடியான் வெற்பெடுத்த
> திருமேனி மேலும் கீழும்
> எள்ளிருக்கும் இடமின்றி உயிர் இருக்கும்
> இடம்நாடி இழைத்த வாறே
> கள்ளிருக்கும் மலர்க் கூந்தற் சானகியை
> மனச் சிறையில் கரந்த காதல்
> உள்ளிருக்கும் எனக் கருதி உடல் புகுந்து
> தடவியதோ ஒருவன் வாளி "

எனக் குறிக்கின்றார்.

இராவணனுடைய உயிரைக் குடித்தபின் இராமனை அடைந்த அம்பு தன் தூய்மை கெடவில்லை என்று கூறுகிறார். இதனால் இராவணன்பால் காம மயக்கமாகிய அழுக்கு இல்லை என்பது தெளிவாகிறது.

தாடகை மார்பில் சிறிதுபோதும் தங்காது நீங்கிய இராமனுடைய அம்பு, வாலியின் மார்பில் சிறிது நேரம் தங்கியதற்குக் காரணம் வாலியின் மனத் தூய்மையாகுமானால், இராவணன் மார்பிற் புகுந்து நெடுநேரம் தங்கியது அவனது மிக மிகத் தூயதான மனமாண்பினைக் கருதியே என்பதை யாவரும் நன்கு அறியமுடிகிறது.

ஒருவன் முகம் பொலிவுற்றிருக்க வேண்டுமானால், உள்ளம் களங்கமற்றதாக இருக்க வேண்டும். 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம் கடுத்தது காட்டும் முகம்' என்று கூறுகிறார் வள்ளுவர். ஆனால் இராவணனுடைய முகத்திலே விளங்குகிற பொலிவும் மிகவும் உன்னதமாகக் காட்சியளிக்கிறது. ஆகையால் அவன் உள்ளத்திலே காம மயக்கம் முதலிய அழுக்கில்லை என்பது தெளிவாகிறது. மேலும் மண்டோதரியே தன் கணவனது உள்ளத்தில் சானகியின் நினைவு இல்லை எனக் கூறுகிறாள். ஆகையால் இராவணன் இறக்கின்றபோது தூயவனாகவே இராமனது குண அழகிலே மயங்கி இறந்துவிடுகிறான். சாவிலே பொலிவு பெற்று விளங்கியதுபோல அவன் முகம் வேறு

எப்போதும் அவ்வளவு பொலிவு பெற்றதில்லை என்றே கூறலாம்.

தூயனாக மாறிய இராவணன் இறந்துவிட்டான். மன மாண்பு அடைந்தவனை மன்னித்து மக்களிடத்திலே மதிப்புப் பெற முடியவில்லையே என்று நினைந்து நினைந்து இராமன் மனம் புழுங்கி அழுதான். பின்னர் ஈமக்கிரியைகள் நடைபெற்றன. இராமனது ஏவலின்படி வீடணனுக்கு முடிசூட்டுவிழா நடைபெற்றது.

அனுமன், களிப்புடன் சீதைக்கு இராவணன் இறந்த செய்தியைக் கூறலுற்று, "பேதைமைக் குணமுடையவளே, வாழ்வாயாக! மங்கலம் பெறுவாயாக; இராமன் அரக்கனைக் கொன்றுவிட்டான்" என்றான்.

## 60. சொல்லிரும்பு வாங்கிய காந்தம்.

இந்தச் செய்தியைக் கேட்ட சீதைக்கு உண்டான எல்லையற்ற இன்ப உணர்ச்சியையும், அந்தப் பூரிப்பினால் ஏற்பட்ட பொலிவையும் கூறுவதென்பது முடியாத காரியமாகும். சீதை அனுமனுடைய வார்த்தைகளைக் கேட்டாள். அப்பொழுது இருண்ட வானத்திலே தோன்றுகின்ற பிறைச் சந்திரனைப்போல் அவள் முகம் சிறிது சிறிதாகப் பிரகாசிக்கத் தொடங்கியது, சந்திரன் நாளும் ஒவ்வொரு கலையாக வளர்ந்து பூரண சந்திரனாவது இயல்பு; பதினாறு நாட்களில் ஒவ்வொன்றாக வளரவேண்டிய எல்லாக் கலைகளும், ஒரே காலத்திலே கூடியதோடல்லாமல், சந்திரனிடம் இருக்க வேண்டிய மறுவுடன் அவள் முகம் பிரகாசித்தது.

இதனைக் கம்பர்,

> "ஒருகலைத் தனி வெண்மதி நாளொடும்,
> வருகலைக்கு வரும் மறுமான் உறப்
> பொருகலைக்குலம் பூத்தது போன்றனள்
> பருகல் உற்ற அமுது பயந்த நாள்"

எனக் கூறுகிறார்.

குற்றமற்ற சமுதாயத்தைப் படைக்க முடியாது என்பது தான் ஆன்றோர் கண்ட முடிபு. சந்திரனுடைய களங்கத்தை துடைத்துவிட்டால், அஃது இன்னும் பிரகாசிக்குமென்று நாம் கருதலாம், ஆனால், கைகேயி, தன் முகத்திலுள்ள திலகத்தை "மதியின் மறுத்துடைப்பாள்போல், அளகவாள் நுதல் அரும்பெறல் திலகமும் அழித்தாள்". அதனால் விளைந்த பயன், இராமன் காடு சென்றான். தசரதன் இறந்தான். இயற்கையோடு ஒன்றாத வாழ்வு நன்மை பயக்காது. ஆதலால்தான், கம்பர், களங்கமுள்ள சந்திரனைப் போல், சீதையின் முகம் பிரகாசித்தது என்று கூறினார்.

வீடணன் சீதையிடம் வந்து "இராமர் தங்களை அலங்கரித்து வரும்படி கூறினர்" என்றான்.

சீதை, "நான் இங்கே இருந்த நிலைமையை இராமபிரானும், தேவரும், முனிவரும் காண்பது நல்லது" என்றாள்.

வீடணன், "உன்னை ஆபரணம் பூண்டு, வரவேண்டுமென்று கூறியது என் கற்பனை அன்று; இராமபிரான் கட்டளை" என்றான்.

இராமனுடைய உள்ள நிறைவிலே கள்ளம் புகுந்து விட்டதைச் சீதை உணர்ந்தாள். தன்னை அவலக் கோலத்திலே கண்டால், தன்னுடைய உறுதிப்பாடு குறைந்து விடுமோ என்று அஞ்சியே இராமன் தன்னை நல்லுடை புனைந்து வரச் சொல்லியுள்ளான் என்று நினைத்தாள். பத்து மாத காலம் தான் படாத பாடெல்லாம் பட்டும் பயனில்லையே என வருந்தினாள்.

இராமனது கட்டளை என்றவுடன், அவள், நல்லுடை புனைந்துகொண்டு வீடணன் கொண்டுவந்திருந்த விமானத்திலேறி இராமன் முன் சென்றாள்.

அன்புடன் தன்னை அழைத்துத் தலையைத் தடவிக்கொண்டு, "பெண்ணே, பொன்னே, நீணில விளக்கே, கற்பின் கொழுந்தே" என்று ஆறுதல் கூறுவான் என்று எண்ணி எண்ணி ஏங்கிய சீதையை நோக்கியதும் இராமன் பாம்புபோல் சீறிப் பாய்ந்தான். அவன் அவளை நோக்கி "நீதிநெறி தவறிய இராவணனுடைய இலங்கையில் நெடுங்காலம் வாழ்ந்தாய்; அவன்கீழ் அடங்கியிருந்தாய்; ஒழுக்கம் ஒழிந்தும் உயிரொழிந்தாயில்லை. நான் உன்னை விரும்பி ஏற்றுக்கொள்ளுவேன் என்று நீ எண்ணாதே. கடலுக்கு அணைகட்டி அரக்கர்களை அழித்ததும், இராவணனைக் கொன்றதும், உன்னைச் சிறையினின்று மீட்கும் பொருட்டன்று; மனையாளை மாற்றான் கவர்ந்துகொள்ள, அவளை மீட்கும் திறம் அவனுக்கு இல்லை என்ற பழியினின்றும் விடுபடுதற்கும், புகழுக்குமாகவே. உயர்ந்த குலத்திலே

பிறந்தாளுக்குரிய ஒழுக்கம் உன்னிடம் நிறைந்திருக்க வில்லை. தாழ்ந்த நிலத்திற் புழுவைப் போல நீ பிறந்தாய்; அப்புழுவைப்போல இழிவுற்றவளாகி விட்டாய்'' என்ருன்.

சனகராசன் யாகபூமியை உழுவித்தபோது, உழுபடைச் சாலில் தோன்றியவள் சீதை. சீதை என்ற பெயருக்கே உழுபடைமுன் பிறந்தவள் என்பதுதான் பொருள். புழு எவ்வாறு பூமியில் பிறக்கின்றதோ, அதுபோலவே சீதை பிறந்தாள் என்று கூறுகிருன் இராமன்.

முன்பெல்லாம் சீதைதான் தனக்கு யாவும் என்று எண்ணிய இராமன் அவளுக்காகத் தான் போர் செய்ய வில்லை என்றும், தன் மானத்தைக் காக்கத்தான் இராவண னுடன் போர் செய்ததாகவும் கூறுகிருன். இதனைக்கேட்க நமக்கு வியப்பாக இருக்கிறது. சீதைக்காக ஏற்பட்ட போரிலே அவள் மறக்கப்பட்டாள். இராவணனுடைய மனம் தூய்மை எய்தியதும் சீதையின் நினைவு அவன் மனத்தினின்று அகன்றுவிட்டது. இராவணனுடன் முதல் நாள் செய்த போருக்குப்பின், இராமன் உள்ளத்திலும் ஒருவித மாற்றம் தோன்ற ஆரம்பித்து விட்டது என்று சொன்னேமல்லவா? "சீதை பிறரால் விரும்பப்பட்டவள்; அவளைத் தான் திரும்பக் கூட்டிச் சென்ருல் உலகம் ஏற்குமா?'' என்று அவன் உள்ளம் சிந்திக்கத் தொடங் கியது. சீதை தன்மானம் காத்துக்கொண்டிருப்பாள் என்ப தில் ஐயமில்லை எனினும் உலக நிந்தனைக்கு ஆளானபின், தான் அவளை ஏற்றுக் கொள்ளுதல் முறையோ என இராமன் கருதினன். சீதைக்காகத் தன் தம்பியை ஆபத்துக் குள்ளாக்கி விட்டு, அவன் பிரிந்தபின் அயோத்தி ஏகினல் மனைவிக்காக மகன் போன்ற தம்பியை மாய்த்துவிட்டான் இராமன் என்ற பழி தன்னைச் சார்ந்துவிடுமோ என அஞ்சினன். அவனுடைய உள்ளத்தில் ஒரு பெரும் போர் ஏற்பட்டுவிட்டது. தம்பியைக் கொல்லத் தக்கவர் யார் என்று இராமன் பன்முறையும் சிந்தனை செய்தான். மனைவி யினும் உடன் பிறப்பே பெரிது என்ற முடிவுக்கு வந்தபின் போர் செய்வதால் என்ன பயன் எனவும் எண்ணினன்.

ஆகையால்தான் பலமுறை அயோத்தி நாட்டிற்கே திரும்பி விடலாமோ எனவும் இலக்குவன் பேச்சு மூச்சற்றுக் கிடந்த போது எண்ணினுன். எந்தக் குறிக்கோளுக்காகப் போர் தொடுத்தானே, அத்தக் குறிக்கோள் அண்மையில் கைக் கெட்டியும் அஃது அவனுக்கு ஆறுதல் அளிக்கவில்லை. சீதையினுல் பயன் யாது என்று அவன் உள்ளுணர்வு சொல்லத் தொடங்கியதிலிருந்து அவன் தன்னம்பிக்கையை இழக்கத் தொடங்கிவிட்டான். ஆனுல் இலக்குவனே, குறிக் கோளை அடைவதால் பயனில்லை எனினும், முன் வைத்த காலைப் பின் வைக்கக்கூடாது என்று திரும்பத் திரும்ப இராமனிடம் எடுத்துக் கூறினுன். இராவணன் உள்ளத்தி னின்று சீதையின் நினைவு அகன்று விட்டது. அதனுல் அவன் சீதையைத் திரும்பக் கூட்டிச் செல்வதால் யாதொரு பயனுமில்லை எனக் கருதினுன். அப்படியானுல் ஏன் இந்தப் போர்? தன்மானம் காக்க வேண்டுமென்று இரு பெரும் வீரர்கள் எண்ணினுர்கள். அதன் விளைவுதான் பெரும் போராக நீண்டு அரக்கர் இனத்தையும் இராவணனையும் கொன்றது.

இராமன் சிறிது சிறிதாகச் சீதையை மறக்கத் தலைப் பட்டதோடு அவள் பேரிலும் ஐயம் கொள்ளுமளவிற்கு அவனுடைய மன நிலை மாறிவிட்டது. ஈருடலும் ஓருயிரு மாயிருந்த சீதையும் இராமனும் வேறுபட்ட மனத்தவர் களாவார்கள் என்பது கற்பனைக்கும் எட்டாத ஒன்று; எனினும் நிலைமை அவ்வாறு கூறும்படியாகிவிட்டது. இந்த நிலையை உணர்ந்தாள் சீதை. அவள் இராமனை நோக்கி, " நான் அரக்கியர்களுள் ஒருத்தியோ என்று பன் முறை எண்ணியது உண்டு. தங்களைப் பிரிந்த போதே நான் உயிர் விட்டிருக்க வேண்டும். நீங்கள் பகைவரை வென்று என்னை மீட்டுப் போவீர்கள் என்று அனுமன் கூறிய வார்த்தைகளை நம்பி நான் உயிர் வாழ்ந்தேன். என் குற்றமற்ற கற்பு நெறியை எவ்வாறு தங்களுக்கு மெய்ப் பித்துக் காட்டுவேன்? 'இறப்பாயாக' என்று எனக்குக் கட்டளை இட்டு விட்டீராயின் நான் அக்கினியில் அப் போழ்தே வீழ்ந்து உயிரை விடத் தயங்கமாட்டேன்"

என்ருள். இலக்குவனும் அவள் விருப்பப்படியே தீயை உண்டாக்கினன்.

சீதை அக்கினியை வலம் வந்து "பகவானே, நான் மன மொழிகளினுல் களங்கமுற்றவளாயின் என்னை எரித்து விடுக" என்று கூறி அக்கினிப் பிரவேசம் செய்தாள். இதனைக் கம்பர்,

"மனத்தினுல் வாக்கினுல்
மறுவுற்றேன் எனில்
சினத்தினுல் அடுதியால்
தீச்செல்வா' என்ருள்
வனத்துள்ளாய்க் கணவர்க்கும்
வணக்கம் போக்கினுள்"

என்று கூறுகின்ருர்.

தீயோ அவளைச் சுடவில்லை. அஃது அவளைக் கற்புடையவள் என்று தெளிவாகக் காட்டிற்று என்று கம்பரும் வால்மீகியும் கூறுகின்றனர். இவ்வாறே ஆதிரை என்ற கற்புடை நங்கை தீப்புகுந்தபோது அவளைத் தீக் கடவுள் கொல்லாது விட்ட வரலாறு மணிமேகலையில் காணப்படுகிறது.

இராமனும் மகிழ்ச்சியுடன் சீதை களங்கமற்றவள் என்று கூறி ஏற்றுக் கொண்டான். பின்னர்த் தசரதன் விண்ணுலகிலிருந்து இராமனைக் காண வந்தான். அவன் இராமனைக் கண்டு, அவனுடைய முடி சூட்டு விழாவைக் காண விழைந்தான். இராமன் அவனை அடிபணியவும் தசரதன் அவனை மார்புறத் தழுவிக் கொண்டான்; ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது.

கேகயன் மகள் கைகேயியின் கொடுஞ்சொல், வெந்த புண்ணிலிட்ட வேலைப்போலத் தசரதன் மார்பிலே அகலாது தங்கித் துன்பம் தந்து கொண்டிருந்தது. இராமனை இறுகத் தழுவியவுடன் அந்த வேல் அகன்றுவிட்டது.

இதனைக் கம்பர், தசரதன் வாயிலாக மிகவும் அழகாகக் கூறலுற்று,

> " அன்று கேகயன் மகள்கொண்ட வரமெனும் அயில்வேல்
> இன்றுகாறும் என் இதயத்தினிடை நின்றது என்னைக்
> கொன்று நீங்கலது இப்பொழுதகன்றது உன் குலப்பூண்
> மன்றல் ஆகமாம் காந்த மாமணி யின்று வாங்க "

என்று பாடுகின்றார்.

# 61. சாப்பாட்டு இராமன்

தசரதன் முன் சென்று, அடிபணிந்தாள் சீதை. அவளை ஆசீர்வதித்துவிட்டு, இலக்குவனையும் தன்மார்புற இறுகத் தழுவிக்கொண்டான் அயோத்தி மன்னன். பின்னர் அவன் இராமனை நோக்கி, "மைந்த, உனக்கு நான் என்ன கைமாறு செய்வேன்; இன்று உன்னைக் காணப்பெற்றேன். உனக்கு ஒரு வரம் தருவதாக இருக்கிறேன்; எதுவேண்டு மானாலும் கேள்" என்றான். அதற்கு விடையாக இராமன் தசரதனை நோக்கித் "தீயவள் என்று நீங்கள் வெறுத்து ஒதுக்கிய என் தெய்வமாகிய கைகேயியும், அவள் மகன் பரதனும், என் தாயும் தம்பியுமாகுமாறு வரம் அருள்வீர் களாக" என்றான். இதனைக் கம்பர்,

> "ஆயினும் உனக் கமைந்ததொன்று
> உரையென, அழகன்,
> தீயளென்று நீ துறந்த என்
> தெய்வமும் மகனும்,
> தாயும் தம்பியுமாம் வரம்
> தருகெனத் தாழ்ந்தான்
> வாய் திறந்து எழுந்து ஆர்த்தன
> உயிரெலாம் வழுத்தி"

என்று கூறுகின்றார்.

அதுகேட்ட தசரதன் இராமனை நோக்கி, "என் அருமைக் குழந்தாய், குற்றமற்ற பரதன் என் மகன் என்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் மணிமகுடம் பூண வேண்டிய உன்னைக் காட்டிற்கு ஓட்டித் தவக்கோலம் பூட்டிய பாவிமீது கொண்ட கோபம் என்றும் நீங்காத ஒன்றாகும்; அந்த வரத்தை மட்டும் கேட்காதே" என்றான்.

இராமன் தன் தந்தையை நோக்கி, "தந்தையே நான் செய்த பிழைக்காக எம்பிராட்டி பழியை ஏற்க வேண்டுமா? உயிர்களை நன்றாகப் பாதுகாக்கும் அரசுரிமையை நான்

ஏற்ருல் பிழை செய்தவனுவேன் என்று அறிந்திருந்தும் அரசுரிமையை ஏற்க இசைந்தது என்குற்றமன்ருே? நாம் செய்ய இருந்த பிழையினின்று காத்துத் தங்கள் வாய்மையையும் மரபையும் காத்த என் அன்னை கைகேயி என்ன பிழை செய்துவிட்டாள்" என்ருன்.

தசரதன் இராமனுடைய வாதங்களை ஒப்புக்கொண்டு அந்த இரு வரங்களையும் அருளினுன். இதனுல் 'கன்யா சுல்க'ப்படி கைகேயிக்கே அரசு உரியது என்பதை மீண்டும் இராமன் வலியுறுத்துகிருன்.

தசரதன் விண்ணுலகிற்குச் சென்றபின் இராமன் வீடணன் தந்த புட்பக விமானத்திலேறி அயோத்தி செல்லத் தொடங்கினுன். வீடணன், சுக்கிரீவன், அனுமன் முதலியோரும் அவன் கூடவே சென்றனர்.

இராமன் விமானத்திலிருந்தபடியே சீதைக்குக் கோடிக் கரையையும், மற்ற இடங்களையும் காட்டிச் சென்ருன்.

இராமேசுவரத்தில் தீர்த்தமாடிவிட்டு, இராமனும் சீதையும் சென்றுவிட்டதாக ஒரு வரலாறு உண்டு. இராவணன், பிராமணனுகையால் அவனைக் கொன்ற இராமனுக்குப் பிரமகத்தி தோஷம் பிடித்துவிட்டது. அந்தத் தோஷம் நீங்குவதற்காகச் சிவனை வழிபட்டவிடம் இராமேசுவரம் என்றும், இராமன் வணங்கிய தெய்வம் இராமலிங்கம் என்றும் வரலாறு கூறும். இராமனுடைய பாவங்களையே நீக்கிய இராமேசுவரம், மற்றவர்களுடைய பாவத்தையும் நீக்கும் என்று மக்கள் இன்றும் கருதி அங்கே சென்று புனித நீராடுகின்றனர்.

இராமன், பரத்துவாச முனிவர் ஆசிரமத்துக்குச்சென்று அங்கே அவர் அளித்த விருந்தை ஏற்றுக்கொண்டான். பரத்துவாசன் பரதனது சீரிய குணத்தை எடுத்துக்கூறி, அவன் நந்திக் கிராமத்திலே அரசு செலுத்திவரும் பெருமையையும் விரித்துரைத்தான்.

வான்மீகத்திலே, இராமன் பரதனுடைய குண நலங்ளில் ஐயுற்று, அனுமனை விடுத்து அவன் அரசை விரும்பி

வாழ்கின்றானா அல்லது அண்ணனை எதிர்நோக்கி நிற்கின்றானா என்று அறிந்து வரும்படி அனுப்பியதாகக் கூறப்படுகிறது. இது வியப்பிற்குரியதாகும். ஆனால், கம்பரோ பரதனிடம் தான் வருவதை முன்னறிவிக்குமாறு இராமன் அனுமனைப் பணிப்பதாக நயம்பட எழுதியுள்ளார்.

இராமன் அனுமனைக் கணையாழியுடன் அனுப்பினான். அவனும் நந்திக்கிராமம் நோக்கி விரைந்து சென்றான்.

நந்திக் கிராமத்திலே, பரதன் தன் அண்ணன் பதினான்கு ஆண்டு கழிந்த பின்னும் வரவில்லையே என ஏங்கித் தான் உயிர் விடுதலே மேல் எனக்கருதித் தீயை மூட்டி அதில் பாயத் துணிந்தான். கோசலை பரதனுடைய குணநலங்கள் யாவையும் நன்கு அறிந்துகொள்ளும் வாய்ப்புடையவளாயிருந்தாள். அவனைத் தடுத்து "மைந்தனே சத்துருக்கனை நாடாளச் சொல்லி நீ உயிர் விடத் துணிந்தாயே! அவனும் இலக்குவனைப் போன்றவனன்றோ?" என்று கூறினாள்.

கோசலை இராமனுடைய தாய். பரதன் நாடாள வேண்டுமென்று பணித்துக்கூறிக் கைகேயி இராமனைக் காட்டிற்கு அனுப்பியபோது, அவள் பரதனைத் தூற்றவில்லை. அவள் பரதன் நாடாள்வதை ஒத்துக்கொண்ட போதிலும், வீணாகப் பழியைச்சுமத்தி இராமனைக்காட்டிற்குத் தசரதன் அனுப்பிவிட்டதாகவே கருதினாள். ஆகையால்தான் அப்பொழுது "வஞ்சமோ மகனே உன்னை மாநிலம் தாங்கென்ற வாசகம்" என்று கூறினாள். இராமனுக்கு உரியதல்லாத நாட்டை அவன் இச்சித்தது போலக்கூறி, அவனுக்குத் தீங்கு செய்துவிட்டான் தசரதன் என்றே முதலில் நம்பினாள். ஆனால் அவன் இறந்தபின், இராமன் காட்டிற்குப் போன விதியின் செயலேயன்றி, யாருடைய குற்றமுமில்லை என்ற முடிவிற்கே வந்தாள். பதினான்கு ஆண்டுகள் பரதனுடன் பழகியபின், அவனுடைய பண்பட்ட உள்ளத்தை நன்கு அறியும் வாய்ப்பும் அவளுக்குக் கிடைத்தது. இராமனைக் காட்டிலும்

உண்மையிலேயே பரதன் சிறந்தவன் என்ற முடிவுக்கு அவள் வந்துவிட்டாள். அந்த எண்ணம் மேலிடவும் கோசலை பரதனை நோக்கி, "என் மகனே, மன்னர் மன்னனுன தசரதன் இறந்ததும் இராமன் காட்டிற்குச் சென்றதும் என் முன் வினைப்பயன்களாகும். இன்று ஆராய்ந்து பார்க்குங்கால் இராமன் வராததும் என் தீவினைப்பயன்தான். கணவனாலும் மகனாலும் கைவிடப் பட்ட என்னை விட்டு நீ இக்காரியத்தைச் செய்யப்புகுந்தால், நாங்களும், நாட்டு மக்களும் தீக்குளிக்க நேரும். தருமமும் வெந்து சாம்பலாகிவிடும். உலகமும் தலை தடுமாறிவிடும். இராமன் ஒருவன் இருந்து என்ன பயன்? அவனுடைய அன்பு உன்னுடைய அன்பிற்கு ஒத்ததாகுமா" என்றாள். இதனைக் கம்பர்,

"மன்னிழைத்ததும் மைந்தன் இழைத்ததும்
முன்னிழைத்த விதியின் முயற்சியால்;
பின்னிழைத்ததும் எண்ணில் அப் பெற்றியால்;
என் இழைத்தனை ? என் மகனே, என்றாள் "

என்று நயம்படக் கூறுகின்றார்.

எத்தனையோ கோடி இராமர்களை ஒன்று திரட்டினும், பரதனுக்கு இணையாகமாட்டார்களென்றும், அவனுடைய உயிரே புண்ணிய வடிவம் என்றும் சிறப்பித்துக் கூறுகிறாள் கோசலை. காக்கைக்கும் தன்குஞ்சு பொன் குஞ்சு என்பார்கள். ஆனால் இங்கோ கோசலை இராமனைக் காட்டிலும் பரதனே மேல் எனக் கூறுகிறாள். இதைக் காட்டிலும், வேறு சொற்கள் வேண்டுமோ பரதனைச் சிறப் பித்துச் சொல்வதற்கு? இதனைக் கம்பர்,

"எண்ணில் கோடி இராமர்கள் எண்ணினும்
அண்ணல் நின் அருளுக்கு அருகாவரோ
புண்ணியம் என்னும் நின் உயிர் போயினல்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?"

என்று அழகுறக் கூறுகிறார்.

பரதன் கோசலையிடம் மிகவும் அன்பு பாராட்டுகிறவன். ஆனாலும் அவன் செய்த சூளுறவு அவளுடைய வேண்டு கோளை ஏற்க முடியாதவாறு செய்துவிட்டது. தாயார் தந்தை சொற்களைக் கேட்டதனால்தான் அயோத்தி நாட்டிற்கே அழிவு வந்தது என்று பரதன் நினைத்தான். உரிமையை நிலைநாட்ட மறுத்து அல்லலுற்றான் இராமன் என்றும் நினைத்தான். அவனுடைய செயல் தவறென்றும், அரசு அவனுக்கே உரியதென்றும் இராமன் பன்முறை முன்பு கூறிய போதும், அவனுடைய தூய நெஞ்சம் அரசை ஏற்க மறுத்தது. "நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே" என்ற தமிழ் மரபிலே பிறந்தவனாதலால் தன் னுடைய மனம் கூறும் உண்மைக்கு மாறாயவற்றை யார் செய்யினும் அதற்கு உடன்பட அவன் விரும்பவில்லை. பதினான்கு ஆண்டு கழித்து வருகிறேன் என்று கூறி வராம லிருப்பதும் குற்றமாகவே அவனுக்குத் தோன்றியது. ஆகையால் கோசலையை நோக்கி, "அம்மா உன் சொல்லை மறுத்துவிட்டான் உன் மகன் என்று எண்ணாதே; நம் சூரிய குலத்திற்குப் பழுதுண்டாகும்படி நான் வாழ விரும்ப வில்லை. நான் செய்த சபதத்தை நிறைவேற்றியே தீருவேன். தாய் சொல்லை மீறியவன் என்று எண்ணவேண்டாம்" என்று கூறித் தீயில் விழுவதற்குச் சித்தமானான். அவனுடைய கூற்றைக் கம்பர்,

> " தாய்சொல் கேட்டலும் தந்தைசொல் கேட்டலும்
> பாசத் தன்பினைப் பற்றற நீத்தலும்
> ஈசற்கே கடன் யான் அஃதிசைகிலேன்
> மாசற்றேன் இது காட்டுவென் மாண்டென்றான் "

என்று கூறுகின்றார்.

பரதன் தீயில் விழ முயலுகையில் அனுமன் அங்கு வந்து சேர்ந்து விட்டான். உடனே அவன், "ஐயன் வந்தான்; இராமன் வந்தான்" என்று கத்தினான்.

பரதனை நோக்கி, "உன்னை இராமன் வந்து சேர்வ தாகச் சொல்லிய நாளில் இன்னும் நாற்பது நாழிகை உண்டு" என்று கூறினான். பின் இராமனுடைய முத்திரை

மோதிரத்தைக் காட்டி அவனை மகிழ்வித்தான். பகல் முடிந்த பிறகே பதினான்கு ஆண்டுகள் முடிவுறும். ஆனால் பகல் இருபது நாழிகைக்கே பரதன் எரிபுகத் தொடங்கியது தவறு என்பது இதனால் புலனாகிறது.

பக்கத்திலிருந்தவர்கள், இராமன் ஏன் வரவில்லை என்று வினவினர். பின்னர்ப் பரத்துவாசர் மனையிலே விருந்துண்பதால் வரச்சுணங்கியது என்பதைக் கேட்டவுடன், "இந்தச் சாப்பாட்டு இராமனுக்காக நாம் காத்திருக்கிறோம்" என்று மகிழ்ச்சியும் கேலியும் கலந்து பேசி ஆரவாரம் செய்யத் தொடங்கினர்.

## 62. இராம ராஜ்யம்.

இராமன் புறப்பட்டு அயோத்தி நோக்கி வந்து கொண்டிருக்கிறுன் என்று கேட்டவுடன் பரதனது உள்ள மெல்லாம் பூரித்தது. கங்கைக் கரைக்குச் சென்று இராமனை எதிர்கொள்ள வேண்டுமென்று எண்ணிப் படைகளுடன் புறப்பட்டு அங்கே சென்முன்.

இராமன், சீதையும் இலக்குவனும் உடன்வரக் கங்கைக் கரைக்கு வந்து சேர்ந்தான். குகன் இராமனைக் கண்டவுடன் பெருமகிழ்வெய்திஞன். ஆயினும் இலக்குவனைப் போல் இராமனுடன் சென்று அவனுக்குப் பணிசெய்யும் வாய்ப்பு இல்லாமற் போய்விட்டதே என வருந்திஞன். இராமன் அவனுக்கு நல்லுரைகளைக்கூறிச் சமாதானப்படுத்தி அயோத் திக்குப் பரதனுடன் சென்முன்.

அயோத்தி நகரம் மிகவும் அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. நகர மக்கள் ஆரவாரத்துடன் அவனை வரவேற்றனர். பின்னர் இராமனுக்கு முடி சூட்டப்பட்டது.

அப்பொழுதிருந்த காட்சியை எழுத்தால் காட்டுவ தென்பது முடியாத காரியமாகும். திருவடிமேவும் சிங்கா தனத்தை அனுமன் தாங்கவும், அங்கதன் உடை வாளை ஏந்தவும், பரதன் வெண்கொற்றக் குடையைப் பிடிக்கவும், மற்ற இரண்டு தம்பியரும் கவரி வீசவும், சானகி இராமன் பக்கத்தே வீற்றிருக்கவும், சடையப்ப வள்ளலின் முன்னே ரான வேளாண் மக்கள் மணிமகுடத்தைக் கொடுக்க வசிட்டன் வாங்கி இராமபிரானுடைய முடியிற் சூட்டிஞன். இதனைக் கம்பர்,

“ அரியணை அனுமன் தாங்க
அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி வீச

> விரைசெறி குழலி ஓங்க
> வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
> மரபுளோர் கொடுக்க வாங்கி
> வசிட்டனே புனைந்தான் மோலி"

என்று பாடுகிறார்.

வசிட்டர் இராமனுக்கு மணிமகுடம் சூட்டினார் என்ற பொருள்பட, "வசிட்டன் புனைந்தான் மோலி" என்று மட்டு மிருந்தால் போதாதா? ஏன் "வசிட்டனே" என்று ஏகாரம் பெய்து கூறவேண்டும்? என்பதை நாம் சிறிது சிந்தித்தல் வேண்டும்.

இராமாயணம் படிப்பவர்களில் பலருக்கு ஓர் ஐயம் ஏற்படுவது இயல்பு. வசிட்ட முனிவர் முக்காலமும் அறிந்த பெரிய முனிவர். வசிட்டர் வாயாலே பிரமரிஷி என்று கூறுவதே பெருமை என்றால், அவருடைய புகழுக்கு ஒரு எல்லை உண்டோ? முக்காலும் உணர்ந்த வசிட்டருக்குத் துணையாக, அயோத்தி நாட்டிலே சிறந்த அமைச்சர்களும் இருந்தார்கள். இவ்வாறிருக்க, "நாளை முடிசூட்டுவதற்கு நல்ல நாள்" என்று அவர் கூறிய நாளிலே, இராமன் காட்டிற்குச் சென்றது எவ்வாறு பொருந்தும்? இந்தக் கேள்விக்கு விடையளிப்பது சிரமமென்றே எண்ணலாம். ஆனால் இராமாயணத்தை ஊன்றிக் கவனிப்பவர்களுக்கு இது சிரமமாகத் தோன்றாது.

வசிட்டர் அமைச்சர் முதலானோர் தசரதனுடைய நலத்திலே மிகவும் பற்றுடையவர்கள். அவனுக்கு இராமன் பால் உள்ள அன்பையும் நன்கு கண்டவர்கள். ஆனால் கன்யாசுல்கத்தின்படி, அரசு கைகேயிக்கே சொந்தம் என்பதையும் அறிந்தவர்கள். சிக்கலில்லாமல், இராமனுக்கு எவ்வாறு முடிசூட்ட முடியுமென்பதையும் ஆராய்ந்து வந்த வர்கள். ஆனால், தசரதன் தன் பதற்றக் குணத்தினால் ஆராயாமல், பேரவையிலே இராமனுடைய முடுசூட்டுவிழா வைப்பற்றிக் கூறிவிட்டான். வசிட்டருக்கும் அமைச்சர் களுக்கும் என்ன சொல்வதென்று தெரியவில்லை. இராம னுக்கு அரசுரிமை இல்லை என்று கூறினால், தசரதன் ஓத்துக்

கொள்ளமாட்டான். சில் நாட்களுக்குப்பின் நல்ல நாளாகப் பார்த்து இராமனுக்கு முடிசூட்டலாம் என்று கூறினுலோ, இரகசியம் அம்பலமாகி நாட்டிலே உள்நாட்டுக் கலகம் தோன்றிவிடும். ஆகையால் முக்காலமும் உணர்ந்த வசிட்டர், "மன்னவனே, ஆராயாது நீ உன் கருத்தை வெளியிட்டு விட்டாய். காலம் தாழ்த்தால் கருதியது முடியாது. ஆகையால் நாளையே நல்ல நாள்" என்று கூறினர். அக்காலச் சட்டப்படி உரிமையில்லாதவராயினும் முடிசூட்டப்பட்டு விட்டால் அதனை மாற்றி அமைக்க முடியாது. இதனை ஆங்கிலத்தில் (Fait accompli) என்று கூறுவர். வசிட்டர் எதிர்ப்பு வருமென்று எண்ணியதில் தவறில்லை என்பதையும் கூனியின் செயல் நன்கு காட்டி விட்டது.

"நாளை" என்ற சொல்லைக் கூறி முடிசூட்டு விழாவைக் குறித்தாரே எனினும் அந்த "நாளை" பதினன்கு ஆண்டு கள் கழித்துத்தான் வந்தது. அதுவரையிலும் வேறு யாரும் முடிசூட்டிக்கொள்ளவில்லை. இராமனே முடிசூடா மன்னனுக விளங்கினன். பிறந்து உரிமையுடைய ஒருவ னுடைய அரசை நல்ல நாள் பார்த்து இராமனுக்கு நிச்சயம் செய்துவிட்டாராகையால், பரதனுக்கு அரசு கிடைக்காமற் போயிற்று. பதினன்கு ஆண்டுகள் கழித்து, "மக்களே, இராமன்தான் முடிசூடுவான் என்று கூறினேனே, அவன் முடிசூடப் போவதைக் காணுங்கள்" என்று பெருமிதத் துடன் முடிசூட்டு விழாவை நடத்தினுதலால், கம்பர், "வசிட்டனே" என்று தேற்றமாகக் கூறி அவருடைய புகழைப் பாராட்டுகிருர்.

இராமனுடைய காலம் வரையறையற்றது. வான்மீகியும், பாசகவியும், பிறரும், பரதனுக்கே பாராளும் உரிமை உண் டென்று கூறினும், இன்றளவும் இராமனுக்கே நாடு உரியது; கைகேயி தீயவள் என்ற எண்ணத்தை மக்களிடையே நிலை பெறச் செய்த சூழ்ச்சிப் பெருமை வசிட்டருக்கு உண்டு. அரசகுலப் பெருமையைக் காக்கின்ற கடமை அரச குருவாகிய வசிட்டரைச் சார்ந்தது. ஆகையால், இராமன்

காட்டிலே பரதனிடம் கன்யா சுல்கத்தைப்பற்றிக் கூறி நாடு அவனது என்று வற்புறுத்தியபோது, தசரதனுடைய வாய் மையும் மரபும் அழிந்து விடுமோ என்ற கருத்தால், “தந்தை யார், தாய் யார்” என்று கூறி அங்கே கூடியுள்ள மக்களுக்கு, கன்யா சுல்கத்தைப்பற்றி உண்மையை அறியாது செய்து விட்டார் வசிட்டர். பரதனே, தன் அண்ணன் தன்னை வஞ்சிக்கவே கதை கூறுகிறுன் என்று எண்ணும்படி நேர்ந்த தென்றுல் பிறர் எவ்வாறு உண்மையை அறிய முடியும்?

குலப் பெருமையைக் காக்க அஞ்சாது பொய் கூறினுர் அரச குரு வசிட்டர். பழியை ஏற்றுக் கொண்டாள் கைகேயி. புரை தீர்ந்த நன்மை பயக்கும் என்ற கருத்தால் பொய் யையும் பழியையும், வசிட்டரும் கைகேயியும் நன்மை என்று கருதினர். அவர்கள் செய்த தியாகத்தின் சிறப்பால், இன்று தசரதனும் இராமனும் எல்லோராலும் போற்றப்படு கின்றனர். முக்காலும் உணர்ந்த முனிவர் வசிட்டர் என்பதை நாம் இதனுல் ஐயமற உணர வேண்டுமென்பதால் தான் கம்பர் “வசிட்டனே” என்று நீட்டிக் கூறினுர்.

இராமன் வாழ்ந்தது வடநாடு; சடையப்ப வள்ளல் வாழ்ந்தது தமிழ்நாடு. இவர்கள் இருவரையும் ஒன்றுகூட்டி ஏன் கம்பர் பாடினுர் என்ற ஐயம் எழுவதும் இயற்கையே? தன்னைப் போற்றி வந்த சடையப்ப வள்ளலைப் போற்ற வேண்டிப் பாடினுர் என்று கூறினுல், அஃது அவனுக்கு இழுக்குத் தருவதொன்றுகும். பின் ஏன் பாடினுர்?

இராமனைத் தமிழன் என்று கொண்டவர் கம்பர். வட நாட்டிலே அரசுபுரியினும் அவன், சோழ சேர பாண்டியர் மரபிலே தமிழர் பெருங்குடியிலே பிறந்தவன் என்பதை நன்கு அறிந்தவர். கம்பரும் முக்காலும் உணர்ந்தவர். பிற்காலத்திலே இராமனைத் தமிழர் பெருங்குடியிலே பிறந்தவன் என்பதை ஒத்துக்கொள்ளாமல் உலகம் அவனைப் பழிக்குமோ என அஞ்சினுர்.

ஆகையால் தமிழ் வேந்தன் என்பதை ஐயமறக் கூற வேண்டுமென எண்ணிச் சடையப்ப வள்ளலின் முன்

னோர்கள் சோழ குலத்திற்கு முடிசூட்டும் உரிமையுடையவர் களாதலால் அவர்களே இராமனுக்கும் முடிசூட்டினார் என்று கூறினர். "தென் சொல் கடந்த" இராமனுக்குத் தென்னாட்டு வள்ளல்களின் முன்னோர் முடிசூட்டுதல்தானே முறை. இராமன் தமிழன் என்ற உண்மையையும், வசிட்டர் வாக்கு ஒருகாலும் பொய்யாது என்பதையும் கம்பர் திறம்படப் பாடிவிட்டார்.

இராமனது முடிசூட்டு விழாவிற்குப் பின் இலங்கையிலும் மற்றுமுள்ள இடங்களிலுமிருந்து வந்தவர்கள் விடை பெற்றுச் சென்று விடுகின்றனர். இராமனுடைய அனுமதி பெற்றுச் சீதை அனுமனுக்கு ஒரு பரிசளிக்கிருள். இலக்குவன் இளவரசுப் பட்டம் வேண்டாம் என்று கூறிவிடவே, பரதனே இளவரசனுயினன்.

இராமனுடைய அரசிலே எல்லா வளமும், செல்வமும் பொருந்தியிருந்தன. "இராம ராஜ்யம்" என்று எல்லோரும் புகழும்படி ஆட்சி செய்து பல காலம் வாழ்ந்து, பெரும் புகழ் எய்தி, ஆழிசூழ் உலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆண்டு வந்தான் இராமன்.

## 63. நாரணன் விளையாட்டு.

இராமனுடைய முடிசூட்டு விழாவுடன் இராமாயணம் முடிவு பெறுகிறது. ஆனால் சிலருக்கு இந்த முடிவு பிடிக்க வில்லை. சீதையின் கற்பில் ஐயமுற்ற சிலர், இராமாயணம் இவ்வாறு முடிவதில் விருப்பம் கொள்ளவில்லை. இதனால் சீதையின் கற்பில் அயோத்தி மக்கள் ஐயுற்றதாகக் கூறி அவளைத் திரும்பவும் காட்டிற்கே அனுப்பி வைப்பதுதான் அவர்களுடைய மனதிற்குச் சாந்தி தருமென்று எண்ணினர். இதற்காகவே உத்தரகாண்டம் என்ற ஒரு காண்டத்தை அவர்கள் கற்பனை செய்து, காவியமாக்கி இராமனுக்கும் சீதைக்கும் அழியாக் களங்கத்தை ஏற்படுத்திவிட்டனர்.

வான்மீகி முனிவர் இராமனது வாழ்க்கை வரலாற்றை நாரத முனிவன் மூலம் கேட்டதாகக் கூறப்படுகிறது. இராம னுடைய அரிய செயல்களைப்பற்றி வான்மீகி அறியாதிருந்த நேரத்திலே பிரமன் தோன்றி "வான்மீகி, நீ சுலோக நடை யிலே எழுது. நாரதன் கூறாத பல விடயங்களும் உனக்குத் தானாகவே தோன்றும்" என்று கூறுகின்றார்; ஆகையால், வான்மீகருக்கு நாரதமுனிவர் கூறுவதற்கு முன், இராமனைப் பற்றி யாதொன்றும் தெரியாது என்பது புலனாகிறது.

உத்தர காண்டத்திலே கூறப்படுவது என்ன? இராமன், அயோத்தியிலே மணிமகுடம் புனைந்து மாட்சியுடனிருக் கையில் ஊரார் தன்னைப் பற்றியும் சீதையைப் பற்றியும் இழிவாகக் கூறியதை இராமன் கேட்டான். மாற்றான் மனை யிலே வாழ்ந்த மனைவியை மாளிகையினின்று காட்டிற்கே துரத்தி விடுவதுதான் சரி என்ற முடிவிற்கு வந்தான். இலக்குவனை அழைத்து, சீதையைக் காட்டிலே விட்டுவர வேண்டுமென்று கட்டளையிட்டான். சீதை காட்டிற்குச் செல்கின்ற போது கர்ப்பிணி. அவள் உயிர் விடுவதே மேலெனை எண்ணி நதியிலே விழப் போகும்போது, வான்மீகி வந்து அவளைத் தடுத்துத் தன் ஆசிரமத்திற்குக்

கூட்டிச் சென்ருர். அங்கே தான் குசன் பிறந்தான். ஒரு சமயம் குசனைக் காணுமையால் வான்மீகியார், தன் தவ வலியால் இலவனை உண்டாக்கினுர். அவர்கள் இருவருக்கும், "இராமாயணத்தைச்" சொல்லிக் கொடுத்தார். சீதை வான்மீகி ஆசிரமத்திலே வசித்து வந்திருப்பாளாஞல். தன்னுடைய கதையை அவள் அம்முனிவருக்குக் கூறியிருக்க வேண்டும். அப்படியாயின், இராமனுடைய குணநலங்களை, அறிந்திருந்த வான்மீகியார் ஏன் நாரதரிடம், "உண்மை யான ஒரு மனிதனின் கதையைக் கூறு" என்று கேட்க வேண்டும்? "நாரணன் விளையாட்டெல்லாம் நாரத முனிவன் கூற" என்றபடியால், சீதை வான்மீகி ஆசிரமத்தில் வாழ்ந்த கதையில் உண்மையிருப்பதாகத் தெரியவில்லை. ஆகையால்தான், கம்பர் உத்தர காண்டத்தைப் பாடவில்லை என்று சிலர் செப்புகின்ருர்கள்.

சீதையும், இராமரும், நகமும் சதையும் போலவும், வீணையும் நாதமும் போலவும், பலகாலம் கருத்தொருமித்து, இல்லறமாகிய நல்லறத்தை நடத்தி, நாட்டிற்கும் மக்களுக்கும் இடையருது பணி செய்து, "இராம ராஜ்யம்" என்று எல்லோரும் வாழ்த்தும் வண்ணம் பல காலம் ஆண்டார்கள்.

அரக்கர்களில் சிறந்தவனை இராவணனும் அவன் சுற்றமும் துணையும் அழிந்துபட்டதால் பாரதநாட்டில் உட்பகை மறைந்துவிட்டது. பழிபடா மன்னனை இராமன் படைத்த நாட்டில் அழிவு ஏற்படாது ஆக்கமே மிகுந்து நின்றது.

பரதனைப் போன்ற தம்பியைப் பெற்றதால் இராம னுக்குக் கீர்த்தியே மேலிட்டது. இரவிகுலத்திலே யாருக்கும் கிட்டாத பாக்கியம் அவனுக்குக் கிடைத்து விட்டது. இரவி குலத்திலே உயர்ந்தவன், இரவிகுலத்திலகன் என்று இராமன் அழைக்கப்பட்டான். வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமான அவனை இன்று வணங்குகிரேம். அவன் புகழைப் பாடுகிரேம்.

"நாரணன் என்றால் தண்ணீரை உறைவிடமாகக் கொள்ளுபவன் என்பது பொருள். தமிழில் கடலை "ஆழி" எனக் கூறுகிறோம். ஆழி சூழ் உலகத்தை உறைவிடமாகக் கொள்ளுபவர்கள் மன்னர்கள். மன்னர்களெல்லாம் தங்களுடைய முன்னை வினைப்பயனால், திருமாலின் ஒரு கூறாகவே மாறிவிடுகிறார்கள். திருவுடை மன்னர்களைக் காண்பதும் திருமாலைக் காண்பதும் ஒன்றென்று முன்னை யோர் கருதினர். ஆகையால் திருப்பாற்கடலை உறைவிடமாகக் கொண்ட நாரணன் உலகமாகிய நாடகமேடையிலே நடத்திக் காட்டிய விளையாட்டுத்தான் "இராமாயணம்" என்று பாரத நாட்டினர் பலகாலம் நம்பி வருகின்றனர். அதனால்தான், "நாரணன் விளையாட்டெல்லாம் நாரத முனிவன் கூறினான்; அதனை அறிந்த வான்மீகி காவியமாக எழுதினான்; அதனைக் கம்பரும் மொழிபெயர்த்தார்" என்பது உலக வழக்கிலிருக்கிறது. ஆகவே இதனைப் பாரதநாட்டு வரலாற்றுக் குறிப்பாகக் கருதுவது பொருந்துமா என்பதை அறிவுடை நன்மக்கள் உணர்வார்களாக.

இந்த "நாரணன் திருவிளையாட்டில்" ஒன்று சம்பூகனைக் கொன்றது. இது சரியா என்ற விவாதம் நாட்டிலே நாற்புறத்திலும் நிலவுகிறது.

பிராமணர் அல்லாதார் தவம் செய்யக்கூடாதா? என்ன அநியாயமிது? என்று கேட்கப்படுகிறது.

சம்பூகன் என்ற ஒருவன் ஓரிடத்தேயிருந்து தவம் செய்து கொண்டிருந்தான். இந்தச் செய்தியைப் பிராமணர்கள் இராமனுக்கு அறிவிக்கவே அவன் சம்பூகனைக் கொன்றுவிட்டான். இந்தச் சம்பவத்திலிருந்து பிராமணர்கள் மாத்திரமே, தவம், யாகம் முதலியவைகளைச் செய்ய உரிமையுடையவர்கள் என்பது புலனாகிறது. சம்பூகனைக் கொன்றது சரியா, தவறா என்பதை ஆராயுமுன் மற்றொரு சிறந்த சம்பவத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

வசிட்டரிடத்திலே காமதேனு என்ற பசு ஒன்று இருந்தது. இப்பசு வேண்டியவர்களுக்கு வேண்டியவற்றை

வேண்டியவாறு கொடுக்கும் இயல்புடையதாகும். ஒரு சமயம் விசுவாமித்திரர் வசிட்டரது ஆசிரமத்திற்கு வந்திருந் தார். அவர் பிராமணராகவோ, முனிவராகவோ இல்லை. அவர் ஒரு மன்னர். காமதேனுவின் இயல்பை அறிந்த அவர், அப்பசுவைத் தனக்குத் தருமாறு வசிட்டரைக் கேட் டார். வசிட்டர் அதற்கு உடன்படாது மறுத்துக் கூறவே அவரோடு விசுவாமித்திரர் போர் தொடுத்தார். அவருடைய படை வலிமை வசிட்டரின் தவத்தின்முன் நிற்க முடியவில்லை. பின்னர் அவர் தன் அரசுரிமையைக் கைவிட்டுப் பிரம ஞானம் பெற்றுப் பிராமணராகித் தவம் செய்து பெருமையை அடைந்தார் என்பது வரலாறு. ஆகையால் மன்னனுனாலும், தவம், யாகம் முதலியவைகளைச் செய்யவேண்டுமானுல், பிராமணர்களாக மாறித்தானுகவேண்டும். சனகன் முதலி யோர் வேந்தர் இனத்தவராயினும் பிரம ஞானத்தால் பிரா மணராக மாறினதால் வேள்வி முதலியன செய்யும் மேன்மை எய்தியிருந்தனர்.

பிரமத்தை அறிந்தவர்கள் என்றுல், பஞ்சபூதத்தின் நுட்பங்களை அறிந்தவர்கள் என்று முன்பே கண்டோம். விஞ்ஞான உண்மைகளைக் கண்டவர்கள் அவற்றைத் தன் னலத்திற்காக உபயோகித்துக்கொள்ள விரும்புவார்க ளானுல், நாட்டிலே நன்மக்கள் வாழமுடியாது; ஆகையால், பிரமஞானிகளான பிராமணர் இனத்திலே சேர்ந்து, அரச அனுமதியும் பெற்றுல்தான், யாகமும், தவமும் செய்யமுடியும். ஆனுல் சம்பூகன் பிராமணனல்லன்; மேலும் மன்னன் அனு மதியைப் பெருமல் தவம் மேற்கொண்டான். அதனைக் கண் டிப்பது மன்னன் கடமையாகியது. கடமையைச் செய்து நாட்டைப் பாதுகாவல் செய்யும் மன்னன் எவ்வாறு நடக்க வேண்டுமோ அவ்வாறே அவன் நடந்துகொண்டான்.

"மாதவர் நோன்பும் மடவார் கற்பும் நாடாளும் காவலன் வழிநின்று காப்புப் பெறுவனவாகும்." மாதர் கற்பு அவர்க்கும் அவரது குடிக்கும் பெருமையும் நன்மையும் பயப்பது; மாதவர் நோன்போ, மன்னுயிர்க்கும் மன்னுயிர்

புரக்கும் மன்னவர்க்கும் மாண்புடைய பயன் தருவதால் அதனை அரசறியச் செய்வது அந்நாளில் அறமாக நின்றது.

இராமன் நாட்டில் நிலவி வந்த பல்குழுவும், பாழ்பட்ட உட்பகையும் இன்றிப் "பழிபடா மன்னவர் படைத்த நாட்டில் அழிவு நிகழ்தல் கூடாது" என்று அவன் சிறு பிராய முதல் சிந்தித்து வந்தவனுதலால், அவன் தன் காலத்திலே, பாலைவனங்களை எல்லாம் சோலை வனமாக்கி, மன்னராட்சியேயாயினும், மக்களாட்சியோ என ஐயுறுமாறு செய்தான். உள்ளத்தாற் பொய்யாது வாழ்ந்து மக்களுடைய நன்மையே பெரிதென வாழ்ந்ததனுல், அவன் வானுறையும் தெய்வமாக நமக்கு இன்று காட்சி தருகிருன்.

# 64. முடிப்புரை

தெய்வம் வேறு. கடவுள் வேறு. பிறந்திறவாத் தன்மை யுடையவனே கடவுள் எனப்படுகிறுன். அந்தக் கடவுளைச் செம்பொருளாக இருப்பதால் சிவன் என்றும், எல்லா உயிர் களுக்குள்ளும் சென்று பரந்து கிடத்தலால் விஷ்ணு என்றும், எல்லாப் பொருளுக்கும் மேலாக இருப்பதால் பரம்பொருள் என்றும் கூறுகின்றோம். மக்களினம் அல்லற்பட்டு அழியும் போது மகான்கள் தோன்றுவது இயல்பு. அவ்வாறு மனி தர்களில் சிறந்தவர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என்று கூறப்படுவர். மன்னனும் தெய்வாம்சம் பொருந்தி யவன் என்று நம் முன்னோர் நம்பினர். ஆகையால், மன்னரில் சிறந்தோர் மனிதருள் மாணிக்கமாகச் சிறந்து தெய்வமா கவே கருதப்பட்டனர். தேவர்களும் இராமன் கடவுளின் அவதாரமோ என எண்ணி அவனிடமே அதனைக் கேட்டு விட்டனர். ஆனல் அவன் அவர்களை நோக்கி, " நான் யார் என்பது எனக்குத் தெரியாது ; நான் தசரதன் மகன், மனிதர் களுள் ஒருவன் என்பது மட்டுந்தான் தெரியும்" என்றுன். " அகந்து மானுஷம் மன்னே " என்று கூறியதாக வான்மீகி யாரே கூறுவர்.

இராமனே தான் மனிதன் என்று கூறியபோதிலும், பாரத நாட்டிலே அவன் பக்தியுடன் ஆராதனைக்கு உரிய தெய்வமாக்கப்பட்டுவிட்டான். அவன் செய்த காரியங்களை யெல்லாம் திருவிளையாடலாகவே காண்கின்றனர் பக்த கோடிகள் ; அவர்க்கு இராமனிடம் எத்துணைத் தவறு செய் யும் மனப்பான்மையுண்டானலும் அவன் சிறந்தவன் என் பதை மறுக்கவோ மறைக்கவோ முடிவதில்லை.

எவ்வாறு குற்றமற்ற சமுதாயத்தைப் படைக்க முடி யாதோ, அவ்வாறே குற்றமற்ற மனிதனையும் காண முடியாது.

ஆசையை நீக்கிவிட்டால் ஆனந்தம் ஏற்படும் என்பது தான் இராமாயணம் கூறும் உண்மை. எல்லையற்ற ஆசை கொண்டதால்தான் தசரதனும் இராவணனும் இறந்துபட்டார்கள்; இராமனும் பல அல்லல்கள் உற்றான்; ஆகவே ஆசைகளைவிட்டு ஆண்டவன் நெறியைப் பின்பற்றிச் சித்தத்தை அவன்பால் வைத்தாலன்றி, மக்களுக்கு வாழ்வில் மனவமைதி ஏற்படாது. இந்தத் தத்துவத்தையும் இராமாயணம் இசைக்கின்றது.

இந்தச் சிறந்த தத்துவத்தைக் கூறுவதற்காகவே உலகமாகிய நாடகமேடையிலே நாரணன் விளையாடினான் என்று மக்கள் நம்பி வருகின்றனர்.

"எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு" என்று வள்ளுவப் பெருந்தகை சொல்லியதற்கேற்ப நாம் விருப்பு வெறுப்பின்றி இராமாயணத்தைப் படித்தால்தான் கம்பரது கவிதைக் கருத்தின் ஆழம் காணமுடியும்.

இராமாயணம் ஆரிய திராவிடப் போரைக் கூறுகிறது என்று சிலர் உரைத்துள்ளனர். உண்மை அஃது அன்று "தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற தத்துவத்தைப் போதிக்க எழுந்த நூலுமன்று; இராமாயணம் எழுந்த காரணத்தை வான்மீகியே கூறுகின்றார். "குற்றமற்ற மனிதனை உலகிலே காணமுடியுமா?" என்ற கருத்தை ஆராய எழுந்ததே இந்நூல். இராமன் குற்றமற்றவன் என்று கூறமுடியாதேயென்றும், வையத்து வாழ்வாங்கு வாழும் நெறியைக் கடைப்பிடிக்கக் கருதியவன், இறுதிக் காலத்திலே சிறந்த அரசை நிறுவிக் குற்றமற்ற ஒரு சமுதாயத்தைப் படைக்க முயன்றவன் என்றும், ஆனால் அந்தச் சமுதாயம் பல காலம் வாழவில்லை என்றும், குற்றமற்ற சமுதாயத்தையோ, குற்றமற்ற மனிதனையோ படைக்கமுடியாது என்றும் காட்டுவது தான் இராமாயணத்தின் கருத்து. வாழ்விலே முதலில் மனிதன் செய்யும் குற்றம், ஆசைக்கு அடிமையாவது; ஆசையைவிட்டு விட்டுக் கடமையைச் செய்தாலன்றி மனிதன் உயர் நிலையை அடைய முடியாது.

அரசியற் பிழைத்தோர்க்கு அறம் கூற்ருவதும், விதி வலியது என்பதும் உயர்வுசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவரென்பதும் ஆகிய உலகியல் உண்மைகளை இராமா யணம் கூறுகிறது.

தசரதனும் இராவணனும் அரசியலிற் குற்றம் செய்த தனல் உயிர் இழந்தனர். இராமனுக்கு முடிசூட்ட வேண்டு மென்று எல்லோரும் எண்ணிய போதிலும் அவனுக்கு அது கிட்டவில்லை. "விதியின் பிழை" என்று இராமன் கூறுவ தாலேயே விதி வலிது என்பதை நாம் அறிந்துகொள்ள லாம். சீதை கற்புமிக்கவளாதலால் அவளை இன்று யாவரும் போற்றுகின்றனர்.

இளங்கோவடிகள் பெண்ணின் பெருமையையும் அவரது கற்பின் வலிமையையும் கூறுவதற்காகவே சிலப்பதிகாரம் என்ற நூலை இயற்றினர். அங்கே ஒரு பெண் தன்னைக் காத்துக்கொள்ளும் திறம்படைத்தவளாக இருந்தாள். மன் னனும் நீதிக்காக உயிர்விடும் பண்பாளனுக இருந்தான். ஆனல் சீதையோ தன்னைக்காத்துக்கொண்டாலும் இராவண னுடைய ஊரிலிருந்து தப்பமுடியாமல், புலியிடம் சிக்கிய மான்போல் தவித்துக்கொண்டிருந்தாள். இராவணனும் காம மயக்கத்தில் தன் உள்ளப் பண்பையெல்லாம் இழந்து நின்ருன். ஆகையால் இராமன் படையெடுத்துச் சென்று அவனைக் கொல்ல வேண்டியதாயிற்று. இதுதான் இந்த இரு பெருங்காவியங்களுக்கும் உள்ள வேறுபாடு. வள்ளுவர் வாழ்விற்கு இலக்கணம் வகுத்துத் தந்தார். அந்த இலக்க ணத்திற்கு இலக்கியங்களாக இராமாயணமும் சிலப்பதிகார மும் இருக்கின்றன.

வள்ளுவரும், இளங்கோவும், கம்பரும், தமிழ் மக்களுக்கு அழியாப் புகழ் தந்தவர்கள். ஆகையால்தான் "கம்பனைப் போல் வள்ளுவர்போல் இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" என்று பெருமிதத்துடன் பாடு கின்ருர் நம் தேசிய கவி பாரதியார்.

உலகிலே தோன்றியவைகள் யாவும் அழியும் தன்மை யுடையன. ஆனல், பரம்பொருள் போல் தமிழ் அழியாத்

தன்மை பெற்றுவிட்டது. இதனுல்தான் "என்றுமுள தமிழ்" என்று கம்பரும் கூறுகின்ருர்.

இராமாயணம் இறவாப் புகழைப் பெற்றுவிட்டது. சுடச்சுடரும் பொன்னைப் போலவும், சுடச்சுடக் குன்ருத சுவையையுடைய பாலைப்போலவும் கம்பரது காவியம் கருத்தைக் கவர்கின்றது. கம்பரது கவி உள்ளம், கற்பனைக்கும் எட்டாத ஒரு நல்ல காவியத்தைப் படைத்துத் தந்துவிட்டது. அவரையும் அவருடைய இராமாயணத்தையும் தூற்றுபவர்கள் உண்டு. அதையும் அவர் முன்பே கண்டார். வையம் அவரை இகழலாம். மாசு அவருக்கு ஏற்படலாம். ஆனுல் அவரது கவி அழியாத பெருமை பெற்றுவிட்டது.

வெறுப்பு விருப்பு இன்றி இராமாயணத்தை நாம் படிப்போமேயானுல், எவ்வாறு ஒரு மனிதன் வையத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகக் காட்சி அளிக்க முடியும் என்பதை நன்கு உணரமுடியும்.

உலகம் என்பது உயர்ந்தோரைப் பொறுத்தே இருக்கிறது. இதற்கு எடுத்துக்காட்டாக, இராமாயணம், கைகேயி பரதன் இராமன் போன்ற நன்மக்களாலேயே உயர்ந்து விளங்குகிறது.

கம்பர் தமது கனவிற்கண்ட உலகத்தைக்காண நாம் இன்று விரும்புகிறேம். அந்தக் கனவு உலத்திலே இராம ராச்சியம் நடைபெறுகிறது ஆண்டான் - அடிமை, உடையார் - இல்லார் என்ற வேறுபாடில்லாத ஒரு சமுதாயத்தைக் காணத் துடித்தது தமிழ் உள்ளம். பாரில் எவர்க்கும் அடிமைப்படாமல் பரிபூரண சுதந்திரமாக வாழும் சமுதாயத்தைப் படைக்க நினைத்தது அவன் தூய புலமை. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" (அதாவது மன்னன் உயிர், உலகம் உடம்பு) என்ற தத்துவத்தை மாற்றி "எல்லா உயிருக்கும் உறைவிடமான உடம்பாக" அரசன் மாற வேண்டுமென்று எண்ணினுர் அவர். அதைத்தான் இன்று, சட்டத்திற்கு உட்பட்ட மன்னராட்சி (Constitutional monarchy) என்று கூறுகின்றனர். இந்தக் கனவைத்தான்

புத்தர் பெருமான், யேசுநாதர், காந்தி அடிகள் முதலியோர் காண நினைத்தனர். ஆனால் இன்றளவும் இது கனவாகவே இருந்து வருகிறது.

பல் குழுவும் பாழ்படுத்தும் உட்பகையும் மறைந்து விஞ் ஞானிகளும் அரசியல் ஞானிகளும் அறவோர்களாக வாழ்ந்தாலன்றி, உலகத்திலே கம்பன் கனவு நனவாகாது. கம்பன் கண்ட இராம இராச்சியத்தைக் காணவேண்டு மென்ற பேரவாவினால், நாம் அந்த இலக்கியத்தைப் பல வகையிலும் நோக்குகின்றோம். எத்தனை எதிர்ப்புக்கள் வந் தாலும், எந்த வகையான அரசியல் பொருளாதார மாறுதல் வந்தாலும், கம்ப இராமாயணத்தில் அவை என்றுமே மாறா. வான்மீகத்தை அறிந்தவர்கள், சிறுகச் சிறுகக் குறைந்து போகலாம்; துளசிதாசர் நூல் படிக்கப்படாமல் போனா லும் போகலாம். ஆனால், "என்றுமுள" தமிழில் எழுதப் பட்ட பெருமையால் கம்பர் என்றுமே வாழ்வார். உலக மகாகவி எனப் புகழப்படும் ஷேக்ஸ்பியருக்குக்கூடக் கிடைக் காத புகழ் கம்பருக்குக் கிடைத்துவிட்டது எனலாம்.

கம்பருடைய இராமாயணத்தைப் படிப்பவர்கள், கேட்ப வர்கள் யாவருமே இலக்கிய அறிவு நெறியில் பாக்கியம்செய்த வர்கள். அவருடைய புகழை உலகமெல்லாம் பரவும் வகை செய்தாலன்றி, நாம் தமிழர் எனக் கூறிக்கொண்டிருக்க முடி யாது. காலம் மாறும், காத்திருப்போம்.

கம்பராமாயணத்தில் எனக்கு ஏற்பட்ட அனுபவத்தால் அதுபற்றி என் நினைவில் எழுந்த கருத்துக்களைக் கூறிவிட் டேன். கருத்து வேறுபாடுகள் ஏற்படுவது இயல்பே. கருத்து வேறுபட்டாலும் உண்மை என்றும் ஒளிர்ந்து கொண்டே இருக்கும். ஐயமெழாதவிடத்து அறிவு வேலை செய்யவில்லை என்பர்; உண்மை காணும் அறிவு ஐயத்தால் அலைக்கப்படும்; ஐயம் நிலையில்லாதது; விரைவில் நீங்கும்; தெளிவு விளங்கும்; உண்மை ஒளிவிட்டுத் திகழும்.

இராமன் ஒரு வடநாட்டான்; தென்னாட்டு வேந்தனை வென்று, அந்நாட்டை அடிமைகொள்ள வந்தவன் என்

ஒரு கொள்கை பலகாலமாக நம் நாட்டிலே தோன்றி இருந்து வருவதையும் பார்க்கின்றோம்.

இராமன் ஆரியன்; இராவணன் திராவிடன்; இராமாயணம் ஆரிய திராவிடப்போர் என்று வரலாற்றாளர்களும், நேரு பெருமகனைப் போன்ற அரசியல் தலைவர்களும் கூறுகின்றனர். இராமன் தமிழன் என்று புராணங்களும் இராமாயணமும் கூறுகின்றனவேயன்றி அவனை ஆரியன் என்று கூறவில்லை. இராவணன் பிராமணன் என்பதில் யாருக்குமே ஐயமில்லை. பிராமணர் ஆரியரல்லராகலின், இராமாயணம் ஆரிய திராவிடப் போரைக் குறிக்காது என்பது தெளிவாம். இராவணன் தென்னாட்டிலே வாழ்ந்த தமிழ் மன்னன் என்று கூறுவதற்குச் சான்று ஏதும் இல்லை.

இனி, இராமனுக்கு முடிசூட்டக் கருதிய காலத்தில் தசரதன் பரதனுக்கு ஓலையனுப்பி அவனை அயோத்திக்கு வருவியாதது குற்றம் என ஒரு சாரர் கூறுகின்றனர். இராமாயணத்தை நோக்கின், இராமனுக்கு நாடாள்வதில் விருப்பமில்லை. இதனைத் தசரதனும் நன்குணர்ந்தவன். ஆனால், கைகேயி, மயில்முறைக் குலத்தில் பிறந்தவளாதலால், இராமனே முடிசூட வேண்டுமென்று எண்ணினாள். இதனை மனத்திற்கொண்டே கைகேயி இராமனுக்குத் திருமணமான பின், பரதனை அவன் தாய் மாமன் வீட்டிற்கு அனுப்பிவைத்தாள். அதோடு மட்டுமல்லாமல் அவனிடம், "மைந்த, நீ திரும்பி வரும்போது இராமன் மன்னனாவதைக் காணலாம்" என்று கூறி அனுப்பினாள். இதனால் இராமனுடைய முடிசூட்டு விழாவிற்குப் பரதனை அழைப்பதில்லை என்று கைகேயி முடிவு செய்துவிட்டாள் என்பதுதானே எய்துகிறது. ஆகையால் தசரதன் பரதனுக்கு முடிசூட்டு விழாவைப்பற்றி அறிவிக்காதது குற்றமில்லை என்பது விளங்கும்.

இராமன், மன்னன் கட்டளையை மறுக்க முடியாமல் முடியேற்க இசைந்தான். அவன் விருப்பமில்லாமலே ஏற்றுக்கொள்ள இசைந்தானாதலால், தனக்கு அரசுரிமை இல்லை என்றவுடன், அவனுடைய முகம், "அன்று அலர்ந்த

தாமரையைப் போலிருந்தது" என்றும், அவன் கட்டு அவிழ்த்துவிடப்பட்ட காளை போன்றான் என்றும், கம்பர் கட்டுரைக்கின்றார்.

கைகேயி இராமன் முடிசூட வேண்டுமென்ற எண்ண முடையவளாக இருந்த போதிலும், "கன்யா சுல்கம்" அவளுடைய எண்ணத்திற்கு மாறாக நின்றது. பரதன் பிறப்பினால் உரிமையுடையவன் என்பதை யாரும் கூறமாட்டார்கள் என்று எண்ணியிருந்தாள். ஆனால், எதிர்பாராத விதமாகக் கூனியின் மூலமாக அது வெளிப்பட்டு விடும் போலிருந்தது. ஆகையால், இராமனைக் காட்டிற்கு அனுப்பினாலன்றி, அரசு, இரகு குலத்திற்கு அமையாது என்பதை அவள் கண்டாள். இராமனும் இதனை உணர்ந்து நாட்டை விட்டு வெளியேறினான். இராமனுக்கோ பரதனுடைய நாட்டை விரும்பிப் பெற்று வாழவேண்டுமென்ற எண்ண மில்லை. ஆனால், மன்னவன் கட்டளைக்கு அஞ்சியே அவன் அரசை ஏற்க உடன்பட்டான். ஆகையால் இராமனும், இவ் வகையில் குற்றமற்றவனாகின்றான்.

இராமன் பிறநாடுகளையும் வென்று ஆளவேண்டு மென்ற எண்ணமுடையவனல்லன். குகன் தன் நாட்டை இராமனுக்குத் தந்து, அவனுக்கு அடிமையாக வாழ விரும்பினான்; ஆனால் இராமன் அவனைத் தன் தம்பியாகக் கொண்டானேயன்றி, அடிமையாகக்கொள்ள இசைந்தா னில்லை. கிட்கிந்தையிலும், வாலியைக் கொன்றபின், அவன் விரும்பியிருந்தால், அந்நாட்டைத் தன் நாடாக்கிக் கொண்டிருக்கலாம். ஆனால், சுக்கிரீவனுக்கு அந்நாட் டைத் தந்துவிட்டுப் பின் சுக்கிரீவன் சீதையைப்பற்றிய எண்ணத்தைச் சிறிதும் சிந்தியாதபோது, இராமன் அவனிடம் சென்று அவனது உதவியை வேண்டிப் பெறு கின்ற நிலையையும் ஏற்படுத்திக் கொண்டான். இலங்கையில் இராவணனை வீழ்த்திய பின்பும் அவ்விலங்கையைத் தான் ஆளவேண்டுமென்கின்ற எண்ணம் அவனுக்கில்லை என்பதும் வீடணனுக்கு முடிசூட்டியதிலிருந்தே தெரிகிறது. கம்பர் இராமனுக்கு நாடாளுவதில் விருப்பமில்லை என்ப

தைத் திறம்பட உயுத்த காண்டத்தில் கூறுகின்ருர். இரா வணன் படைபலம் இழந்து நின்ற போது அவனை நோக்கி "அரக்கர் தலைவனே, நீ சமாதானம் செய்துகொள்; போர் என்ருல் நாளை வா" என்று கூறினன். வீடணனுக்கு இலங் கையைத் தருகிறேன் என்று கூறிய பின், இராவணனுடன் சமாதானம் செய்து கொள்ளுவானேயாளுல், இராமன், வீடணனுக்கு இலங்கை அரசைத் தருகிறேன் எனறு கூறிய வாக்கு என்னுவது என்பதையும் கம்பர் மறக்கவில்லை.

ஆகையால் இவர், "கோசல நாடுடைய வள்ளல்" என்று திறம்படப் பாடிவிடுகிருர். இலங்கை அரசை வீடண னுக்குச் கொடுத்துவிட்டாலும், அதற்குச் சமமான அயோத்தி நாட்டை இராவணனுக்குக் கொடுத்துவிடலா மென்று அவன் எண்ணினன் என்பதையே இவ்வாறு கூறு கின்ருர். பகைவனுக்கு அருளும் பண்புடைய குணத்தைத் தான் இங்கு இராமன்பால் காண்கிருேமே யன்றிப் பிற நாட்டை வென்று தன் அடிப்படுத்த வேண்டுமென்ற எண்ணத்தை நாம் அவனிடம் காணமுடியவில்லை.

இராவணன் சீதையைக் கவர்ந்து செல்லாவிட்டால் இராமன், இலங்கைமேல் படை யெடுத்துச் சென்றிருக்கமாட் டான். மாற்ருன் ஒருவன் தன் மனையாளைக் கொண்டு சென்ற பின் அவனைக் கொல்ல எண்ணுத மனிதன் யாருமே இருக்க முடியாது. ஆகையால் இராமன் நாடாளும் எண் ணத்துடன் இலங்கையைப் படை எடுக்கவில்லை. இவைகளை எல்லாம் நோக்கும் போது, வரலாற்று அறிஞர்களும், நேரு பெருமகன் போன்ற அரசியல் தலைவர்களும் இவற்றை எண்ணுமல் தவறு செய்து நாட்டிலே நச்சுக் கருத்துக்களை விதைத்து விட்டார்கள் என்றே கூறவேண்டியிருக்கிறது.

இராமாயணத்தை இவ்வாறு தவருன முறையில் இந்திய நாட்டு வரலாற்ருேடு இணைத்ததனல் நாட்டில் இராமாயணத்தின்மேல் இருந்த பக்தி மறைவதாயிற்று. தேச சரித்திரத்தை யாரும் தெய்வ பக்தியோடு படிக்கமாட் டார்கள் அல்லவா?

இப்பொழுது நாம் இராமாயணத்தைப் பக்தியோடு படிக்கவும் பாராயணம் செய்யவும் விரும்புகிறோம். நம் முன்னோரும் பக்திக்கும் பாராயணத்திற்கும் உரியதாக எண்ணியே, இராமனுக்குக் கோயில் கட்டி, விழாவும் பூசனையும் செய்து வந்துள்ளனர். மேனாட்டார் காட்டிய வரலாற்று மோகத்தில் வரலாற்றாளர் இராமாயணத்துக்குப் பொய்யான வரலாற்றுக் கருத்தைப் புகுத்தி, இளைஞர் உள்ளத்தைத் தீய வழியில் செலுத்தினர். இடைக்காலத்தில் தோன்றிய வரலாற்றறிஞர் இராமாயணம் ஆரிய திராவிடப் போர் என்று சொன்ன பொய்யான நஞ்சு, நாட்டில் இன்று பெருங்கலக்கத்தை விளைவித்து மக்கள் மனதில் ஒற்றுமை உணர்ச்சிக்கே கேடு செய்துவிட்டது. இராமாயணத்தைத் தெய்வ பக்திக்கும் பாராயணத்திற்கும் உரிய நூலாக்க வேண்டும். இதனை வரலாற்றுக் குறிப்புடைய நிகழ்ச்சியாகக் கருதி தேச சரித்திரத்தில் சேர்க்கும் கொடுமை உடனே ஒழிக்கப்படவேண்டும். இனி எழுதப்படும் பாரத நாட்டுச் சரித்திரத்தில் இராமாயணக் கதையைச் சேர்க்கக்கூடாது. இதை அரசியல் தலைவர்களும் தேச சரித்திரக்காரர்களும் கருத்தில் கொள்வார்களா? பக்தி நெறியைச் சீரழிப்பார்களா? எதிர்காலம் தான் இதற்குப் பதில் கூறவேண்டும்,

வாழ்க கம்பர். வாழிய இராமாயணம். வாழிய பாரத மணித்திருநாடு.

முற்றும்